CONFESSION OF AN ECONOMIC HITMAN

# ஒரு பொருளாதார அடியாளின் ஒப்புதல் வாக்குமூலம்

ஜான் பெர்க்கின்ஸ்

தமிழில்: இரா. முருகவேள்



CONFESSION OF AN ECONOMIC HITMAN

# ஒரு பொருளாதார அடியாளின் ஒப்புதல் வாக்குமூலம்


ஜான் பெர்க்கின்ஸ்

தமிழில்: இரா. முருகவேள்




# ஒரு பொருளாதார அடியாளின் ஒப்புதல் வாக்குமூலம்

ஜான் பெர்க்கின்ஸ்

தமிழில்: இரா. முருகவேள்



**Oru Porulathara Adiyalin Opputhal Vaakkumoolam**

Originally Published under the Title 'Confessions of an Economic Hit Man' by John Perkins.

Our First Edition: September, 2013 | Seventh Print: January 2018

**Published by**

**BHARATHI PUTHAKALAYAM**

7, Elango Salai, Teynampet, Chennai - 600 018
Email: thamizhbooks@gmail.com
www.thamizhbooks.com

**ஒரு பொருளாதார அடியாளின் ஒப்புதல் வாக்குமூலம்**
**ஜான் பெர்க்கின்ஸ்**
*எமது முதல் பதிப்பு: செப்டம்பர், 2013 | ஏழாம் அச்சு: ஜனவரி, 2018*

**வெளியீடு:**



*7, இளங்கோ சாலை, தேனாம்பேட்டை, சென்னை - 600 018*
*தொலைபேசி : 044 24332424, 24332924, 24356935*

# இன்னும் சில ஒப்புதல் வாக்குமூலங்கள்

'ஒரு பொருளாதார அடியாளின் ஒப்புதல் வாக்குமூலம் என்னும் ஜான் பெர்கின்ஸின் இந்தத் தன் வரலாற்று நூல் மூன்று பாகங்களைக் கொண்டது. 1963-1971 கால கட்டம் வரையிலான முதல் பாகமும், 1971-1981 வரைக்குமான இரண்டாம் பாகமும், 1981-முதல் 2004 வரையிலான மூன்றாம் பாகமும் சேர்ந்த இந்த சுயசரிதையை ஜான் பெர்கின்ஸ் மிக எளிமையான சொல்லாடல்கள் மூலம் அமைதியாகத் தொடங்குகிறார். ''என் வா-ழ்க்கை மிகச் சாதாரணமாகத்தான் தொடங்கியது. நான் ஒரு மத்திய தர வர்க்கக் குடும்பத்தில் ஒரே மகனாக 1945ஆம் ஆண்டு பிறந்தேன்....''

பணப் புழக்கம் குறைவாக இருந்த குடும்பத்தில் பிறந்து இலவசக் கல்வி பயின்ற பெர்கின்ஸ் கோடிக்கணக்கான டாலர் மோசடிகளில் ஈடுபட்டு ஒரு பொருளாதார அடியாளாக உருமாறுவதன் பக்கங்கள் பரபரப்பானதொரு புதினத்தின் மொழி நடையில் விவரணம் பெற்றிருப்பது இந்த புத்தகத்தின் மீதான ஒரு தனி கவனத்தை அளிக்கிறது.

அந்நிய மூலதனம், தாராளமயம், உலகமயமாக்கல் என்கிறார்கள். இந்தியாவை வல்லரசாக்குவோம் என்கிற இந்திய அரசியல்வாதிகளின் கோமாளிக் கூச்சல் ஒரு பக்கம் கேட்டுக் கொண்டேயிருக்கிறது. ஏற்கெனவே ஆண்டவர்கள் 'இந்தியா ஒளிர்கிறது' என்றும் கூட அப்பட்டமாகப் பொய் சொல்லி வைத்தார்கள். இவற்றினூடாக இந்தியா உள்ளிட்ட மூன்றாம் உலக நாடுகளின் மக்கள் வாழ்க்கைத் தரம் படுபாதாளத்தை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறதே தவிர எவ்வித ரட்சிப்புமில்லை. இந்த அதிகார பீடங்கள் நம் மண்ணையும் வளத்தையும் நம் கண்முன்னரே விழுங்குவதைப் பார்த்தபடி இருக்கச் சபிக்கப்பட்டிருக்கிறோம் நாம். இப்படியான ஒரு வன்முறை நம்மேல் நிகழ்த்தப்படுவதன் பின்னணியில் இருப்பது யார் என்பதைக் கூட உணர்ந்து கொள்ளாமல் கேளிக்கைகளில் மூழ்கி மதி மயங்கிக் கொண்டிருக்கிறோம். நம் வாழ்க்கை ஏன் இப்படி இருக்கிறது? என்கிற கேள்வியை நாம் கேட்டுக் கொள்வதே இல்லை. அந்தக் கேள்வி நம்மிடமிருந்து எழாத வண்ணம் நம்மை ஆள்பவர்கள் கவனமாகப் பார்த்துக் கொள்கிறார்கள். எல்லாவற்றையும் ஒரு மாதிரி சகிக்கப் பழகிக் கொண்டுள்ளோம்.

உலகின் எல்லா நாடுகளையும் திட்டமிட்டுச் சூறையாடி வரும் பொருளாதார அடியாட்கள் பன்னாட்டு நிதி அமைப்புகளின் பணத்தை மாபெரும் பன்னாட்டு நிறுவனங்களின் பணப் பெட்டிகளில் குவிப்பதையும், தேசத்தின் இயற்கை வளங்களைச் சுரண்டிக் கொண்டிருக்கும் பண முதலைகளுக்கு தீனியாகத் திணிப்பதையும்

தொழிலாகக் கொண்டவர்கள். பன்னாட்டு நிறுவனங்களின் கையாளாக அமெரிக்க அரசு செயல்படுகிறது. உலக நாடுகளின் தலைவர்களை அமெரிக்காவின் விசுவாசிகளாக மாற்றுவதுதான் இந்தப் பொருளாதார அடியாட்களின் தலையாய பணி. இதற்கு சுளையான வெகுமதி இவர்களுக்கு கிடைத்துவிடுகிறது.

அமெரிக்க மாயையில் 'இந்தியப் பொருளாதார மேதைகள்' சிக்கி தேசத்தைச் சீரழித்துக் கொண்டிருக்கும் வேளையில் ஜான் பெர்க்கின்ஸின் மனசாட்சி பேசுவதை இந்தியர்கள் ஒவ்வொருவரும் வாசிக்க வேண்டும். இந்த ஒப்புதல் வாக்குமூலம் ஒரு முக்கிய ஆவணம்.

''நீ ஒருவன் மட்டுமே பொருளாதார அடியாள் அல்ல. நம் தொழில் மட்டமானது தான். ஆனால் நாம் ஒரு அரிய வகையைச் சேர்ந்தவர்கள். நீ இதிலிருக்கிறாய் என்பதை யாரும் தெரிந்து கொள்ளக்கூடாது. உன் மனைவி உட்பட'' இப்படியான மூளைச் சலவைக்குப் பிறகு கிளம்பிச் செல்லும் நாசகர சக்தி என்னென்ன விளைவுகளை உருவாக்கி ஓய்கிறது. அது ஓய்கிறதா, தொடர்கிறதா?

வாசகர்களை அயர்ச்சி கொள்ள வைக்காத இரா. முருகவேளின் மொழி பெயர்ப்புப் பணி குறிப்பிடத்தக்கது. ஜான் பெர்கின்ஸ் போன்று பலரும் தங்கள் ஒப்புதல் வாக்குமூலங்களைத் தந்து அமெரிக்க முகமூடியைக் கிழித்தெறியக் காத்திருப்பது உண்மை.

பாரதி புத்தகாலயம் இந்நூலை வெளியிடுவதில் மகிழ்ச்சி கொள்கிறது.

அன்பையும் வாழ்வியலையும் கற்றுத் தந்த, இந்நூலை
எழுதும் துணிச்சலை என்னுள் விதைத்த, என் பெற்றோர்
ரூத் மோடிக்கும் ஜேஸன் பெர்க்கின்ஸுக்கும்

# பொருளடக்கம்

# முன்னுரை

பொருளாதார அடியாட்கள் என்று அழைக்கப்படுபவர்கள் பல்லாயிரம் கோடி டாலர் மதிப்புள்ள மோசடிகளில் ஈடுபட்டு வருபவர்கள். உலகிலுள்ள ஒவ்வொரு நாட்டையும் கொள்ளையிட்டு வருபவர்கள். இந்தக் கொள்ளையடிக்கும் பணிக்காக அவர்களுக்குப் பெரும் பணம் ஊதியமாக அளிக்கப்பட்டு வருகிறது. இவர்கள் பொருளாதார நிபுணர்கள். உலக வங்கி, சர்வதேச வளர்ச்சிக்கான அமெரிக்க ஐக்கிய நாட்டு நிறுவனம் (US Agency for International Development US AID), மற்றும் இவற்றைப் போன்ற பன்னாட்டு நிதி 'உதவி' அமைப்புகளில் குவிந்திருக்கும் பணத்தை மாபெரும் பன்னாட்டு நிறுவனங்களின் பணப்பெட்டிகளுக்கு, இப்பூமியின் இயற்கை வளங்களைத் தங்கள் பிடியில் வைத்திருக்கும் சில பணம் படைத்த குடும்பங்களின் சட்டைப் பைகளுக்கும் கொண்டு சேர்ப்பதுதான் இவர்களின் வேலை, மோசடியான நிதி அறிக்கைகள், தேர்தல் முறைகேடுகள், லஞ்சம், மிரட்டிப் பணம் பறிப்பது, பாலியல், கொலை முதலியன இவர்களுடைய கருவிகள் ஆகும். பேரரசு எவ்வளவு பழமையானதுதான் என்றாலும் ஆனால் உலகமயமாக்கல் முழுவீச்சில் நடை பெற்று வரும் இன்றைய உலகில் பொருளாதார அடியாட்களின் தந்திரங்கள் புதிய, பயங்கரமான பரிணாமங்களை எட்டியுள்ளன.

நானும் ஒரு பொருளாதார அடியாளாக இருந்தவன்தான்.

ஒரு பொருளாதார அடியாளின் மனசாட்சி என்ற பெயரில் - 1982 - இல் - நான் எழுதத் திட்டமிட்டிருந்த நூல் இப்படித்தான் தொடங்கியது.

இந்த நூலை ஈக்வடாரின் குடியரசுத் தலைவரான ஜெய்மே ரோல்டோஸுக்கும், பனாமாவின் அதிபரான ஒமர் டோரிஜோஸுக்கும் அர்ப்பணித்திருந்தேன். இவர்கள் இருவரும் எனது வாடிக்கையாளர்களாக இருந்தவர்கள். என்னால் மிகவும் மதிக்கப்பட்டவர்கள். ஒத்த கருத்துக் கொண்டவர்கள் என்று கருதப்பட்டவர்கள். இந்த இருவரும் அப்போதுதான் நிகழ்ந்த பயங்கரமான விமான விபத்துகளில் உயிரிழந்திருந்தனர். அந்த விபத்துகள் தற்செயலானவை அல்ல. உலகப் பேரரசைக் குறிக்கோளாகக் கொண்டிருந்த தொழில் நிறுவனங்கள், வங்கித் தலைமைகள் மற்றும் அரசாங்கங்களுக்கு இடையில் நிலவி வந்த கூட்டணியை எதிர்த்து நின்றதன் காரணமாக அவர்கள் படுகொலை செய்யப்பட்டனர். அவர்களை வழிக்குக் கொண்டு வருவதில் பொருளாதார அடியாட்களான நாங்கள் தோல்வியடைந்ததால், சி.ஐ.ஏ.வால் இயக்கப்பட்ட இன்னொரு வகையான அடியாட்களான 'குள்ளநரிகள்' இப்படுகொலைகளை நிகழ்த்தினர்.

நான் இப்புத்தகத்தை எழுதுவதை நிறுத்தும்படி

நிர்பந்திக்கப்பட்டேன். அடுத்த இருபது ஆண்டுகளில் மேலும் நான்கு முறை இதை மீண்டும் தொடங்க முயன்றேன். 1989 - இல் பனாமா நாட்டின் மீது அமெரிக்கா நடத்திய ஆக்கிரமிப்பு, முதல் வளைகுடாப் போர், சோமாலியா, ஒசாமா பின்லேடனின் எழுச்சி போன்ற முக்கியமான நிகழ்ச்சிகள் நடந்த போதெல்லாம் இப்புத்தகத்தைத் திரும்பவும் எழுதத் தொடங்கத் தீர்மானிப்பேன். ஆனால் ஒவ்வொரு முறையும் மிரட்டல்கள் அல்லது கையூட்டுகள் என்னை இடையிலேயே கைவிடும்படி செய்தன.

2003 - இல் ஒரு வலிமை வாய்ந்த பன்னாட்டு நிறுவனத்திற்குச் சொந்தமான ஒரு பெரிய பதிப்பகத்தின் தலைவர் இதன் கையெழுத்துப் பிரதியைப் பார்த்துவிட்டுச் “சொல்லியே ஆக வேண்டிய ஆணித்தரமான கதை’’ என்று குறிப்பிட்டார். ஆனால் வருத்தத்துடன் சிரித்தபடி தலைமை நிர்வாகிகள் ஆட்சேபிப்பார்கள் என்பதால் இதை வெளியிடும் ஆபத்தை மேற்கொள்ள முடியாது என்று கூறிவிட்டார். பதிலாக இதை ஒரு நவீனமாக மாற்றி விடும்படி அவர் எனக்கு ஆலோசனை வழங்கினார். “’ஜான் லீ கேரி’ அல்லது ‘கிரஹாம் கிரீன்’ போன்ற நாவலாசிரியராக உங்களை விற்று விடலாம்’’.

ஆனால் இந்நூல் ஒரு கற்பனைக் கதையல்ல. என் சொந்த வாழ்க்கை. எந்தப் பன்னாட்டு நிறுவனத்திற்கும் சொந்தமாயிராத ஒரு பதிப்பகத்தின் துணிச்சல் மிகுந்த பதிப்பாளர் எனக்கு உதவ ஒப்புக் கொண்டார்.

இந்தக் கதை சொல்லப்பட்டே ஆக வேண்டும். நம் காலத்தில் உள்ள நெருக்கடிகள் கடுமையானவைதான். ஆனால் நமக்கு முன் ஏராளமான வாய்ப்புகளும் உள்ளன. இந்தக் குறிப்பிட்ட பொருளதார அடியாளின் கதை, நாம் ஏன் இப்போது கடக்கவே முடியாததாகத் தோன்றும் நெருக்கடிகளைச் சந்திக்கிறோம், இந்த நிலை எப்படி ஏற்பட்டது என்பதைப் பற்றியதாகும். நமது கடந்த காலத் தவறுகள் புரிந்து கொள்ளப்பட்டால் மட்டுமே எதிர்காலத்தில் கிடைக்கும் வாய்ப்புகளை அனுகூலமாக்கிக் கொள்ள முடியும் என்பதனாலேயே இந்தக் கதை சொல்லப்பட்டாக வேண்டும். செப்டம்பர், 11 தாக்குதலின் காரணமாக, இரண்டாவது ஈராக் போரின் காரணமாக, 2001 செப்டம்பர் 11 - இல் தீவிரவாதிகளின் கரங்களில் உயிரிழந்த மூவாயிரம் பேர்களோடு, அதே நாளில் உலகெங்கும் பட்டினியாலும் அது தொடர்பான காரணங்களாலும் இன்னொரு இருபத்து நான்காயிரம் பேர் உயிரிழந்துள்ளார்கள் என்பதன் காரணமாக இந்தக் கதை சொல்லப்பட்டே ஆக வேண்டும். உயிர் வாழத் தேவையான உணவைப் பெற முடியாமல் ஒவ்வொரு நாளும் உலகம் முழுவதும் இருபத்து நான்காயிரம் பேர் உயிரிழந்து வருகிறார்கள்.[1] எல்லாவற்றையும் விட முக்கியமாக இவையனைத்தையும் மாற்றும் வல்லமையையும், செல்வத்தையும் இன்று ஒரு நாடு பெற்றுள்ளது

என்பதால், அந்த நாடு நான் பிறந்த, பொருளாதார அடியாளாகச் சேவைபுரிந்த அமெரிக்காதான் என்பதால் இந்தக் கதை சொல்லப்பட்டே ஆக வேண்டும்.

அச்சுறுத்தல்களையும், கையூட்டுகளையும் இறுதியாக என்னைக் கடந்து வரும்படி செய்தது எது?

இதற்கு ஒரு சுருக்கமான பதிலைச் சொல்ல வேண்டுமானால், பட்டம் பெற்ற பின் உலகைத் தனியே எதிர்கொள்ளச் சென்ற என் ஒரே மகள் ஜெஸிகாவைத்தான் குறிப்பிட வேண்டும். நான் சமீபத்தில் இந்தப் புத்தகத்தை வெளியிடுவது பற்றிச் சிந்தித்து வருகிறேன் என்பதை அவளிடம் சொல்லி என் அச்சத்தைப் பகிர்ந்து கொண்டபோது அவள் சொன்னாள், “கவலைப்பட வேண்டாம் அப்பா. அவர்கள் உனக்கு முடிவு கட்டினால், நீ விட்ட இடத்திலிருந்து நான் தொடர்வேன். உனக்கு ஒரு நாள் நான் பெற்றுத் தரப் போகும் பேரக்குழந்தைகளுக்காக இதை நாம் செய்தே ஆக வேண்டும்’’. இதுதான் அந்தச் சுருக்கமான பதில்.

விரிவான பதில் இதுதான்: நான் பிறந்து வளர்ந்த நாட்டின் மேல் எனக்குள்ள அர்ப்பணிப்பு உணர்வு-, நமது நாட்டின் தந்தையர் கொண்டிருந்த இலட்சியங்களின் மேல் நான் கொண்டுள்ள அன்பு, உலகின் அனைத்து மக்களுக்கும் ‘வாழ்வு, விடுதலை, மகிழ்ச்சிக்கான தேடல்’ ஆகியவற்றை வாக்களிக்கும் அமெரிக்கக் குடியரசின் பால் எனக்குள்ள ஆழமான பற்று, 9/11-க்குப் பிறகு பொருளாதார அடியாட்கள் இந்தக் குடியரசை உலகப் பேரரசாக மாற்றிக் கொண்டிருக்கும் போது இனி மேலும் மௌனமாக இருக்கக்கூடாது என்று நான் செய்த தீர்மானம் ஆகியவையே. இதுவும் ஒரு நீண்ட பதிலின் சாராம்சம்தான். வரவிருக்கும் அத்தியாயங்களில் இப்பதில் மேலும் விரிவாக விளக்கப்படும்.

இது ஓர் உண்மைக் கதை. இதன் ஒவ்வொரு நிமிடத்தையும் நான் வாழ்ந்திருக்கிறேன். இதில் இடம் பெற்றுள்ள இடங்கள், மக்கள், உரையாடல்கள், உணர்வுகள் அனைத்துமே என் வாழ்க்கையின் பகுதிகள்தான். இது எனது தனிப்பட்ட கதை, என்றாலும் அது நமது வரலாற்றை வடிவமைத்த, நாம் இப்போதுள்ள இடத்திற்கு நம்மைக் கொண்டுவந்து சேர்த்த, நம் குழந்தைகளின் எதிர்காலத்தை பாதிக்கக் கூடிய உலக நிகழ்வுகளின் பின்னணியில் நிகழ்ந்தது. இந்த அனுபவங்கள் மற்றும் உரையாடல்களைத் துல்லியமாகத் தர எல்லா முயற்சிகளையும் எடுத்து இருக்கிறேன். வரலாற்று நிகழ்வுகள் பற்றி நான் விவாதிக்கும் போதெல்லாம், உரையாடல்களைத் திரும்ப வழங்கும் போதெல்லாம் வெளியிடப்பட்ட ஆவணங்கள், தனிப்பட்ட ஆவணங்கள், மற்றும் குறிப்புகள், என்னுடைய மற்றும் அந்நிகழ்வுகளோடு தொடர்புடைய மற்றவர்களது நினைவுகள், முற்றுப்பெறாத எனது ஐந்து மூலப் பிரதிகள், மற்ற ஆசிரியர்களது வரலாற்றுக் குறிப்புகள், முக்கியமாக முன்பு கிடைக்கப் பெறாமல்

இருந்த அல்லது இரகசியமாக வைக்கப்பட்டிருந்த தகவல்களை வெளிப்படுத்தும் நூல்கள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டே செய்துள்ளேன். இந்நூலில் குறிப்பிடப்படும் விஷயங்கள் குறித்து இன்னும் ஆழமாகச் செல்ல விரும்பும் வாசகர்களுக்காக இறுதியில் குறிப்புகளைத் தந்துள்ளேன். சில இடங்களில் ஓட்டம் தடைப்படக் கூடாது என்பதற்காக ஒருவரோடு பல நேரங்களில் நடந்த உரையாடல்களை ஒரே உரையாடலாக மாற்றித் தந்திருக்கிறேன்.

உண்மையில் எங்களை நாங்களே பொருளாதார அடியாட்கள் என்று அழைத்துக்கொள்கிறோமா என்று என்னுடைய பதிப்பாளர் கேட்டார். ஆமாம் என்று நான் உறுதியளித்தேன். பெரும்பாலும் அதன் முதலெழுத்துக்களைக் (EHMS) கொண்டு மட்டுமே எங்களை நாங்கள் அழைத்துக்கொண்டோம் என்றபோதிலும், உண்மையிலேயே 1971 - இல்,. எனது குருவான கிளேடினுடன் வேலை செய்யத் தொடங்கிய முதல் நாளிலேயே அவள், “எனக்கு அளிக்கப்பட்ட வேலை உன்னை ஒரு பொருளாதார அடியாளாக உருவாக்குவதுதான். உன் மனைவி உட்பட இது யாருக்கும் தெரியக்கூடாது’’ என்று அறிவித்திருந்தாள். பின்பு “ஒரு முறை இதில் கால்வைத்து விட்டால் பின்பு வெளியே போவது என்ற பேச்சுக்கே இடமில்லை,’’ என்று வேறு அவள் என்னை எச்சரித்திருந்தாள்.

நான் அடிவைத்த துறையின் அடிநாதமான பொய்மைக்குக் கிளேடின் ஒரு கவர்ச்சிகரமான உதாரணம். அழகும், புத்திசாலித்தனமும் அவளை மிகவும் சக்தி வாய்ந்தவளாக்கியிருந்தன. எனது பலவீனங்களைப் புரிந்துகொண்டு அவற்றைத் தனக்குச் சாதகமான விதத்தில் மிகச் சரியாக அவள் பயன்படுத்தினாள். இப்பணியை அவள் செயல்படுத்திய விதம் இந்த அமைப்பிற்குப் பின்னால் உள்ளவர்கள் எவ்வளவு நுணுக்கமானவர்கள் என்பதைத் தெளிவாகக் காட்டியது.

நான் செய்ய வேண்டியது என்ன என்பதை விவரித்தபோது கிளேடின் ஒளிவு மறைவு எதையும் வைத்துக் கொள்ளவில்லை. “அமெரிக்க வணிக நலன்களை முன்னிறுத்தும் விரிந்த வலைப்பின்னலின் பகுதியாக மாறுவதற்கு உலகத் தலைவர்களைத் தூண்டுவது. முதலில் இந்தத் தலைவர்கள் மீள முடியாத கடன் வலையில் சிக்கிக் கொள்வார்கள். அது அவர்கள் விசுவாசத்தை உறுதிப்படுத்தும். பின்பு நமது அரசியல், பொருளாதார, இராணுவத் தேவைகளுக்காக அவர்களைப் பயன்படுத்திக் கொள்ளலாம். இதற்கு மாற்றாக அவர்கள் தங்கள் மக்களுக்குத் தொழில் பூங்காக்கள், மின்சக்தி நிலையங்கள், விமான நிலையங்கள் அமைத்துத் தருவதன் மூலம் தங்கள் நிலையைப் பலப்படுத்திக் கொள்வார்கள். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பொறியியல், கட்டுமான நிறுவனங்களின் உரிமையாளர்கள் கொள்ளை லாபம் ஈட்டுவார்கள்,’’ என்று அவள் சொன்னாள்.

இந்த அமைப்பு மூர்க்க வெறிகொண்டு ஓடியதன் விளைவுகளை

இன்று நாம் பார்க்கிறோம். மனிதத்தன்மையற்ற சூழல் நிலவுகின்ற, மனிதர்களைக் கசக்கிப் பிழிகின்ற ஆசியத் தொழிற்சாலைகளில் வேலை செய்து வரும் தொழிலாளர்களுக்கு நமது மிகவும் மரியாதைக்குரிய நிறுவனங்களின் நிர்வாகிகள் ஏறத்தாழ அடிமைகளுக்குத் தரப்பட்டது போன்ற கூலியையே தந்து வருகிறார்கள். எண்ணெய் நிறுவனங்கள் வேண்டுமென்றே விஷப் பொருட்களை (toxins) மழைக் காடுகளினூடே ஓடும் ஆறுகளுக்குள் கொட்டுகின்றன. அவை திட்டமிட்டே விலங்குகளையும், தாவரங்களையும் அழிப்பதோடு, பழம் பண்பாடுகளைப் பின்பற்றும் மக்களையும் கூட்டங் கூட்டமாகக் கொன்று குவிக்கின்றன. மருந்துகளை உற்பத்தி செய்யும் நிறுவனங்கள் எச். ஐ. வி. யால் பாதிக்கப்பட்ட லட்சக்கணக்கான ஆப்பிரிக்கர்களுக்கு உயிர் காக்கும் மருந்துகளை அளிக்க மறுக்கின்றன. நமது நாட்டிலேயே பன்னிரெண்டு மில்லியன் மக்கள் அடுத்தவேளை உணவைக் குறித்துக் கவலை கொள்ளும் நிலையில் உள்ளனர்.[2] ஆற்றல் வளத்துறை என்ரானை* உருவாக்குகிறது. வரவு செலவு கணக்குத் துறை ஆண்டர்சனை** உருவாக்குகிறது. பணக்கார நாடுகளின் மக்கள்தொகையில் ஐந்தில் ஒரு பகுதியினரின் வருமானத்திற்கும், ஏழைநாடுகளின் மக்கள்தொகையில் ஐந்தில் ஒரு பகுதியினரின் வருமானத்திற்கும் இடையேயான விகிதாசாரம் 1960-லிருந்து 70 வரை 30.1 ஆக இருந்தது 1995-இல் 74.1 ஆக உயர்ந்துள்ளது. [3]அமெரிக்கா ஈராக்கில் போர் நடத்த 87 பில்லியன் டாலர் செலவிடுகிறது. ஆனால் உலக மக்கள் அனைவருக்கும் சுத்தமான நீரும், போதுமான உணவும், மற்ற அடிப்படை வசதிகளும், கல்வியும் அளிக்க இதில் பாதித் தொகையே தேவைப்படும் என்று ஐ. நா சபை மதிப்பிட்டுள்ளது.[4]

இப்படியிருக்கும்போது தீவிரவாதிகள் ஏன் நம்மைத் தாக்குகிறார்கள் என்று நாம் அப்பாவித்தனமாக ஆச்சரியப்படுகிறோம்!

திட்டமிட்ட சதியே நமது தற்போதைய பிரச்சனைகளுக்குக் காரணம் என்று ஒரு சிலர் சொல்கிறார்கள். அது அவ்வளவு எளிமையானதாக இருக்க வேண்டும் என்றுதான் நானும் விரும்புகிறேன். அப்படியிருந்துவிட்டால் இந்தச் சதியாலோசனையில் சம்பந்தப்பட்டவர்கள் எல்லோரும் வளைத்துப் பிடிக்கப்பட்டு நீதியின் முன் நிறுத்தப்பட்டுவிட்டால் பிரச்சனை முடிந்துவிடும். ஆனால் இந்த அமைப்பு ஒரு சதியைவிடப் பல மடங்கு அபாயகரமானது என்றால் எத்தித் தள்ளப்படுகிறது. சதியாலோசனையில் ஈடுபட்டுள்ள ஒரு குழுவால் அல்ல, வேதவாக்கியத்துக்குச் சமமாக மதிக்கப்படும் ஒரு கோட்பாட்டாலேயே இந்த அமைப்பு வழிநடத்தப்படுகிறது. எல்லாப் பொருளாதார வளர்ச்சியும் மனித குலத்திற்கு நன்மையே செய்கிறது. வளர்ச்சி அதிகரிக்க, அதிகரிக்க நலன்களும் மேலும் பரவலாக்கப்படும் என்பதுதான் அந்தக் கோட்பாடு. அதற்கு ஒரு பின்விளைவும் உண்டு.

பொருளாதார வளர்ச்சி என்ற நெருப்பைக் கிளறி விடுவதில் முன்னணியில் உள்ளவர்கள் மேன்மைப்படுத்தப்படவும் பரிசளிக்கப்படவும் வேண்டும். அதே நேரத்தில் பின்னணியில் உள்ளவர்கள் சுரண்டலுக்கு உட்படுத்தப்பட வேண்டும் என்பதுதான் அது.

இந்தக் கோட்பாடு தவறானது. பல நாடுகளில் பொருளாதார வளர்ச்சி என்பது மக்கள்தொகையில் ஒரு சிறிய பகுதியினருக்கே பலனளிப்பதையும், பெரும் பகுதியினருக்கு அது அழிவையும் வறுமையையுமே அளிப்பதையும் நாம் அறிவோம். இந்த அமைப்பை நடத்திச் செல்லும் தலைவர்களுக்குச் சிறப்பு அந்தஸ்து அளிக்கப்பட வேண்டும் என்ற கருத்தால் இந்த அநீதி நியாயப்படுத்தப்படுகிறது. இந்தக் கருத்தே நமது பிரச்சனைகள் பலவற்றுக்கு அடிப்படைக் காரணமாகவும், சதி பற்றிய கருத்துகள் பரவுவதற்கு ஊற்றுக் கண்ணாகவும் இருக்கிறது. பேராசைப்படுவதற்காக ஆண்களுக்கும் பெண்களுக்கும் பரிசளிக்கப்படும்போது பேராசை நியாயமானதாக, தூண்டுகோலாக, உந்துவிசையாக ஆகிவிடுகிறது. பூமியின் இயற்கை வளங்களை அரக்கத்தனமான நுகர்வுக்கு உட்படுத்துவதைப் புனிதமான ஒன்றாகக் கருதும்போது, சமனற்ற வாழ்க்கை வாழும் இந்தச் சிறுபான்மை மேட்டுக்குடியினரைப் பின்பற்றும்படி நமது குழந்தைகளுக்குக் கற்றுத் தரும்போது, சிறுபான்மையினரான மேல்தட்டு வர்க்கத்தினரின் சேவகர்களாகப் பெரும்பான்மை மக்களை வரையறுக்கும் போது நாம் தொல்லையை நாடிப் போகிறோம். நாம் தேடியது கிடைக்கிறது.

உலகப் பேரரசை நோக்கிய பாய்ச்சலில் முன் நிற்கும் நிறுவனங்களும், வங்கிகளும், அரசாங்கங்களும் (சுருக்கமாகச் சொல்வதானால், நிறுவன அதிகார வர்க்கம்) தங்கள் அதிகாரங்களையும் பண பலத்தையும் பயன்படுத்தி, நமது பள்ளிகளும், ஊடகங்களும் இந்தக் கற்பனையான கருத்தையும் அதன் விளைவுகளையும் ஆதரிக்கும்படி செய்கின்றன. இந்த அரக்கத்தனமான இயந்திரமயமான உலகப் பண்பாட்டின் தீராத பசி கண்ணில் தென்படும் அனைத்தையும் நுகர்ந்து விட்டு இறுதியில் தன்னைத்தானே விழுங்கிக் கொள்வதைத் தவிர வேறு மாற்று வழி இல்லாத ஒரு கட்டத்திற்கு நம்மைக் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறது.

* என்ரான்: மின உற்பத்தியில் ஈடுபட்டிருந்த, குறுகியகாலத்தில் மிகப்பெரிய வளர்ச்சியை எட்டிய மாபெரும் பன்னாட்டு நிறுவனம். பின்பு இந்நிறுவனம் பெரும் நஷ்டத்திற்குள்ளாகி மூடப்பட்டது. (மொ-ர்)

** ஆண்டர்சன்: பிரபலமான கணக்குத் தணிக்கை நிறுவனம் (மொ-ர்)

நிறுவன - அதிகார வர்க்கம் என்பது ஒரு சதிக் கும்பலல்ல; அது சில பொதுவான மதிப்பீடுகளையும், லட்சியங்களையும் முன்னிறுத்தியுள்ளது. இந்த வர்க்கத்தின் மிக முக்கியமான பணிகளில்

ஒன்று இந்த அமைப்பை நிலை நிறுத்துவதும், அதை விரிவுபடுத்தி வலுப்படுத்துவதுமாகும். இதன் சூத்திரதாரிகளின் வாழ்க்கை, அவர்களது மாளிகைகள், உல்லாசப் படகுகள், ஜெட் விமானங்கள் போன்றவை எல்லையற்ற நுகர்வுக் கலாசாரத்தில் நம்மைத் தள்ளுவதற்கான தூண்டுகோல்களாகப் பயன்படுத்தப்படுகின்றன. பொருட்களை வாங்குவது மறுக்க முடியாத கடமை; பூமியைக் கொள்ளையிடுவது பொருளாதார வளர்ச்சிக்கு உகந்தது. இக்கருத்தை நம் மீது திணிக்கச் சாத்தியமான எல்லா வாய்ப்புகளும் பயன்படுத்தப்படுகின்றன. இந்த அமைப்பிற்கு ஏலம் கூறும் வேலையைச் செய்ய என்னைப் போன்றவர்களுக்குப் பணம் கொட்டிக் கொடுக்கப்படுகிறது. நாங்கள் எங்கள் வேலையில் தோல்வியடைந்ததால் இன்னும் மோசமான அடியாட்கள் - குள்ளநரிகள் என்று அழைக்கப்படுபவர்கள் - அரங்கிற்கு வருவார்கள். அவர்களும் தோல்வியடையும் பட்சத்தில் அந்த வேலை இராணுவத்தின் தலையில் சுமத்தப்படுகிறது.

இந்நூல், ஒப்பீட்டளவில் ஒரு சிறிய குழுவில் நான் பொருளாதார அடியாளாக இருந்தபோது நடந்த நிகழ்வுகள் பற்றிய ஒப்புதல் வாக்குமூலமாகும். அதே பாத்திரத்தை ஆற்றக்கூடியவர்கள் இப்போது ஏராளமாக உள்ளனர். அவர்களுக்கு இன்னும் அழகான பட்டங்கள் சூட்டப்படுகின்றன. அவர்கள் மன்சான்டோ, ஜெனரல் எலெக்ட்ரிக், நைக், ஜெனரல் மோட்டார்ஸ், வால் - மார்ட் உள்ளிட்ட உலகின் மாபெரும் நிறுவனங்களில் உள்ள நடைபாதைகளில் நடை பயில்கிறார்கள். உண்மையில் ஒரு பொருளாதார அடியாளின் ஒப்புதல் வாக்குமூலம் என்னுடையதைப் போலவே அவர்களுடைய கதையும்தான்.

இது உங்கள் கதையும்கூட, உண்மையாகவே முதன்முதலாக உலகம் முழுவதையும் கட்டியாளும் ஒரு பேரரசின் கதை. இந்தக் கதையை நாம் மாற்றியமைக்காவிட்டால் அது நிச்சயம் துன்பமயமாகத்தான் முடியும் என்று வரலாறு காட்டுகிறது. எந்தப் பேரரசும் நீடித்து நிலைத்திருந்ததே கிடையாது. அவை ஒவ்வொன்றுமே பயங்கரமான தோல்வியையே தழுவியுள்ளன. தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டுவதற்கான பாய்ச்சலில் அவை பல பண்பாடுகளை அழிக்கின்றன. தாங்களும் இறுதியில் அழிவையே சந்திக்கின்றன. எந்த நாடும், நாடுகளின் கூட்டணியும், மற்றவர்களைச் சுரண்டி நீண்டகாலம் செழித்திருந்து விட முடியாது.

இந்நூல் எழுதப்பட்டதன் நோக்கம் உண்மையை வெளிப்படுத்துவதும், அதன் மூலம் நம் வரலாற்றை மாற்றியமைப்பதுமேயாகும். நாம் எப்படி உலகின் மூல வளங்களின் மேல் தீராப் பசியை உருவாக்-கும் பொருளாதார இயந்திரத்தால் சுரண்டப்படுகிறோம், அது எப்படி அடிமைத்தனத்தை முன்னிறுத்தும்

அமைப்புகளை உருவாக்குகின்றது என்பதை நம்மில் போதுமான அளவினர் உணர்ந்து கொண்டால் அதை இனிமேலும் சகித்துக்கொள்ள மாட்டோம் என்பது எனக்கு உறுதியாகத் தெரிகிறது. சிலர் மட்டும் செல்வத்தில் மூழ்கித் திளைக்கும் போது பெரும்பாலோர் வறுமையிலும், சீரழிந்து போன இயற்கைச் சூழலிலும், வன்முறையிலும் வதைபடும் இவ்வுலகில் நம் பாத்திரத்தை மறு ஆய்வு செய்வோம். சமூக நீதி, ஜனநாயகம், அன்பு ஆகியவற்றை அனைவருக்கும் கிடைக்கச் செய்வதற்கான பயணத்தில் நம்மை இணைத்துக் கொள்வோம்.

பிரச்சனை உள்ளது என்பதை ஏற்றுக்கொள்வது தீர்வை நோக்கி எடுத்து வைக்கும் முதல் அடி. பாவம் செய்ததை ஒப்புக் கொள்வதே பாவ மன்னிப்பின் தொடக்கம். எனவே இந்த நூல் நமது மீட்சிக்கான தொடக்கமாக இருக்கட்டும். அதற்கு நம்மை அர்ப்பணித்துக் கொள்ளவும், சமத்துவம் மிக்க கண்ணியமான சமூகங்கள் பற்றிய கனவை நனவாக்கவும் அது நமக்குத் தூண்டுதலாக இருக்கட்டும்.

***

இந்நூலில் இடம்பெற்றுள்ள என் வாழ்வில் முக்கியப் பங்காற்றிய பலரது பங்களிப்பு இல்லாமலிருந்திருந்தால் இப்படியொரு நூல் எழுதுவது சாத்தியமே இல்லாமல் போயிருக்கும். இவர்களிடம் கற்ற பாடங்களுக்கும், பெற்ற அனுபவங்களுக்கும் நான் நன்றியுள்ளவனாயிருக்கிறேன்.

இவர்களைத் தவிர தனிமைப்பட்டிருந்த என்னை, என் கதையை வெளிப்படையாகச் சொல்வதற்கு ஊக்கமளித்த, ஸ்டீபன் ரெக்ட்ஸஃபென், பில் ட்விஸ்ட், லைனே ட்விஸ்ட், ஆன் கெம்ப், ஆர்ட் ரோஃபே மற்றும் ‘கனவை மாற்றும்’ பயணங்கள் மற்றும் பயிலரங்கங்களில் பங்குகொண்ட பலர், குறிப்பாக என் சக பயிற்சியாளர்களான ஈவா புரூஸ் லின் ராபர்ட்ஸ் ஹாரிக் மேரி டென்டல் மற்றும் இருபத்தைந்தாண்டு காலமாக எனக்கு மனைவியாக மட்டுமல்லாமல் துணைவியாகவும் இருந்து வரும் வின்பிரட் மற்றும் என் மகள் ஜெஸிகா அனைவருக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

பன்னாட்டு வங்கிகள், நிறுவனங்கள் மற்றும் பல நாடுகளின் அரசியல் மர்மங்கள் குறித்த தனிப்பட்ட பார்வையையும், தகவல்களையும் வழங்கிய பல ஆண்களுக்கும் பெண்களுக்கும் நான் நன்றிக்கடன் பட்டிருக்கிறேன். அவர்களில் குறிப்பாக மைக்கேல் பென் - எலி, சபரினா பொஎலொக்னி, ஜூவான் கேப்ரியேல் கராஸ்கோ, ஜெம்மி கிரான்ட், பால் ஷா மற்றும் பெயர் குறிப்பிடப்பட விரும்பாத ஆனால் உங்களை நன்கறிந்துள்ள பலருக்கும் நான் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலின் கையெழுத்துப் பிரதி தயாரானவுடன் பெர்ரட் கோல்லர்

பதிப்பக்கத்தின் ஸ்டீபன் பியாஸான்டி தொடர்ந்து முன்னேற என்னை ஊக்குவித்ததோடு, திறமை வாய்ந்த ஆசிரியர் என்ற முறையில், பல மணி நேரம் செலவழித்து இந்நூலை வடிவமைக்க எனக்கு உதவியுள்ளார். ஸ்டீபனுக்கும், என்னை அவருக்கும் அறிமுகப்படுத்திய ரிச்சர்ட் பெர்ல்க்கும், மற்றும் இந்நூலைப் படித்து விமர்சனங்கள் வழங்கிய நோவா பிரவுன், ரன்டி பியட், ஆலன் ஜோன்ஸ், கிரிஸ் லீ, ஜெனிபர் லிஸ் லாவ்ரி பெலுசூட் ஆகியவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றி. இந்நூலைப் படித்து விமர்சனங்கள் வழங்கியதோடு நில்லாமல், மொழிநடையில் எனக்கேற்பட்ட சிக்கல்களைக் கடந்துவர உதவிய மிக உயர்ந்த இலக்கியத் திறனுடைய டேவிட் கோர்ட்டென், எனது முகவர் பால்பெடோர்கோ, நூலை வடிவமைத்த வாலெரி புரூஸ்டர் சொற்பிரயோகத்தில் நிபுணத்துவம் பெற்றவரும், அற்புதமான தத்துவஞானம் கொண்டவரும், இந்த நூலின் Copy Editor ஆன (பிரதி சரி பார்த்தவருமான) டொட் மன்ஸாவிற்கும் எனது நன்றிகள்.

விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டியதன் தேவையை உணர்ந்து, இவ்வுலகை இன்னும் மேம்பட்டதாக ஆக்க இடையறாது உழைத்து வரும் பெர்ரட் கோல்லரின் நிர்வாக ஆசிரியர் ஜீவன் சிவசுப்பிரமணியன், கென் லுபோஃப், ரிக் வில்சன், மரியா ஜீஸஸ் ஆகுல்லோ, பேட் ஆன்டர்சன், மரீனா குக், மைக்கேல் க்ரோவ்லி, ராபின் டொனோவன், கிரிஸ்டன் ப்ரான்ட்ஸ் டிஃபனி லீ கேத்தரீனே லெங்குரோன்னி, டயான்னே பிளான்ட்டர் மற்றும் ஏனைய ஊழியர்களின் பால் நான் கொண்டுள்ள நன்றியுணர்வையும் குறிப்பிட்டுச் சொல்ல விரும்புகிறேன்.

என்னோடு மெய்ன் (MAIN) நிறுவனத்தில் பணிபுரிந்து, உலகப் பேரரசை நிலைநிறுத்துவதற்குத் தங்களை அறியாமலேயே பணிபுரிந்து வந்த பொருளாதார அடியாட்கள் அனைவருக்கும் நான் கட்டாயம் நன்றி சொல்லியே ஆக வேண்டும். குறிப்பாக இந்த நிறுவனத்தில் நேரடியாக என்னிடம் பணியாற்றிய, தொலைதூரப் பகுதிகளுக்கு என்னுடன் பயணம் செய்த, பல அற்புதமான கணங்களை என்னுடன் பகிர்ந்து கொண்டவர்களுக்கு என் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். பழங்குடிப் பண்பாடுகள் மற்றும் மந்திரவாதம் பற்றிய எனது முந்தைய நூல்களை வெளியிட்ட நூலாசிரியனாகும் பாதையில் என்னைச் செல்லத் தூண்டிய புதைந்து கிடக்கும் பன்னாட்டு மரபுகள் (Inner Traditions International) - ன் ஈஹூட் ஸ்பெர்லிஸ் மற்றும் அவரது ஊழியர்களுக்கு எனது நன்றிகள்.

அடர்ந்த காடுகளிலும், பாலைவனங்களிலும், மலைகளிலும், ஜகார்த்தா நகரின் வாய்க்கால் ஓரம் அமைந்திருந்த குடிசைகளிலும் இன்னும் உலகம் முழுவதுமுள்ள எண்ணற்ற நகரங்களிலுள்ள சேரிகளிலும் உள்ள தங்கள் வீடுகளுக்கு என்னை அழைத்துச் சென்ற,

தங்கள் உணவையும், வாழ்வையும் என்னுடன் பகிர்ந்து கொண்ட, எப்போதும் எனக்கு உணர்வும் ஊக்கமும் அளித்துவரும் மக்களுக்கு நான் என்றென்றைக்குமாகக் கடமைப்பட்டிருக்கிறேன்.

ஷான் பெர்க்கின்ஸ்

ஆகஸ்ட் 2004

[1] The United Nations World Food Programme, http://www.wfp.org/index.asp? section=1 (accessed December 27, 2003). பட்டினியைத் தடுப்பதற்கான தேசிய நிறுவனம் ‘ஒவ்வொரு நாளும் பட்டினியாலும் குணப்படுத்தக்கூடிய நோய்களாலும் ஐந்து வயதிற்குட்பட்ட 34,000 குழந்தைகள் உயிரிழந்து வருகின்றன என்று மதிப்பிட்டுள்ளது. (http://www.napsoc.org, accsses December 2007). Starvation net ‘‘பட்டினியோடு தண்ணீரால் வரும் நோய்கள் மற்றும் எய்ட்ஸால் ஏற்படும் மரணங்களையும் சேர்த்துக் கொண்டால் ஒவ்வொரு நாளும் இறப்பவர்கள் தொகை 50,000-ஐ நெருங்கிக் கொண்டுள்ளது. (http://www.starvation.net, accessed December 27, 2003).

[2] U.S.Department of Agriculture findings, reported by the Food Research and Action Center (FRAC) http://www.frac.org (accessed December 27, 2003)

[3] United Nations. Human Development Report. (New York: United Nations, 1999).

[4] ‘‘1998—இல் ஐக்கிய நாடுகளின் வளர்ச்சித் திட்டம் உலகிலுள்ள அனைவருக்கும் தூய்மையான உணவும் சுகாதார வசதிகளும் அளிக்க தற்போது செலவிடப்பட்டு வரும் தொகைக்கு மேலாக இன்னும் ஒன்பதாயிரம் கோடி டாலர் தேவைப்படும் என்று மதிப்பிட்டுள்ளது. உலகம் முழுவதுமுள்ள பெண்கள் அனைவருக்கும் பேறு கால சேவைகள் அளிக்க இன்னும் பன்னிரெண்டாயிரம் கோடி டாலர் தேவைப்படும் என்று அவர்கள் கூறியுள்ளனர். உலகிலுள்ள அனைத்து மக்களுக்கும் போதுமான உணவையும், அடிப்படை உடல் நலம் பேணும் வசதிகளையும் அளிக்க இன்னும் பதின்மூன்றாயிரம் கோடி ரூபாய் செலவிடப்பட்டால் போதும். இன்னொரு ஆறாயிரம் கோடி டாலர் செலவிட்டால் போதும் அனைவருக்கும் அடிப்படைக் கல்வி அளித்து விடலாம். எனவே நாற்பதாயிரம் கோடி டாலர் செலவிட்டால் போதும், இந்த அனைத்துப் பிரச்சனைகளுக்கும் தீர்வு கண்டு விடலாம்.’’ John Robbins, Author of Diet for a New America and The Food Revolution, http://www.foodrevolution.org (accessed December 27, 2003).

# தொடங்கும் முன்

ஈக்வடாரின் தலைநகரமான குயிட்டோ, ஆண்டிஸ் மலைகளில் ஒன்பதாயிரம் அடி உயரத்தில் உள்ள ஒரு எரிமலைப் பள்ளத்தாக்கில் பரந்து விரிந்திருந்தது. கொலம்பஸ் அமெரிக்காவுக்கு வருவதற்கு நீண்டகாலத்திற்கு முன்பே கட்டியமைக்கப்பட்டது இந்நகரம். இது நிலநடுக்கோட்டிற்குத் தெற்கே சில மைல் தொலைவிலேயே அமைந்திருந்தாலும், சுற்றியுள்ள மலைமுகடுகளில் பனி படர்ந்திருந்தது.

குயிட்டோவுக்கு எட்டாயிரம் அடி கீழே, ஈக்வடாரின் அமேசான் காடுகளுக்கு நடுவே ஷெல் நகரமும், எல்லைக் காவல் நிலையமும், இராணுவத் தளமும் அமைந்துள்ளன. இவை ஷெல் எண்ணெய் நிறுவனத்திற்குப் பணி புரிவதற்காகவே அமைக்கப்பட்டவை. நீராவிப்படலங்கள் சூழ்ந்த இந்நகரில் பெரும்பாலும் இராணுவ வீரர்களும், எண்ணெய் நிறுவனத்தில் பணிபுரியும் தொழிலாளிகளும், அவர்களுக்கு விபசாரிகளாகவும், கூலி ஆட்களாகவும் பணிபுரியும் ஷுவார் மற்றும் கிச்சுவா பழங்குடியின மக்களுமே வாழ்ந்து வருகிறார்கள்.

இப்பகுதியில் நீங்கள் பயணம் செய்ய வேண்டுமானால், இயற்கை எழில் மிகுந்த, உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் சாலை வழியே செல்ல வேண்டும். இந்தப் பயணத்தின்போது ஒரே நாளில் நான்கு விதமான பருவ நிலைகளையும் நீங்கள் காண்பீர்கள்.

இந்தச் சாலையில் ஏற்கனவே பலமுறை பயணம் செய்திருந்தாலும், இந்த அற்புதமான இயற்கையழகு எனக்கு ஒருபோதும் சலிப்பூட்டியதில்லை. அருவிகளும், பேரழகு வாய்ந்த காடுகளும் சூழ்ந்த செங்குத்தான சிகரங்கள் ஒருபுறம் உயர்ந்து நிற்கும். மறுபுறம் ஆழங்காண முடியாத சரிவுகள். அடியாழத்தில் அமேசானின் கிளை நதியான பஸ்டஸா ஆறு மலைகளினூடே வளைந்து நெளிந்து மூவாயிரம் மைல் தொலைவில் உள்ள அட்லாண்டிக் பெருங்கடலை நோக்கிப் பாய்ந்து செல்கிறது. பஸ்டஸா ஆறு, உலகின் மிக உயரத்திலுள்ள புகைந்து கொண்டிருக்கும் எரிமலைகளில் ஒன்றான கேட்டோபாக்ஸி பனியாற்றிலிருந்து தோன்றுகிறது. கேட்டோபாக்ஸி இன்காக்களின் காலத்தில் ஒரு தேவதை என்று கருதப்பட்டது.

2003 - ஆம் ஆண்டு, எனது முந்தைய பணிகளிலிருந்து முற்றிலும் வேறுபட்ட ஒரு வேலைக்காக குயிட்டோவிலிருந்து ஷெல்லுக்குக் கிளம்பினேன். என் உதவியோடு கட்டவிழ்த்து விடப்பட்ட ஒரு போரை நிறுத்துவதே எனது நோக்கமாக இருந்தது. இந்தப் போர் அது

நடைபெற்றுக் கொண்டிருந்த நாட்டுக்கு வெளியே அறியப்படவேயில்லை. எங்களைப் போன்ற பொருளாதார அடியாட்கள் கட்டவிழ்த்துவிட்ட இந்தப் போரைப் போன்ற பல விஷயங்கள் வெளியுலகிற்குத் தெரிவதேயில்லை. நான் பழங்குடியின மக்களான ஷூவார்களையும், பிச்சுவாக்களையும், ஸ்பாரோக்களையும், ஷிலியார்களையும் சந்திக்கச் சென்று கொண்டிருந்தேன். இந்தப் பழங்குடியின மக்கள், தமது குடும்பங்களையும், வீடுகளையும், நிலங்களையும் நமது எண்ணெய் நிறுவனங்கள் அழிப்பதைத் தடுக்க இறுதி வரை போராட உறுதி பூண்டிருந்தார்கள். அவர்களைப் பொறுத்தவரை இந்தப் போர் தங்கள் குழந்தைகளையும், பண்பாட்டையும் காக்க நடத்தப்படும் போர்; நமக்கோ அது அதிகாரம், பணம், இயற்கை வளங்களைக் கைப்பற்றுவதற்கான ஒரு வாய்ப்பு. உலகைத் தமது பிடிக்குள் கொண்டுவரும் முயற்சியில் ஈடுபட்டுள்ள சில பேராசை பிடித்த மனிதர்களின் உலகப் பேரரசு கனவின் ஒரு பகுதியே இந்தப் போர்.[1]

இதுதான் பொருளாதார அடியாட்களான நாங்கள் ஆற்றிய அற்புதமான பணி. நாங்கள் உலகப் பேரரசை உருவாக்குகிறோம். மற்ற நாடுகளை நமது மாபெரும் நிறுவனங்களுக்கும், அரசுக்கும், வங்கிகளுக்கும் அடிமைப்படுத்துவதற்கு ஏற்ற சூழ்நிலைகளைப் பன்னாட்டு நிறுவனங்களைக் கொண்டு உருவாக்குகிறோம். மேட்டுக் குடியைச் சேர்ந்த ஆண்களையும் பெண்களையும் கொண்டது எங்கள் குழு. மாஃபியாக்களும் எங்களைப் போலவேதான் இயங்குகின்றனர். இந்தச் சலுகைகள் உள்கட்டுமானத்தை வளர்த்தெடுப்பதற்கு அவசியமான மின் நிலையங்கள், நெடுஞ்சாலைகள், துறைமுகங்கள், விமான நிலையங்கள், தொழில் பூங்காக்கள் போன்றவற்றை உருவாக்க வழங்கப்படும் கடன்களாக அவதாரமெடுக்கின்றன. இந்தச் சலுகைகளை வழங்க நாம் போடும் நிபந்தனை நமது நாட்டைச் சேர்ந்த பொறியியல் மற்றும் கட்டுமான நிறுவனங்கள்தான் இவற்றையெல்லாம் நிர்மாணிக்க வேண்டும் என்பதாகும். சுருக்கமாகச் சொன்னால் பெரும் பகுதி பணம் அமெரிக்காவை விட்டு வெளியே செல்வதேயில்லை. நியூயார்க்கிலோ, ஹட்சனிலோ, சான் - பிரான்ஸிஸ்கோவிலோ உள்ள நிறுவனங்களின் அலுவலகங்களுக்கு மாற்றப்படுகிறது அவ்வளவுதான்.

பணம் உடனடியாக நிறுவன - அதிகார வர்க்கத்திற்கு அதாவது கடன் கொடுத்தவர்களுக்கே திரும்பிவிடுகிறது. ஆனால் கடன் வாங்கிய நாடு அதை அசலும், வட்டியுமாகத் திருப்பித் தர வேண்டும். பொருளாதார அடியாட்கள் முழு வெற்றியடைந்து விட்டால் அந்நாடு கடனை அடைப்பது சாத்தியமே இல்லாத நிலையை அடைந்துவிடும். இது நடக்கும்போது மாஃபியாக்களைப் போலவே நாமும் நம் பங்காக சதையைக்* கேட்போம். அதில் கீழ்க்கண்டவற்றில் ஒன்றோ அதற்கு அதிகமானதோ அடங்கும்: ஐக்கிய நாடுகள் சபையில் வாக்களிக்கும்

உரிமையின் மீதான கட்டுப்பாடு, ராணுவத் தளங்கள் அமைக்க அனுமதி அல்லது விலைமதிப்பற்ற மூலவளங்களான எண்ணெய் அல்லது பனாமா கால்வாய் போன்றவற்றின் மீதான ஆதிக்கம். ஆனால் கடனாளி நமக்குத் தர வேண்டிய பணம் குறையவே போவதில்லை. நமது உலகப் பேரரசில் இன்னொரு நாடு சேர்க்கப்பட்டுவிடும்.

2003 - ஆம் ஆண்டு ஒரு சுட்டெரிக்கும் பகற்பொழுதில் ஷெல்லுக்குப் பயணித்தபோது, முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு இங்கே நான் முதன்முதலாக வந்த நாளை நினைத்துக்கொண்டேன். ஈக்வடார் நாடு பரப்பளவில் அமெரிக்காவின் நெவாடா மாகாணத்தை ஒத்ததுதான் என்றாலும் கனன்று கொண்டிருக்கும் முப்பதுக்கும் மேற்பட்ட எரிமலைகளும், உலகப் பறவையினங்களில் பதினைந்து சதவீதத்திற்கு மேலும், இன்னும் வகைப்படுத்தப்படாத ஆயிரக்கணக்கான தாவரங்களும் இங்கு உள்ளன. ஸ்பானிஷ் பேசும் மக்கள்தொகைக்குச் சமமாகப் பல்வேறு பழங்குடியின மக்களும் உள்ளனர் என்று படித்திருந்தேன். இந்த நாடு அற்புதமானதாகவும், உள்ளத்தைக் கொள்ளை கொள்வதாகவும் இருந்தது. களங்கமற்றவை, மனிதனின் காலடி படாதவை, எளிமையானவை என்ற சொற்கள் திரும்பத் திரும்ப மனதில் தோன்றிக்கொண்டே இருந்தன.

முப்பத்தைந்து ஆண்டு காலத்தில் மிகப்பெரிய மாற்றம் நிகழ்ந்துவிட்டது.

1968-ம் ஆண்டில் நான் முதன்முதலாக இங்கே வந்த போதுதான் டெக்ஸகோ நிறுவனம் ஈக்வடாரின் அமேசான் பகுதியில் பெட்ரோலியத்தைக் கண்டுபிடித்திருந்தது. இன்று நாட்டின் ஏற்றுமதியில் எண்ணெய் பாதியளவாக உள்ளது. அந்த முதல் பயணத்திற்குச் சற்று பின்பு நிர்மாணிக்கப்பட்ட டிரான்ஸ் ஆண்டியன் எண்ணெய் பாதியளவாக உள்ளது. அந்த முதல் பயணத்திற்குச் சற்றுப் பின்பு நிர்மாணிக்கப்பட்ட டிரான்ஸ் ஆண்டியன் எண்ணெய்க் குழாய் தொடர் காரணமாக ஐந்து லட்சம் பீப்பாய் எண்ணெய் நுண்ணிய, எளிதில் அழியக்கூடிய மழைக்காடுகளில் கசிந்துள்ளது. இது எக்ஸோன் வால்டெஸ் என்ற நிறுவனம் கசியவிட்ட எண்ணெய்யை விட இரண்டு மடங்காகும்.[2] பொருளாதார அடியாட்கள் உருவாக்கிய ஒரு கூட்டமைப்பு 300 மைல் நீளமுள்ள இக்குழாய்த் தொடரை 1.3 பில்லியன் டாலர் செலவில் நிர்மாணித்தது. இக்குழாய்த் தொடர் ஈக்வடாரை அமெரிக்காவுக்கு மிக அதிக எண்ணெய் ஏற்றுமதி செய்யும் பத்து நாடுகளில் ஒன்றாக ஆக்கியுள்ளது.[3] ஆனால் இக்குழாய்த் தொடரின் காரணமாகப் பரந்து விரிந்த மழைக்காடுகள் நாசமாகி விட்டன. பஞ்சவர்ணக் கிளிகளும், சிறுத்தைகளும் அழிந்து போய்விட்டன. ஈக்வடாரின் மூன்று பழங்குடியினங்கள் அழிவின் விளிம்புக்குத் தள்ளப்பட்டுவிட்டன. பழம்பெரும் நதிகள் புகை உமிழும் சாக்கடைக் குழிகளாகிவிட்டன.

இதே காலத்தில்தான் பழங்குடியினங்கள் எதிர்த்துப் போராடத் தொடங்கின. உதாரணமாக 2003-ஆம் ஆண்டு மே மாதம், 7-ஆம் தேதி அமெரிக்க வழக்குரைஞர்கள் குழுவொன்று ஈக்வடாரைச் சேர்ந்த முப்பதாயிரத்திற்கும் மேற்பட்ட பழங்குடி மக்களின் சார்பில் செவ்ரோன் டெக்ஸகோ கார்ப்பரேஷனுக்கு எதிராக ஒரு பில்லியன் டாலர் நஷ்ட ஈடு கேட்டு ஒரு வழக்குத் தொடர்ந்தது. அவ்வழக்கில், இப்பெரும் எண்ணெய் நிறுவனம் ஒரு நாளைக்கு நாற்பது லட்சம் கேலன் வீதம் அமிலக் கழிவுநீரை 1971 முதல் 1972 வரை மூடப்படாத குழிகளிலும், ஆறுகளிலும் கொட்டியுள்ளது. அந்த அமிலக் கழிவுநீர் எண்ணெயாலும், கனரக உலோகங்களாலும், புற்றுநோயை உண்டாக்கும் பொருட்களாலும் நாசமடைந்துள்ளது. அந்த நிறுவனம் ஏறக்குறைய 350 மூடப்படாத கழிவு நீர்க் குழிகளை விட்டுச் சென்றுள்ளது. அக்குழிகள் தொடர்ந்து மக்களையும், விலங்குகளையும் பலிவாங்கி வருகின்றன என்பவையனைத்தும் நிரூபிக்கப்பட்டுள்ளன.[4]

என் வாகனத்துக்கு வெளியே, பெரும் மூடுபனிப் படலங்கள் காடுகளிலிருந்து பஸ்டஸா பள்ளத்தாக்கு வரை படர்ந்து கிடந்தன. என் சட்டை வியர்வையால் நனைந்தது. வயிற்றைப் பிசையத் தொடங்கியது. பாதையின் வளைவுகளும், வெப்பமும் மட்டும் அதற்குக் காரணங்களல்ல. இந்த வனப்பு மிகுந்த நாட்டைப் பேரழிவிற்கு உள்ளாக்கியதில் நான் ஆற்றிய பங்கு பற்றிய நினைவுகள் என்னைச் சித்ரவதை செய்தன. என்னைப் போன்ற பொருளாதார அடியாட்கள் புரிந்த பொறியியல் அற்புதங்கள் இந்த நாட்டை முன்பிருந்த நிலையைவிட பல மடங்கு மோசமான நிலைக்கு ஆளாக்கியுள்ளன. எண்ணெயால் அபரிமிதமான பொருளாதார வளர்ச்சி ஏற்பட்டதாகச் சொல்லப்படும் 1970-களில்தான் வறுமை நிலை 50 இலிருந்து 70 சதவீதமாக உயர்ந்தது. வேலையின்மை 15 இலிருந்து 70 சதவீதமாகவும், பொதுக்கடன் 240 மில்லியன் டாலரிலிருந்து 16 பில்லியன் டாலராகவும் உயர்ந்துள்ளது. அதே நேரத்தில் வறுமையில் வாடும் மக்களின் நலனுக்காக ஒதுக்கப்படும் தொகை 20%லிருந்து 6% மாகக் குறைந்துள்ளது.[5]

ஈக்வடார் ஒரு விதிவிலக்கு அல்ல என்பதுதான் துரதிருஷ்டமே. பொருளாதார அடியாட்களாகிய நாங்கள் உலகப் பேரரசின் கீழ் கொண்டு வந்து சேர்த்த அனைத்து நாடுகளும் இந்த நிலைக்குத்தான் தள்ளப்பட்டன.[6] மூன்றாம் உலக நாடுகளின் கடன் 2.5 ட்ரில்லியன் டாலராக உயர்ந்துள்ளது. அதற்கு வட்டி 2004 -ஆம் ஆண்டில் 375 பில்லியன் டாலராகும். மூன்றாம் உலக நாடுகள் அனைத்தும் சேர்ந்து சுகாதாரத்திற்கும், கல்விக்கும் செலவழித்த தொகையைவிட இது அதிகமாகும். வளர்ந்து வரும் நாடுகளுக்கு அளிக்கப்படும் அன்னிய நிதி உதவியைவிட இது இருபது மடங்கு அதிகமானதாகும். உலக மக்களில் பாதிக்கும் மேற்பட்டோர் ஒரு நாளைக்கு இரண்டு டாலருக்கும் குறைவான தொகையிலேயே உயிர் வாழ்ந்து

வருகின்றனர். 1970 இலிருந்து இது ஏறக்குறைய மாறவேயில்லை. அதே நேரத்தில் மூன்றாம் உலக நாடுகளில் ஒரு சதவீதமாக உள்ள பணம் படைத்த குடும்பங்கள் தங்கள் நாடுகளில் நிதி ஆதாரம் மற்றும் நில உடைமையில் 70 முதல் 90 சதவீதத்தைத் தம் பிடியில் வைத்துக் கொண்டுள்ளன. துல்லியமான புள்ளிவிவரங்கள் ஒவ்வொரு நாட்டையும் பொறுத்துக் கொஞ்சம் மாறலாம்.[7]

வெந்நீர் ஊற்றுகளுக்குப் பெயர்போன எழில் மிகுந்த கோடை வாசஸ்தலம் பனோஸ். வெடித்துக் கிளம்பத் தயாராக இருக்கும் துங்குராஹுவா எரிமலைச் சிகரத்தின் காரணமாக உருவானவை இந்த ஊற்றுகள். எங்கள் வாகனம் பனோஸ் நகரில் நுழைந்ததுமே குழந்தைகள் ஓடி வந்து சூயிங்கம்களையும், தின்பண்டங்களையும் விற்க முயன்றனர். நாங்கள் அந்நகரைக் கடந்ததும் அற்புதமான இயற்கை எழில் திடீரென்று மறைந்து தாந்தே வர்ணித்த நரகம் (Inferno) கண் முன்னே தோன்றியது.

ஆற்றின் குறுக்கே ஒரு பிரம்மாண்டமான சுவர் அரக்கனைப் போல் எழுந்து நின்றது. நீர் கசிந்து கொண்டிருந்த அந்த கான்கிரீட் சுவர் அந்தச் சூழலுக்குச் சற்றும் பொருத்தமற்றதாகத் தோன்றியது.நான் திகைப்படைய நியாயமே இல்லை. அந்தச் சுவர் நான் ஏற்கனவே பார்த்ததுதான். கடந்தகாலத்தில் இந்தச் சுவரைப் பொருளாதார அடியாட்களின் சாதனை என்று நான் போற்றிப் புகழ்ந்ததும் உண்டு. இருந்தபோதிலும் இப்போது அது என் உடலைக் கூசச் செய்தது.

இந்த விகாரமான சுவர் பாய்ந்தோடி வரும் பஸ்டஸா ஆற்றைத் தடுத்து மின் உற்பத்திக்காக நதி நீரை மலைகளைக் குடைந்து அமைக்கப்பட்டுள்ள பெரும் குகைகளினூடே திருப்பி விடுகிறது. இதுதான் 156 மெகாவாட் திறனுள்ள அகோயான் நீர் மின்சாரத் திட்டம். இங்கு உற்பத்தி செய்யப்படும் மின்சாரத்தினால் இயக்கப்படும் தொழிற்சாலைகளால் ஈக்வடாரைச் சேர்ந்த ஒரு சில குடும்பங்கள் செல்வத்தில் மூழ்கித் திளைக்கின்றன. அதே நேரத்தில் நதியோரம் வசிக்கும் விவசாயிகளும், பழங்குடி மக்களும் இந்த அணையின் காரணமாக சொல்லொணாத் துயரங்களை அனுபவித்து வருகின்றனர். நான் உள்ளிட்ட பொருளாதார அடியாட்களின் முயற்சியால் உருவாக்கப்பட்ட ஏராளமான திட்டங்களில் ஒன்றுதான் இந்த நீர் மின்சாரத் திட்டம். இது போன்ற திட்டங்கள் தான் ஈக்வடார் இப்போது உலகப் பேரரசின் அங்கமாகியுள்ளதற்கு அடிப்படைக் காரணம். இவற்றின் காரணமாகத்தான் ஷுவார்களும் சிக்வாக்களும் அவர்களுக்கு அருகில் வசித்து வரும் மற்ற பழங்குடியின மக்களும் நம் எண்ணெய் நிறுவனங்களுக்கு எதிராகப் போர் தொடுக்க அணி திரண்டு நிற்கின்றனர்.

பொருளாதார அடியாட்களின் திட்டங்களால் ஈக்வடார் வெளிநாட்டுக் கடனில் மூழ்கடிக்கப்பட்டுள்ளது. நாட்டின் பட்ஜெட்டின்

பெரும் பகுதி பயங்கரமான வறுமையில் உழல்பவர்கள் என்று அதிகாரப்பூர்வமாக அறிவிக்கப்பட்டுள்ள லட்சக்கணக்கான மக்களின் நன்மைக்குப் பயன்படுத்தப்படுவதற்குப் பதிலாக இந்தக் கடன்களை அடைக்கவே பயன்படுத்தப்படுகிறது. இந்தக் கடன்களைத் தீர்க்க ஈக்வடார் நாட்டுக்கு முன்னுள்ள ஒரே விதிப்பயன் தனது மழைக்காடுகளை எண்ணெய் நிறுவனங்களுக்கு விற்பதுதான். உண்மையில் பொருளாதார அடியாட்கள் ஈக்வடாரில் கால் வைத்ததற்கான அடிப்படைக் காரணம், மத்தியக் கிழக்கோடு போட்டியிடும் அளவிற்கு அதன் அமேசான் பகுதியில் எண்ணெய் வளம் இருப்பதாக நம்பப்படுவதுதான்.[8] உலகப் பேரரசு எண்ணெய் எடுக்கச் சலுகைகள் கோருவதன் மூலம் தன் பங்கு சதையைக் கேட்கிறது (ஷேக்ஸ்பியரின் ‘வெனிஸ் வணிகன்’ (merchant of verice) நாடகத்தில் பணத்திற்குப் பதிலாகச் சதையை அறுத்துக் கேட்கும் ஷைலாக் போல).

2001, செப்டம்பர் 11க்குப் பிறகு, மத்தியக் கிழக்கிலிருந்து கிடைத்து வரும் எண்ணெய் தடைப்படக்கூடும் என்று வாஷிங்டன் அஞ்சியதால் இந்த நிபந்தனைகள் உடனடித் தேவையாகிவிட்டன. தவிர அமெரிக்காவுக்கு எண்ணெய் வழங்கும் நாடுகளில் மூன்றாவது இடத்திலுள்ள வெனிசுவேலா அண்மையில் ஹியூகோ சாவேஸ் என்ற மக்கள் நலம் நாடும் தலைவரைத் தேர்ந்தெடுத்துள்ளது. அவர் அமெரிக்காவுக்கு ஏகாதிபத்தியம் என்ற முத்திரை குத்தியதோடு அதற்கு எதிராக உறுதியான நிலையை மேற்கொண்டு வருகிறார். அமெரிக்காவிற்கு எண்ணெய் விற்பனை செய்வதை நிறுத்திவிடப் போவதாகவும் மிரட்டி வருகிறார். பொருளாதார அடியாட்களாகிய நாங்கள் ஈராக்கிலும் வெனிசுவேலாவிலும் தோல்வியடைந்து விட்டாலும் ஈக்வடாரில் வெற்றி கண்டு விட்டோம். இனி அதை ஒட்டச் சுரண்டுவோம்.

ஈக்வடாரின் மழைக்காடுகளிலிருந்து எடுக்கப்படும் ஒவ்வொரு 100 டாலர் மதிப்புள்ள கச்சா எண்ணெயிலிருந்தும் 75 டாலர்கள் எண்ணெய் நிறுவனங்களுக்குப் போகின்றன. மீதியுள்ள 25 டாலரில் முக்கால் பாகம் அன்னியக் கடன்களை அடைக்கச் செலவிடப்படுகிறது. மீதியுள்ள தொகையில் பெரும்பகுதி இராணுவம் மற்றும் அரசுச் செலவினங்களுக்கும் ஒதுக்கப்படுகிறது. எனவே சுகாதாரம், கல்வி, ஏழைகளின் வாழ்க்கை மேம்பாட்டிற்கு உதவும் திட்டங்களுக்கு 2.50 டாலரே மீதியுள்ளது. இந்த அணைகளினாலும், எண்ணெய்க் குழாய்த் தொடர் ஏற்படுத்திய படுமோசமான இயற்கைச் சீரழிவாலும் நல்ல உணவும், சுத்தமான தண்ணீரும் மறுக்கப்பட்டு மரணத்தின் பிடியில் சிக்கியுள்ள மக்களுக்கு 100க்கு 3 டாலரே போய்ச் சேருகிறது. அமேசான் பிராந்தியத்தை சர்வ நாசத்திற்குள்ளாக்கி எடுக்கப்படும் எண்ணெயிலிருந்து கிடைக்கும் பணத்தில், அது யாருக்கு

அத்தியாவசியமானதோ அவர்களுக்கு மூன்று டாலரே கிடைக்கிறது. பொருளாதார அடியாட்கள் செயல்பட்ட எல்லா நாடுகளிலும் நிலைமை இதேதான்.[9]

வறுமையில் உழலும் லட்சக்கணக்கான ஈக்வடாரினரும், உலகம் முழுவதுமுள்ள கோடிக்கணக்கான பாதிக்கப்பட்ட மக்களும் தீவிரவாதிகளாக மாறக்கூடியவர்கள்தான். அவர்கள் கம்யூனிசத்தையோ அராஜகவாதத்தையோ நம்புபவர்கள் என்பதோ, அவர்கள் அடிப்படையிலேயே கெட்டவர்கள் என்பதோ அதற்குக் காரணங்களல்ல. உண்மை என்னவென்றால், அவர்கள் நம்பிக்கையிழந்த நிலையில் இருக்கிறார்கள் என்பதுதான். இந்த அணையைப் பார்த்துக் கொண்டிருந்தபோது, 1770-களில் இங்கிலாந்தை எதிர்த்துப் போராடிய அமெரிக்கர்கள் போல, 1800-களின் தொடக்கத்தில் ஸ்பெயினை எதிர்த்து நின்ற லத்தீன் அமெரிக்கர்களைப் போல, இந்த மக்கள் எப்போது போராட்டத்தில் இறங்கப் போகிறார்கள் என்ற எண்ணம் தோன்றியது. உலகில் பல இடங்களைப் பார்க்கும்போதும் இதே வகையான சிந்தனையே என்னுள் எழுகிறது.

இந்த நவீனப் பேரரசை உருவாக்குவதில் காட்டப்படும் நெளிவு சுழிவுகளும், நுணுக்கமான நேர்த்தியும் ரோமானியத் தளபதிகளையும், ஸ்பானிய சாகசவாதிகளையும், பிற்காலத்திய ஐரோப்பிய ஏகாதிபத்தியங்களையும் வெட்கித் தலைகுனியச் செய்யக்கூடியவை. பொருளாதார அடியாட்களாகிய நாங்கள் தந்திரம் மிக்கவர்கள்; வரலாற்றிலிருந்து கற்றுக்கொண்டவர்கள். இன்று நாங்கள் வாளேந்திச் செல்வதில்லை. போர்வீரர்களுக்குரிய ஆடைகளோ, கவசங்களோ பூணுவதில்லை. ஈக்வடார், நைஜீரியா அல்லது இந்தோனேஷியாவில் நாங்கள் உள்ளூர் பள்ளியாசிரியர்கள் அல்லது கடைக்காரர்கள் போலத்தான் உடையணிகிறோம். வாஷிங்டனிலும், பாரீஸிலும் அரசு அதிகாரிகள் அல்லது வங்கிப் பணியாளர்கள் போன்ற தோற்றத்தில் உலவுகிறோம். அடக்கத்துடனும், இயல்பாகவும் நடந்து கொள்கிறோம். திட்டங்கள் செயல்படுத்தப்படும் பகுதிகளுக்குப் பயணம் செய்கிறோம்; பஞ்சத்திலடிபட்ட கிராமங்களில் நடமாடுகிறோம். மக்கள் நலனைப் பிரசாரம் செய்கிறோம் நாங்கள் ஆற்றிவரும் அற்புதமான மனிதநேயச் செயல்கள் குறித்து உள்ளூர் ஏடுகளுக்குப் பேட்டிகள் அளிக்கிறோம். அரசு சார்ந்த குழுக்கள் பங்கு கொள்ளும் கூட்டங்களில், வரைபடங்களாலும், பொருளாதார முன்னறிவிப்புகளாலும் மேசைகளை நிறைக்கிறோம். பொருளாதார வளர்ச்சி ஆற்றக்கூடிய அற்புதங்கள் குறித்து ஹார்வார்டு வணிகப் பள்ளியில் விரிவுரைகள் ஆற்றுகிறோம். முற்றிலும் வெளிப்படையாகச் செயல்படுபவர்கள் போல எங்களை நாங்கள் காட்டிக் கொள்கிறோம். அதை மற்றவர்களை நம்பவும் வைக்கிறோம். இதுதான் இந்த அமைப்புச் செயல்படும்

முறை. பெரும்பாலும் நாங்கள் சட்டவிரோதமான செயல்கள் எதிலும் இறங்குவதே இல்லை. காரணம் இந்த அமைப்பு முறையே மிகவும் தந்திரம் மிக்கதாக உள்ளது. இந்த முறை சட்டப்பூர்வமானது என்பதால் எங்கள் செயல்களும் சட்டப்பூர்வமானவைதான்.

இருந்தாலும் மிகப் பெரிய ஆபத்து அருகிலேயே காத்துக்கொண்டிருக்கும். பொருளாதார அடியாட்களாகிய நாங்கள் தோல்வியடைந்தால், எங்களை விட மோசமான இன்னொரு வகை அடியாட்கள் செயலில் இறங்குவார்கள். ‘குள்ளநரிகள்’ என்று நாங்கள் அவர்களுக்குப் பெயர் சூட்டியிருந்தோம். அவர்கள் பழங்காலப் பேரரசுகளின் நேரடி வாரிசுகள்.[10] எப்பொழுதும் திரைமறைவில் காத்துக் கொண்டு இருக்கும் குள்ளநரிகள் வெளிப்படும்போது நாட்டுத் தலைவர்கள் தூக்கியெறியப்படுவார்கள் அல்லது பயங்கரமான ‘விபத்துகளில்’ மரணத்தைத் தழுவுவார்கள். ஒருவேளை ஆப்கானிஸ்தான் அல்லது ஈராக்கில் நடந்ததைப் போல அவர்களும் தோல்வியடைந்து விட்டால், எல்லா முகமூடிகளும் விலக்கப்பட்டுப் பழைய முறைகள் நேரடியாகச் செயல்படுத்தப்படும். இளம் அமெரிக்கர்கள் கொல்லவும், கொல்லப்படவும் அனுப்பப்படுவார்கள்.

பஸ்டஸா ஆற்றில் மாபெரும் அரக்கனைப் போல் எழுந்து நின்ற அந்த பிரம்மாண்டமான கான்கிரீட் சுவரைக் கடந்து சென்ற போது வியர்வை ஆறாகப் பெருகியது. வயிற்றில் ஏதோ உருளுவது போன்ற உணர்வு தோன்றியது. நான் உருவாக்க உதவிய பேரரசைத் தடுத்து நிறுத்த இறுதிவரை போராட உறுதி பூண்டுள்ள பழங்குடி மக்களைச் சந்திக்கத்தான் இந்தப் பயணம். குற்ற உணர்வால் என் மனம் தடுமாறிப் போனது.

‘நியூ ஹாம்ஷயர் கிராமப்புறத்தில் ஒரு கள்ளம் கபடமற்ற சிறுவனாக வளர்ந்த நானா இப்படியொரு மோசமான செயலில் இறங்கினேன்?’ என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன்.

●

[1] Gina Chavez et al., Tarimiat - Firmes en Nuestro Territorio: FIPSE vs. ACRO, eds. Mario Melo and Juana Sotomayor (Quito, Ecuador: CDES and CONAIE, 2002).

[2] Sandy Tolan, “”Ecuador: Lost Promises,’’ National Public Radio, Morning Edition, July 9, 2003, http://www.npr.org/programs/morning/features/2003/jul/latinoil (accessed July 9, 2003).

[3] Juan Forero, “”Seeking Balance: Growth vs. Culture in te Amazon,’’ New York Times, December 10, 2003.

[4] Abby Ellin, “”Suit Says Chevron Texaco Dumped Poisons in Ecuador,’’ New York Times, May 8, 2003.

[5] Chris Jochnick, “”Perilous Prosperity,’’ New Internationalist, June 2001, http://www.newint.org/issue335/perilous.htm. «ñ½‹ MõóƒèÀ¸° Pamela Martin, The Globalization of Contentious Politics: The Amazonian Indigenous Rights Movement (New York: Rutledge, 2002); Kimerling, Amazon Crude (New York: Natural Resource Defense Council, 1991); Leslie Wirpsa, trans trans, Upheavl in the Back Yard: Illegitimate Debts Human Rights - The Case of Ecuador - Norway (Quito, Ecuador: Centro de Derechos Economicsy Sociales, 2002); and Gregory Palast, “”Inside Corporate America,’’ Guardian, October 8, 2000.

[6] தேசிய மற்றும் உலகப் பொருளாதாரத்தில் எண்ணெய் ஏற்படுத்தும் பாதிப்பு பற்றிய விவரங்களுக்கு பார்க்க: Michael T.Klare, Resource Wars: The New Landscape of Global Conflict (New York: Henry Holt and Company, 2001): Daniel Yergin, The Prize: The Epic Quest for Oil, Money & Power (New York: Free Press, 1993); and Daniel Yergin, The Battle for the World Economy (New York: Simon & Schuster, 2001).

[7] James S. Henry, “”Where the Money Went,’’ Across the Board, March/April 2004, pp 42-45. மேலும் விவரங்களுக்கு Henry’s book The Blood Bankers: Tales from te Global Underground Economy (New York: Four Walls Eight Windows, 2003).

[8] Gina Chavez al., Tarimiat - Firmes en Nuestro Territorio: FIPES us. ARCO, eds. Mario Melo and Juana Sotomayor (Quito, Ecuador: DCES and CONAIE, 2002); Petroleo, Ambiente Derechos en la Amazonia Centro Sur, Edition Victor Lopez A. Centro de Derechos Economics y Sociales, OPIP, IACYT-A (Under the auspices of Oxfam America) (Quito, Ecuador: Sergrafic, 2002).

[9] Sandy Tolan, “Ecuador: Lost Promises,’’ National Public Radio, Morning Edition, July 9, 2003, http://www.npr.org/programs/morning/features 2003/ul/ atinoil accessed July 9, 2003).

[10] குள்ளநரிகள் மற்றும் ஏனைய வகைகளைச் சேர்ந்த அடியாட்களைப் பற்றி மேலும் அறிந்து கொள்ள பார்க்க: P.W. Singer, Corporate Warriors: The Rise of the Privatized Military Industry (Ithaca, NY and London: Cornell University Press, 2003); James R.Davis, Fortune’s Warriors: Private Armies and the New World Order (Vancouver and Toronto: Douglas & McIntyre, 2000); Felix I.Rodriguez and John Weisman, Shadow Warrior: The CIA Hero of 100 Unknown Battles (New York: Simon and Schuster, 1989).

# 1

# ஒரு பொருளாதார அடியாளின் ஜனனம்

என் வாழ்க்கை மிகச் சாதாரணமாகத்தான் தொடங்கியது.

நான் ஒரு மத்தியதர வர்க்கக் குடும்பத்தில் ஒரே மகனாக 1945 ஆம் ஆண்டு பிறந்தேன். என் பெற்றோர்கள் இருவரும் முன்னூறு ஆண்டுகள் பழமை வாய்ந்த நியூ இங்கிலாந்து யாங்கி வம்சத்தைச் சேர்ந்தவர்கள். தங்கள் மூதாதையர்களைப் போலவே அவர்களும் கண்டிப்பான ஒழுக்கத்தைப் பின்பற்றினர். குடியரசுக் கட்சியின் உறுதியான ஆதரவாளர்களாக இருந்தனர். தங்கள் பரம்பரையிலேயே முதன் முதலாக அவர்கள்தான் கல்லூரிக்குச் சென்றவர்கள். அவர்கள் படித்து முடித்தது முழுக்க, முழுக்க உதவித் தொகையில்தான். பின்பு என் அம்மா உயர்நிலைப்பள்ளி ஒன்றில் லத்தீன்மொழி ஆசிரியையானார். அப்பா இரண்டாம் உலகப் போரின்போது கடற்படையில் லெப்டினென்ட் ஆகப் பணியாற்றினார். அட்லாண்டிக்கில் பயணம் செய்து வந்த ஒரு வணிகக் கப்பலுக்குப் பாதுகாப்பு அளித்து வந்த குழுவிற்குப் பொறுப்பாளராக அவர் இருந்தார். நான் ஹனோவரில் பிறந்தபோது, இடுப்பில் ஏற்பட்டிருந்த ஒரு எலும்பு முறிவிற்காக டெக்ஸாஸ் மருத்துவமனை ஒன்றில் சிகிச்சைப் பெற்று வந்தார். எனக்கு ஒரு வயது ஆகும் வரை அவர் என்னைப் பார்க்கவில்லை.

அவர் பின்பு நியூ ஹாம்ஷயர் கிராமப்புறத்தில் இருந்த ஆண்களுக்கான தங்கிப் படிக்கும் (Boarding) பள்ளியான டில்டன் பள்ளியில் மொழி ஆசிரியர் பணியில் சேர்ந்தார். அந்தப் பள்ளி வளாகம் நகருக்கு அருகே உள்ள ஒரு குன்றின் மேல் ஆணவத்துடன் உயர்ந்து நின்றது. இந்தச் சிறப்பு வாய்ந்த நிறுவனத்திலிருந்த ஒன்பதிலிருந்து பனிரெண்டு வரையான கிரேடுகள் ஒவ்வொன்றிலும் ஐம்பது மாணவர்கள் மட்டுமே அனுமதிக்கப்பட்டனர். மாணவர்கள் பெரும்பாலும் பியூனஸ் அயர்ஸ், காரகாஸ், பாஸ்டன் மற்றும் நியூயார்க்கைச் சேர்ந்த பணக்காரக் குடும்பங்களிலிருந்து வந்தவர்கள்.

எங்கள் குடும்பத்தில் பணப் புழக்கம் குறைவாகத்தான் இருந்தது என்றாலும் நாங்கள் எங்களை ஒருபோதும் ஏழைகள் என்று கருதிக் கொண்டதில்லை. பள்ளியாசிரியர்களுக்குச் சம்பளம் மிகக் குறைவு தான். ஆனால் வீடு, வெப்பமூட்டும் வசதி, தண்ணீர் மற்றும் புல் தரையைச் சீர்படுத்தும் பணியைச் செய்யும் வேலையாட்கள் உள்ளிட்ட எல்லா வசதிகளும் இலவசமாகவே எங்களுக்கு அளிக்கப்பட்டன. எனது நான்காவது பிறந்தநாளிலிருந்து தொடக்கப் பள்ளியின் (Prep School)

உணவருந்தும் அறையில்தான் உணவருந்தினேன். அப்பா பயிற்சியளித்த கால்பந்து அணிகளுக்கு மூச்சிரைக்க இரைக்கப் பந்துகளை எடுத்துப் போட்டேன். லாக்கர் அறையில் அவர்களுக்குத் துண்டுகளை வினியோகித்தேன்.

பள்ளியாசிரியர்களும் அவர்களது மனைவிகளும் உள்ளூர் வாசிகளைவிடத் தங்களை உயர்வாகக் கருதிக் கொண்டனர் என்று மட்டும் கூறுவது மிகவும் குறைத்து மதிப்பிடுவதாகும். கீழ்த்தட்டு விவசாயிகளை ஆண்டு வந்த பெரும் பண்ணையார்களைப் போலத் தங்களைக் கருதிக்கொண்டு நகரவாசிகளைப் பற்றி என் பெற்றோர்கள் தங்களுக்குள் நகைச்சுவையாகப் பேசிக்கொண்டார்கள். இது வெறும் நகைச்சுவை மட்டுமே அல்ல என்பது எனக்கு தெரிந்தேயிருந்தது.

எனது தொடக்கப்பள்ளி மற்றும் நடுநிலைப்பள்ளி நண்பர்கள் விவசாய வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். மிகவும் ஏழைகள். அவர்களது பெற்றோர் அழுக்குப் பிடித்த விவசாயிகள், மரம் அறுப்பவர்கள், ஆலைத் தொழிலாளிகள். அவர்கள் குன்றைச் சேர்ந்த ‘தொடக்கப் பள்ளிக்காரர்களை’ வெறுத்தனர். பதிலாக என் அப்பாவும் அம்மாவும் ‘வேசிகள்’ என்று அன்று தாங்கள் முத்திரை குத்திய நகரத்துப் பெண்களுடன் நான் பழகுவதை விரும்பவில்லை. முதல் வகுப்பிலிருந்து நான் இந்தப் பெண்களுடன் பள்ளிப் புத்தகங்களையும், வண்ணப் பென்சில்களையும் பரிமாறிக் கொண்டிருந்தேன். ஆண்டுகள் செல்லச் செல்ல அவர்களில் ஆன், பிரஸில்லா, ஜூடி என்ற மூவர் மீது காதல் கொண்டேன். என் பெற்றோர்களின் மனப்போக்கைப் புரிந்து கொள்வது எனக்கு மிகவும் கடினமாக இருந்தது. நான் அவர்கள் விருப்பங்களிலிருந்து தொடர்ந்து முரண்பட்டேன்.

எங்களுக்குச் சொந்தமாக ஓர் ஏரிக்கரைக் குடில் இருந்தது. காடுகளால் சூழப்பட்டிருந்த அது 1921-ஆம் ஆண்டு என் தாத்தாவால் கட்டப்பட்டது. ஒவ்வோர் ஆண்டும் என் அப்பாவின் மூன்று மாத கால கோடை விடுமுறையை அங்கேதான் நாங்கள் கழிப்போம். இரவுகளில் அங்கே கோட்டான்களின் கூவலையும் மலைச் சிங்கங்களின் உறுமலையும் கேட்கலாம். எங்களுக்கு அண்டை வீட்டார் என்று யாருமில்லை; சுற்றுவட்டத்தில் இருந்த ஒரே குழந்தை நான்தான். தொடக்கத்தில் குடிலைச் சுற்றியிருந்த மரங்களைப் பழங்காலக் குதிரை வீரர்களாகவும், ஆன், பிரஸில்லா, ஜூடியை (அந்தந்த ஆண்டைப் பொறுத்து) சோகத்திலுள்ள கன்னிப்பெண்களாகவும் பாவித்துகொண்டு நாட்களை ஓட்டுவேன். என் உணர்ச்சிகள் அந்த நேரங்களில் பாய்ந்துவரும் ஈட்டியைப் போன்று வேகம் மிக்கவையாகவும், மர்மம் நிறைந்தவையாகவும் இருந்தன.

பதினான்காவது வயதில் டில்டன் பள்ளியில் எனக்கு இலவசக் கல்வி கிடைத்தது. என் பெற்றோரின் தூண்டுதலால் நகரத்தோடு தொடர்புடைய ஒவ்வொன்றையும் ஒதுக்கித் தள்ளினேன். என்

நண்பர்களைத் திரும்பச் சந்திக்கவேயில்லை. என் புதிய வகுப்புத் தோழர்கள் தங்கள் ஆடம்பர மாளிகைகளுக்கும், உல்லாசக் குடில்களுக்கும் விடுமுறைக்குச் சென்றபோது நான் குன்றில் தனித்திருந்தேன். என் நண்பர்களின் பெண் தோழிகள் முதன்முதலாக உயர் சமூக விருந்துகளில் பங்குகொள்ளும் கன்னிப்பெண்கள்., எனக்கோ பெண் நண்பர்களே கிடையாது. எனக்குத் தெரிந்த எல்லாப் பெண்களும் 'வேசிகள்' தான். நான் அவர்களை விலக்கிவிட்டேன். அவர்கள் என்னை மறந்து விட்டனர். நான் தனிமையிலிருந்தேன். பயங்கரமான விரக்தியிலும்தான்.

என் பெற்றோர் விஷயங்களைத் திரிப்பதில் வல்லவர்கள். இப்படியொரு வாழ்க்கை கிடைப்பதற்கு எனக்குத்தான் தகுதி உள்ளதென்றும், அதற்கு ஒரு நாள் அவர்களுக்கு நான் நன்றியுடையவனாக இருப்பேன் என்றும் உறுதி கூறினார்கள். எங்களது உயர்ந்த ஒழுக்கநெறிகளுக்கு ஏற்ற ஒரு பொருத்தமான பெண்ணை நான் கண்டு கொள்வேன் என்றார்கள். நானோ உள்ளுக்குள் கொதித்துக் கொண்டிருந்தேன். பெண்களின் அண்மைக்காக - பாலியல் உறவுக்காக ஏங்கித் தவித்துக் கொண்டிருந்தேன்; வேசிகளைப் பற்றிய கற்பனையே மிகவும் வசீகரமானதாக இருந்தது.

ஆனாலும் நான் கலகம் செய்யவில்லை. என் விரக்தியை, அமுக்கப்பட்ட கோபத்தை மற்றவர்களை விஞ்சி நிற்பதில் காட்டினேன். விளைவு பள்ளியில் நான் ஒரு மதிப்பிற்குரிய மாணவன். இரண்டு பல்கலைக்கழக அணிகளுக்குத் தலைவன். பற்றிச் செய்தித்தாளின் ஆசிரியன். என் பணக்கார நண்பர்களுக்கு நான் யார் என்று நிரூபித்துக் காட்டிவிட்டுப் பள்ளியை விட்டு எப்போதைக்குமாக வெளியேறிவிடுவது என்று உறுதி கொண்டிருந்தேன்.

இறுதியாண்டில் எனக்கு பிரவுன் கல்லூரியில் இருந்து விளையாட்டுத் துறையில் மேல்படிப்பிற்கு முழு உதவித் தொகையும் கிடைத்தது. நான் பிரவுனைத் தேர்ந்தெடுத்தேன். அதற்கு முக்கியமான காரணம் நான் விளையாட்டு வீரனாக விரும்பினேன் என்பது மட்டுமல்ல; பிரவுன் கல்லூரி நகரத்தில் அமைந்திருந்தது என்பதும்தான். ஆனால் என் அம்மா மிடில்பெரியில் பட்டம் பெற்றவர். அப்பாவும் அங்கேதான் முதுகலை பட்டம் பெற்றார். எனவே பிரவுன் இவி லீக் (Ivy League) -ல் இருந்தபோதிலும் அவர்கள் மிடில்பெரியைத்தான் தேர்ந்தெடுத்தனர்.

"நீ (விளையாட்டில்) உன் காலை உடைத்துக்கொண்டால் படிப்பு என்னவாகும்?'' அப்பா கேட்டார். "கல்விக்கான உதவித் தொகையை ஏற்றுக் கொள்வது நல்லது,'' நான் வலையில் சிக்கிவிட்டேன்.

என் அறிவுக்கு எட்டியவரையில் மிடில்பெரி கல்லூரி, டில்டன் பள்ளியின் பெரிதாக்கப்பட்ட பிரதிதான். ஒரே வித்தியாசம் அது நியூஹாம்ஷயர் கிராமப்புறத்துக்கு பதிலாக வெர்மான்ட் கிராமப்

புறத்தில் அமைந்திருந்தது என்பதுதான். மிடில்பெரியில் இரு பாலரும் படித்தார்கள் என்பது உண்மைதான். ஆனால் நான் ஏழை. மற்றவர்கள் அனைவரும் பணக்காரர்கள். தவிர கடந்த நான்கு ஆண்டுகளில் பெண்களோடு நான் பழகவே இல்லை. எனவே எனக்குத் தன்னம்பிக்கை போதவில்லை. ஒதுக்கி வைக்கப்பட்டவனாகவும், பரிதாபத்துக்குரியவனாகவும் உணர்ந்தேன். படிப்பை நிறுத்திவிட அல்லது ஓராண்டு விடுமுறை எடுத்துக்கொள்ள அனுமதிக்கும்படி அப்பாவிடம் மன்றாடினேன். பாஸ்டனுக்குச் சென்று வாழ்க்கையை முக்கியமாகப் பெண்களை அறிந்துகொள்ள வேண்டுமென்பதுதான் என் விருப்பம். அப்பா அதைக் காதில் போட்டுக் கொள்ளவேயில்லை. “என்னுடைய சொந்த மகன் ஒரு கல்லூரியில் தங்கிப் படிக்காவிட்டால் நான் எப்படி மற்றவர்களின் குழந்தைகளைக் கல்லூரிக்குத் தயார் செய்வதாகப் பாசாங்கு செய்ய முடியும்’’ என்பது அவரின் கேள்வி.

தற்செயலான நிகழ்ச்சிகளின் சங்கிலித் தொடரே வாழ்க்கை என்பதை இத்தனை ஆண்டு அனுபவத்தில் நான் புரிந்துகொண்டுள்ளேன். இத்தற்செயல் நிகழ்வுகளுக்கு நாம் எப்படி எதிர்வினை புரிகிறோம். இதில் எந்த அளவிற்குச் சுதந்திரமாகச் செயல்படுகிறோம் என்பதில் தான் எல்லாம் இருக்கிறது. நாம் தேர்ந்தெடுக்கும் விஷயங்கள்தான் நாம் யார் என்பதைத் தீர்மானிக்கின்றன. என் வாழ்க்கையை வடிவமைத்த இரண்டு தற்செயல் நிகழ்வுகள் மிடில்பெரியில் நடந்தன. ஒன்று ஈரானின் மன்னரான ஷாவின் ஆலோசகரான ஒரு ஜெனரலின் மகனின் வடிவில் வந்தது. இன்னொன்று என் குழந்தைப் பருவக் காதலியின் பெயர் கொண்டிருந்த ஆன் என்ற அழகான இள மங்கையின் வடிவில் வந்தது.

முதலில் குறிப்பிட்ட ஈரானின் - அவனை நான் பர்கத் என்று அழைக்கிறேன் - ரோமில் தொழில்ரீதியாகக் கால்பந்து விளையாடியவன். அவன் விளையாட்டு வீரனுக்குரிய கச்சிதமான உடலமைப்பும், சுருண்ட கருமுடியும் மென்மையான தேன் நிற விழிகளும் வாய்க்கப் பெற்றிருந்தான். அவனது தோற்றமும், பின்னணியும் காந்தம் போலப் பெண்களைக் கவர்ந்து இழுத்தன. பலவிதங்களில் எனக்கு நேரெதிராக இருந்த அவன் நட்பைப் பெற கடுமையாக முயன்றேன். பிற்காலத்தில் எனக்கு மிகவும் உதவிய பல விஷயங்களை நான் கற்றுக்கொண்டது அவனிடம்தான்.

நான் ஆன் - ஐச் சந்தித்ததும் மிடில்பெரியில்தான். அவள் இன்னொரு கல்லூரியைச் சேர்ந்த ஒரு இளைஞனுடன் நெருங்கிப் பழகி வந்தாலும் என்னையும் தன் சிறகுகளின் அணைப்பில் ஏற்றுக்கொண்டாள். எங்களுக்கு இடையே ஏற்பட்ட காவியத்தன்மை வாய்ந்த காதல்தான் நான் உணர்ந்ததிலேயே உண்மையான ஒரே காதல்.

பர்கத் என்னைக் குடிக்கவும், விருந்துகளுக்குச் செல்லவும் என் பெற்றோரை அலட்சியப்படுத்தவும் தூண்டினான். நான் படிப்பதை

அடியோடு நிறுத்திவிட்டேன். அப்பாவுக்குப் பதிலடி தரும் விதத்தில் கல்விக் காலை முறித்துக் கொள்வதென்று முடிவு செய்து விட்டேன். என் கல்வித்தரம் விரைவாக வீழ்ச்சியடைந்தது. உதவித் தொகையையும் இருந்துவிட்டேன். இரண்டாமாண்டின் இறுதியில் படிப்பை நிறுத்திவிடுவதென்று முடிவு கட்டிவிட்டேன். அப்பா என்னைத் தலைமுழுகி விடுவேனென்று மிரட்டினார். பர்கத் என்னைத் தொடர்ந்து தூண்ட ஒருநாள் துறைத் தலைவரின் அலுவலகத்திற்குள் புயல் போல் நுழைந்து கல்லூரியைவிட்டு விலகினேன். அதுதான் என் வாழ்க்கையில் அச்சாணி போன்ற தருணம்.

பர்கத்தும் நானும் நகரில் எனது கடைசி இரவை ஓர் உள்ளூர் மது விடுதியில் கொண்டாடினோம். அங்கே அரக்கனைப் போலிருந்த ஒரு விவசாயி குடிபோதையில் என்னைத் தூக்கிச் சுவரில் மோதி, தன் மனைவியோடு சரசமாடுவதாகக் குற்றம்சாட்டினான். எங்களுக்கு நடுவே பு-குந்து பர்க்கத் தன் கையிலிருந்த கத்தியைப் பளீரென்று வீசி அந்த விவசாயியின் கன்னத்தைக் கிழித்துவிட்டான். என்னை இழுத்துச் சென்று ஒரு ஜன்னலில் திணித்து ஓடைக்கு மேலே நீட்டிக் கொண்டிருந்த ஒரு பாறையில் தள்ளினான். நாங்கள் குதித்து ஆற்றின் ஓரமாகச் சென்று எங்கள் இருப்பிடத்திற்குத் திரும்பிவிட்டோம்.

அடுத்தநாள் காலை வளாகக் காவல்துறையினரால் விசாரிக்கப்பட்டபோது அந்தச் சம்பவம் பற்றி எனக்கு எதுவுமே தெரியாது என்று கூசாமல் பொய் சொல்லிவிட்டேன். ஆனாலும் பர்கத் வெளியேற்றப்பட்டான். நாங்கள் இருவரும் பாஸ்டனுக்கு சென்று ஒரே குடியிருப்பில் தங்கினோம். நான், ‘ஹியர்ஸ்டன் ரெக்கார்டு அமெரிக்கன்’ மற்றும் ‘சன்டே அட்வர்டைசர்’ செய்தித்தாள்களில் வேலை செய்தேன். பின்பு சன்டே அட்வர்டைசரின் தலைமை ஆசிரியரின் தனி உதவியாளர் வேலை எனக்குக் கிடைத்தது.

அந்த ஆண்டின் இறுதியில் அதாவது, 1965 - இன் இறுதியில் செய்தித்தாளில் என்னுடன் வேலை செய்த நண்பர்கள் பலர் இராணுவத்தில் சேர்க்கப்பட்டனர். அதிலிருந்து தப்ப நான் பாஸ்டன் பல்கலைக்கழகத்தின் வணிக நிர்வாகவியல் கல்லூரியில் சேர்ந்து கொண்டேன். அந்த நேரத்தில் ஆன் தன் பழைய நண்பனுடனான உறவை முறித்துக் கொண்டிருந்தாள். அவள் என்னைப் பார்க்க அடிக்கடி மிடில்பெரியிலிருந்து வருவாள். அவள் வருகை எனக்கு மகிழ்ச்சியளித்தது. எனக்கு படிப்பு முடிய ஓராண்டு இருந்தபோது அவள் பட்டம் பெற்றாள். ஆனால் நாங்கள் திருமணம் செய்துகொள்ளும் வரை என்னோடு சேர்ந்து தங்க பிடிவாதமாக மறுத்துவிட்டாள். இது ஒருவகையான பிளாக்மெயில் என்று நான் ஜோக் அடித்தேன். அவளது பிடிவாதம் என் பெற்றோரின் கண்டிப்பான ஒழுக்க நெறிமுறைகளை நினைவுபடுத்தியது. இதை நான் வெறுத்தாலும் நாங்கள் இணைந்திருந்த தருணங்கள்

இன்பமயமானவையாக இருந்தன. அவை தொடர வேண்டுமென்று விரும்பினேன். நாங்கள் மணம் புரிந்து கொண்டோம்.

ஆனின் அப்பா ஓர்அறிவுக்கூர்மை மிக்க பொறியியலாளர். ஒரு முக்கியமான ஏவுகணைக்கு வழிகாட்டும் அமைப்பை அவர் வடிவமைத்திருந்தார். அதற்குப் பரிசாக அவருக்குக் கடற்படையில் ஒரு உயர்ந்த பதவி அளிக்கப்பட்டிருந்தது. அவரது நெருங்கிய நண்பர் ஒருவர் - ஆன் அவரை ஃபிராங்க் மாமா என்று அழைத்தாள் (அது அவரது உண்மைப் பெயரல்ல) - தேசியப் பாதுகாப்பு நிறுவனத்தில் (National Security Agency) மிக உயர்ந்த மட்டத்தில் நிர்வாகியாகப் பணியாற்றி வந்தார். தேசியப் பாதுகாப்பு நிறுவனம் (என்.எஸ்.ஏ) மிகக் குறைந்த அளவே அறியப்பட்டது என்றாலும் பல விதங்களில் இதுதான் நாட்டின் உளவு ஸ்தாபனங்களிலேயே மிகப் பெரியது.

எங்கள் திருமணத்திற்குப் பிறகு விரைவிலேயே கட்டாய இராணுவச் சேவைக்கு எனக்கு அழைப்பு வந்தது. நான் அதில் தேர்வும் பெற்றேன். எனவே படிப்பை முடித்தவுடன் வியட்னாம் செல்ல வேண்டிய சூழ்நிலையை எதிர்கொள்ள வேண்டியிருந்தது. போர் எனக்கு எப்போதுமே கவர்ச்சிகரமானதாகத் தோன்றியபோதிலும், தென்கிழக்கு ஆசியாவில் போரிடும் விஷயம் என்னைக் கடும் வேதனைக்கு உள்ளாக்கியது. என் மூதாதையர்களான தாமஸ் பெய்ன்,* ஈதன் ஆலன்** போன்றவர்களின் கதைகளைச் சொல்லிச் சொல்லியே நான் வளர்க்கப்பட்டிருந்தேன். பிரஞ்சுக்காரர்களுடனான போர்கள், பழங்குடி இந்தியர்களுடனான போர்கள், புரட்சிப் போர்கள் நடைபெற்ற நியூ இங்கிலாந்து மற்றும் நியூயார்க் மாகாணத்தின் மேற்பகுதி என்று எல்லா இடங்களுக்கும் சென்று வந்திருக்கிறேன். கையில் கிடைத்த எந்த வரலாற்று நூலையும் படிக்காமல் விட்டதில்லை. உண்மையில், சிறப்புப் படைப்பிரிவுகள் தென்கிழக்கு ஆசியாவில் நுழைந்தபோது அதில் நானும் சேர்ந்துகொள்ள ஆர்வமாகத்தான் இருந்தேன். ஆனால் அமெரிக்கப் படைகள் புரிந்த கொடூரங்கள், அமெரிக்காவின் கொள்கையில் இருந்த முரண்பாடுகள் ஆகியவை ஊடகங்களில் அம்பலப்படுத்தப்பட்டபோது என் மனம் மாறிவிட்டது. பெய்ன் யார் பக்கம் இருப்பார் என்று நான் திகைப்படைந்தேன். அவர் நமது வியட்நாம் எதிரிகளுடன் கட்டாயம் சேர்ந்து கொண்டிருப்பார் என்று எனக்கு உறுதியாகத் தோன்றியது.

ஃபிராங்க் மாமா என் உதவிக்கு வந்தார். என்.எஸ்.ஏ.வில் வேலைக்குச் சேர்ந்தால் இராணுவச் சேவையைத் தள்ளிப் போடலாம் என்று தெரிவித்தார். அதோடு தமது நிறுவனத்தில் தொடர்ச்சியான நேர்காணல்களுக்கும் ஏற்பாடு செய்தார். அதில் பொய் சொல்வதைக் கண்டுபிடிக்கும் பாலிகிராப் இயந்திரத்தின் மேற்பார்வையில் ஒருநாள் முழுவதும் நடத்தப்பட்ட நேர்காணலும் அடங்கும். என்.எஸ்.ஏ- வில் வேலைக்குச் சேர எனக்குத் தகுதியுண்டா என்பதை இந்தக் கடுமையான

பரிசோதனைகள்தான் தீர்மானிக்கும் என்று என்னிடம் சொல்லப்பட்டது. ஒருவேளை நான் தேர்ந்தெடுக்கப்பட்டால் எனது பலம், பலவீனம் குறித்த துல்லியமான வரைபடத்தை உருவாக்க இந்த நேர்காணல்கள் பயன்படுத்திக் கொள்ளப்படும். இந்த வரைபடம்தான் எதிர்காலத்தில் என் பணி என்னவாக இருக்கும் என்பதைத் தீர்மானிக்கும். வியட்னாம் போர் குறித்த எனது மனப்போக்கின் காரணமாக நான் கட்டாயம் தோல்வியடைந்து விடுவேன் என்று முடிவு செய்திருந்தேன்.

நேர்காணலில் ஒரு விசுவாசம் மிக்க அமெரிக்கன் என்ற முறையில் நான் போரை எதிர்க்கிறேன் என்று கூறியிருந்தேன். ஆனால் அவர்கள் அதை மேற்கொண்டு கிளறாதது எனக்கு வியப்பளித்தது. அவர்கள் அதற்குப் பதிலாக என் வளர்ப்பு, பெற்றோர் பால் எனது மனோபாவம், பணக்கார, உல்லாச வாழ்க்கை வாழும் தொடக்கப் பள்ளி மாணவர்களிடையே வசதியற்ற தூய்மைவாதியாக வளர்ந்ததனால் ஏற்பட்ட உணர்வுகள் குறித்து அவர்கள் ஆழ்ந்த கவனம் செலுத்தினர். பெண்கள், பாலியல் உறவுகள் மற்றும் பணத்தின் மீது நான் கொண்டிருந்த ஏக்கம் அதன் விளைவாக நான் உருவாக்கிக் கொண்ட கற்பனை உலகம் அவர்கள் கவனத்தை மிகவும் கவர்ந்தது. பர்கத்துடனான எனது உறவு குறித்து அவர்கள் காட்டிய அக்கறை என்னைத் திகைப்படையச் செய்தது. அவனைக் காப்பாற்ற போலீசிடம் நான் சொன்ன பொய் குறித்து அவர்கள் ஏன் அவ்வளவு ஆர்வம் காட்டுகிறார்கள் என்று நான் வியந்து போனேன்.

இந்த விஷயங்கள் எனக்கு எதிரானவையாகக் கருதப்படும், என்.எஸ்.ஏ.வில் நுழையவே முடியாது என்று எனக்குத் தோன்றியது. ஆனால் நேர்காணல்கள் நிறுத்தப்பட்டுவிடாமல் தொடர்ந்தது, நான் நினைத்தது சரியல்ல என்று காட்டியது. பல ஆண்டுகள் கழித்துத்தான் எனக்கு எதிரானவையாகக் கருதப்படும் என்று நான் நினைத்த விஷயங்கள் என்.எஸ்.ஏ-வால் என் சிறப்புத் தகுதிகள் எனக் கருதப்பட்டன என்பது எனக்குப் புரிந்தது. அவர்களது மதிப்பீடு நாட்டின் பால் எனக்குள்ள விசவாசத்தைவிட எனது விரக்திகளையும், பலவீனங்களையுமே முக்கியமானவையாக எடுத்துக்கொண்டது. என் பெற்றோர்கள் மீதான கோபம், பெண்கள் மீதான ஈடுபாடு, நல்ல வாழ்க்கை வாழ வேண்டுமென்ற லட்சியம் இவையெல்லாம் அவர்களுக்கு ஒரு தூண்டிலைக் கொடுத்தன. என்னைக் கெடுக்க முடியும். படிப்பிலும், விளையாட்டிலும் முன்னிலை வகிக்க நான் காட்டிய தீவிரம், அப்பாவிற்கு எதிராக நான் செய்த கலகம், போலவீல் பொய் சொல்லும் துணிச்சல், வெளிநாட்டவர்களோடு கலந்து பழகுவதில் எனக்கிருந்த திறமை போன்றவைதான் அவர்கள் எதிர்பார்ப்பவை. பர்கத்தின் அப்பா ஈரானில் அமெரிக்க உளவுத்துறைக்கு வேலை செய்தவர் என்பதைப் பின்பு கண்டுபிடித்தேன்; எனவே பர்கத்துடனான என் நட்பு என்பது ஒரு

சிறப்புத் தகுதிதான்.

இந்தச் சோதனைகளுக்குச் சில வாரங்கள் கழித்து, ஒற்றாடல் கலையில் பயிற்சியைத் தொடங்கும் முகமாக எனக்கு ஒரு வேலை தரப்பட்டது. அதை எனது படிப்பை முடித்ததும் அதாவது சில மாதங்கள் கழித்துத் தொடங்க வேண்டியிருந்தது. ஆனால் அதிகாரப் பூர்வமாக அந்த வேலையை ஒப்புக்கொள்ளும் முன் ஏதோ உணர்ச்சி வேகத்தில் பாஸ்டன் பல்கலைக்கழகத்தில் அமைதிப்படைக்கு ஆளெடுப்பவர் நடத்திய ஒரு கருத்தரங்கில் கலந்து கொண்டேன். கலந்து கொண்ட எல்லோரையும் கவர்ந்திழுத்த ஒரு முக்கியமான விஷயம், என். எஸ். ஏ போலவே அமைதிப்படை வேலையும் கட்டாய இராணுவச் சேவையைத் தள்ளிப் போடக் கூடியது என்பதுதான்.

இந்தக் கருத்தரங்கில் கலந்து கொள்வது என்று நான் செய்த முடிவு அப்போது சாதாரணமானதாகவும், தற்செயலானதாகவும் தோன்றினாலும் அது என் வாழ்க்கையையே மாற்றியமைக்கக் கூடியதாக அமைந்தது. அந்த ஆளெடுப்பவர் தன்னார்வத் தொண்டர்கள் தேவைப்படும் இடங்களைப் பட்டியலிட்டார். அவற்றில் ஒன்று காலனியாதிக்கத்திற்கு முன்பு அமெரிக்கப் பழங்குடிகள் வாழ்ந்ததைப் போலவே இன்றும் பழங்குடி மக்கள் வாழ்க்கை நடத்தி வரும் அமேசான் மழைக்காடுகள்.

என் மூதாதையர்கள் நியூ ஹாமஷெயருக்கு வருவதற்கு முன் அங்கே வாழ்ந்து வந்த பூர்வ குடிகளான அப்நகிகளின் வாழ்க்கை எனக்கு எப்போதுமே கவர்ச்சிகரமானதாகத் தோன்றி வந்தது. அவர்களைப் போல வாழ்வது என் கனவாக இருந்தது. என் நரம்புகளில் அப்நகி ரத்தம் உள்ளது என்பதை நான் அறிந்திருந்தேன். வனங்களைப் பற்றிய பிரமிக்க வைக்கும் அவர்களது அறிவைக் கற்றுக்கொள்ள எனக்கு எப்போதுமே ஆர்வம் இருந்து வந்தது. ஆளெடுப்பவர் தன் பேச்சை முடித்ததும் அவரிடம் அமேசானுக்கு அனுப்பப்படக்கூடிய வாய்ப்பு குறித்துக் கேட்டேன். அங்கேதான் தன்னார்வத் தொண்டர்களுக்கான தேவை மிகவும் அதிகம் என்றும், அங்கே அனுப்பப்படுவதற்கான வாய்ப்புகள் பிரகாசமாக உள்ளன என்றும் அவர் எனக்கு உறுதியளித்தார். நான் ஃபிராங்க் மாமாவுடன் தொடர்பு கொண்டேன்.

வியப்பூட்டும் விதமாக, அவர் அமைதிப்படைப் பணி குறித்து ஆழ்ந்து சிந்திக்கும்படி என்னை உற்சாகப்படுத்தினார். ஹனோய் வீழ்ந்த பிறகு அமேசான் ஒரு முக்கியமான இடமாகிவிடும் என்றார். அவரைப் போன்ற பதவியிலுள்ளவர்கள் வட வியட்நாமின் தலைநகரான ஹனோய், அமெரிக்கப் படைகளிடம் வீழ்வது உறுதி என்று முடிவு செய்திருந்தார்கள்.

“அமேசான் பிராந்தியத்தில் எண்ணெய் நிரம்பி வழிகிறது'' அவர் தொடர்ந்தார். “அங்கே நமக்கு பழங்குடிகளைப் புரிந்து கொள்ளக்

கூடிய நல்ல ஏஜெண்டுகள் தேவை,'' என்றார். அமைதிப்படையில் பணி புரிவதென்பது அற்புதமான பயிற்சிக்களமாக அமையும் என்று அவர் எனக்கு உறுதியளித்ததோடு, ஸ்பானிஷிலும், உள்ளூர் பழங்குடி மொழிகளிலும் திறமையை வளர்த்துக் கொள்ளும்படியும் யோசனை சொன்னார். "அரசுக்கு வேலை செய்வதற்குப் பதில் ஏதாவது தனியார் நிறுவனத்திற்கு வேலை செய்வதில்தான் இது போய் நிற்கும்.'' அவர் உச்சுக் கொட்டிக் கொண்டார்.

அந்த நேரத்தில் அவர் என்ன பொருளில் அப்படிச் சொன்னார் என்பதை நான் புரிந்து கொள்ளவில்லை. அப்போது பொருளாதார அடியாள் என்றால் என்னவென்றே எனக்குத் தெரியாது. அடுத்து வர இருந்த ஆண்டுகளிலும் இதைப் பற்றி நான் கேள்விப்படவேயில்லை என்றாலும் நான் உளவாளி என்ற நிலையிலிருந்து பொருளாதார அடியாளாகப் பதவி உயர்த்தப்பட்டிருந்தேன் என்பதுதான் அதன் உண்மையான பொருள். நூற்றுக்கணக்கான ஆண்களும் பெண்களும் உலகம் முழுவதும் பரவிப் பல தனியார் நிறுவனங்களுக்குப் பணி செய்து வருகிறார்கள். அவர்கள் அரசிடம் ஒரு பைசாகூட சம்பளமாகப் பெறவில்லை என்றாலும் உண்மையில் அவர்கள் பேரரசின் நலன்களுக்கே சேவை புரிந்து வருகிறார்கள் என்பதையெல்லாம் பற்றி அப்போது நான் கொஞ்சம்கூட யோசித்திருக்கவில்லை. இதைவிட மேலாக, இந்தப் புதிய வர்க்கம் இருபதாம் நூற்றாண்டின் இறுதிக்குள் பல்கிப் பெருகிவிடும் என்றும், இந்தப் பெருகி வரும் படையைக் கட்டியமைப்பதில் நானும் ஒரு முக்கியமான பாத்திரம் வகிக்கப் போகிறேன் என்பதையும் நான் அப்போது நினைத்தே பார்த்திருக்க முடியாது.

ஆனும், நானும் அமைதிப்படையில் சேர மனு கொடுத்து விட்டு அமேசான் பகுதியில் வேலையளிக்கும்படி கேட்டுக் கொண்டேன். அது ஏற்றுக்கொள்ளப்பட்டது என்று எனக்கு வந்த அறிவிப்பைக் கண்டு நான் மிகுந்த ஏமாற்றமடைந்தேன். ஏனென்றால் அந்தக் கடிதம் நாங்கள் ஈக்வடாருக்கு அனுப்பப்படுவோம் என்று கூறியது.

'சே! நான் கேட்டுக் கொண்டது அமேசான். ஆப்பிரிக்கா அல்ல...' என்று நினைத்துக் கொண்டேன்.

அட்லஸை எடுத்து ஈக்வடாரை ஆப்பிரிக்கக் கண்டத்தில் தேடிப் பார்த்து ஏமாற்றமடைந்தேன். அது லத்தீன் அமெரிக்காவில்தான் இருக்கிறது என்பதும் ஆண்டிஸ் பனி மலைகளில் உருவாகிப் பாய்ந்து வரும் ஆறுகள்தான் அமேசானாக உரு மாறுகின்றன என்பதும் அட்லசின் அட்டவணையைப் பார்த்த பின்புதான் எனக்குத் தெரிய வந்தது. மேலும் மேலும், படிக்கப் படிக்க ஈக்வடாரின் காடுகள் கம்பீரமும் தனிச்சிறப்பும் கொண்டவை என்பதும், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்ததைப் போலவே இப்போதும் அங்கே மக்கள் வாழ்ந்து வருகிறார்கள் என்பதும் எனக்கு உறுதிப்பட்டது.

நாங்கள் பணியை ஒப்புக்கொண்டோம்.

தெற்கு கலிபோர்னியாவில் பயிற்சியை முடித்த பின்பு 1968 செப்டம்பரில் நாங்கள் இருவரும் ஈக்வடாருக்குக் கிளம்பினோம். வெள்ளையர்கள் வருவதற்கு முன்பிருந்த அமெரிக்கப் பழங்குடிகளைப் போல வாழ்ந்து வந்த ஷுவார் மக்களுடன் தங்கினோம். ஆண்டீஸ் மலைகளில் இன்கா பழங்குடியினரிடையேயும் வேலை செய்தோம். இப்படியொரு பகுதி உலகில் இன்னமும் மிஞ்சியிருக்கக்கூடும் என்று நான் கனவுகூடக் கண்டிருக்கவில்லை. அதுவரை நான் பார்த்திருந்த லத்தீன் அமெரிக்கர்களெல்லாம் என் பள்ளியைச் சேர்ந்த பணக்கார மாணவர்கள்தான். வேட்டையாடியும், விவசாயம் செய்தும் வாழ்ந்து வந்த இந்தப் பழங்குடி மக்கள் மீது எனக்கு அனுதாபம் தோன்றியது. அவர்களுடன் ஒரு வினோதமான உறவு மலருவதை உணர்ந்தேன். அவர்கள் ஏதோ ஒரு விதத்தில் நான் விட்டு வந்திருந்த நகரவாசிகளை நினைவுபடுத்தினார்கள்.

ஒருநாள் பிஸ்னெஸ் சூட் அணிந்த ஒருவர் (ஈனார் கிரீவ் என்பது அவர் பெயர்) எங்கள் சமூக விமான ஓடு தளத்தில் வந்து இறங்கினார். அவர் சாஸ். டி. மெய்ன் இனக் (மெய்ன்) என்ற சர்வதேச ஆலோசனை நிறுவனத்தின் உதவித் தலைவராக இருந்து வந்தார். இந்த நிறுவனம் ஒருபோதும் தன்னைப் பிரபலப்படுத்திக் கொண்டதே இல்லை. ஈக்வடாருக்கும், அதன் அண்டை நாடுகளுக்கும் உள்கட்டுமானத்தை வளர்த்தெடுக்க ஆயிரக்கணக்கான கோடி டாலர்கள் கடன் வழங்குவதற்கான சாத்தியக்கூறுகள் பற்றி உலக வங்கி செய்து வந்த ஆய்வுகளுக்குப் பொறுப்பாளராகவும் அவர் செயல்பட்டு வந்தார். அதோடு ஈனார் அமெரிக்கத் தரைப்படையில் (ரிசர்வ்) ஒரு கர்னலும் கூட.

அவர் என்னிடம் மெய்ன் - ஐப் போன்ற ஒரு நிறுவனத்தில் வேலை செய்வதால் கிடைக்கக் கூடிய லாபங்கள் குறித்துப் பேசத் தொடங்கினார். நான் இங்கே வரும் முன் என்.எஸ்.ஏ - வுக்குத் தேர்வு செய்யப்பட்டது குறித்தும், திரும்பவும் அங்கே செல்வது பற்றி சிந்தித்து வருகிறேன் என்றும் அவரிடம் கூறினேன். ஈனார் சில நேரங்களில் தான் என்.எஸ்.ஏ - வுக்குத் தொடர்பாளராகச் செயல்பட்டுள்ளதாகப் பதிலளித்தார். அவர் பார்த்த பார்வை என்னை அளவெடுக்கத்தான் அவர் இங்கே வந்துள்ளாரோ என்று சந்தேகிக்கத் தூண்டியது. என்னைப் பற்றிய தகவல்கள் அவரது விரல் நுனியில் இருந்திருக்க வேண்டும் என்று இப்போது எனக்கு உறுதியாகத் தோன்றுகிறது. வடஅமெரிக்கர்கள் நினைத்துப் பார்க்கவே முடியாத சூழல்களில் தாக்குப்பிடித்து நிற்கும் என் திறமை நிச்சயம் அவர் கவனத்தைக் கவர்ந்திருக்கும்.

ஈக்வடாரில் அவர் என்னுடன் இரண்டு நாட்கள் கழித்தார். பின்பும் எங்கள் தொடர்பு கடிதம் மூலம் தொடர்ந்தது. ஈக்வடாரின்

பொருளாதார வளர்ச்சியின் எதிர்காலம் குறித்து மதிப்பீடு செய்து அறிக்கைகள் அனுப்பும்படி அவர் என்னிடம் கேட்டுக்கொண்டார். என்னிடம் ஒரு சிறிய தட்டச்சுப் பொறி இருந்தது. தவிர நான் எழுதுவதை நேசித்தேன். எனவே இந்த வேண்டுகோளைப் பூர்த்தி செய்வது எனக்கு மகிழ்ச்சியளித்தது. ஒரு வருட காலத்தில் அவருக்கு சுமார் பதினைந்து நீண்ட கடிதங்கள் எழுதித் தள்ளினேன். இவற்றில் ஈக்வடாரின் அரசியல் மற்றும் பொருளாதாரத்தின் எதிர்காலம் குறித்து ஊகங்கள் செய்திருந்தேன். அதோடு எண்ணெய் நிறுவனங்கள் உள்ளிட்ட பன்னாட்டு நிறுவனங்களையும், அவற்றின் நவீனப்படுத்தும் முயற்சிகளையும் எதிர்த்துப் போராடிக் கொண்டிருக்கும் பழங்குடிகள் பற்றியும், அவர்களிடையே வளர்ந்து வரும் எதிர்ப்புணர்வு பற்றியும் குறிப்பிட்டிருந்தேன்.

அமைதிப் படையுடனான ஒப்பந்தம் முடிவடைந்த பிறகு, ஈனார் என்னை நேர்காணலுக்கு பாஸ்டனிலுள்ள மெய்ன் நிறுவனத்தின் தலைமையகத்திற்கு அழைத்திருந்தார். இந்தச் சந்திப்பின் போது மெய்ன்னின் அடிப்படையான வேலை பொறியியல்தான் என்றாலும் அதன் மிகப்பெரிய வாடிக்கையாளரான உலக வங்கி, பொருளாதார வளர்ச்சி குறித்த முன்னறிவிப்புகளின் அடிப்படையிலேயே திட்டங்களின் அளவு தீர்மானிக்கப்படும் என்பதால் அத்தகைய முன்னறிவிப்புகளை உருவாக்கப் பொருளாதார நிபுணர்களைப் பணிக்கு வைத்துக் கொள்ள வேண்டும் என்று தன்னை வற்புறுத்தத் தொடங்கியுள்ளது என்றார். முன்பு தான் மிகச் சிறந்த தகுதி பெற்ற, மூன்று பொருளாதார நிபுணர்களில் இருவர் முதுகலைப் பட்டதாரிகள். ஒருவர் பி.எச்.டி பட்டம் பெற்றவர்.

“நம்பகமான புள்ளிவிவரங்கள் கிடைக்காத நாடுகளில் பொருளாதார வளர்ச்சி குறித்த முன்னறிவிப்புகளை உருவாக்கவே அவர்களால் முடியவில்லை,’’ என்றார். இந்த நிபுணர்கள் இந்தோனேஷியா, ஈரான், எகிப்து போன்ற நாடுகளின் உட்பகுதிகளுக்குப் பயணம் செய்ய வேண்டும் என்றும், உள்ளூர் தலைவர்களைப் பேட்டியெடுக்க வேண்டும் என்றும், இந்தத் தொலைதூரப் பகுதிகளில் பொருளாதார வளர்ச்சி பற்றிய மதிப்பீடுகள் அளிக்க வேண்டும் என்றும் ஒப்பந்தங்களின் விதிகள் கோரின. அதை அவர்களால் நிறைவேற்றவே முடியவில்லை. அவர்களில் ஒருவருக்கு வெளியுலகத் தொடர்பேயில்லாமல் ஒரு பனாமா கிராமத்தில் தங்கியிருந்தபோது நரம்புத்தளர்ச்சியே ஏற்பட்டு விட்டது. அவரை பனாமா போலீசார் அமெரிக்கா செல்லும் விமானத்தில் ஏற்றிவிட வேண்டியிருந்தது.

“திட்டவட்டமான புள்ளிவிவரங்கள் இல்லாததை நீ பொருட்படுத்தவே இல்லை என்பதை உன் கடிதங்கள் காட்டுகின்றன. எனது ஈக்வடார் அனுபவத்தை வைத்துப் பார்க்கும் போது உன்னால்

எங்கு வேண்டுமானாலும் சமாளித்துக் கொள்ள முடியுமென்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது,'' என்றார் அவர். ஏற்கனவே உள்ளவர்களில் ஒருவரைத் தான் நீக்கி விட்டதாகவும், நான் ஒப்புக்கொண்டால் மற்ற இருவரையும் அவ்வாறே செய்யத் தயாராக இருப்பதாகவும் கூறினார்.

1971, ஜனவரியில் நான் மெய்ன் நிறுவனத்தின் பொருளாதார நிபுணனானேன். அப்போது நான் இருபத்து ஆறு வயதைத் தொட்டு விட்டேன். இந்த வயதுக்கு மேல் இராணுவத்திற்கு நான் தேவையில்லை. ஆனின் குடும்பத்தினரோடு பேசியபோது புதிய வேலையை ஏற்றுக்கொள்ளும்படி அவர்கள் உற்சாகப்படுத்தினர். ஃபிராங்க் மாமாவின் கருத்தையே இவர்களும் பிரதிபலித்தார்கள் என்று அனுமானித்துக் கொண்டேன். ஏதாவது ஒரு தனியார் நிறுவனத்தில் போய்ச் சேரும் வாய்ப்பு உள்ளது என்று அவர் ஏற்கனவே குறிப்பிட்டதை நினைத்துக் கொண்டேன். எனது ஈக்வடார் அனுபவம், தகுதி, திறமையால் மட்டும் இந்த வேலை கிடைத்துவிடவில்லை. ஃபிராங்க் மாமாவின் செல்வாக்கும் இதில் உள்ளது என்பதில் எனக்கு எந்தச் சந்தேகமும் எழவில்லை. ஆனால் அது எப்போதுமே வெளிப்படையாகச் சொல்லப்படவிலலை.

பல வாரங்கள் நான் தரையில் நடக்கவே இல்லை. என் தலைக்கனம் ஊதிப் பெருத்தது. நான் பாஸ்டன் பல்கலைக்கழகத்தில் இளங்கலைப் பட்டம் மட்டுமே பெற்றிருந்தேன். இராணுவத்தால் ஒதுக்கப்பட்ட எனது மற்ற வகுப்புத் தோழர்கள் எம்.பி.ஏ போன்ற பட்டங்கள் பெற்றவர்கள்; பொறாமையில் அவர்கள் வெந்து போவார்கள் என்பதை நான் அறிந்திருந்தேன். என்னை நானே துணிச்சல் மிகுந்த உளவாளியாகக் கற்பனை செய்து கொண்டேன். அற்புதமான இடங்களுக்குப் போவது போலவும், நீச்சலுடை அணிந்த பெண்களுக்கு நடுவே கையில் மதுக்கோப்பையுடன் உல்லாசமாகச் சாய்ந்திருப்பது போலவும் கனவுகளில் மிதந்தேன்.

இந்தக் கனவுகளில் சில பிறகு நனவாகவும் செய்தன. ஈனார் என்னைப் பொருளாதார நிபுணனாகத்தான் நியமித்திருந்தார். ஆனால் என் வேலை அதைத் தாண்டியும் வெகுதூரம் சென்றது. இந்த வேலை நினைத்தே பார்க்க முடியாத விதத்தில் என்னை ஜேம்ஸ் பாண்டுக்கு மிக அருகில் கொண்டு செல்ல இருந்தது என்பதை சீக்கிரமே உணர இருந்தேன்.

# 2

# ஒரு வழிப் பாதை

மெய்ன் ஒரு கட்டுப்பாடு மிக்க நிறுவனம் என்று கருதப்பட்டது. அதில் சுமார் இரண்டாயிரம் பேர் பணியாற்றினார்கள் என்றாலும் சுமார் ஐந்து சதவீதம் பேர் மட்டுமே நிறுவனத்திற்கு உரிமையாளர்களாக இருந்தனர். இந்த ஐந்து சதவீதம் பேர் பங்கு தாரர்கள் என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் மற்றவர்கள் எல்லோர் மீதும் அதிகாரம் செலுத்தியதோடு பணத்தைக் குவிக்கவும் செய்தனர். அவர்களுக்குள் ரகசியங்கள் மிக உறுதியாகக் காப்பாற்றப்பட்டன. நிறுவனத்தில் பங்குதாரர் ஆவதென்பது மற்றவர்களின் லட்சியமாக இருந்து வந்தது.. இந்தப் பங்குதாரர்கள் நாடுகளின் தலைவர்களுடனும், நிறுவனங்களின் தலைமை நிர்வாக அதிகாரிகளுடனும் (CEO) சகஜமாகப் பழகி வந்தனர். வழக்கறிஞர்களையும், உளவியல் மருத்துவர்களையும் போல ரகசியங்கள் தீவிரமாகப் பாதுகாக்கப்பட வேண்டுமென்று எதிர்பார்க்கப்பட்டது. பத்திரிகைகளோடு பேசுவதென்பது சகித்துக்கொள்ளவே முடியாத ஒரு கெட்ட விஷயம். இதன் காரணமாகவே எங்கள் போட்டி நிறுவனங்களான ஆர்தர் டி. லிட்டில், ஸ்டோன் & வெப்ஸ்டர், பிரவுன் & ரூட், ஹாலிபர்ட்டன், பெக்டல் போன்றவற்றைப் பற்றி பலருக்குத் தெரிந்திருந்த போதிலும் மெய்ன்-ஐப் பற்றி யாரும் ஒருபோதும் கேள்விப்பட்டதேயில்லை.

போட்டியாளர்கள் என்ற சொல்லை நான் மிகவும் தளர்வான பொருளில்தான் பயன்படுத்துகிறேன். ஏனென்றால் மெய்ன் தனக்குத் தானே ஒரு கூட்டுறவு நிறுவனம் போலத்தான் இயங்கி வந்தது. எங்கள் ஊழியர்களில் பலர் பொறியியலாளர்கள். ஆனால் எந்தக் காலத்திலும் எங்களுக்குச் சொந்தமாக எந்தக் கட்டுமானக் கருவியும், இயந்திரமும் இருந்ததில்லை. பொருட்களைப் போட்டு வைக்கும் ஒரு ஷெட் கூட நாங்கள் கட்டியதில்லை. மெய்ன் - ஐச் சேர்ந்தவர்கள் பலர் முன்னாள் இராணுவத்தினர். இருந்தபோதிலும் பாதுகாப்புத் துறையுடனோ, இராணுவம் தொடர்பான வேறெந்தத் துறைகளுடனோ நாங்கள் எப்போதும் எந்த ஒப்பந்தமும் செய்து கொண்டதேயில்லை. தொடக்கத்தில் சில மாதங்களுக்கு நாங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்பதையே என்னால் புரிந்துகொள்ள முடியாத அளவிற்கு மெயின் தொழில் புரியும் முறை வித்தியாசமானதாயிருந்தது. முதன்முதலாக எனக்கென்று ஒரு வேலை கொடுக்கப்பட்டபோது, அதைப்பற்றி எனக்கு ஒரே ஒரு விஷயம் மட்டுமே தெரிந்திருந்தது. இந்தோனேஷியாவின் ஜாவா தீவில் ஒரு மாபெரும் ஆற்றல் வளத் (energy) திட்டத்தை உருவாக்க அனுப்பப்பட உள்ள பதினொரு பேர் கொண்ட குழுவில் நானும் ஒருவன்

என்பதுதான் அது.

இதைப் பற்றி என்னுடன் கலந்துரையாடிய ஈனாரும், மற்றவர்களும் ஜாவாவின் பொருளாதாரம் பெரும் முன்னேற்றம் அடையப் போகிறது என்றனர். நல்ல முன்னறிவிப்பாளன் என்ற பெயர் பெற நான் விரும்பினால் அதற்குத் தகுந்த விதத்தில் முன்னறிவிப்புகளை உருவாக்க வேண்டும் என்பதை எனக்குப் புரிய வைக்க அவர்கள் ஆர்வம் காட்டினர். நல்ல முன்னறிவிப்பாளனுக்குப் பதவி உயர்வுகளும் வழங்கப்படும் என்பது எனக்குத் தெரிந்தேயிருந்தது.

“இந்த நாட்டின் பொருளாதார வளர்ச்சி வரைபடத்தையும் தாண்டிப் போய்விடும்'', இப்படிச் சொல்வதை ஈனார் விரும்பினார். “அது ஒரு பறவை போலப் பறந்து செல்லும்!''

ஈனார் இரண்டு, மூன்று நாட்களே நீடிக்கும் குறுகிய பயணங்களை அடிக்கடி மேற்கொண்டார். அதைப் பற்றி யாரும் பேசியதுமில்லை. யாருக்கும் தெரிந்திருக்கவுமில்லை. அவர் அலுவலகத்தில் இருக்கும்போது தேநீர் இடைவேளைகளில் என்னை அழைப்பார். ஆன் - ஐப் பற்றி, எங்கள் புதிய குடியிருப்பைப் பற்றி, ஈக்வடாரிலிருந்து நாங்கள் கொண்டு வந்திருந்த பூனையைப் பற்றியெல்லாம் கேட்பார். அவரைப் பற்றிய விஷயங்களை அதிகம் தெரிந்து கொண்டதும் எனக்குக் கொஞ்சம் துணிச்சல் வந்தது. அவரைப் பற்றி முழுமையாகத் தெரிந்து கொள்ளவும் என்னிடமிருந்து என்ன எதிர்பார்க்கப்படுகிறது என்பதை அறிந்துகொள்ளவும் முயன்றேன். ஆனால் எனக்குத் திருப்தியான பதில் ஒருபோதும் கிடைத்ததே இல்லை. பேச்சை மாற்றுவதில் அவருக்கு அசாத்தியமான திறமை இருந்தது. அப்படியொரு சந்தர்ப்பத்தில் ஒரு நாள் என் மீது அவர் ஒரு விசித்திரமான பார்வையை வீசினார்.

“நீ மூளையைக் குழப்பிக் கொள்ளாதே. உன்னைப் பற்றி எங்களுக்கு மிக அதிகமான எதிர்பார்ப்புகள் உள்ளன. சமீபத்தில் வாஷிங்டன் போயிருந்தேன்...'' அவரது குரல் திடீரென்று தணிந்தது. ஒரு மர்மப் புன்னகையுடன் சொன்னார்: “அது எப்படியிருந்தாலும் குவைத்தில் நமக்கு பெரிய திட்டம் உள்ளதென்பது எனக்குத் தெரியும். நீ இந்தோனேஷியா புறப்பட குறைந்த நாட்களே இருக்கின்றன. குவைத்தைப் பற்றிப் படிப்பதற்கு கொஞ்சம் நேரம் ஒதுக்கு. பாஸ்டன் பொது நூலகத்தில் ஏராளமான விஷயங்கள் இருக்கின்றன. அதோடு எம்.ஐ.டி ஹார்வேர்டு நூலகங்களுக்கும் உனக்கு அனுமதிச் சீட்டு ஏற்பாடு செய்கிறோம்.''

அதன் பின்பு இந்த நூலகங்களில் - குறிப்பாக பாஸ்டன் பொது நூலகத்தில் - மணிக்கணக்கில் நேரத்தைச் செலவழித்தேன். பாஸ்டன் நூலகம் என் அலுவலகத்துக்கும் குடியிருப்புக்கும் பக்கத்திலேயே இருந்தது. சீக்கிரமே குவைத்தைப் பற்றிய விஷயங்கள் எனக்கு அத்துப்படியாகி விட்டன. இங்கே அமெரிக்காவும், சர்வதேச நிதி

நிறுவனமும் (IMF) உலக வங்கியும் வெளியிட்ட பொருளாதாரப் புள்ளிவிவரங்கள் குறித்த ஏராளமான புத்தகங்களைக் கரைத்துக் குடித்தேன். இந்தோனேஷியாவுக்கும், ஜாவாவுக்குமான பொருளாதாரக் கணிதவியல் (econometric) அடிப்படையிலான ஆய்வை மேற்கொள்ளும்படி என்னிடம் எதிர்பார்க்கப்படுகிறது என்று நான் அறிந்திருந்ததால், அதே போன்ற ஒன்றை குவைத் விஷயத்திலும் மேற்கொள்வது என்று முடிவு செய்திருந்தேன்.

இருந்தபோதிலும் நான் பெற்றிருந்த வணிக நிர்வாகக் கல்வி இந்த வகையான ஆய்வுக்கு உதவவில்லை. எனவே வேறு வழி காணும் முயற்சியில் நிறைய நேரத்தைக் கழிக்க நேர்ந்தது. இந்தப் பாடத்தில் இரண்டு வகுப்புகளிலும்கூட சேர்ந்து கொள்ளும் அளவிற்குச் சென்றேன். நாளாவட்டத்தில் ஆய்வாளரின் தனிப்பட்ட விருப்பு, வெறுப்புகளுக்கு ஏற்ற வகையில் முடிவுகளைச் சென்றடையும் விதத்தில் புள்ளிவிவரங்களைத் திரிக்க முடியும் என்பதைக் கண்டு கொண்டேன்.

மெய்ன் முழுக்க முழுக்க ஆண்களே ஆதிக்கம் செலுத்தி வந்த ஒரு நிறுவனம். 1971 - இல் நான்கு பெண்கள்தான் நிபுணர்கள் என்ற பொறுப்பில் இருந்தார்கள். ஆனால் தனிச் செயலாளர்களாகவும், சுருக்கெழுத்தாளர்களாகவும் இருநூறு பெண்கள் பணிபுரிந்தனர். இதுதான் எங்கள் நிறுவனத்தில் இயற்கை என்று நான் எண்ணியிருந்ததால் பாஸ்டன் பொது நூலத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சி எனக்குத் திகைப்பளித்தது.

கருவிழிகளும், கருங்கூந்தலும் கொண்ட கவர்ச்சிகரமான ஒரு பெண் வந்து எனக்கு எதிரே இருந்த மேசையில் அமர்ந்தாள். கரும்பச்சை நிற பிஸினெஸ் சூட்டில் அவளது தோற்றம் பளிச்சென்றிருந்தது. அவளுக்கு என்னைவிட வயது அதிகமாக இருக்கும் போலத் தோன்றியது. அருகே அவள் உட்கார்ந்திருந்தது என் கவனத்தை ஈர்த்தாலும் வெளித் தோற்றத்திற்குக் கண்டுகொள்ளாமல் இருப்பதுபோல் காட்டிக்கொள்ள முயன்றேன். சில நிமிடங்களுக்குப் பிறகு, அவள் ஒரு வார்த்தையும் பேசாமல் விரித்திருந்த ஒரு புத்தகத்தை என்னிடம் தள்ளினாள். அதில் குவைத்தைப் பற்றி நான் தேடிக் கொண்டிருந்த தகவல்கள் அடங்கிய ஒரு அட்டவணையும், ஒரு அறிமுக அட்டையும் இருந்தன. அந்த அறிமுக அட்டையில் கிளேடின் மார்ட்டின் என்ற அவளது பெயரும், சிறப்பு ஆலோசகர் சாஸ் டி. மெய்ன் இன்க் என்ற அவளது பதவியும் அச்சிடப்பட்டிருந்தன. நான் நிமிர்ந்து அவளது விழிகளைச் சந்தித்தபோது அவள் கையை நீட்டினாள்.

“உங்கள் பயிற்சிக்கு உதவும்படி என்னிடம் கேட்டுக்கொள்ளப் பட்டுள்ளது.'' நான் மலைத்துப் போனேன்.

அடுத்த நாளிலிருந்து நானும் கிளேடினும் அபார்ட்மெண்ட்டில் சந்தித்துக்கொள்ளத் தொடங்கினோம். அது புருடென்ஷியல் சென்டர்

தலைமையத்திற்கு அருகே பேக்கான் தெருவில் இருந்தது. பழகத் தொடங்கிய சில நிமிடங்களிலேயே என் பதவி அசாதாரணமானது என்றும் அதனோடு சம்பந்தப்பட்ட எல்லாமே இரகசியமாக வைத்துக் கொள்ளப்பட வேண்டியது அவசியம் என்றும் அவள் எச்சரித்தாள். ஏன் யாருமே என் வேலை என்ன என்பது பற்றி எதுவுமே உருப்படியாகச் சொல்லமாட்டேன் என்கிறார்கள் என்ற என் மண்டையைக் குடைந்து கொண்டிருந்த கேள்விக்குக் கிளேடினிடம் தான் விடை கிடைத்தது. அதைச் சொல்லத் தனக்கு மட்டும்தான் அதிகாரம் உண்டு என்றாள் அவள். பின்பு தன் வேலை என்னை ஒரு பொருளாதார அடியாளாக வளர்த்தெடுப்பதுதான் என்றாள்.

அந்தப் பெயரே பழங்கால சூழ்ச்சிகள், சதித் திட்டங்கள் தொடர்பான கனவுகளை என்னுள் விதைத்தது. என்னிடமிருந்து நானே சங்கடப்படும்படியான ஒரு கோணல் சிரிப்பு வெளிப்பட்டது. அவள் முறுவலித்தபடியே இந்தப் பெயரைப் பயன்படுத்துவதில் கொஞ்சம் வேடிக்கையும் இருக்கிறது என்றாள். “யார் அதை சீரியஸாக எடுத்துக்கொள்வார்கள்?’’

அது பற்றி எனக்கு எதுவுமே தெரியாது என்று வெளிப்படையாக ஒப்புக்கொண்டேன்.

“நீ ஒருவன் மட்டுமே பொருளாதார அடியாள் அல்ல. நம் தொழில் மட்டமானதுதான். ஆனால் நாம் ஒரு அரிய வகையைச் சேர்ந்தவர்கள். நீ இதிலிருக்கிறாய் என்பதை யாரும் தெரிந்து கொள்ளக் கூடாது. உன் மனைவி உட்பட’’ அவள் முகம் தீவிரமாக மாறியது. “நான் உன்னிடம் மிகவும் வெளிப்படையாக இருப்பேன். அடுத்து வரும் சில வாரங்களில் என்னால் முடிந்த அனைத்தையும் உனக்குக் கற்றுத் தருவேன். பின்பு உன் இஷ்டம். ஆனால் இந்தத் தொழிலில் ஒருமுறை கால் வைத்துவிட்டால் பின்பு வெளியே போவதைப் பற்றி நினைத்தே பார்க்க முடியாது.’’ கிளேடின் அதன் பின்பு பொருளாதார அடியாள் என்ற முழுப் பெயரையும் எப்போதாவதுதான் பயன்படுத்தினாள். நாங்கள் சும்மா ஈ. எச். எம் - கள்தான்.

கிளேடின் தேசியப் பாதுகாப்பு நிறுவனத்தின் குறிப்புகளில் பட்டியலிடப்பட்டிருந்த என் பலவீனங்களை முழுமையாகப் பயன்படுத்தினாள் என்பதை நான் அப்போது உணர்ந்து கொள்ளவேயில்லை. அவளுக்கு அந்தத் தகவல்களைக் கொடுத்தது யார்? ஈனாரா, மெய்ன் நிறுவனத்தின் மனிதவளத் துறையா அல்லது வேறு நபர்களா என்பதை என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. இருப்பினும் அவள் என் பலவீனங்களைத் திறமையுடன் பயன்படுத்தினாள் என்பதை மட்டும் தெளிவாகப் புரிந்துகொள்ள முடிந்தது. உடற்கவர்ச்சியும், இரு பொருள் தரும் சொல்லாடல்களும் கலந்த அவளது அணுகுமுறை எனக்காகவே பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்டது. வியாபாரத்துறையில் நெருக்கடி நேரங்களில்

இதுபோன்ற நடைமுறைகள் கையாளப்படுவதைப் பார்த்திருக்கிறேன். எங்களுக்கிடையே நிலவிய இந்த வகையான உறவை வெளிப்படுத்தி என் குடும்ப வாழ்க்கையைக் குலைத்துக் கொள்ள மாட்டேன் என்பதை கிளேடின் தொடக்கத்திலிருந்தே தெரிந்து வைத்திருந்தாள். நான் செய்ய வேண்டிய வேலைகளில் இருந்த இருண்ட பகுதிகளை விவரிக்கும்போது அவள் அப்பட்டமாக எந்த ஒளிவு மறைவுமின்றி வெளிப்படையாக நடந்து கொண்டாள்.

அவளுக்கு யார் சம்பளம் கொடுக்கிறார்கள் என்பது பற்றியெல்லாம் நான் தெரிந்து கொள்ளவேயில்லை என்றாலும் மெய்ன் - ஆகத் தான் இருந்திருக்க வேண்டும் என்பதில் எனக்கு எந்தச் சந்தேகமும் இல்லை. அந்த நேரத்தில் நான் மிகவும் அப்பாவியாக, பயந்து போனவனாக, அதேசமயம் கவர்ச்சியில் கிறங்கிப் போனவனாக இருந்ததால் இப்போது சாதாரணமாகத் தோன்றும் கேள்விகளைக் கூடக் கேட்கவில்லை.

இரண்டு முக்கியமான நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டு நான் செயலாற்ற வேண்டுமென்றாள் அவள். முதலாவது, நாடுகளுக்கு மிகப்பெரிய அளவிற்குக் கடன் வழங்கி அந்தப் பணத்தைப் பெரும் கட்டுமானத் திட்டங்கள் மூலம் மெய்ன், பெக்டெல், ஹாலிபர்ட்டன் உள்ளிட்ட அமெரிக்க நிறுவனங்கள் கைப்பற்றித் திரும்பவும் அமெரிக்காவுக்குக் கொண்டு வருவதை நியாயப்படுத்த வேண்டும். இரண்டாவது, கடன் வாங்கிய நாடுகளை துடைத்தழிப்பதற்கு நான் வேலை செய்ய வேண்டும். (அதாவது மெய்னுக்கும் மற்ற அமெரிக்க நிறுவனங்களுக்கும் சேர வேண்டிய பணத்தைக் கொடுத்த பிறகுதான்) அப்படி அவற்றை ஆக்கினால்தான் அவை எப்போதும் கடன்காரர்களுக்குக் கட்டுப்பட்டுக் கிடக்கும். நமக்கு இராணுவத் தளங்களோ, எண்ணெய் போன்ற இயற்கை வளங்களோ, ஐ.நா.சபையில் ஓட்டுகளோ தேவைப்படும்போது இந்தக் கடன் வலையில் விழுந்துவிட்ட நாடுகளால் மறுக்க முடியாது.

என் வேலை பல்லாயிரக்கணக்கான கோடி டாலர்களை ஒரு நாட்டில் முதலீடு செய்வதால் என்னவிதமான விளைவுகள், வளர்ச்சி ஏற்படும் என்று முன்னறிவிப்புச் செய்வதுதான். குறிப்பாக இந்த முதலீடுகளின் காரணமாக உருவாக்கப்பட உள்ள பாதிப்புகளை மதிப்பிடுவதும், அதன் காரணமாக இருபது, இருபத்தைந்து ஆண்டுகளில் நாட்டின் பொருளாதாரத்தில் ஏற்பட உள்ள வளர்ச்சி பற்றிய ஆய்வுகளை முன்வைப்பதுதான் என் பணியாகும். உதாரணமாக ஒரு நாட்டின் தலைவர்கள் சோவியத் யூனியனுடன் சேர்ந்து கொள்ளாமலிருக்க அந்த நாட்டிற்கு ஆயிரம் கோடி டாலர் கடன் கொடுக்க வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டுள்ளதென்றால், அவற்றை மின் உற்பத்தி நிலையங்களில் முதலீடு செய்வதால் ஏற்படும் பலன்களையும்,

இருப்புப்பாதை அமைப்பதில் அல்லது தொலைத்தொடர்புச் சாதனங்கள் அமைப்பதில் முதலீடு செய்வதால் எட்டப்படக்கூடிய லாபத்தையும் ஒப்பீடு செய்வதுதான் என் வேலை. சில நேரங்களில் ஒரு நாட்டிற்கு நவீன மின் உற்பத்திக் கருவிகள் அமைக்கக் கடன் வழங்க ஏற்கனவே முடிவு செய்யப்பட்டிருக்கும். அந்த நேரங்களில் இந்தக் கடனால் நல்ல பொருளாதார வளர்ச்சி ஏற்படும் என்று நிரூபித்துக் காட்டுவது என் பொறுப்பாகும். இதன் பொருள் பொருளாதார வளர்ச்சிக்காகத்தான் கடன் வழங்கப்படுகிறது என்று நம்பச் செய்வதுதான். மொத்த தேசிய உற்பத்தியில் மிக அதிக அளவு வளர்ச்சியைக் காட்டும் திட்டமே அங்கீகரிக்கப்படும். ஒருவேளை ஒரே ஒரு திட்டம்தான் பரிசீலனையில் உள்ளது என்றால் அந்தத் திட்டத்தின் காரணமாக நாட்டின் உற்பத்தி உச்சக்கட்ட வளர்ச்சியை எட்டும், பொருளாதார வளர்ச்சிக்கு இன்றியமையாதது என்று நான் நிரூபித்துக் காட்ட வேண்டியிருக்கும்.

இந்தத் திட்டங்கள் ஒப்பந்தக்காரர்களுக்கு மிக அதிக லாபம் பெற்றுத் தரக் கூடியவை. கடன் பெறும் நாட்டிலுள்ள, விரல்விட்டு எண்ணக் கூடிய பணக்காரக் குடும்பங்களுக்கு மேலும் செல்வத்தை அள்ளித் தரக் கூடியவை. அதே நேரத்தில் அந்த நாடு தற்சார்பை இழந்து நம்மைச் சார்ந்து இருக்கும்படி செய்து விடக்கூடியவை என்ற விஷயம் வெளியே சொல்லப்படுவதே இல்லை. இப்படி நாடுகளை நம்மை அதாவது அமெரிக்காவை அண்டியிருக்கச் செய்து அதன் மூலம் அவற்றின் விசுவாசத்தை உறுதிப்படுத்துவதுதான் இத்திட்டங்களின் அடிப்படையான நோக்கம் என்ற உண்மை வெளிவருதே இல்லை. எவ்வளவுக்கெவ்வளவு கடன் அதிகமாக உள்ளதோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது. ஆனால் ஏழ்மையில் வாடும் மக்களுக்கு அளிக்கப்படும் சுகாதாரம், கல்வி போன்ற சேவைகள்தான் இக்கடன்களைக் கட்ட பலி கொடுக்கப்படும் என்ற உண்மை மூடி மறைக்கப்பட்டு விடுகிறது.

மொத்தத் தேசிய உற்பத்தி (GNP) என்பது எப்படி ஏமாற்றும் தன்மை (deceptive nature) கொண்டது என்பது குறித்து நானும், கிளேடினும் வெளிப்படையாகப் பேசிக் கொள்வோம். பெரும்பாலான மக்கள் வறுமையின் கோரப் பிடியில் சிக்கியிருந்தாலும், ஒரே ஒருவர் லாபமடைந்தாலும் கூட நாட்டின் மொத்தத் தேசிய உற்பத்தி வளர்ச்சியடையக்கூடும். பணக்காரர்கள் மேலும் பணக்காரராவார்கள், ஏழைகள் மேலும் ஏழைகளாவார்கள். ஆனால் புள்ளிவிவரங்கள் பொருளாதாரம் வளர்ச்சியடைந்ததாகக் காட்டும்.

எல்லா அமெரிக்கக் குடிமக்களைப் போலவே பெரும்பாலான மெய்ன் ஊழியர்களும் தங்கள் நிறுவனம் மின் உற்பத்தி நிலையங்களும், நெடுஞ்சாலைகளும் உருவாக்கும்போது நன்மைதான்

செய்கிறது என்று நம்பிக்கை கொண்டிருந்தார்கள். நமது பள்ளிகளும், செய்தி ஊடகங்களும் நமது நடவடிக்கைகள் எல்லாமே மக்களின் நன்மைக்காகத்தான் என்று எண்ண நமக்குக் கற்றுத் தந்துள்ளன. “அவர்கள் அமெரிக்கக் கொடியை எரித்து, நமது தூதரகம் முன்பு ஆர்ப்பாட்டம் செய்தால் அந்த நாசமாய்ப் போன நாட்டைவிட்டு வெளியேறி ஏன் அவர்களைப் பஞ்சத்தில் அடிபட்டு ஒழிந்து போகும்படி விட்டுவிடக் கூடாது?'' இது போன்ற விமர்சனங்களை நான் பல ஆண்டுகளாகக் கேட்டு வந்திருக்கிறேன்.

இப்படிப் பேசுபவர்களில் பலர் பட்டங்கள் பெற்றவர்கள். ஆனாலும் நாம் உலகம் முழுவதும் தூதரகங்கள் வைத்திருக்கக் காரணம் நமது சுயநலம்தான் என்பதை அறியாதவர்கள். இந்த தூதரகங்கள்தான் இருபதாம் நூற்றாண்டின் இறுதியில் அமெரிக்கக் குடியரசை உலகப் பேரரசாக மாற்றி வருகின்றன என்பதைக் கவனிக்கத் தவறியவர்கள். வெள்ளையர்களிடம் தங்கள் நிலங்களைப் பாதுகாக்கப் போரிட்ட பழங்குடி இந்தியர்களை சாத்தானின் சேவகர்கள் என்று நம்பிய, இருநூறு ஆண்டுகளுக்கு முந்தைய கல்வியறிவற்ற காலனியவாதிகளைப் போன்றவர்கள்தான் அடிப்படையில் இந்தப் படித்த கல்விமான்களும்.

கிளேடின் அறிமுகத்திற்குப் பல மாதங்களுக்குப் பின்பு உலகிலேயே மிக அதிக மக்கள் நெருக்கம் உள்ள பகுதியான ஜாவா தீவுக்கு நான் புறப்பட வேண்டியிருந்தது. இந்தோனேஷியா ஒரு எண்ணெய் வளம் மிக்க இஸ்லாமிய நாடு. கம்யூனிஸ்டுகள் தீவிரமாகச் செயல்பட்டு வந்த பகுதியும் கூட.

“வியட்நாமுக்குப் பிறகு அடுத்த விளையாட்டு அங்கேதான். இந்தோனேஷியர்களை நம் பக்கம் வென்றெடுத்தே ஆக வேண்டும். அவர்கள் மட்டும் கம்யூனிஸ்ட் உலகில் சேர்ந்து விட்டால்…'' அவள் தன் விரல்களால் கழுத்தை அறுப்பது போல் செய்து காட்டிவிட்டு இனிமையாக முறுவலித்தாள். “எல்லா புதிய மின்நிலையங்களும், வினியோக வசதிகளும் நிர்மாணிக்கப்பட்ட பிறகு இந்த நாட்டின் பொருளாதாரம் காளான் போலத் திடீரென்று வளர்ந்து விடும் என்று நம்பச் செய்யும் வகையில் நீ பொருளாதார முன்னறிவிப்புகள் செய்ய வேண்டும். இப்போதைக்கு உன் வேலை இதுதான். அந்த வகையான முன்னறிவிப்புகள் யு.எஸ்.ஏ.ஐ.டி (USAID) மற்றும் சர்வதேச வங்கிகள் தாங்கள் அளிக்கும் கடன்களை நியாயப்படுத்த உதவும். நீயும் சரியான விதத்தில் கவனிக்கப்படுவாய். இன்னும் அற்புதமான இடங்களில் நடக்கவுள்ள மற்ற திட்டங்களிலும் உனக்கு இடம் கிடைத்துவிடும். இந்த உலகமே உனக்கு ஒரு ஷாப்பிங் சென்டராகி விடும்.'' அதோடு நிறுத்திக் கொள்ளாமல் என் வேலை கடினமானதாக இருக்கும் என்று அவள் எச்சரிக்கையும் செய்தாள். “வங்கிகளின் நிபுணர்கள் உன்னைத் தேடி வருவார்கள். உன் முன்னறிவிப்புகளில் குறை காண்பதுதான்

அவர்கள் வேலை. அதற்குத்தான் அவர்களுக்குச் சம்பளம் கொடுக்கப்படுகிறது. உன்னை முட்டாளாகக் காட்டுவதன் மூலம்தான் அவர்கள் தங்கள் புத்திசாலித்தனத்தை நிலைநாட்டிக் கொள்ள முடியும்.

ஜாவாவுக்கு அனுப்பப்பட உள்ள குழுவில் இன்னும் பத்து பேர் இருக்கிறார்கள் என்பதை அவளுக்கு நினைவுபடுத்தினேன். அவர்கள் அனைவருக்கும் என்னைப் போன்றே பயிற்சி தரப்பட்டதா என்று நான் கேட்டேன். இல்லை என்று ஜினோடின் பதிலளித்தாள்.

“அவர்கள் பொறியாளர்கள். மின் நிலையங்களையும் மின் வினியோக வசதிகளையும் துறைமுகங்களையும் வடிவமைப்பவர்கள். நீ ஒருவன்தான் எதிர்காலத்தை முன்னறிவிப்பவன். உன் அறிக்கைகள் தான் அவர்கள் வடிவமைக்கும் அமைப்புகளின் பரிணாமத்தையும் கடன்களின் அளவையும் தீர்மானிக்கும். நீ தான் இந்தத் திட்டத்திற்கு அடிப்படையானவன்,’’ என்றாள் கிளேடின்.

ஒவ்வொரு முறை கிளேடினின் குடியிருப்பிலிருந்து வெளிவரும் போதும் நான் செய்வது சரிதானா என்ற திகைப்பு என்னை ஆட்கொள்ளும். சந்தேகம் என்னைக் குடைந்து கொண்டே இருக்கும். ஆனால் கடந்த காலமும், நிறைவேறாத ஆசைகளும் என்னைப் பிசாசு போல ஆட்டி வைத்தன-. என் வாழ்க்கையில் குறைகளாகயிருந்த எல்லாவற்றையும் மெய்ன் நிறைவு செய்தது. ஆனால் இதைத் தாமஸ் பெய்ன் ஒப்புக்கொள்வாரா என்று என்னை நானே கேட்டுக்கொண்டேன். முடிவில் எல்லா விஷயங்களையும் மேலும் நன்றாக அறிந்து கொள்வதன் மூலம்தான் மோசமானவற்றை அம்பலப்படுத்த முடியும் என்று என்னை நானே சமாதானப்படுத்திக் கொண்டேன். உள்ளிருந்து வேலை செய்வது என்ற சாக்குப்போக்கு மிகவும் பழையதுதான்.

கிளேடினிடம் இதைப் பற்றி பேசியபோது அவள் குழப்பத்துடன் என்னை நோக்கினாள். “முட்டாள்தனமாக உளறாதே. ஒருமுறை உள்ளே வந்துவிட்டால் வெளியே போகவே முடியாது. அதற்கு முன்பே நீ முடிவெடுத்துவிட வேண்டும்.’’ நான் புரிந்து கொண்டேன். அவள் கூறியது என்னைப் பயமுறுத்தியது என்றாலும் நான் விதிவிலக்காக இருப்பேன் என்று எனக்கு நானே உறுதி சொல்லிக் கொண்டேன்.

சில மாதங்கள் கழித்து ஒரு மதிய வேளையில் அவளும் நானும் ஜன்னலருகே உட்கார்ந்து பேகான் தெருவில் பனி பெய்து கொண்டிருப்பதைப் பார்த்துக்கொண்டிருந்தோம். “நாம் ஒரு முக்கியத்துவம் மிக்க குழுவைச் சேர்ந்தவர்கள்’’ என்று அவள் தொடங்கினாள். “உலகம் முழுவதும் சென்று ஆயிரக்கணக்கான கோடி டாலர் மோசடிகளில் ஈடுபட நமக்குச் சம்பளம் தரப்படுகிறது. நல்ல தொகையே வழங்கப்படுகிறது. உன் முதன்மையான வேலை அமெரிக்காவின் நலன்களை முன்னிறுத்தும் விரிவான

வலைப்பின்னலின் பகுதியாக மாறும்படி உலக நாடுகளின் தலைவர்களை ஊக்குவிப்பதுதான். பின்பு இந்தத் தலைவர்கள் மீளமுடியாத கடன் வலையில் மாட்டிக் கொள்வார்கள். அவர்களது விசுவாசம் உறுதிப்படுத்தப்பட்டுவிடும். பின்பு நமது அரசியல், பொருளாதார, இராணுவ நலன்களுக்காக அவர்களை நாம் பொம்மை போல ஆட்டி வைக்கலாம். பதிலாக அவர்கள் தொழில் பூங்காக்களையும், மின் நிலையங்களையும் கட்டி தங்கள் நிலையை உறுதிப்படுத்திக் கொள்வார்கள். அமெரிக்கக் கம்பெனிகள் கொள்ளை லாபம் ஈட்டிவிடும்.''

பனி பொழிந்து கொண்டிருந்த அந்த அமைதியான மதிய வேளையில்தான் நான் அடி வைக்க இருந்த தொழிலின் முழு வரலாறும் எனக்குத் தெரிய வந்தது. பேரரசுகள் எப்போதுமே இராணுவ பலத்தாலும், மிரட்டலாலுமேதான் கட்டி எழுப்பப்பட்டுள்ளன. இரண்டாம் உலகப் போரின் இறுதியில் சோவியத் யூனியன் எழுச்சி பெற்ற பின்பு அணு ஆயுதங்கள் பற்றிய பீதியால் இராணுவத் தீர்வு அபாயகரமானதாக ஆகிவிட்டது.

இதற்கு ஒரு புதிய மாற்று கண்டுபிடித்தேயாக வேண்டிய தீர்மானகரமான தருணம் 1951 - இல் தோன்றியது. அந்த ஆண்டில்தான் ஈரான் தன் இயற்கை வளங்களையும், மக்களையும் சூறையாடி வந்த ஒரு பிரிட்டிஷ் எண்ணெய் நிறுவனத்திற்கு எதிராகப் போராடத் தொடங்கியது. இந்த எண்ணெய் நிறுவனம் இன்றைய பிரிட்டிஷ் பெட்ரோலியத்தின் (BP) முன்னோடி ஆகும். ஈரானின் பிரதம மந்திரியாக இருந்தவரும், ஜனநாயகபூர்வமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவரும், மக்களிடையே புகழ் பெற்றிருந்தவருமான முகமது மொஸாடெக் பெட்ரோலியம் தொடர்பான அனைத்து நிறுவனங்களையும், அவற்றின் சொத்துக்களையும் தேசிய உடைமையாக்கிவிட்டார். அதே ஆண்டில் 'டைம்' பத்திரிகை அவரை அந்த ஆண்டின் சிறந்த மனிதராகத் தேர்ந்தெடுத்தது. கடுங்கோபம் கொண்ட இங்கிலாந்து தனது உலகப்போர்க் காலக் கூட்டாளியான அமெரிக்காவின் உதவியை நாடியது. இரண்டு நாடுகளும் நேரடியாக இராணுவ நடவடிக்கைகளில் இறங்குவதென்பது சோவியத் யூனியனின் தலையீட்டுக்கு வழிவகுக்கும் என்று அஞ்சின. எனவே அமெரிக்கா, போர்வீரர்களுக்குப் பதிலாக சி.ஐ.ஏ. உளவாளியான கெர்மிட் ரூஸ்வெல்ட்டை அனுப்பி வைத்தது. இவர் முன்னாள் அமெரிக்க ஜனாதிபதியான தியோடர் ரூஸ்வெல்ட்டின் பேரனாவார். அவர் தன் பணியில் அசாத்தியமான திறமையை வெளிப்படுத்தினார். பணம் கொடுத்தும் மிரட்டல் விடுத்தும் ஆட்களைத் தன் பக்கம் வென்றெடுத்தார். பின்பு- அவர்களைக் கொண்டு தொடர்ச்சியாக தெருச்சண்டைகளையும், ஆர்ப்பாட்டங்களையும், வன்முறையையும் கட்டவிழ்த்துவிட்டார். இவை மொஸாடெக் மக்களால் வெறுக்கப்படுகிறவர், திறமையற்றவர் என்ற தோற்றத்தை ஏற்படுத்தின.

முடிவில் மொஸாடெக் பதவியிறக்கப்பட்டு வாழ்நாள் முழுவதும் வீட்டுச் சிறையில் அடைத்து வைக்கப்பட்டார். ஈரான், அமெரிக்க ஆதரவாளரும் கேள்வி கேட்பாரற்ற சர்வாதிகாரியுமான முகமது ரேஸாஷாவின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. கெர்மிட் ரூஸ்வெல்ட்டால் முற்றிலும் புதிய வகையைச் சேர்ந்த ஒரு நடைமுறைக்கு அரங்கு அமைக்கப்பட்டுவிட்டது. அதில்தான் நான் இப்போது இணைந்து கொண்டிருந்தேன்.[1]

கெர்மிட் ரூஸ்வெல்ட்டின் செயல்பாடுகள் பழைய பேரரசுத் தந்திரங்கள் அனைத்தையும் முக்கியத்துவமிழக்கச் செய்துவிட்டதோடு, மத்தியக் கிழக்கின் வரலாற்றையும் மாற்றியமைத்தன. இதே நேரத்தில் தான் அமெரிக்கா, கொரியாவிலும், வியட்நாமிலும் 'வரம்புக்குட்பட்ட அணு ஆயுதமற்ற இராணுவ நடவடிக்கைகளையும்' பரீட்சித்துப் பார்க்கத் தொடங்கியிருந்தது. இந்த இராணுவ நடவடிக்கைகள் பின்பு அமெரிக்காவுக்கு அவமானகரமான தோல்வியைத் தேடித் தந்தன. 1968 வாக்கில், அமெரிக்கா தனது உலகப் பேரரசுக் கனவை நனவாக்க விரும்பினால் அது கெர்மிட் ரூஸ்வெல்ட்டின் ஈரானிய உதாரணத்தைத்தான் நடைமுறைப்படுத்த வேண்டும் என்பது தெளிவாகிவிட்டது. இதுதான் அணு ஆயுதப் போர் என்ற ஆபத்தில்லாமல் சோவியத்துகளைத் தோற்கடிப்பதற்கான ஒரே வழி.

இருந்தபோதிலும் இதில் ஒரு பிரச்சனையும் இருந்தது. கெர்மிட் ஒரு சி.ஐ.ஏ. அதிகாரி. அவர் பிடிபட்டிருந்தால் விளைவுகள் மோசமானவையாக இருந்திருக்கும். ஒரு வெளிநாட்டு அரசைக் கவிழ்க்கும் நடவடிக்கையை ஒருங்கிணைத்து நடத்தியவர் அவர். இந்த வகையான நடவடிக்கைகளிலேயே இதுதான் முதலாவது என்றாலும் இதே வகையான நடவடிக்கைகளில் தொடர்ந்து ஈடுபட வேண்டிய கட்டாயமும் இருந்து வந்தது. எனவே நேரடியாக வாஷிங்டனைத் தொடர்புபடுத்தாத ஓர் அணுகுமுறையைக் கண்டுபிடிப்பது அவசியமாகிவிட்டது.

1960-களில் நடந்த இன்னொரு வகையான புரட்சி அமெரிக்க இராஜ தந்திரிகளுக்கு வரப்பிரசாதமாக அமைந்துவிட்டது. பன்னாட்டு நிறுவனங்களும், உலக வங்கியும், பன்னாட்டு நிதி நிறுவனங்களும் பெரும் வலிமை பெற்றன. பிந்தியவை இரண்டிற்குமான நிதி அமெரிக்காவாலும் பேரரசு உருவாக்கத்தில் ஈடுபட்டுள்ள நமது கூட்டாளிகளாலும் வழங்கப்பட்டது. அரசாங்கங்களுக்கும், நிறுவனங்களுக்கும், பன்னாட்டு அமைப்புகளுக்கும் இடையேயான உறவு பெரும் வளர்ச்சியடைந்தது.

நான் பாஸ்டன் பல்கலைக்கழகத்தில் வணிகப் பள்ளியில் சேர்ந்த நாளிலேயே இந்த கெர்மிட் ரூஸ்வெல்ட் பிரச்சனைக்குத் தீர்வு காணப்பட்டுவிட்டது. அமெரிக்க உளவு நிறுவனங்கள், என்.எஸ்.ஏ போன்றவை பொருளாதார அடியாட்களை அடையாளம் காண்பார்கள்.

பின்பு இப்படி உளவு- நிறுவனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களைப் பன்னாட்டு நிறுவனங்கள் பணிக்கமர்த்திக் கொள்ளும். இந்தப் பொருளாதார அடியாட்கள் ஒருபோதும் அரசிடமிருந்து சம்பளம் பெறுவதில்லை. தனியார் நிறுவனங்களே அவர்களுக்கு ஊதியம் வழங்குகின்றன. இதனால் பொருளாதார அடியாட்களின் சதிவேலைகள் வெளிப்பட்டுவிட்டால் அவற்றுக்குக் காரணம் தனியார் நிறுவனத்தின் பேராசைதான், அரசுக்கும் அதற்கும் தொடர்பில்லை என்று கூறப்பட்டு அத்தோடு முடித்துக் கொள்ளப்பட்டு விடும். அத்துடன் இந்த அடியாட்களைப் பணிக்கமர்த்தும் தனியார் நிறுவனங்களுக்கு அரசின் உளவு நிறுவனங்களிலிருந்தும், பன்னாட்டு வங்கிகளிடமிருந்தும் பணம் வழங்கப்பட்டாலும் (வரி செலுத்துவோரின் பணம்தான்) நாடாளுமன்றத்தின் கண்காணிப்பு, பொது மக்களின் பார்வை (Public scrutiny) தகவல் அறியும் உரிமைச் சட்டங்கள் ஆகியவற்றிலிருந்து இந்தத் தனியார் நிறுவனங்கள் தப்பி விடுகின்றன. வணிக முத்திரை, சர்வதேச வாணிபம் உள்ளிட்டச் சட்டப் பாதுகாப்புகளும் இந்நிறுவனங்களுக்குக் கிடைக்கின்றன.[2]

எனவே கிளேடின் இப்படி முடித்தாள். “நீ முதல் வகுப்பு படிக்கும்போது தொடங்கிய இந்தப் பெருமை மிகுந்த பாரம்பரியத்தின் அடுத்த தலைமுறைதான் நாம்.’’

[1] இந்தத் தோல்வியடைந்த தாக்குதலைப் பற்றிய முழுமையான விவரங்களுக்கு see Stephen Kinzer, All the Shah’s Men: An American Coup and the Roots of Middle East Terror (Hoboken, NJ:John Wiley & Sons, Inc., 2003).

[2] Jane Mayer, “”Contract Sport: What Did the Vice-President Do for Halliburton?,’’ New Yorker, February 16 & 23, 2004, p.83.

# 3

# இந்தோனேஷியா:

## பொருளாதார அடியாளுக்கான கையேடு

நான் பயிற்சி பெற்று வந்த அதே நேரத்தில் இந்தோனேஷியா பற்றிப் படிப்பதற்கும் நேரம் ஒதுக்கி வந்தேன். "ஒரு நாட்டுக்குப் போகும் முன் அந்த நாட்டைப் பற்றி எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகத் தெரிந்து கொள்கிறாயோ அந்த அளவுக்கு வேலை எளிதாக இருக்கும்''. கிளேடின் எனக்கு வழங்கிய அறிவுரை இது. நான் அதை மனதார ஏற்றுக் கொண்டிருந்தேன்.

1492 - இல் கொலம்பஸ் தன் கடல் பயணத்தைத் தொடங்கியபோது மசாலாத் தீவுகள் என்று அக்காலத்தில் அழைக்கப்பட்ட இந்தோனேஷியாவை அடைவதையே நோக்கமாகக் கொண்டிருந்தார். காலனியாதிக்கக் காலம் முழுவதும் அமெரிக்காவை விட இந்தோனேஷியாவே மிகப்பெரிய பொக்கிஷமாகக் கருதப்பட்டு வந்தது. ஜாவா உயர்தரமான ஆடைகள், புகழ் பெற்ற வாசனைப் பொருட்கள், செல்வம் கொழிக்கும் அரசுகள் ஆகியவற்றிற்கு இருப்பிடமாக இருந்தது. அது காலனியாதிக்கத்தின் மணிமுடியை அலங்கரிக்கும் இரத்தினமாகக் கருதப்பட்டதோடு ஸ்பெயின், ஹாலந்து, போர்ச்சுகல் மற்றும் பிரிட்டிஷ் காலனியாதிக்கவாதிகளுக்கு இடையே உக்கிரமான மோதல்கள் நடக்கக் காரணமாகவும் இருந்தது. 1850 - களில் இந்தப் போராட்டங்களில் டச்சுக்காரர்கள் வெற்றி கண்டு ஜாவாவைத் தங்கள் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்தனர். ஆனாலும் மற்ற தீவுகளை அடக்கி ஒடுக்க அவர்களுக்கு மேலும் நீண்ட காலம் பிடித்தது.

இரண்டாம் உலகப் போரில் ஜப்பான் இந்தோனேஷியாவைத் தாக்கியபோது டச்சு இராணுவம் மிகப் பலவீனமான எதிர்ப்பையே காட்டியது. இந்தோனேஷியர்கள் குறிப்பாக ஜாவா மக்கள் சொல்ல முடியாத துயரங்களுக்கு ஆளாயினர். ஜப்பான் சரணடைந்ததையடுத்து புகழ்பெற்ற தலைவராக உருவெடுத்திருந்த சுகர்னோ இந்தோனேஷியாவின் சுதந்திரத்தைப் பிரகடனம் செய்தார். இந்நாட்டின் மேல் திரும்பவும் உரிமை கொண்டாடிய டச்சு நாடு (ஹாலந்து) நான்காண்டு காலப் போருக்குப் பின்பு 1949 டிசம்பர் 27 - இல் தன் கொடியை இறக்கியது. மூன்று நூற்றாண்டு காலமாக அடக்குமுறையையும் போர்களையும் தவிர வேறெதையும் அறிந்திராத மக்களிடம் நாட்டை ஒப்படைத்துவிட்டு டச்சுக்காரர்கள் வெளியேறினர். சுகர்னோ புதிய குடியரசின் அதிபர் ஆனார்.

டச்சுக்காரர்களை முறியடிப்பதைவிட இந்தோனேஷியாவை ஆள்வதுதான் அவருக்குப் பெரிய சவாலாக இருந்தது. 17,500 தீவுகளைக் கொண்டிருந்த இந்த நாடு பழங்குடிவாதம், மாறுபட்ட கலாசாரங்கள், டஜன் கணக்கான மொழிகள், காலங்காலமாக பகைமை பூண்ட இனக் குழுக்கள் போன்றவற்றால் கொந்தளித்துக் கொண்டிருந்தது. முரண்பாடுகள் அடிக்கடி குரூரமாக வெளிப்பட்டாலும் சுகர்னோ அவற்றை அடக்கி ஒடுக்குவதில் வெற்றி கண்டார். அவர் 1960 - இல் பாராளுமன்றத்தை முடக்கி வைத்ததோடு 1963 - இல் தன்னை ஆயுட்கால ஜனாதிபதியாக அறிவித்துக் கொண்டார். அதோடு இராணுவத் தளவாடங்கள் மற்றும் பயிற்சிக்காக உலகம் முழுவதுமுள்ள பொதுவுடைமை அரசுகளோடு நெருக்கமான உறவையும் ஏற்படுத்திக் கொண்டார். தென்கிழக்கு ஆசியா முழுவதும் கம்யூனிஸத்தைப் பரப்பும் முயற்சியாகவும், உலக சோஷலிச நாடுகளின் தலைவர்களின் அங்கீகாரத்தைப் பெற வேண்டியும் ரஷ்ய ஆயுதங்கள் தாங்கிய இந்தோனேஷியப் படைகள் சுகர்னோவால் மலேசியாவுக்கு அனுப்பப்பட்டன.

சுகர்னோவுக்கு எதிர்ப்பாளர்கள் உருவெடுத்தனர். 1965 - இல் ஓர் ஆட்சிக் கவிழ்ப்பு முயற்சி வெற்றிகரமாக நடந்தேறியது. சுகர்னோ தனது ஆசை நாயகியின் சமயோசித அறிவால் படுகொலை செய்யப்படாமல் தப்பினார். ஆனால், அவரது நண்பர்கள் மற்றும் உயரதிகாரிகளுக்கு இந்த அதிர்ஷ்டம் கிடைக்கவில்லை. 1953 - இல் ஈரானில் நடந்தவையெல்லாம் அப்படியே திரும்ப இந்தோனேஷியாவில் நிகழ்த்தப்பட்டன. இந்த ஆட்சிக் கவிழ்ப்புக்கும், படுகொலைகளுக்கும் கம்யூனிஸ்ட் கட்சியே - குறிப்பாகச் சீனாவுடன் தொடர்பு கொண்டிருந்த குழுக்களே - பொறுப்பாக்கப்பட்டன.

இராணுவம் நடத்திய படுகொலைகளில் மூன்று இலட்சத்திலிருந்து ஐந்து இலட்சம் பேர் வரை உயிரிழந்திருக்கலாம் என்று ஒரு மதிப்பீடு கூறுகிறது. 1968 - இல் தளபதி சுகார்ட்டோ ஜனாதிபதியாகப் பதவியேற்றுக் கொண்டார். 1971 - இல் வியட்நாம் போரின் போக்கு மிகவும் நிச்சயமற்றதாகத் தோன்றியதால் இந்தோனேஷியாவை கம்யூனிசத்தின் பிடியிலிருந்து வென்றெடுத்தேயாக வேண்டுமென்ற அமெரிக்காவின் தீர்மானம் உறுதிப்பட்டது.

1969- இல் வேனிற் காலத்தில் ஜனாதிபதி நிக்ஸன் வியட்நாமிலிருந்து தொடர்ச்சியாகத் துருப்புகளைத் திரும்பப் பெறத் தொடங்கினார். அமெரிக்காவின் போர்த்தந்திரம் மேலும் உலகம் தழுவிய பார்வையைக் கொண்டதாக மாறியது. இந்தப் புதிய போர்த்தந்திரம் ஒன்றன்பின் ஒன்றாக நாடுகள் கம்யூனிசத்தின் பிடிக்குள் செல்வதைத் தடுப்பதையே பிரதான நோக்கமாகக் கொண்டிருந்தது. இரண்டு நாடுகள் இதன் மையங்களாக இருந்தன. ஒன்று இந்தோனேஷியா.[1] மற்றொன்று ஈரான், இருப்பினும்

இந்தோனேஷியாவே அதற்கு அடித்தளமாகக் கருதப்பட்டது. மெய்ன் நிறுவனம் உருவாக்க இருக்கும் மின்சாரமயமாக்கும் திட்டம் தென்கிழக்காசியாவில் அமெரிக்க ஆதிக்கத்தை நிலைநாட்டும் விரிவான திட்டத்தின் ஒரு பகுதியாகும்.

அமெரிக்காவின் வெளியுறவுக் கொள்கையின் அடிப்படை அம்சம் ஈரானின் ஷாவைப் போலவே சுகார்த்தோவையும் அமெரிக்க நலன்களின் காவலாக்கி விட வேண்டும் என்பதாகும். இப்பிரதேசத்தில் உள்ள மற்ற நாடுகளுக்கு இந்தோனேஷியாவை ஒரு உதாரணமாக ஆக்கிவிடுவதென்று அமெரிக்கா உறுதி கொண்டிருந்தது. இந்தோனேஷியாவில் எட்டப்படும் முன்னேற்றங்கள் இஸ்லாமிய உலகம் முழுவதும், முக்கியமாகப் பற்றி எரிந்து கொண்டிருக்கும் மத்தியக் கிழக்கில் சாதகமான விளைவுகளை ஏற்படுத்தும் என்று வாஷிங்டன் கொண்டிருந்த நம்பிக்கையின் அடிப்படையிலே இந்த யுக்தி வகுக்கப்பட்டிருந்தது. போதாக்குறைக்கு அங்கே எண்ணெய் வேறு கண்டுபிடிக்கப்பட்டிருந்தது. எண்ணெய் வளத்தின் முழுப்பரிணாமமும் யாருக்கும் திட்டவட்டமாகத் தெரியாது என்றாலும் எண்ணெய் நிறுவனங்களின் புவியியலாளர்கள் (Seismologist) மிகுந்த உற்சாகத்துடன் இருந்தார்கள்.

பாஸ்டன் நூலகத்திலிருந்த புத்தகங்கள் என் கற்பனைகளை இறக்கை கட்டிக்கொண்டு பறக்கச் செய்தன. கடுமையானதாகவும் வறட்சி மிக்கதாகவும் இருந்த அமைதிப்படை வாழ்க்கை முறையோடு ஒப்பிடும்போது மெய்ன் கவர்ச்சிகரமாகவும் இனிமையானதாகவும் தோன்றியது. கிளேடினுடன் கழித்த நாட்கள் ஏற்கனவே என் கனவுகள் நனவாகத் தொடங்கிவிட்டதைக் காட்டின. நம்ப முடியாத அளவிற்கு இன்பமயமானதாகத் தோன்றிய இந்த வாழ்க்கை ஆண்கள் பள்ளியில் படித்த தண்டனைக் காலத்திற்கு இழப்பீடு போல் தோன்றியது.

என் வாழ்க்கையில் இன்னொரு விஷயமும் இதே நேரத்தில் நடந்தது. எனக்கும் ஆனுக்கும் இடையே பிரச்சனைகள் தோன்றின. ஒருவேளை நான் இரட்டை வாழ்க்கை வாழ்வதை ஆன் உணர்ந்திருக்கலாம் என்று தோன்றியது. திருமணத்தை அவள் அவ்வளவு தூரம் வற்புறுத்தியதனால் தோன்றிய கசப்பின் இயல்பான விளைவே இந்தப் பிரச்சனைகள் என்று என்னை நானே நியாயப்படுத்திக் கொண்டேன். ஈக்வெடாரில் நான் கடுமையான சவால்களைச் சந்தித்த நேரத்தில் அவள் எவ்வளவு தூரம் உறுதுணையாக இருந்தாள், என் வளர்ச்சிக்கு ஆதாரமாக இருந்தாள் என்பதையெல்லாம் நான் பொருட்படுத்தவே இல்லை. என் பெற்றோரின் விருப்பங்களுக்கு எப்பொழுதும் விட்டுக் கொடுக்கும் என் இயல்பின் தொடர்ச்சியே ஆனுடன் நடந்த திருமணம் என்றே எப்போதும் கருதி வந்தேன். இப்போது நினைத்துப் பார்க்கும்போது கிளேடினுடன் ஏற்பட்ட உறவே இந்தப் பிளவுக்குக் காரணம் என்று

தோன்றுகிறது. ஆனுடன் இதைப் பற்றியெல்லாம் என்னால் வெளிப்படையாகப் பேச முடியாவிட்டாலும் அவள் ஏதோ ஒருவகையில் உணர்ந்து கொள்ளவே செய்தாள். எது எப்படியிருந்தாலும் நாங்கள் பிரிந்து தனித்தனி வீடுகளுக்குச் செல்ல முடிவு செய்தோம்.

1971-ல் இந்தோனேஷியா பு-றப்படுவதற்குச் சுமார் ஒரு வாரம் முன்பு கிளேடின் வீட்டுக்குச் சென்றேன். உணவு மேசையில் பாலாடைக் கட்டிகளும், ரொட்டிகளும் குவித்து வைக்கப்பட்டிருந்தன. பெஜோயல் மதுவும் இருந்தது. நாங்கள் மது அருந்தினோம்.

“நீ சாதித்து விட்டாய்’’ அவள் முறுவலித்தாள். ஏனோ அது மனப்பூர்வமானதாகத் தோன்றவில்லை. “நீ இப்போது எங்களில் ஒருவன்.’’

அரைமணி நேரம் சாதாரணமாகப் பேசிக் கொண்டிருந்தோம். ஒயினை முடிக்கும் நேரத்தில் நான் முன் எப்போதும் கண்டிராத வகையில் அவள் என்னை வித்தியாசமாக உற்று நோக்கினாள்.

“நம் சந்திப்புகள் குறித்து எப்போதும் எவரிடமும் பேசக் கூடாது’’ அவள் குரலில் கண்டிப்பு இருந்தது. “மீறினால் நான் உன்னை மன்னிக்கவே மாட்டேன். உன்னைத் தெரியவே தெரியாது என்று கை கழுவிவிடுவேன்.’’ முதன்முதலாக அவள் பார்வையில் ஒரு அச்சுறுத்தும் தொனி இருந்ததை உணர்ந்தேன். பின்பு அவள் இதழ்களில் ஒரு வெறுமையான முறுவல் தோன்றியது. “நம்மைப் பற்றி பேசுவது உனக்கு ஆபத்தாக முடியலாம்.’’

[1] இந்தோனேஷியா மற்றும் அதன் வரலாறு குறித்துப் பார்க்க: Jean Gelman Taylor, Indonesia: Peoples and Histories (New Haven and London: Yale University Press, 2003); and Theodore Friend, Indonesian Destinies (Cambridge MA and London: The Belknap Press o Harvard University, 2003).

# 4

# கம்யூனிச அபாயத்திலிருந்து ஒரு நாட்டைக் காப்பதற்காக…

இந்தோனேஷியாவில் நான் மூன்று மாதங்கள் தங்கியிருக்க வேண்டியிருந்தது. இந்த நாடு குறித்த வசீகரமான கற்பனைகள் என் சிந்தனை முழுவதையும் ஆக்கிரமித்திருந்தன. நான் படித்த புத்தகங்கள் பளிச்சிடும் பட்டாடை அணிந்த (Sarong) அழகிய பெண்களையும் வசீகரமான பாலி நாட்டியக்காரர்களையும், தீ கக்கும் மந்திரவாதிகளையும், புகைந்து கொண்டிருக்கும் எரிமலைகளின் கீழ் விரிந்து பரந்திருந்த பச்சைப்பசேலென்ற நீர் நிலைகளில் குறுகிய படகுகளை வலித்துச் செல்லும் பழங்காலப் போர்வீரர்களையும் என் கற்பனையில் உலவ விட்டன. இவையனைத்திலும் என் கவனத்தை மிகவும் கவர்ந்தவை கம்பீரமான, கருப்புப் பாய்மரங்களைக் கொண்ட பூகி கடல் கொள்ளைக்காரர்களின் பெரும் கப்பல்கள் இடம் பெற்றிருந்த படங்கள் தான். அவர்கள் இத் தீவுக் கூட்டத்தின் கடல்களில் இன்னமும் பயணித்து வந்தார்கள். ஐரோப்பிய மாலுமிகள் தங்கள் குழந்தைகளை பூகிமான் பிடித்துக் கொள்வான் என்று பயமுறுத்தும் அளவிற்கு இந்த பூகி கடல் கொள்ளைக்காரர்கள் பீதியூட்டியிருந்தார்கள். ஓ! இந்தப் படங்கள் விவரிக்கவே முடியாத அளவிற்கு என் ஆன்மாவைக் கிளர்ந்தெழச் செய்தன.

இந்தோனேஷியாவின் வரலாறும் வீர காவியங்களும் மகத்தானவை. கோபம் கொண்ட கடவுள்களும், கொமாடோ டிராகன்களும், பழங்குடி சுல்தான்களும் அவற்றில் தாராளமாக நடமாடினார்கள். இந்தோனேஷியாவின் பழங்கதைகளில் ஏசு பிறப்பதற்குப் பல காலம் முன்பே ஆசிய மலைகளையும், பாரசீகப் பாலைவனங்களையும் கடந்து நமது கூட்டு உளவியலின் (collectine psyche) அடியாழத்தில் இடம் பிடித்துக் கொண்டவை. ஜாவா, சுமத்திரா, போர்னியோ, சுலாவேசி… இந்தப் பழந்தீவுகளின் பெயர்கள் மட்டுமே ஒருவனின் மனதை மயக்கிவிடப் போதுமானவை. மாயாவாதம், மாயைகள், மற்றும் மனதைக் கொள்ளை கொள்ளும் பேரெழிலின் பிறப்பிடம் இந்நாடு. கொலம்பஸ் முயன்றும் கிட்டாத பொக்கிஷம். ஸ்பெயினாலும், ஹாலந்தாலும், போர்ச்சுகல்லாலும், ஜப்பானாலும் காதலிக்கப்பட்டாலும் யாராலும் அடைய முடியாத இளவரசி. ஒரு கவித்துவமான கனவு போன்றது இந்த நாடு.

பெரும் கண்டுபிடிப்பாளர்களைப் போலவே எனது எதிர்பார்ப்புகளும் மிக அதிகமாக இருந்தன. உண்மை எப்போதும்

அடிக்கடி நாம் காணும் கனவு போல இருந்துவிடுவதில்லை என்று நினைத்துக் கொண்டு என் கற்பனைகளுக்குக் கடிவாளம் போட முயன்றேன். இந்தோனேஷியா பொக்கிஷங்களைக் கொண்டதுதான், ஆனால் நான் எதிர்பார்த்தது போல அது ஒன்றும் சர்வரோக நிவாரணி அல்ல என்பதை விரைவிலேயே தெரிந்துகொள்ள இருந்தேன். உண்மையில் புகைப்படலங்களால் போர்வை போலப் போர்த்தப்பட்டிருந்த இந்நாட்டின் தலைநகரான ஜகார்த்தா முதலில் எனக்கு அதிர்ச்சியையே அளித்தது.

1971-ஆம் ஆண்டின் கோடை எழிலுடன் ஒளிரத்தான் செய்தது. அழகிய பெண்கள் வெண்மையான பட்டாடை அணிந்து நடமாடினார்கள். பச்சைப் பசேலென்ற பூங்காக்களில் வெப்ப மண்டலப் பிரதேச மலர்கள் நறுமணம் வீசின. இருக்கைகளில் வானவில் போல வண்ணங்கள் தீட்டப்பட்டிருந்த ரிக்ஷாக்களும், டச்சுக்காரர்களால் கட்டப்பட்ட மாளிகைகளும், சிறு கோபுரங்களைக் கொண்ட மசூதிகளும் அழகாகத்தான் தோன்றின. ஆனால் இதே நகரத்துக்கு ஒரு அழுக்கான துன்பமயமான மறுபக்கமும் இருந்தது. தொழு நோயாளிகளின் கைகள் சதைப் பிண்டங்களாகக் காட்சியளித்தன. இளம்பெண்கள் ஒரு சில காசுகளுக்காக வேண்டி உடலை விற்கத் தயாராக இருந்தார்கள். ஒரு காலத்தில் அற்புதமான நேர்த்தியுடனிருந்த டச்சுக் கால்வாய்கள், இப்போது சாக்கடைகளாக மாறித் துர்நாற்றம் வீசிக் கொண்டிருந்தன. கருப்பாக மாறிப் போயிருந்த ஆறுகளின் கரைகளில் வரிசை வரிசையாகக் குப்பைக் கொட்டப்பட்டிருந்தன. அங்கே குப்பைக்கு நடுவே ஏராளமான மக்கள் குடும்பம் குடும்பமாக கார்டுபோர்டு குடிசைகளில் குடியிருந்து வந்தனர். வாகனங்களின் ஹாரன்கள் காதைச் செவிடாக்கின. புகைமண்டலங்கள் மூச்சுத் திணற வைத்தன.

அழகும், அசிங்கமும், கம்பீரமும், ஆபாசமும், ஆன்மிகமும் அபச்சாரமும் பின்னிப் பிணைந்து, கிராம்பு மற்றும் ஆர்கிட் மலர்களின் புத்துணர்வூட்டும் நறுமணம் திறந்து கிடக்கும் சாக்கடைகளிலிருந்து கிளம்பும் துர்நாற்றத்தை வெல்லப் போராடிக் கொண்டிருக்கும் நகரம்தான் ஜகார்த்தா!

இதற்கு முன்பும் வறுமையை நான் பார்த்துத்தான் இருந்தேன். நியூ ஹார்ம்ஷயரில் என்னுடன் படித்த மாணவர்கள் சிலர் தார் பேப்பர் (tarpaper) வேய்ந்த குடிசைகளில் வாழ்க்கை நடத்தி வந்தனர். சைபர் டிகிரிக்கும் குறைவான வெப்பநிலை நிலவும் குளிர்காலத்தில்கூட அவர்கள் மெல்லிய சட்டைகளும் தேய்ந்துபோன காலணிகளும் அணிந்து பள்ளிக்கு வருவார்கள். குளியலே காணாத அவர்கள் உடல்களிலிருந்து வியர்வையும், புழுதியும் கலந்த நாற்றம் வீசும். அதே ஆண்டில் விவசாயிகளின் மண் குடிசைகளிலும் நான் வாழ்ந்திருக்கிறேன். உலர்ந்த மக்காச்சோளமும் உருளைக்கிழங்கும்

மட்டுமே அவர்கள் உணவு. குழந்தைகள் பிறந்தநாள் காண்பது போலவே இறந்து போவதும் சர்வசாதாரணம். வறுமை எனக்குப் பழக்கமானதுதான். ஆனால் இதற்கு முன் நான் பார்த்தவை அனைத்தையும் ஜகார்த்தா ஒன்றுமில்லாதவையாக ஆக்கிவிட்டது.

ஜகார்த்தா எப்படியிருந்தாலும் எங்கள் குழு நாட்டிலேயே அற்புதமான ஹோட்டலான இன்டர்காண்டினெட்டல் இந்தோனேஷியாவில் தங்க வைக்கப்பட்டது. பான் அமெரிக்கன் ஏர்வேஸ் - க்குச் சொந்தமான இந்த விடுதி செல்வச் செழிப்பு மிக்க வெளிநாட்டவர்களின், முக்கியமாக எண்ணெய் நிர்வாகிகளின் எதிர்பார்ப்புக்கு ஏற்ற விதத்தில் அமைக்கப்பட்டிருந்தது.

முதல் நாள் மாலையில் எங்கள் திட்ட மேலாளரான சார்லி இல்லிங் வொர்த் ஹோட்டலின் மேல் மாடியில் அமைந்திருந்த நேர்த்தியான உணவகத்தில் எங்களுக்கு விருந்தளித்தார். சார்லி ஒரு போர்க்கலை நிபுணர். தன் ஓய்வு நேரம் முழுவதையு-ம் வரலாற்று நூல்களையும் வரலாற்று நவீனங்களையும் படிப்பதில் செலவிட்டு வந்தார். வியட்நாம் போரை ஆதரிக்கும் சாய்வு நாற்காலிப் போர்வீரர்களின் மொத்த உருவம்தான் இந்தச் சார்லி. அன்றைய தினமும் அவர் தன் வழக்கம் போல இராணுவ பாணியில் உடை அணிந்திருந்தார்.

எங்களை வரவேற்று உட்கார வைத்த பிறகு அவர் ஒரு சிகரெட் பற்ற வைத்துக்கொண்டார். பின்பு ஆழ்ந்து புகையை இழுத்துவிட்டபடி ஷாம்பெய்ன் கோப்பையை உயர்த்தினார் “நல்வாழ்வுக்காக’’.

நாங்கள் அவருடன் இணைந்து கொண்டோம். எங்கள் கோப்பைகள் ‘கிணிங்’ என்று மோதிக் கொண்டன.

படலம் படலமாக எழுந்த சிகரெட் புகையினூடே சார்லி அறையைச் சுற்றிப் பார்வையை ஓட்டினார். “நம்மை இங்கே நன்றாக கவனித்துக் கொள்வார்கள். இந்தோனேஷியர்கள் நம் விஷயத்தில் ரொம்பவும் அக்கறையுள்ளவர்கள். அமெரிக்கத் தூதரகத்தில் உள்ளவர்களும் அப்படித்தான். ஆனாலும் நம் வேலையை நாம் மறந்துவிடக்கூடாது.’’ திருப்தியுடன் தலையசைத்துக்கொண்டே கைநிறைய வைத்திருந்த குறிப்பு அட்டைகளைப் பார்த்துக் கொண்டார். “ஜாவாவை, உலகிலேயே மக்கள் அடர்த்தி மிகுந்த இந்தத் தீவை மின்சாரமயமாக்கப் போகிற ஒரு பெரும் திட்டத்தை உருவாக்குவதற்காகவே நாம் இங்கே வந்திருக்கிறோம். ஆனால் அந்தத் திட்டம் ஒரு தொடக்கம் மாத்திரம் தான். உண்மையில் ஒரு பெரும் பனிப்பாளத்தின் நுனிதான் இந்தத் திட்டம்.’’

திடீரென்று அவர் முகம் மிகவும் தீவிரத்தன்மை கொண்டது. அது எனக்கு சார்லியின் கதாநாயகர்களில் ஒருவரான ஜெனரல் பாட்டன் கதாபாத்திரத்தில் சீஸ்காட் நடிப்பதை நினைவுபடுத்தியது. “கம்யூனிசத்தின் பிடியிலிருந்து இந்த நாட்டைக் காப்பாற்றுவதற்காகத்

தான் நாம் இங்கே வந்திருக்கிறோம். அது உங்களுக்கே தெரியும். இந்தோனேஷியாவின் நீண்ட வரலாறு சோகமானது. இப்பொழுது அதற்கு இன்னொரு சோதனை வந்துள்ளது. இந்த நாடு இதற்கு வடக்கேயுள்ள அண்டை நாடுகளான வியட்நாம், கம்போடியா, லாவோஸைப் பின்பற்றாமல் பார்த்துக்கொள்வது நமது பொறுப்பாகும். ஒ ரு ஒருங்கிணைக்கப்பட்ட மின்சாரத் திட்டமே நம் நோக்கத்தை சாத்தியமாக்கும். வேறெதையும்விட இதுவே முதலாளித்துவம் மற்றும் ஜனநாயகத்தின் வெற்றியை உறுதிப்படுத்தும்.''

“எண்ணெயைப் பற்றிச் சொல்ல வேண்டுமானால்...'' அவர் இன்னொரு முறை சிகரெட் புகையை இழுத்து விட்டுவிட்டு ஒன்றிரண்டு குறிப்பு அட்டைகளைப் பார்த்துக் கொண்டார். “நமது சொந்த நாடு எந்த அளவுக்கு எண்ணெயைச் சார்ந்துள்ளது என்பது நம் எல்லோருக்கும் தெரியும். இந்த விஷயத்தில் இந்தோனேஷியா நமக்கு ஒரு நல்ல கூட்டாளியாக இருக்க முடியும். எனவே இந்த மின்மயமாக்கும் திட்டத்திற்கு வடிவம் கொடுக்கும்போது எண்ணெய்த் தொழிற்துறை மற்றும் அதற்கு உதவக்கூடிய துறைமுகங்கள், குழாய், தொடர்கள், கட்டுமான நிறுவனங்கள் அனைத்திற்கும் அடுத்து வரும் 25 ஆண்டு காலத்திற்குத் தடையின்றி மின்சாரம் கிடைக்க வேண்டும் என்பதைக் கவனத்தில் கொள்ளுங்கள். அதை உறுதி செய்ய சாத்தியமான அனைத்தையும் செயல்படுத்துங்கள்.''

பின்பு அவர் நேராக என்னைப் பார்த்தார். “(இந்தத் திட்டத்தால் ஏற்படப் போகும் பொருளாதார வளர்ச்சியை) குறைத்து மதிப்பிடுவதைவிட அதிகமாக மதிப்பிடுவது நல்லது. உங்களுடைய கைகளில் இந்தோனேஷியக் குழந்தைகளின் இரத்தமோ, நம்முடைய குழந்தைகளின் இரத்தமோ படிவதை நீங்கள் விரும்பவில்லை அல்லவா? அரிவாள் சுத்தியல் சின்னத்தின் கீழ், செங்கொடியின் கீழ் அவர்கள் வாழ்வதை நீங்கள் விரும்பமாட்டீர்கள்தானே?''

அன்றிரவு நகரத்தின் மற்ற கட்டடங்களைவிட உயர்ந்து நின்ற ஹோட்டலின் முதல் வகுப்பு அறையில் சுகமான படுக்கையில் கிடந்த போது என் மனதில் கிளேடினின் உருவம் தோன்றியது. வெளிநாட்டுக் கடன்கள் பற்றி அவளுடன் நான் நடத்திய உரையாடல்கள் நினைவுக்கு வந்து என்னை வதைத்தன. வணிகப்பள்ளியில் படித்த பாடங்களை நினைவுபடுத்திக் கொண்டு என்னை அமைதிப்படுத்திக் கொள்ள முயன்றேன். இந்தோனேஷியா தனது மத்திய காலத்தைச் சேர்ந்த பின்தங்கிய பொருளாதார நிலையிலிருந்து மீண்டு நவீனத் தொழில் மயமான நாடாக மாற உதவவே நான் இங்கே வந்திருக்கிறேன் என்று என்னை நானே சமாதானப்படுத்திக் கொண்டேன். அதே நேரத்தில் விடிந்ததும் ஹோட்டலின் செல்வச் செழிப்பு மிக்க பூங்காக்களுக்கும், நீச்சல் குளங்களுக்கும் அப்பால் பல மைல் தூரத்திற்கு நீண்டு பரந்திருக்கும் சேரிகள் கட்டாயம் என் கண்ணில் படத்தான் போகின்றன

என்பது எனக்குத் தெரிந்தே இருந்தது. அங்கே நல்ல உணவும், நீரும் இல்லாமல் குழந்தைகள் செத்துக் கொண்டிருந்தன, பெரியவர்களும் சிறியவர்களும் ஒன்றுபோல பயங்கரமான நோய்களால் பாதிக்கப்பட்டிருந்தார்கள். கற்பனையே செய்ய முடியாத அளவிற்குப் படுமோசமான சூழ்நிலைகளில் வாழ்ந்து வந்தார்கள் என்பது மறுநாள் எனக்குத் தெரிய இருந்தது.

முள்ளாக உறுத்திய படுக்கையில் நிலை கொள்ளாமல் புரண்டு கொண்டிருந்தபோது சார்லியும், எங்கள் குழுவிலுள்ள அனைவரும் இங்கே வந்துள்ளதற்குக் காரணம் சுயநலம்தான் என்பதை மறுக்கவே முடியாது என்பதைத் தெளிவாகப் புரிந்துகொள்ள முடிந்தது. இந்தோனேஷியர்களின் வாழ்க்கையை மேம்படுத்த வேண்டுமென்பது நமது நோக்கமே அல்ல. அமெரிக்காவின் வெளியுறவுக் கொள்கையையும், பெரும், பெரும் நிறுவனங்களின் நோக்கங்களையும் செயல்படுத்துவதுதான் நமது திட்டமாக உள்ளது. பேராசையே நம்மை உந்தித் தள்ளுகிறது.

அப்போது என் மனதில் ஒரு சொல் தோன்றியது. கார்போரேடோக்ரஸி (corporatocracy) [நிறுவன வர்க்கம் + அதிகாரவர்க்கம் - Corporations + Burocracy)] நிறுவன அதிகார வர்க்கம் இச்சொல்லை நான் தற்செயலாகக் கண்டுபிடித்தேனா அல்லது முன்பே கேள்விப்பட்டிருந்தேனா என்பது எனக்குத் தெளிவாகத் தெரியவில்லை. ஆனால் இவ்வுலகம் முழுவதையும் கட்டியான முனைந்து நிற்கும் புதிய மேல்தட்டு வர்க்கத்தை இச்சொல் சரியாக விளக்குகிறது என்று தோன்றியது.

இந்த நிறுவன - அதிகார வர்க்கம் என்பது ஒரு இறுக்கமான, சகோதரத்தன்மை கொண்ட ஒரு அமைப்பு. இந்த அமைப்பின் உறுப்பினர்கள் நிறுவனங்களின் மேல் பதவிகளிலிருந்து அரசாங்கப் பதவிகளுக்கும் பின்பு அங்கிருந்து இங்கேயும் சர்வசாதாரணமாக மாறிச் சென்றார்கள். உலக வங்கியின் அப்போதைய தலைவரான ராபர்ட் மெக்னமாரா ஒரு மிகச் சிறந்த உதாரணம். அவர் போர்டு நிறுவனத்தின் தலைவராகப் பதவி வகித்தார். பின்பு கென்னடி, நிக்ஸன் நிர்வாகங்களில் அரசுச் செலாளராக (உள்துறை அமைச்சர்) பணியாற்றினார். இப்போது உலகிலேயே பலம் வாய்ந்த பொருளாதார நிறுவனத்தின் தலைவர் பதவியை ஆக்கிரமித்துக் கொண்டுள்ளார். பேரியல் பொருளாதாரத்தின் (macroeconomics)* முழுப் பரிமாணத்தையும் அதன் உண்மையான இயல்பையும் என் கல்லூரிப் பேராசிரியர்கள் புரிந்து கொண்டிருக்கவில்லை என்பது எனக்குப் பளிச்சென்று பு-ரிந்தது. பல சமயங்களில் பொருளாதார வளர்ச்சி, பிரமிடின் உச்சியில் உட்கார்ந்து கொண்டிருக்கும் சிலரை (ஏற்கனவே சமூகத்தில் மேல் மட்டத்தில் உள்ளவர்களை) மேலும் பணக்காரர்களாக்குகிறது. அடித்தளத்தில் உள்ளவர்களை இன்னும் கீழே படுகுழியில் தள்ளுகிறது.

இதைத் தவிர அடித்தட்டு மக்களுக்குப் பொருளாதார வளர்ச்சி வேறெதுவும் செய்வதேயில்லை. உண்மையில் முதலாளித்துவத்தை வளர்த்தெடுப்பதென்பது, அடிக்கடி மத்திய கால நிலப்பிரபுத்துவ சமூகங்களை ஒத்த அமைப்புகளை உருவாக்குவதிலேயே முடிந்துள்ளது. என் பேராசிரியர்களில் யாருக்காவது இந்த உண்மை தெரியுமென்றாலும் அவர்கள் அதை துணிந்து ஒப்புக்கொள்ள மாட்டார்கள். ஒருவேளை கல்லூரிகளுக்கான நிதி பெரும் நிறுவனங்களிடமிருந்த வருவது இதற்குக் காரணமாக இருக்கலாம். உண்மையை வெளிக்கொண்டு வருவது அவர்கள் வேலைக்கு உலை வைத்துவிடும். இந்த விஷயத்தை அம்பலப்படுத்தத் துணிந்தால் எனக்கும் அதே நிலைதான் என்பதில் சந்தேகமே இல்லை.

ஹோட்டல் இன்டர் காண்டினென்டல் இந்தோனேஷியாவில் நான் கழித்த ஒவ்வொரு இரவிலும் இந்த எண்ணங்கள் என் தூக்கத்தைத் தொடர்ந்து கெடுத்து வந்தன. இறுதியில் சுயநலமே இந்த வகையான போராட்டத்திலிருந்து பாதுகாத்துக்கொள்ள உதவும் சிறந்த கவசமாக மாறியது. நியூ ஹாம்ஷயர் தொடக்கப் பள்ளியிலிருந்து, கட்டாய இராணுவச் சேவையிலிருந்து போராடித் தப்பி வந்தவன் நான். கடின உழைப்பாலும், அதிர்ஷ்டத்தாலும் இந்த நல்ல வாழ்க்கையை அடைந்திருக்கிறேன். தவிர எனது பண்பாட்டின் அடிப்படையில் பார்த்தால் நான் செய்வது நல்ல காரியம்தான். வெற்றிகரமான பொருளாதார நிபுணனாக வளர்ந்து கொண்டிருக்கும் நான், அமெரிக்காவிலுள்ள வணிகப்பள்ளி, என்னை எதற்குத் தயார் செய்ததோ அதைத்தான் செய்துகொண்டிருக்கிறேன். உலகின் மிகச் சிறந்த சிந்தனையாளர்களால் ஒப்புதலளிக்கப்பட்ட செயலைத்தான் செய்து வருகிறேன்.

இந்த விஷயங்களின் பின் ஒளிந்து கொண்டு நான் பாதுகாப்புத் தேடிக் கொண்டாலும் தூக்கமற்ற இரவுகள் தொடர்ந்து கொண்டு தானிருந்தன. என்றாவது ஒருநாள் உண்மையை உலகுக்கு வெளிப்படுத்துவேன் என்று அடிக்கடி நள்ளிரவுகளில் எனக்கு நானே சமாதானப்படுத்திக்கொள்ள வேண்டியிருந்தது. அதன் பின்பு அமெரிக்காவின் சட்ட திட்டங்களற்ற பழைய மேற்குப் பகுதியின் துப்பாக்கி வீரர்கள் பற்றிய லூயிஸ் எல் அமூரின் நாவல்களைத் தூக்கம் வரும் வரை படித்துக்கொண்டிருப்பேன்.

# 5

# ஆன்மாவை விற்றேன்

பதினோரு பேர் கொண்ட எங்கள் குழு, அமெரிக்கத் தூதரகத்தில் பதிவு செய்து கொள்வதிலும், பல்வேறு அதிகாரிகளைச் சந்திப்பதிலும், எங்களை ஒழுங்கமைத்துக் கொள்வதிலும், நீச்சல் குளத்தைச் சுற்றி ஓய்வெடுத்துக் கொள்வதிலுமாக ஜகார்த்தாவில் 6 நாட்களைக் கழித்தது. அந்த ஹோட்டலில் தங்கியிருந்த அமெரிக்கர்களின் எண்ணிக்கை என்னைப் பிரமிக்க வைத்தது. அமெரிக்காவைச் சேர்ந்த எண்ணெய் நிறுவனங்கள் மற்றும் கட்டுமான நிறுவனங்களின் நிர்வாகிகளின் மனைவிகளான அழகிய இளம் பெண்களைப் பார்த்துக் கொண்டிருப்பது எனக்கு இன்பமான பொழுதுபோக்காக இருந்தது. அவர்கள் பகல் நேரங்களை நீச்சல் குளத்திலும், மாலை வேளைகளை ஹோட்டலைச் சுற்றியிருந்த அரை டஜன் உயர்தர உணவகங்களிலும் கழித்து வந்தனர்.

பின்பு சார்லி எங்கள் குழுவை மலைகளின் மேல் அமைந்திருந்த பாண்டுங் நகருக்கு மாற்றினார். அங்கே பருவநிலை கொஞ்சம் இதமாக இருந்தது. வறுமை அவ்வளவாகக் கண்களை உறுத்தவில்லை. கவனத்தைச் சிறதடிக்கும் விஷயங்கள் கொஞ்சம் குறைவாகத்தான் கண்ணில்பட்டன. வில்மா என்றழைக்கப்பட்ட அரசு விருந்தினர் விடுதி, ஒரு சமையல்காரர், ஒரு மேலாளர், ஒரு தோட்டக்காரர் மற்றும் சில பணியாட்களுடன் முழுமையாக எங்களுக்கு ஒதுக்கித் தரப்பட்டது. டச்சுக்காரர்களின் காலத்தில் கட்டப்பட்ட இந்தக் கட்டடம் ஒரு புகலிடம் போன்ற பாதுகாப்புணர்ச்சியைக் கொடுத்தது. அதன் விசாலமான முற்றும் அலையலையாகச் சென்ற குன்றுகளையும் எரிமலைகளையும் சரிவுகளையும் அவற்றின் மீது பரந்து விரிந்திருந்த தேயிலைத் தோட்டங்களையும் நோக்கியவாறு அமைந்திருந்தது. இதைத் தவிர பதினொரு டொயோட்டா வாகனங்கள், ஒவ்வொன்றுக்கும் ஒரு ஓட்டுநர் மற்றும் மொழிபெயர்ப்பாளர் சகிதம் எங்களுக்கு வழங்கப்பட்டன. இறுதியாக உயர்தரமான பாண்டுங் கோல்ஃப் மற்றும் ராக்கெட் கிளப்பில் உறுப்பினராகும் தகுதியும் எங்களுக்கு அளிக்கப்பட்டது. அரசுக்குச் சொந்தமான மின்சேவையளிக்கும் நிறுவனமான பெருஷான் லிஸ்டிரிக் நெகேராவின் உள்ளூர் தலைமையகத்திலும் எங்களுக்கு ஒரு அறை ஒதுக்கப்பட்டது.

பாண்டுங் வந்தவுடன் சார்லியுடனும் ஹோவர்டு பார்க்கருடனும் பல சந்திப்புகளில் கலந்து கொண்டேன். எழுபது வயதைக் கடந்தவரான ஹோவர்டு பார்க்கர் நியூ இங்கிலாந்து எலக்ட்ரிக் சிஸ்டத்தில் மின்திறன் பற்றிய முன்னறிவிப்பாளராக இருந்து ஓய்வு பெற்றவர். இப்போது

அடுத்து வரும் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு ஜாவாவுக்குத் தேவைப்படும் மின்சாரம் மற்றும் அதன் உற்பத்தித் திறனை முன்கூட்டியே அறிவிக்கும் பொறுப்பில் இருந்து வந்தார். மின் தேவை பெருமளவிற்குப் பொருளாதார வளர்ச்சியோடு தொடர்பு படுத்தப்படுவதால் அவர் செய்ய இருந்த முன்னறிவிப்புகள் என் பொருளாதார ஆய்வுரைகளையே நம்பி இருந்தன. எங்கள் குழுவிலுள்ள மற்றவர்கள் இந்த முன்னறிவிப்புகளை அடிப்படையாகக் கொண்டு மின்நிலையங்கள், மின்சாரத்தை அனுப்பும் மற்றும் விநியோகிக்கும் வசதிகளை அமைக்கத் திட்டமிடுதல், இடங்களைத் தேர்வு செய்தல் போன்ற வேலைகளில் ஈடுபடுவார்கள். முடிந்தவரை எங்கள் முன்னறிவிப்புகளை உண்மையாக்க முயல்வதுதான் அவர்கள் வேலை. எங்களது சந்திப்புகளின் போது சார்லி தொடர்ச்சியாக என் பணியின் முக்கியத்துவம் குறித்து வலியுறுத்தி வந்தார். கூடவே எனது பொருளாதார வளர்ச்சி பற்றிய முன்னறிவிப்புகள் மிகவும் நம்பிக்கையூட்டும் விதத்தில் அமைய வேண்டும் என்று நச்சரிக்கவும் செய்தார். கிளேடின் சொன்னது சரிதான். இந்த மாஸ்டர் பிளான் முழுமைக்கும் நான்தான் அச்சாணி.

“இங்கே புள்ளிவிவரங்கள் சேகரிக்கும் வேலையை முதலில் சில வாரங்களுக்குச் செய்ய வேண்டியிருக்கும்’’ என்று சார்லி விளக்கினார்.

சார்லி, நான், ஹோவர்ட் மூவரும் சார்லியின் அழகான அலுவலகத்தில் பெரிய பிரம்பு நாற்காலிகளில் உட்கார்ந்து இருந்தோம். அதன் சுவர்களை அலங்கரித்த திரைச்சீலைகளில் மெழுகால் ஓவியங்களை அச்சிடும் பதிக் முறையில் இராமாயணக் காட்சிகள் வரையப்பட்டிருந்தன. சார்லி ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டார்.

“பொறியாளர்கள் தற்போதுள்ள மின் அமைப்பு முறை, துறை முகத்தின் தற்போதைய சரக்குகளைக் கையாளும் திறன், சாலைகள், இரும்புப் பாதைகள் மற்ற விஷயங்கள் குறித்து விரிவான விளக்கம் அளிப்பார்கள்.’’ பின்பு சார்லி சிகரெட் புகைந்து கொண்டிருந்த விரல்களை என்னை நோக்கி நீட்டினார். “நீங்கள் விரைவாகச் செயல்பட வேண்டும். இந்த மாத இறுதியில் புதிய திட்டத்தால் விளையப் போகும் அற்புதங்கள் குறித்து நீங்கள் ஹோவார்டுக்கு தெளிவான பார்வையைக் கொடுக்க வேண்டியிருக்கும். அதனால் வெளியேறும் முன் நமக்குத் தேவையான அனைத்து விவரங்களும் நம்மிடம் இருப்பதை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். திரும்ப வருவது என்பதே கிடையாது.’’

ஹோவார்டு வெளிப்பார்வைக்கு பழகுவதற்கு இனிய ஒரு முதியவரைப் போல, ஒரு தாத்தாவைப் போலிருந்தாலும் உண்மையில் அவர் கசப்பும், சிடுசிடுப்பும் நிறைந்தவராக இருந்தார். வாழ்க்கையில் வஞ்சிக்கப்பட்டவராகவே தன்னை எப்போதும் கருதிக் கொண்டார்.

அவர் முன்பு வேலை செய்த நியூ இங்கிலாந்து எலெக்ட்ரிக் சிஸ்டத்தில் மிக உயரிய பதவியை ஒருநாளும் அவரால் எட்டவே முடியவில்லை.- அது குறித்த ஆழமான வெறுப்பும் அவரிடம் குடிகொண்டிருந்தது. “நிறுவனத்தின் கருத்தை ஏற்றுக்கொள்ள மறுத்ததனால் அது சாத்தியமாகவில்லை’’ என்று அடிக்கடி ஹோவார்டு என்னிடம் கூறினார். அவர் பின்பு ஓய்வு பெறும்படி நிர்பந்திக்கப்பட்டார். மனைவியோடு வீட்டிலிருப்பதைச் சகித்துக் கொள்ள முடியாமல் மெய்ன் - ல் ஆலோசகர் பணியை ஏற்றுக் கொண்டார். இது அவர் ஒப்புக்கொண்ட இரண்டாவது பணி. ஈனாரும் சார்லியும் அவரிடம் கவனமாக இருக்கும்படி என்னை ஏற்கனவே எச்சரித்திருந்தார்கள். பழிவாங்கும் மனப்பான்மை கொண்டவர், அற்பத்தனமானவர், வளைந்து கொடுக்காதவர் என்று அவர் முத்திரை குத்தப்பட்டிருந்தார்.

எனது அறிவுக்கூர்மை மிகுந்த ஆசான்களில் ஹோவார்டும் ஒருவர் என்பது பின்பு உறுதிப்பட்டது. ஆனால் அவரோடு பழகிய அந்த ஆரம்ப தினங்களில் நான் அதை ஒப்புக்கொள்ளவேயில்லை. கிளேடின் எனக்கு அளித்தது போன்ற பயிற்சி அவருக்கு எப்போதும் கிடைத்திருக்கவில்லை. ஹோவார்டு மிகவும் வயதானவர்; வளைந்து கொடுக்காதவர் என்று ஈனாரும், சார்லியும் நினைத்திருக்கக்கூடும். என்னைப் போன்ற நெளிவு சுளிவான முழுநேர ஊழியன் கிடைக்கும் வரை அவரைப் பயன்படுத்திக்கொள்ளலாம் என்று அவர்கள் எண்ணியிருந்தார்கள் என்று நான் ஊகித்தேன். எப்படியிருந்தாலும் ஹோவார்டு அவர்களுக்கு ஒரு பிரச்சனைதான். தன்னிடம் என்ன எதிர்பார்க்கப்படுகிறது என்பதைத் தெளிவாக உணர்ந்திருந்த அவர் ஒருபோதும் கைப்பொம்மையாக இருப்பதில்லை என்று உறுதி பூண்டிருந்தார். அவருக்கு வழங்கப்பட்டிருந்த அடைமொழிகள் பொருத்தமானவை தான். ஆனால் அவரது நெளிவு சுளிவற்ற தன்மை ஓரளவாவது நெருக்குதலுக்குப் பணியக்கூடாது என்ற உறுதிப்பாட்டிலிருந்து வந்திருக்கலாம் என்று எனக்குத் தோன்றியது. பொருளாதார அடியாள் என்ற சொல்லை அவர் எப்போதாவது கேட்டிருப்பாரா? என்பது சந்தேகம் தான். ஆனால் அவரால் ஏற்றுக்கொள்ள முடியாத ஒரு புதிய வகையான ஏகாதிபத்தியத்தை உருவாக்கத் தன்னைப் பயன்படுத்திக் கொள்ள முயல்கிறார்கள் என்பதை அவர் தெளிவாக அறிந்திருந்தார்.

ஒருநாள் சார்லியுடனான சந்திப்புக்குப் பிறகு ஹோவார்டு என்னைத் தனியாக அழைத்துச் சென்றார். அவர் ஹியரிங் எய்டு பொருத்தியிருந்தார். விரல்கள் சட்டைக்குள்ளிருந்த அதன் கட்டுப்படுத்தும் சாதனத்தோடு விளையாடிக் கொண்டிருந்தன.

“நமக்குள் வைத்துக் கொள்ளுங்கள்’’ ஹோவார்டு கிசுகிசுப்பான குரலில் கூறினார். நாங்கள் ஜன்னலுக்கு அருகே சாக்கடையாக மாறிவிட்டிருந்த ஒரு வாய்க்காலை நோக்கியபடி நின்று

கொண்டிருந்தோம். அந்த நாற்றமடிக்கும் தண்ணீரில் ஒரு இளம்பெண் குளித்துக் கொண்டிருந்தாள். ஏறக்குறைய ஆடை போன்ற ஒன்றால் மானத்தை மறைக்கக் கொஞ்சம் முயற்சி செய்திருந்தாள். அந்தத் துண்டுத் துணியைத் தவிர அவள் தோற்றம் நிர்வாணமாகவேயிருந்தது. “இந்த நாட்டின் பொருளாதார வளர்ச்சி விண்ணை முட்டிவிடும் என்று நம்ப வைக்க அவர்கள் முயற்சி செய்கிறார்கள்'' என்றார் அவர். “சார்லி ஈவிரக்கமற்றவன். அவன் புளுகையெல்லாம் நம்பி விடாதீர்கள்.''

அவரது சொற்கள் என்னை எதிரே தெரிந்த சாக்கடைக் கால்வாயில் மூழ்கடிப்பதைப் போலத் தோன்றின. அதே நேரத்தில் சார்லி சொல்வது சரிதான் என்பதை ஹோவார்டுக்கு உணர்த்த வேண்டுமென்ற எண்ணமும் எனக்கு ஏற்பட்டது. எது எப்படியிருந்தாலும் என் மேலதிகாரிகளைத் திருப்திப்படுத்துவதிலேயே என் எதிர்காலம் இருந்தது.

“உண்மையிலேயே இந்த நாட்டின் பொருளாதாரம் பெரும் வளர்ச்சி அடையத்தான் போகிறது'' என்றேன் நான். கால்வாயில் குளித்துக் கொண்டிருந்த பெண்ணிடம் என் பார்வை சென்றது. “அந்த வாய்க்காலில் என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பதைக் கொஞ்சம் பாருங்கள்.''

“அட நீங்களும் அப்படித்தானா?'' என்று அவர் முணுமுணுத்தார். முன்னால் தெரிந்த காட்சியை அவர் கவனிக்கவேயில்லை. “ஏற்கனவே அவர்கள் வழியை நீங்கள் ஏற்றுக்கொண்டுவிட்டீர்கள் இல்லையா?''

வாய்க்கால் பக்கத்தில் தெரிந்த ஓர் அசைவு என் கவனத்தை ஈர்த்தது. ஒரு கிழவன் கால்சட்டையைக் கழற்றியபடி சரிவில் இறங்கி நீருக்கு அருகே உட்கார்ந்து இயற்கை உபாதையைக் கழிக்கத் தொடங்கினான். அந்த யுவதி அதைப் பொருட்படுத்தவேயில்லை. நான் சன்னலிலிருந்து திரும்பி ஹோவார்டை ஏறிட்டுப் பார்த்தேன்.

“எனக்கு வயது குறைவாக இருக்கலாம்; ஆனால் உலகம் தெரியும். தென்அமெரிக்காவில் மூன்று வருடங்கள் இருந்துவிட்டு இப்போதுதான் திரும்பியிருக்கிறேன். எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்டால் என்ன நடக்கும் என்பதை நான் நேரடியாகப் பார்த்திருக்கிறேன். இந்நாடு விரைவில் மாறிவிடும்.

“ஓ எனக்கும்தான் உலகம் தெரியும்'' அவர் கிண்டலாகச் சொன்னார். “நான் உங்களுக்கு ஒரு விஷயம் சொல்கிறேன். உங்களது எண்ணெய் கண்டுபிடிக்கும் விவகாரங்களையெல்லாம் ஒரு பைசாவுக்குக்கூட நான் மதிக்கப் போவதில்லை. என் வாழ்நாள் முழுவதும் மின்சாரம் குறித்த முன்னறிவிப்புகளைச் செய்து வந்திருக்கிறேன். பெரும் பணவீக்கம் நிலவிய காலத்தையும், இரண்டாம் உலகப் போரையும், பொருளாதார வளர்ச்சியையும், வீழ்ச்சியையும் பார்த்திருக்கிறேன். மஸாஸூஸெட்ஸ்

அற்புதம் என்று சொல்லப்பட்ட ரூட் 128 (Route 128) திட்டம் பாஸ்டனை என்ன கதிக்கு ஆளாக்கியது என்பதைப் பார்த்திருக்கிறேன். தொடர்ச்சியாகக் குறிப்பிட்ட காலத்திற்கு வருடத்திற்கு 7 முதல் 9 சதவீதத்திற்கு மேல் எந்த நாட்டிலும் மின்திறன் அளவு வளர்ச்சியடைந்ததில்லை என்று உறுதியாகச் சொல்வேன். அதுவும் சில விதிவிலக்கான காலங்களில்தான். ஆறு சதவீத வளர்ச்சி என்பதுதான் எதார்த்தமானதாக இருக்கும்.''

நான் அவரை உற்றுப் பார்த்தேன். என்னுள் ஒரு பகுதி அவர் சொல்வது சரிதான் என்று ஏற்றுக் கொள்வது போலிருந்தது. அது என்னைத் தாக்குதல் நிலையிலிருந்து தற்பாதுகாப்பு நிலைக்குத் தள்ளிவிட்டது. என் சொந்த மனசாட்சியே என் கருத்துக்கு எதிராக இருந்ததால் அவரோடு வாதிடுவதன் மூலம் என்னை நானே நியாயப்படுத்திக் கொள்ள முயன்றேன்.

‘ஹோவார்ட், இது பாஸ்டன் அல்ல. கொஞ்ச நாளைக்கு முன்பு வரை யாருக்கும் மின்சாரமே கிடைக்காத நாடு இது. விஷயங்கள் இங்கே வேறு மாதிரி இருக்கும்’

“சரி செய்யுங்கள்'' அவர் சீற்றத்துடன் கூறினார். “உங்களை நீங்களே விற்றுக் கொள்ளுங்கள். நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள் என்பது பற்றி எனக்குக் கடுகளவும் கவலையில்லை. என் ஆய்வை என் நம்பிக்கையின் அடிப்படையில் செய்வேன். கேழ்வரகில் நெய் வடிகிறது என்பது போன்ற பொருளாதார ஆய்வை நான் செய்ய முடியாது.'' அவர் நாற்காலியில் சரிந்து உட்கார்ந்து ஒரு பென்சிலை எடுத்துக் கிறுக்கத் தொடங்கினார்.

இது என்னால் அலட்சியப்படுத்த முடியாத சவால்.

“ஹோவார்ட், நீங்கள் 1960-களில் இருந்த பாஸ்டனோடு ஒப்பிடும் வகையில் மின்சாரத் தேவை அதிகரிப்பு பற்றி முன்னறிவிப்பைச் செய்கிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். அதே நேரத்தில் நான் எல்லோரும் எதிர்பார்ப்பது போல கலிபோர்னியா தங்க வேட்டையையே தோற்கடிக்குமளவிற்கு வளர்ச்சி இருக்குமென்ற முடிவோடு வந்தால் நீங்கள் ரொம்பவும் முட்டாள்தனமாக காட்சியளிப்பீர்கள்.''

அவர் பென்சிலை விட்டெறிந்தார். என்னைப் பார்த்த பார்வையில் பொறி பறந்தது. “நீங்கள் எலலோருமே மனசாட்சியைக் குழிதோண்டிப் புதைத்து விட்டவர்கள். ஆன்மாவை சாத்தானுக்குத் தாரை வார்த்துக் கொடுத்துவிட்டவர்கள். பணத்துக்காக எதையும் செய்யத் துணிந்தவர்கள்''. பின்பு நான் நிற்பதைப் பற்றிக் கவலையே படாமல் ஓர் இளக்காரமான சிரிப்புடன் தன் காதில் பொருத்தியிருந்த கேட்க உதவும் கருவியை அணைத்துவிட்டுக் காகிதக் குவியலில் மூழ்கிவிட்டார்.

அவரது கோபமும் நடவடிக்கையும் என்னை அடியோடு உலுக்கிவிட்டன. அங்கிருந்து பாய்ந்து வெளியேறினேன். சார்லியின் அலுவலகத்திற்குப் போகத் தொடங்கியவன் குழம்பிப்போய் திரும்பி நடந்து படியிறங்கினேன். கட்டடத்தை விட்டு வெளியேறி மதிய வெயிலில் கால் போனபோக்கில் நடக்கத் தொடங்கினேன். அந்த இளம்பெண் குளித்து முடித்து விட்டுக் கால்வாயிலிருந்து வெளியேறிக் கொண்டிருந்தாள். பல சிறுவர்கள் கூச்சலிட்டபடி நீரில் ஆடிக் கொண்டிருந்தார்கள். ஒரு கிழவி முழங்கால் அளவு நீரில் நின்று பல்விளக்கிக் கொண்டிருந்தாள். இன்னொரு பெண் துணி துவைத்துக் கொண்டிருந்தாள்.

எனக்குத் தொண்டை அடைத்துக் கொண்டது. வாய்க்காலோரம் இருந்த ஒரு உடைந்த கான்கிரீட் பலகையில் உட்கார்ந்தேன். தண்ணீரிலிருந்து வந்த முடை நாற்றத்தைக் கவனிக்காதிருக்க முயன்றபடி ஏன் எனக்கு இவ்வளவு வேதனை ஏற்படுகிறது என்று என்னை நானே கேட்டுக்கொண்டேன். கண்களில் பொங்கி வந்த கண்ணீரை அடக்கிக் கொள்ளக் கடுமையாகப் போராட வேண்டியிருந்தது.

“பணம்தான் குறி!’’ ஹோவார்டின் சொற்கள் திரும்பத் திரும்ப என் காதில் ஒலித்துக் கொண்டேயிருந்தன. அவர் என்னை எங்கே தாக்கினால் வலிக்குமோ அங்கே கடுமையாகத் தாக்கிவிட்டார். சின்னப் பையன்கள் தொடர்ந்து நீரில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களது உற்சாகம் நிறைந்த குரல்கள் காற்றில் நிறைந்திருந்தன. இந்தப் பையன்களில் ஒருவனாக மாறிவிட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும். ஒரு கூன் விழுந்த ஆள் வாய்க்காலின் மேல் ஒரு குச்சியை ஊன்றியபடி நொண்டி, நொண்டி நடந்து சென்று கொண்டிருந்தார். கொஞ்சம் நின்று பையன்களைக் கவனித்த போது பல்லில்லாத அவர் முகம் சிரிப்பில் மலர்ந்தது.

ஒரு வேளை நான் ஹோவார்டிடம் நம்பிக்கை வைக்கலாம். நாங்கள் இருவரும் இணைந்து ஒரு இணக்கமான முடிவுக்கு வரலாம். எனக்குள் தலைகாட்டிய அற்ப சந்தோஷம் வினாடி நேரத்தில் நீர்க்குமிழி போல அடங்கிவிட்டது. அது சாத்தியமேயில்லை என்பது உறுதியாகத் தெரிந்தது. கசப்புணர்வில் மூழ்கிக் கிடக்கும் அந்தக் கிழவர் ஏற்கனவே தன்னை வளர்த்துக் கொள்வதற்குக் கிடைத்த பல வாய்ப்புகளை இழந்திருந்தார். இப்போதும் அவர் வளைந்து கொடுக்கப் போவதில்லை. நானோ இளைஞன். என் வாழ்க்கையே இப்போதுதான் தொடங்குகிறது. அவருடையதைப் போல என் வாழ்க்கையும் ஆகிவிடுவதைக் கண்டிப்பாக நான் விரும்பவில்லை.

நாற்றமடிக்கும் வாய்க்காலை நோக்கியபடி நியூ ஹாம்ஷியர் தொடக்கப் பள்ளிக் காட்சிகளை மனக்கண்ணில் காணத் தொடங்கினேன். அங்கே மற்ற பையன்கள் நடன விருந்துகளில்

அரங்கேற்றம் நடத்திக் கொண்டிருந்த போது என் விடுமுறை நாட்கள் தனிமையில் கழிந்திருந்தன. மெல்ல மெல்ல ஒரு தன்னிரக்கம் என்னை ஆட்கொண்டது. நான் மனம் விட்டுப் பேசக் கூடியவர்கள் யாருமில்லை.

அன்றிரவு படுக்கையில் கிடந்தபடி என் வாழ்க்கையைப் பாதித்த ஆட்களைப் பற்றி எண்ணமிட்டுக் கெண்டிருந்தேன். ஹோவார்ட், சார்லி, கிளேடின், ஆன், ஈனார், ஃபிராங்க் மாமா - இவர்களைச் சந்தித்திரா விட்டால் என் வாழ்வு என்னவாயிருக்கும்? எது எப்படியிருந்தாலும் இந்தோனேஷியாவுக்கு வந்திருக்க வாய்ப்பில்லை. இனி என் எதிர் காலம் எப்படியிருக்கும்? என்னை அவ்வளவு பெரிய மனப்போராட்டத்திற்கு உள்ளாக்கிய விஷயம் திரும்பவும் மனதை ஆக்கிரமித்துக் கொண்டது. வருடத்திற்கு 17% வளர்ச்சி வீதம் இருக்குமென்ற முடிவுக்கு நானும் ஹோவார்டும் வர வேண்டுமென்று தான் எதிர்பார்ப்பதாக சார்லி ஏற்கனவே தெளிவுபடுத்தியிருந்தார். இதில் நான் என்ன செய்ய முடியும்?

-திடீரென்று தோன்றிய ஒரு எண்ணம் எனக்கு அமைதியளித்தது. இது எப்படி முன்பே எனக்குத் தோன்றாமல் போயிற்று? எப்படியிருந்தாலும் இறுதி முடிவு என்னுடையதாக இருக்கப் போவதில்லை. ஹோவார்டும் தன்னை மாற்றிக் கொள்ளப் போவதில்லை. அவர் தனது சொந்த முடிவுகளை அறிவிக்கட்டும். நான் என் எஜமானர்கள் விரும்பும் வளர்ச்சி விகிதத்தை அறிவித்து அவர்களைத் திருப்திப்படுத்தி விடுகிறேன். மாஸ்டர் பிளானைப் பொறுத்தவரை என் பணிக்கு அவர்கள் கொடுக்கும் முக்கியத்துவம் அடிப்படையில் தவறானது. ஒரு பெரும் பாரம் விலக தூக்கத்திலாழ்ந்தேன்.

சில நாட்களுக்குப் பிறகு ஹோவார்ட் கிருமித் தாக்குதலால் கடுமையாக நோய்வாய்ப்பட்டார். அவரைக் கத்தோலிக்க மிஷனரி மருத்துவமனைக்கு விரைந்து கொண்டு சென்றோம். சிகிச்சையளித்த மருத்துவர்கள் அவர் உடனடியாக அமெரிக்காவுக்குத் திரும்பிச் சென்றுவிட வேண்டுமென்று அழுத்தமாக வலியுறுத்தினர். அவர் தன்னிடம் தேவையான புள்ளிவிவரங்கள் இருப்பதாகவும், பாஸ்டனில் இருந்தே எளிதாக தனது முன்னறிவிப்புச் செய்யும் பணியை முடித்து விட முடியும் என்றும் உறுதி கூறினார். விடை பெற்றுக் கொள்ளும் போது அவர் என்னிடம் கூறிய சொற்கள் அவரது எச்சரிக்கையைத் திரும்பவும் நினைவூட்டின.

“எண்களை வைத்துக்கொண்டு நீங்கள் கண்கட்டி வித்தை காட்ட வேண்டியதில்லை. அற்புதமான பொருளாதார வளர்ச்சி குறித்து நீங்கள் என்ன சொன்னாலும் நான் இந்த அயோக்கியத்தனத்திற்கு ஒருபோதும் உடன்பட மாட்டேன்.’’

# 6

# வெறுக்கத்தக்க விசாரணை

## அதிகாரியாக நான்

இந்தோனேஷியா அரசு, ஆசிய வளர்ச்சி வங்கி மற்றும் யு.எஸ்.ஏ.ஐ.டி. (USAID) யுடன் நாங்கள் செய்து கொண்டிருந்த ஒப்பந்தங்களின்படி எங்கள் குழுவில் யாராவது ஒருவர், திட்டத்தின் எல்லைக்குட்பட்ட மக்கள் நெருக்கம் மிகுந்த பகுதிகளுக்குச் சுற்றுப் பயணம் செய்ய வேண்டியிருந்தது. இந்த வேலைக்கு நான் தேர்ந்தெடுக்கப்பட்டேன். “நீ அமேசானையே பார்த்தவன். பூச்சிகளையும், பாம்புகளையும், மோசமான தண்ணீரையும் சமாளிப்பது உனக்குச் சுலபம்’’ என்றார் சார்லி.

ஓட்டுனர் மற்றும் மொழிபெயர்ப்பாளரோடு நான் பல அழகிய இடங்களுக்கும் சென்றேன். படுமோசமான விடுதிகளில் தங்கினேன். உள்ளூர் வியாபாரிகள், அரசியல் தலைவர்களைச் சந்தித்துப் பொருளாதார வளர்ச்சி குறித்து அவர்களின் கருத்துகளைத் தெரிந்து கொள்ள விரும்பினேன். ஆனால் அவர்களில் பெரும்பாலானோர் என்னோடு செய்திகளைப் பகிர்ந்து கொள்ளத் தயங்குவது அப்பட்டமாகத் தெரிந்தது. என்னைப் பார்த்து அவர்கள் பயப்படுவதைப் போலக் கூடத் தோன்றியது. எப்போதுமே அவர்கள் தங்கள் மேலதிகாரிகளைச் சந்திக்கும்படியோ, ஜகார்த்தாவிலுள்ள தங்கள் தலைமை அலுவலகத்துடன் தொடர்பு கொள்ளும்படியோதான் சொல்வார்கள். சில நேரங்களில் இது ஏதோ எனக்கு எதிராக நடத்தப்படும் சதி போலத் தோன்றியது.

இந்தப் பயணங்கள் பொதுவாகக் குறுகியவையாக, இரண்டு மூன்று நாட்களே நீடிப்பவையாக இருந்தன. இடையில் ஒருமுறை வில்மாவுக்குத் திரும்பினேன். அதன் மேற்பார்வையாளரான பெண்மணிக்கு என்னைவிட வயதில் கொஞ்சம் சிறிய ஒரு மகன் இருந்தான். அவன் பெயர் ராஸ்மோன். ஆனால் அவன் அம்மாவைத் தவிர மற்றெல்லோருக்கும் அவன் ராஸிதான். உள்ளூர் பல்கலைக்கழகத்தில் பொருளாதாரம் படித்து வந்த ராஸிக்கு சீக்கிரமே என் வேலையில் ஆர்வம் வந்துவிட்டது. உண்மையில் ஏதோ ஒரு கட்டத்தில் அவன் என்னிடம் வேலை கேட்கக்கூடும் என்ற சந்தேகம் எனக்கு இருந்து வந்தது. ராஸி எனக்கு பாஷா இந்தோனேஷியா மொழியைக் கற்றுத் தரத் தொடங்கினான்.

ஹாலந்திடமிருந்து விடுதலை பெற்றதும் சுகர்னோ எடுத்துக் கொண்ட முதன்மையான பணி கற்றுக் கொள்வதற்கு எளிதான ஒரு

மொழியை உருவாக்குவதுதான். இந்தத் தீவுக் கூட்டம் முழுவதிலும் 350-க்கும் அதிகமான மொழிகளும் வட்டார வழக்குகளும் பேசப்பட்டு வந்தன. பல்வேறு பண்பாடுகள், மொழிகளைக் கொண்டிருந்த மக்களை இணைப்பதற்கு ஒரு பொதுமொழி தேவை என்பதை சுகர்னோ தெளிவாகப் புரிந்து கொண்டிருந்தார். அப்படியொரு மொழியை உருவாக்கும் பணிக்கு அவர் பல்வேறு நாடுகளைச் சேர்ந்த மொழியியல் அறிஞர்களை அமர்த்தினார். அவர்களது முயற்சியினாலேயே பாஷா இந்தோனேஷியா உருவானது. இப்புதுமொழி மலாய் மொழியின் அடிப்படையில் அமைந்திருந்தது. பெரும்பாலான மொழிகளில் தென்படும் சீரற்ற வினைச்சொற்கள் போன்ற சிக்கலான விஷயங்கள் இப் புதுமொழியில் களையப்பட்டிருந்தன. இம்மொழி 1970-களில் பெரும்பாலான இந்தோனேஷியர்களால் பேசப்படும் மொழியாக மாறிவிட்டது. இம்மொழியைத் தொடர்பு மொழியாகப் பயன்படுத்திய போதிலும் மக்கள் ஜாவானீஸையும் மற்ற மொழிகளையும் தொடர்ந்து தங்களுக்குள் பேசித்தான் வந்தனர்.

ராஸி அற்புதமான நகைச்சுவை உணர்வுடைய ஒரு நல்ல ஆசிரியன். ஷுவார் அல்லது ஸ்பானிஷ் பழகுவதைவிட பாஷா இந்தோனேஷியா கற்றுக் கொள்வது எளிதானதாகவே இருந்தது.

ராஸியிடம் ஒரு ஸ்கூட்டர் இருந்தது. தனது நகரம் மற்றும் மக்களை எனக்கு அறிமுகப்படுத்தும் பொறுப்பை அவன் ஏற்றுக் கொண்டான். “இந்தோனேஷியாவின் இன்னொரு பக்கத்தை உங்களுக்குக் காட்டுகிறேன்’’ என்று உறுதியளித்தவன் ஒரு நாள் மாலையில் என்னை வற்புறுத்தி ஸ்கூட்டரின் பின்னே தொற்றிக் கொள்ளச் செய்தான்.

நிழல் - பொம்மலாட்ட நிகழ்ச்சிகள், பாரம்பரிய இசைக் கருவிகளை மீட்டிக் கொண்டிருந்த கலைஞர்கள், தீ ஊதுபவர்கள், கண்கட்டு வித்தைக்காரர்கள், உள்நாட்டு அரிய கலைப் பொருட்களிலிருந்து கள்ள அமெரிக்க ஒலிநாடாக்கள் வரை கற்பனைக்கெட்டிய அனைத்தையும் விற்கும் தெரு வியாபாரிகள் எல்லோரையும் தாண்டிச் சென்றோம். 1960-களின் பிற்பகுதியிலிருந்த பீட்டில்ஸ் (Beatles) இசைக் குழுவினர் பாணியில் உடையும், தொப்பியும் அணிந்திருந்த இளைஞர்களும் யுவதிகளும் நிறைந்திருந்த ஒரு சிறிய காப்பிக் கடைக்கு வந்து சேர்ந்தோம். உடையும், முடியும் எப்படியிருந்தாலும் அவர்களிடம் இந்தோனேஷியத்தனமே தூக்கலாகத் தெரிந்தது. ராஸி ஒரு மேசையைச் சுற்றி உட்கார்ந்திருந்த ஒரு குழுவினருக்-கு என்னை அறிமுகப்படுத்தினான்.

அவர்கள் ஒவ்வொருவரும் பேசிய ஆங்கிலம் ஒவ்வொரு விதமானதாக இருந்தது. அந்த இளைஞர்கள் பாஷா இந்தோனேஷியாவில் பேசுவதற்கு நான் செய்த முயற்சியைப் பாராட்டி உற்சாகப்படுத்தினார்கள். அமெரிக்கர்கள் ஏன் தங்கள் மொழியைக்

கற்றுக் கொள்வது பற்றிக் கவலையே படுவதில்லை என்ற கேள்விக்கு என்னால் ஒரு பதிலும் சொல்ல முடியவில்லை. அதே போல உயர்தர உணவு விடுதிகளிலும், சூப்பர் மார்க்கெட்டுகளிலும், கோல்ஃப் அல்லது ராக்கெட் கிளப்புகளிலும் ஏராளமான அமெப8ரிக்கர்களையும், ஐரோப்பியர்களையும் காணமுடிந்தாலும், நகரின் இந்தப் பகுதியில் ஏன் நான் ஒருவன் மட்டுமே இருக்கிறேன் என்று வெளிப்படையாகக் கேட்பார்கள். இதற்கும் என்னால் ஒரு பதிலும் சொல்ல முடியவில்லை.

என் நினைவில் ஆழமாகப் பதிந்துவிட்ட இரவு அது. ராஸியும் அவன் நண்பர்களும் என்னைத் தங்களில் ஒருவனாக நடத்தினார்கள். அவர்களோடு பகிர்ந்து கொண்ட உணவு, கிராம்பு சிகரெட்டுகளின் மணம், இந்த நகரம், இசை, மனம் விட்டுச் சிரிக்க வைத்த ஜோக்குகள் எல்லாமே எனக்கு ஒரு இனிமையான மனநிலையைக் கொடுத்தன. அமைதிப்படையில் கழிந்த நாட்கள் திரும்ப வந்துவிட்டது போலத் தோன்றியது. இந்த மக்களிடமிருந்து விலகி முதல் வகுப்பில் பயணம் செய்வதில் எனக்கிருந்த விருப்பம் இப்போது விநோதமானதாகத் தோன்றியது. நேரம் ஆக ஆக அவர்கள், வியட்நாம் போரைப் பற்றியும் தங்கள் நாட்டைப் பற்றியும் என் எண்ணங்களைத் தெரிந்து கொள்ள ஆர்வம் காட்டினார்கள். "சட்ட விரோதமான படையெடுப்பு" என்றே அவர்கள் அமெரிக்கத் தாக்குதலை வருணித்தனர். அது குறித்து அவர்கள் ஒவ்வொருவரும் வெறுப்பும் வேதனையும் அடைந்திருந்தனர். நானும் ஏறக்குறைய இதே போன்ற கருத்தோட்டத்தையே கொண்டிருந்தது அவர்களுக்கு ஆறுதலளித்தது.

நாங்கள் கெஸ்ட் ஹவுசுக்குத் திரும்பும்போது ஏறக்குறைய நள்ளிரவாகிவிட்டிருந்தது. ராஸியிடம் அவனுடைய உலகத்தை எனக்கு அறிமுகப்படுத்தியதற்காகத் திரும்பத் திரும்ப நன்றி கூறினேன். அவன் தன் நண்பர்களிடம் மனம் திறந்து பழகியதற்காக எனக்கு நன்றி கூறினான். இன்றைய அனுபவத்தை மேலும் தொடர்வது என்று ஒருவருக்கொருவர் உறுதி கூறிக் கொண்டோம். பின்பு தழுவி விடை பெற்றுக் கொண்டோம்.

ராஸியுடனான அந்த அனுபவம் என் குழுவிற்கு வெளியே அதிக நேரம் கழிக்க வேண்டுமென்ற என் ஏக்கத்தை மேலும் கிளறிவிட்டு விட்டது. அடுத்தநாள் சார்லியைச் சந்தித்தபோது உள்ளூர் மக்களிடம் தகவல் சேகரிப்பதில் எனக்குத் தோல்வியும், விரக்தியுமே கிடைத்து வருகின்றன என்பதைத் தெரிவித்தேன். கூடவே பொருளாதார முன்னறிவிப்புகளைத் தயார் செய்யத் தேவையான புள்ளிவிவரங்களும் ஜகார்த்தாவில் கிடைக்கும் என கூறினேன். எனவே நான் ஜகார்த்தாவில் இருக்க வேண்டியிருக்கும் என்று நாங்கள் இருவரும் முடிவு செய்தோம்.

பாண்டுங்கை விட்டு அந்தப் புகைமண்டலமான பெருநகரத்திற்குச் செல்ல வேண்டியிருப்பதற்கு சார்லி எனக்கு அனுதாபம் தெரிவித்தார்.

வெளிப்படையாக அதை வெறுப்பது போலக் காட்டிக் கொண்டாலும் திரும்பவும் ஹோட்டல் இந்தோனேஷியாவில் தங்குவதற்கும், ஜகார்த்தாவைச் சுற்றிப் பார்த்து ஆய்வு செய்வதற்கும் வாய்ப்புக் கிடைத்தது குறித்து உள்ளூர எனக்குப் புளகாங்கிதம் ஏற்பட்டது. ஆனால் ஜகார்த்தா வந்து சேர்ந்த பின்புதான் என் பார்வையே அடியோடு மாறிப் போயிருப்பதையும், வாழ்க்கையை இப்போது நான் முற்றிலும் வேறுவிதமான கோணத்திலிருந்து பார்க்கத் தொடங்கியிருப்பதையும் கண்டுகொண்டேன். ராஸியுடனும் அவனது நண்பர்களுடனும் கழித்த அந்த இரவும், நான் மேற்கொண்ட சுற்றுப் பயணங்களும் சக அமெரிக்கர்கள் பற்றிய என் பார்வையை மாற்றிவிட்டிருந்தன. அவர்களுடைய இளம் மனைவிகள் இப்போது அவ்வளவு அழகாகத் தோன்றவில்லை. நீச்சல் குளத்தைச் சுற்றி அமைக்கப்பட்டிருந்த வேலியும், கீழ்த்தளங்களில் இருந்த ஜன்னல்களின் பாதுகாப்புக்காகப் பொருத்தப்பட்டிருந்த இரும்பு-ச் சட்டங்களும் முன்பு என் கண்களில் பட்டதேயில்லை. அவை இப்போது ஏதோ கெட்ட சகுனமாகத் தோன்றின. முன்பு நினைத்தாலே உமிழ்நீரைச் சுரக்கச் செய்த இந்த உணவகங்களின் உணவும்கூட இப்போது சுவாரசியமற்றதாகத் தோன்றியது.

இப்போது இன்னொரு விஷயமும் என் கவனத்தைக் கவர்ந்தது. அரசியல் தலைவர்கள், தொழிலதிபர்கள், வியாபாரிகளுடனான எனது சந்திப்புகளின் போது அவர்கள் என்னுடன் நடந்து கொண்ட விதத்தில் சில நெருடல்கள் இருப்பதை முன்பும் நான் உணர்ந்துதான் இருந்தேன்-. என்றாலும் அதை ஒரு பொருட்டாகக் கருதியதில்லை. இப்போது அவர்களில் பெரும்பாலோர் என்னைப் பார்த்தாலே ஆத்திரமடைவதைக் கண்டுகொள்ள முடிந்தது. உதாரணமாக அவர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்ட போது என்னைக் குறிப்பிடப் பயன்படுத்திய பாஷா மொழிச் சொல்லுக்கு அகராதியில் விசாரணை செய்பவர், புலனாய்வாளர் என்று பொருள் தரப்பட்டிருந்தது. அவர்கள் மொழி எனக்குத் தெரியும் என்பதை நான் காட்டிக் கொள்ளவில்லை. என் மொழிபெயர்ப்பாளர் கூட எனக்குச் சில வாக்கியங்கள் மட்டும்தான் தெரியும் என்று நினைத்துக் கொண்டிருந்தார். இந்தச் சந்திப்புகளுக்குப் பின்பு நான் ஒரு நல்ல பாஷா - ஆங்கில அகராதியை வாங்கிப் பயன்படுத்தத் தொடங்கினேன்.

இந்தச் சொற்கள் அவ்வாறு பொருள் தருவது தற்செயலானதா அல்லது எனது அகராதியில் ஏதாவது தவறு உள்ளதா என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்த இரண்டில் ஏதாவது ஒன்றுதான் இருக்க முடியும் என்று என்னை நானே தேற்றிக் கொள்ள முயன்றேன். ஆனால் இந்த மனிதர்களோடு பழகப் பழக அவர்கள் என்னை அத்துமீறி நுழைந்தவனாகவே கருதுகிறார்கள் என்ற எண்ணம் மேலும் மேலும் வலுப்பட்டது. என்னோடு ஒத்துழைக்கும்படி மேலிருந்து யாரோ உத்தரவிட்டதனாலேயே அவர்கள் வேறு

வழியில்லாமல் எனக்கு உதவுகிறார்கள் என்பதைத் தெளிவாகப் புரிந்துகொண்டேன். அந்தச் சூத்திரதாரர் அரசாங்க அதிகாரியா, வங்கியாளரா, தளபதியா அல்லது அமெரிக்கத் தூதரகமா என்பது எனக்குத் தெரியவில்லை. ஆனால் அவர்கள் என்னை உபசரித்தாலும் கேள்விகளுக்குப் பணிவுடன் பதிலளித்தாலும் அதற்கடியில் வெறுப்பும், குரோதமும் நிழலாகப் படிந்திருந்தன என்பது கண்கூடாகத் தெரிந்தது.

இதன் காரணமாக அவர்கள் அளித்த பதில்கள், புள்ளிவிவரங்களை எவ்வளவு தூரம் நம்புவது என்று நான் திகைத்துப் போனேன். என் வேலை எப்படி நடந்ததென்றால், நான் ஒரு அலுவலகத்திற்குள், மொழிபெயர்ப்பாளருடன் சாதாரணமாகச் சென்று ஒருவரைச் சந்தித்து விட முடியாது. முன்கூட்டியே சந்திக்க நேரம் வாங்க வேண்டும். இது கேட்க அப்படியொன்றும் ஆச்சரியமானதாகத் தோன்றாது. ஆனால் அப்படி எளிதாகச் சந்திக்க நேரம் வாங்கிவிட முடியாது. தொலைபேசிகள் அரிதாகவே வேலை செய்தன என்பதால் ஒவ்வொரு இடத்திற்கும் நெரிசல் மிகுந்த தெருக்களில் நேரடியாகத்தான் செல்ல வேண்டியிருக்கும். சாலைகளையும் போக்குவரத்தையும் பற்றிச் சொல்ல வேண்டுமென்றால் ஒரு சில கட்டடங்கள் தள்ளியுள்ள இடத்திற்குப் போகக்கூட சிலசமயம் ஒரு மணி நேரத்திற்கு மேல் ஆகிவிடும். எப்படியாவது போக வேண்டிய இடத்திற்குப் போய்ச் சேர்ந்தவுடன் எங்களிடம் பல படிவங்களை நிரப்பச் சொல்லிக் கேட்கப்படும். பின்பு பொதுவாக ஒரு ஆண் செயலர் தோன்றுவார். அவர் ஜாவாவினருக்கேயுரிய மிகுந்த பணிவுடனும், மரியாதையுடனும் அடக்கமான புன்முறுவலோடும் எனக்குத் தேவைப்படும் விவரங்கள் குறித்துக் கேள்விகள் கேட்பார். பின்பு சந்திப்புக்காக ஒரு நேரத்தைத் தெரிவு செய்வார்.

விதிவிலக்கே இல்லாமல் அவர் குறிப்பிடும் நாள் பல நாட்கள் தள்ளித்தானிருக்கும். இறுதியில் ஒருவழியாக எதிர்பார்க்கப்பட்ட சந்திப்பு நிகழும் போது ஏற்கனவே தயாராக உள்ள விவரங்கள் அடங்கிய ஒரு கத்தை காகிதங்கள் என்னிடம் அளிக்கப்படும். ஆலை முதலாளிகள் ஐந்தாண்டு மற்றும் பத்தாண்டுத் திட்டங்களை வழங்கினார்கள். வங்கியாளர்கள் வரைபடங்களைக் கொடுத்தார்கள். அரசாங்க அதிகாரிகள் பொருளாதார வளர்ச்சியை அடைய உள்ளது என்பதையே மையமாகக் கொண்டிருந்தனர். இது சாத்தியமா என்று ஒருவர்கூடக் கேள்வி எழுப்பவில்லை. ஏற்கனவே எடுக்கப்பட்ட முடிவுகளோடு முரண்படக்கூடிய ஒரு தகவலைக்கூட யாரும் தரவில்லை.

இந்த அனுபவங்கள் ஏற்படுத்திய திகைப்பிலிருந்து மீளாத நிலையிலேயே பாண்டுங் திரும்பினேன். எங்கேயோ ஒரு மிகப் பெரிய தவறு இருக்கிறது. இந்தோனேஷியாவில் நடந்து கொண்டிருப்பது ஒரு

சீட்டு விளையாட்டைப் போலத்தான் இருந்தது. ஒவ்வொருவரும் அவரவர் சீட்டுகளை மறைத்து வைத்துக் கொண்டோம். யாரையும் நம்பவே முடியாத நிலையில்; அவர் தரும் விவரங்களை நம்பிச் செயல்படுவதென்பது சாத்தியமே இல்லை. ஆனால் இது வெறும் விளையாட்டு அல்ல. இதன் விளைவுகள் வரவுள்ள பத்தாண்டுகளில் பல லட்சம் மக்களை பாதிக்கக் கூடியனவாக இருந்தன.

# 7

# குற்றவாளிக் கூண்டில் ஒரு நாகரிகம்

“நான் உங்களை தலாங் நடத்தும் நிகழ்ச்சிக்கு அழைத்துப் போகப் போகிறேன்’’ ராஸி மலர்ச்சியுடன் சொன்னான். “புகழ் பெற்ற இந்தோனேஷிய பொம்மலாட்டக்காரர்களைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறீர்கள்? இன்று ஒரு முக்கியமான பொம்மலாட்ட நிகழ்ச்சி நடக்க உள்ளது.’’. நான் பாண்டுங்குக்குத் திரும்பி வந்தது ராஸிக்கு மகிழ்ச்சியளித்திருக்கும் போலத் தோன்றியது.

அவனது ஸ்கூட்டர் நான் இதுவரை பார்த்திராத நகரத்துப் பகுதிகள் வழியே விரைந்தது. நாங்கள் கடந்து சென்ற தெருக்களில் ஜாவாவின் பாரம்பரிய காம்பாங்க் வீடுகள் ஏராளமாகக் காணப்பட்டன. அவை பார்ப்பதற்குச் சிறிய எளிமையான ஓட்டுக்கூரைக் கோயில்கள் போலிருந்தன. நான் எதிர்பார்த்த கம்பீரமான காலனியாதிக்க கால மாளிகைகளும் கட்டடங்களும் தென்படவேயில்லை. மக்கள் பெரும்பாலும் ஏழ்மையிலிருப்பதைப் போலத் தோன்றினாலும் கர்வத்துடன் நடமாடினார்கள். நைந்துபோன ஆனால் தூய்மையான சரக்குகளையும், பளிச்சிடும் வண்ணங்கள் கொண்ட மேல் சட்டைகளையும், அகலமான விளிம்புகள் கொண்ட வைக்கோல் தொப்பிகளையும் அ‘ணிந்திருந்தார்கள். ஸ்கூட்டர் கடந்து போகும்போது மக்கள் என்னைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தனர், நாங்கள் நின்ற போது குழந்தைகள் என் ஜீன்ஸைத் தொட்டுப் பார்க்க ஓடி வந்தனர். ஒரு சின்னப் பெண் மணம் வீசும் பிராங்கிபானி பூவை என் தலையில் செருகினாள்.

நூற்றுக்கணக்கான பேர் கூடியிருந்த ஒரு சாலையோர அரங்குக்கு அருகே எங்கள் ஸ்கூட்டர் நின்றது. அங்கே திரண்டிருந்தவர்களில் சிலர் நின்று கொண்டிருந்தனர், சிலர் மடக்கு நாற்காலிகளில் உட்கார்ந்திருந்தனர். நிர்மலமான எழிலுடன் இரவு விளங்கியது. நாங்கள் பழைய பாண்டுங் நகரத்தின் மையத்தில் இருந்தபோதும் தெருவிளக்குகள் இல்லாததால் எங்கள் தலைக்கு மேலே நட்சத்திரங்கள் சுடர்விடுவதைப் பார்க்க முடிந்தது. காற்றில் கிராம்பு, நிலக்கடலை மணத்துடன் விறகு எரியும் நெடியும் கலந்திருந்தது.

ராஸி திடீரென்று காணாமல் போய் தேநீர் விடுதியில் நான் ஏற்கனவே பார்த்திருந்த இளைஞர்கள் சிலருடன் திரும்பினான். சூடான தேநீர், சிறிய கேக்குகளுடனும், கடலை எண்ணெயில் வறுத்த இறைச்சித் துண்டுகளுடன் சேர்த்துக் கொடுக்கப்பட்டது. இறைச்சியைப் பெற்றுக் கொள்ள நான் தயங்கியது அவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். ஒரு பெண், அருகில் எரிந்து கொண்டிருந்த நெருப்பைச்

சுட்டிக்காட்டிச் சிரித்தபடி சொன்னாள் “புத்தம் புதிய கறி, இப்பொழுதுதான் சமைத்தது.’’

கமலாங்கின் மந்திரத்தன்மை வாய்ந்த தன்வயமிழக்க வைக்கும் ஒலியோடு இசை தொடங்கியது. கமலாங் ஆலய மணியைப் போன்ற ஓர் இசைக்கருவி.

இசைக்கருவிகள் அனைத்தையும் “இசைத்துக் கொண்டிருப்பதும், எல்லாப் பொம்மைகளையும் ஆட்டி வைத்து அவரவர் குரல்களில் பேசுவதும் ஒரே ஒருவர்தான். அவர்தான் தலாங். நாங்கள் நிகழ்ச்சியை உங்களுக்கு மொழிபெயர்க்கிறோம்’’, ராஸி என் காதருகில் கிசுகிசுத்தான்.

அது இதிகாசங்களைச் சமகால நிகழ்வுகளோடு இயல்பாக இணைத்த ஓர் அற்புதமான நிகழ்ச்சி. ஒரு தவம் போன்ற ஆழ்ந்த மோன நிலையில் இதை நடத்திவந்த தலாங் ஒரு மாயாஜால நிபுணரும்கூட என்பதைப் பின்பு தெரிந்து கொண்டேன். அவர் ஒரு நூறு பொம்மைகளை ஆட்டி வைத்தபடி ஒவ்வொன்றுக்கும் ஒரு வித்தியாசமான குரலில் பேசினார். என்னால் மறக்கவே முடியாத, என் வாழ்க்கை முழுவதையும் பாதித்த இரவு அது.

பழங்காவியங்கள் தொடர்பான விஷயங்களை முடித்த பிறகு தலாங்., ரிச்சர்ட் நிக்ஸன் பொம்மையை முன்னிறுத்தினார். அது அவரைப் போலவே நீண்ட மூக்கையும், தொங்கிய தாடையையும் கொண்டிருந்தது. பொம்மை ஜனாதிபதி அங்கிள் சாம் போல கோடுகளும், நட்சத்திரங்களும் கொண்ட உடையும், உயரமான தொப்பியும் அணிந்திருந்தார். அவருடன் கோட்சூட் அணிந்த இன்னொரு பொம்மையும் வந்தது. அந்தப் பொம்மையின் ஒரு கையில் டாலர் சின்னம் வரையப்பட்டிருந்த ஒரு வாளி இருந்தது. ,இன்னொரு கை சாமரம் வீசுவதைப் போல அமெரிக்கக் கொடியை ஜனாதிபதியின் தலைக்கு மேல் வீசிக் கொண்டிருந்தது.

இந்த இருவருக்கும் பின்னால் மத்திய மற்றும் தூரக் கிழக்கின் வரைபடம் இருந்தது. பல்வேறு நாடுகளின் பெயர்கள் அவற்றுக்குரிய இடங்களில் குச்சிகளில் தொங்கிக் கொண்டிருந்தன. நிக்ஸன் விரைந்து வரைபடத்தை நெருங்கி வியட்நாமை கொக்கியில் இருந்து எடுத்து வாய்க்குள் திணித்துக் கொண்டார். பின்பு ஏதோ கத்தினார். “சே, கசப்பு, குப்பை, இனி இது வேண்டாம்’’ என்று மொழிபெயர்க்கப்பட்டது. பின்பு வாளியில் வீசிவிட்டு மற்ற நாடுகளை நெருங்கினார்.

அவர் தென்கிழக்கு ஆசியாவின் முக்கிய நாடுகளைத் தேர்வு செய்யாதது குறித்து நான் வியப்படைந்தேன். பதிலாக அவர் மத்தியக் கிழக்கு நாடுகளையே தேர்வு செய்தார். பாலஸ்தீனம், குவைத், சவுதி, அரேபியா, ஈராக், சிரியா, ஈரான். பின்பு அவர் பாகிஸ்தானையும் ஆப்கானிஸ்தானையும் நோக்கித் திரும்பினார். ஒவ்வொரு முறையும்

நிக்ஸன் பொம்மை ஏதோ ஒரு பட்டப்பெயரைச் சொல்லி ஒரு நாட்டை வாளிக்குள் வீசியது. ஒவ்வொரு முறையும் அவர் திட்டப் பயன்படுத்திய சொற்கள் இஸ்லாமுக்கு எதிரானவையாகவே இருந்தன. “முஸ்லிம் நாய்கள், முகமதிய அரக்கர்கள், இ,ஸ்லாமியப் பேய்கள்”

கூட்டம் உணர்ச்சி வசப்பட்டது. வாளியில் ஒவ்வொரு நாடு சேரும்போதும் கொந்தளிப்பு- அதிகரித்தது. கூட்டம் வேடிக்கை, அதிர்ச்சி, கோபம் போன்ற உணர்ச்சிகளுக்கு இடையே அலைக்கழிக்கப் பட்டது போலத் தோன்றியது. சில நேரங்களில் பொம்மலாட்டக்காரன் பயன்படுத்திய சொற்கள் அவர்களுக்குக் கோபத்தை ஏற்படுத்தியதை என்னால் புரிந்து கொள்ள முடிந்தது. ஏதோ ஆபத்தில் சிக்கிக் கொண்டது போன்ற உணர்ச்சி எனக்குள் ஏற்பட்டது. என் உயரம் கூட்டத்தில் என்னைத் தனித்துக் காட்டியது. கூட்டத்தின் சீற்றம் என் மீது திரும்பக்கூடும் என்று பயம் தோன்றியது. அப்போது தலாங் சொன்ன ஒன்று என்னைத் திடுக்கிடச் செய்தது.

“இதை உலக வங்கியிடம் கொடுத்து விடு. இந்தோனேஷியாவிலிருந்து அதனால் ஏதாவது கறக்க முடிகிறதா என்று பார்க்கலாம்.” நிக்ஸன் வரைபடத்திலிருந்து இந்தோனேஷியாவை எடுத்து வாளியில் போடப்போன கணத்தில் இன்னொரு பொம்மை இருளிலிருந்து பாய்ந்து வந்தது. அந்தப் பொம்மை இந்தோனேஷிய ஆடவர்கள் வழக்கமாக அணிவது போன்ற பதிக் சட்டையும், காக்கிக் கால் சட்டையும் அணிந்திருந்தது. பொம்மையின் பெயர் தெளிவாக அதன் உடையில் அச்சிடப்பட்டிருந்தது.

“அது ஒரு பிரபலமான பாண்டுங் அரசியல்வாதி” ராஸி விளக்கினான்.

இந்தப் பொம்மை ஏறக்குறையப் பறந்து சென்று நிக்ஸனுக்கும், வாளி வைத்திருந்த பொம்மைக்கும் நடுவே நின்று கையை உயர்த்தி “இந்தோனேஷியா ஒரு சுதந்திர நாடு,” என்று முழங்கியது.

கூட்டத்திலிருந்து கைதட்டல் வெடித்துக் கிளம்பியது. வாளி பொம்மை அமெரிக்கக் கொடியை ஈட்டி போல இந்தோனேஷியன் மேல் பாய்ச்சியது. குத்துப்பட்ட பொம்மை தடுமாறி மிகுந்த நாடகத்தன்மையுடன் விழுந்து மரணமடைந்தது. பார்வையாளர்கள் கூச்சலிட்டார்கள், பற்களைக் கடித்தார்கள், முஷ்டியை உயர்த்தி ஆட்டினார்கள், நிக்ஸன் பொம்மையும், வாளி பொம்மையும் எங்களையே நேராகப் பார்த்தபடி நின்றிருந்தன. பின்பு தலைவணங்கிவிட்டு மேடையிலிருந்து வெளியேறின.

“போய்விடலாமென்று நினைக்கிறேன்” நான் ராஸியிடம் சொன்னேன்.

ராஸி அமைதிப்படுத்தும் விதமாக என் தோள் மீது கை போட்டுக் கொண்டான்.

“ஒன்றும் பிரச்சனையில்லை. தனிப்பட்ட முறையில் அவர்களுக்கு உங்கள் மீது ஒரு கோபமும் இல்லை’’ என்றான். எனக்கு அது ஒன்றும் அவ்வளவு நிச்சயமானதாகத் தோன்றவில்லை.

பின்பு நாங்கள் எல்லோரும் ஒரு தேநீர் விடுதிக்குச் சென்றோம். இந்த நிக்ஸன் நாடகம் போடப்பட உள்ளது என்று தங்களுக்கு முன்பே தெரியாது என்று ராஸியும் அவன் நண்பர்களும் உறுதியளித்தார்கள். “இந்தப் பொம்மலாட்டக்காரர்கள் எப்போது என்ன செய்வார்கள் என்று ஊகிக்கவே முடியாது’’ என்றான் ஒரு இளைஞன்.

ஒருவேளை இது என்னைக் கௌரவிக்கும் விதமாக நடத்தப்பட்டதோ என்ற என் சந்தேகத்தை வெளியிட்டேன். யாரோ சிரித்து ‘உங்களுக்கு ரொம்பவும் தலைக்கனம்’ என்றார்கள். “எல்லா அமெரிக்கர்களும் அப்படித்தானே?’’ யாரோ ஒருவன் உரிமையுடன் என் தோளில் தட்டினான்.

“இந்தோனேஷியர்களுக்கு அரசியல் உணர்வு அதிகம்’’ என்றான் என் அருகிலிருந்த நாற்காலியில் உட்கார்ந்திருந்த ஒருவன். “அமெரிக்கர்கள் இந்த மாதிரி நிகழ்ச்சிகளுக்குப் போக மாட்டார்களா?’’

பல்கலைக்கழகத்தில் ஆங்கிலத்தை முதன்மைப் பாடமாகப் படித்து வரும் ஓர் அழகிய பெண் “நீங்கள் உலக வங்கிக்காகத்தான் வேலை செய்கிறீர்கள் இல்லையா?’’ என்று கேட்டாள்.

ஆசிய வளர்ச்சி வங்கிக்கும், சர்வதேச வளர்ச்சிக்கான அமெரிக்க நிறுவனத்திற்கும்தான் தற்போது பணிபுரிகிறேன் என்று நான் பதிலளித்தேன்.

“உண்மையில் அவை எல்லாம் ஒன்றுதானே?’’ அவள் என் பதிலுக்குக் காத்திருக்கவில்லை. “இன்றைய நாடகத்தில் நடந்தது போலத் தானே உங்கள் அரசாங்கம் இந்தோனேஷியாவையும், மற்ற நாடுகளையும் ஏதோ ஒரு கொத்து…’’ அவள் வார்த்தைகளைத் தேடினாள்.

“திராட்சைகள்’’ அவள் நண்பர்களில் ஒருவன் எடுத்துக் கொடுத்தான்.

“சரியான சொல். திராட்சைக் கொத்துக்களைப் போலத்தானே நினைத்துக் கொண்டிருக்கிறது. நினைத்தபோது பறித்துக் கொள்ளலாம். இங்கிலாந்தை வைத்துக் கொள்ளலாம். சீனாவை விழுங்கலாம். இந்தோனேஷியாவை விட்டெறியலாம்.’’

“அதாவது எங்கள் எண்ணெயை எல்லாம் உறிஞ்சி முடித்த பிறகு’’ இன்னொரு பெண் குறுக்கிட்டாள்.

நான் என்னை நியாயப்படுத்திக் கொள்ள முயன்றேன். ஆனால் அதை என்னால் திறம்படச் செய்ய முடியவில்லை. அமெரிக்கர்கள்

யாருமே வர விரும்பாத நகரத்தின் இந்தப் பகுதிக்கு வந்து ஒவ்வொரு அமெரிக்கனின் மீதுமான தனிப்பட்ட தாக்குதலாக எண்ணக்கூடிய அமெரிக்க எதிர்ப்பு நிகழ்ச்சி முழுவதையும் நின்று பார்த்தவன் நான். பாஷா இந்தோனேஷியாவைக் கற்றுக்கொள்ள அக்கறை காட்டியவனும் எங்கள் குழுவில் நான் ஒரே ஒருவன்தான். என் துணிச்சலையும் பரந்த மனப்பான்மையையும் அவர்கள் உணர்ந்து கொள்ள வேண்டுமென்றும், அங்கீகரிக்க வேண்டுமென்றும் விரும்பினேன். ஆனால் இவற்றையெல்லாம் சுட்டிக் காட்டுவதைவிட மௌனமாக இருப்பதே புத்திசாலித்தனமாகத் தோன்றியது. பதிலாகத் திரும்பவும் எனக்குப் புரியாதிருந்த சில விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்பினேன். தலாங் ஏன் வியட்நாம் தவிர இஸ்லாமிய நாடுகளை மட்டுமே குறிப்பிட்டுக் காட்டினார் என்று கேட்டேன். அந்த ஆங்கிலம் படிக்கும் அழகான மாணவி சிரிப்புடன் பதிலளித்தாள், “ஏனென்றால் உங்கள் திட்டமே அதுதான்’’.

“வியட்நாம் ஒரு தொடக்கம் மட்டும் தான்’’. ஒரு ஆள் திடீரென்று இடையில் புகுந்தான். “நாஜிகளுக்கு ஹாலந்தைப் போல’’.

“உண்மையான குறி இஸ்லாமிய உலகம் தான்’’ என்றாள் அந்தப் பெண்.

இதை என்னால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. “அமெரிக்கா இஸ்லாமியர்களுக்கு விரோதி என்று நீங்கள் சொல்லவே முடியாது’’.

“ஓ இல்லையா? எப்போதிருந்து? உங்கள் வரலாற்றாசிரியர் டேன் பீ (Toyn bee) - ஐப் படித்ததில்லையா? அவர் ஓர் ஆங்கிலேயர். அடுத்த நூற்றாண்டில் நடக்கப் போகும் உண்மையான யுத்தம் கம்யூனிஸ்டுகளுக்கும் முதலாளித்துவவாதிகளுக்கும் இடையேயானதாக இருக்காது. கிறிஸ்துவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையேயானதாகத்தான் இருக்கும் என்று சொல்லியிருக்கிறார்’’ என்றார் அவர்.

“ஆர்னால்டு டோன் பீ இப்படிச் சொல்லியிருக்கிறாரா?,’’ நான் அதிர்ச்சியுடன் கேட்டேன்.

“ஆமாம். உலகமும் மேற்கும் விசாரணையில் ஒரு நாகரிகம், (Civilization on Trial and The World and West) படித்துப் பாருங்கள்!’’

“ஆனால் இப்படியொரு பகைமை கிறிஸ்துவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே ஏன் நிலவ வேண்டும்?’’

அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்; இவ்வளவு முட்டாள்தனமான கேள்வியைக் கூட ஒருவன் கேட்க முடியுமா என்று அவர்கள் ஆச்சரியப்படுவதைப் போலத் தோன்றியது.

“ஏனென்றால்’’ ஏதோ காது கேளாதவனுக்கோ, அடி முட்டாளுக்கோ

சிரமப்பட்டுப் புரிய வைப்பதைப் போன்ற தொனியில் அவள் நிதானமாகத் தொடர்ந்தாள், “மேற்கு உலகம், குறிப்பாக அதற்குத் தலைமை வகிக்கும் அமெரிக்கா உலகம் முழுவதையும் அடக்கியாள உறுதி பூண்டுள்ளது. இதுவரை வரலாறு காணாத மாபெரும் பேரரசாகத் தன்னை மாற்றிக் கொள்ள முயன்று வருகிறது. சோவியத் யூனியன் குறுக்கே நிற்பது உண்மைதான். ஆனால் அதனால் தாக்குப் பிடிக்க முடியாது. டோன்பீயால் அதைப் பார்க்க முடிகிறது. சோவியத்துகளுக்கு மதம் கிடையாது. தத்துவார்த்தப் பின்புலம் கிடையாது. ஆன்மாவிலும், மனிதனுக்கு மேம்பட்ட சக்திகளிலும் நம்பிக்கை கொள்வது அவசியம் என்பதை வரலாறு காட்டுகிறது. இஸ்லாமியர்களான எங்களிடம் அந்த ஆன்ம பலம் உள்ளது. கிறிஸ்துவர்கள் உள்ளிட்ட வேறு எவரையும் விட எங்களிடம்தான் ஆன்ம பலம் அதிகம் உள்ளது. நாங்கள் காத்திருக்கிறோம். வலிமை பெறுவோம்’’.

“நேரம் வரும்போது ஒரு பாம்பைப் போல நாங்கள் பாய்ந்து தாக்குவோம்’’. சுற்றியிருந்தவர்களில் ஒருவன் கணீரென்ற குரலில் கூறினான்.

“என்ன ஒரு பயங்கரமான சிந்தனை|’’ என்னால் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளவே முடியவில்லை. “இதைத் தவிர்க்க நாங்கள் என்ன செய்ய வேண்டும்?’’

ஆங்கில மாணவி தீர்க்கமாக என் விழிகளை ஊடுருவிப் பார்த்தாள். “இவ்வளவு பேராசை கொள்வதை நிறுத்துங்கள். உங்கள் சுயநலத்தையும், மாளிகை போன்ற வீடுகளையும், பேன்ஸி ஸ்டோர்களையும் தவிர உலகில் வேறு விஷயங்களும் உள்ளன என்பதைப் பு-ரிந்து கொள்ளுங்கள். மக்கள் உணவின்றிப் பட்டினி கிடக்கிறார்கள்; நீங்களோ உங்கள் கார்களுக்குத் தேவையான பெட்ரோலைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள். குழந்தைகள் குடிக்க நீரின்றி மடிந்து கொண்டிருக்கின்றன; நீங்களோ நவநாகரிகப் பாணிகளுக்காக (styles) ஃபேஷன் (fashion) இதழ்களைத் தேடிக்கொண்டிருக்கிறீர்கள். எங்களைப் போன்ற நாடுகள் வறுமையில் கழுத்தளவு மூழ்கிப் போயிருக்கிறோம். எங்கள் ஓலக்குரல்கள் உங்கள் செவிகளில் விழுவதில்லை. யாராவது உங்களுக்குச் சொல்ல முயன்றால் உடனே அவர்களுக்குப் புரட்சியாளர்கள் என்றும் கம்யூனிஸ்டுகள் என்றும் முத்திரை குத்துகிறீர்கள். ஒடுக்கப்பட்ட ஏழை மக்களை மேலும் மேலும் வறுமையிலும் அடிமைத்தனத்திலும் தள்ளுவதற்குப் பதிலாக நீங்கள் அவர்களுக்கு உங்கள் இதயங்களைத் திறக்க வேண்டும். காலம் கடந்து கொண்டிருக்கிறது. இன்னும் உங்களை மாற்றிக் கொள்ளவில்லை என்றால் ஒழிந்தீர்கள்!’’

இது நடந்து பல நாட்களுக்குப் பிறகு பொம்மலாட்டத்தின் போது நிக்ஸனை எதிர்த்து நின்று ஈட்டியால் குத்தப்பட்டதாகச்

சித்திரிக்கப்பட்ட பாண்டுங் அரசியல்வாதி யாரோ அடையாளம் தெரியாத ஓட்டுநர் ஒருவரால் வண்டி மோதிக் கொல்லப்பட்டார்.

# 8

# வித்தியாசமாகக் காட்சியளித்த இயேசு

பொம்மலாட்டத்தை நடத்திய தலாங்கின் நினைவுகள் என் மனதில் ஆழமான பாதிப்பை ஏற்படுத்தி விட்டன. ஆங்கிலம் பயிலும் அந்த அழகிய மாணவியின் சொற்களும்தான். மறக்க முடியாத அந்தப் பாண்டுங் இரவு என் உணர்வுகளை வேறு மட்டத்திற்குத் தூக்கி வீசியிருந்தது. நாங்கள் இந்தோனேஷியாவில் புரிந்துவரும் செயல்களின் விளைவுகளை நான் ஓரளவு உணர்ந்துதான் இருந்தேன் என்றாலும் என் புரிதல் பெரும்பாலும் மேலோட்டமானதாகவே இருந்து வந்தது. அதுவரை மன உறுத்தல் ஏற்படும்போதெல்லாம் காரண காரியங்களையும் வரலாற்றையும் துணைக்கழைத்து அதைப் போக்கிக்கொள்ள என்னால் முடிந்தது. எல்லாமே மனித இயல்பின் ஒரு பகுதிதான் என்று என்னை நானே நியாயப்படுத்திக் கொள்வது சாத்தியமானதாக இருந்து வந்தது. இந்தப் பொதுவான மனித இயல்புக்கு ஏற்ற விதத்திலேயே ஈனாரும் நானும் சார்லியும் மற்றவர்களும் நடந்து வருகிறோம். எங்களையும் எங்கள் குடும்பங்களையும் காப்பாற்றுவதற்காகத்தான் உழைக்கிறோம் என்பதுதான் என்னுடைய எண்ணமாக இருந்து வந்தது.

இந்தோனேஷிய இளைஞர்களுடனான உரையாடல் இந்தப் பிரச்சனையின் மறுபக்கத்தையும் காணும் வகையில் என் கண்களைத் திறந்துவிட்டது. நமது வெளியறவுக் கொள்கையின் அடிப்படையாக உள்ள சுயநலம் மிகுந்த அணுகுமுறை நமக்கும், நமது வழித்தோன்றல்களுக்கும் எந்த விதத்திலும் உதவாது என்பதுதான் அவர்களின் கருத்து என்பதைப் புரிந்து கொண்டேன்.

இந்த வெளியுறவுக் கொள்கையானது நிறுவனங்களின் வருடாந்திர அறிக்கைகளைப் போலவும், அரசியல்வாதிகளின் தேர்தல் வியூகங்களைப் போலவும் தொலைநோக்கு இல்லாததாக இருப்பதைக் கண்டு கொண்டேன்.

இதற்கிடையில் பொருளாதார முன்னறிவிப்புகளுக்குப் புள்ளி விவரங்களைத் தேடி ஜகார்த்தா செல்வதும் தொடர்ந்து கொண்டுதான் இருந்தது. அங்கே தனித்து இருப்பதற்குக் கிடைத்த நேரத்தில் இந்த விஷயங்கள் பற்றி ஆழ்ந்து சிந்தித்து வந்தேன். என் எண்ணங்களைப் பத்திரிகையில் எழுதவும் செய்தேன். அதே நேரம் ஜகார்த்தா தெருக்களில் சுற்றித் திரிந்தேன். பிச்சைக்காரர்களுக்குப் பணம் கொடுத்தேன். தெருக்களில் சுற்றிக் கொண்டிருந்த பையன்கள், விபசாரிகள், தொழுநோயாளிகளிடம் பேச்சுக் கொடுக்க முயன்றேன்.

அன்னிய நிதியுதவியைப் பற்றிய எண்ணங்களோடு வளர்ச்சியடையாத நாடுகளின் வறுமையையும் துன்பத்தையும் போக்க வளர்ச்சியடைந்த நாடுகள் ஆற்ற வேண்டிய பணி குறித்த சிந்தனைகளும் என் மனதை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தன. எப்போது அன்னிய நிதியுதவி நேர்மையானதாக உள்ளது; எப்போது அது சுயநலம் மிக்கதாக மாறுகிறது என்று பாகுபாடு செய்ய முயன்றேன். உண்மையில் இந்த அன்னிய உதவி எப்போதாவது சுயநலமற்றதாக இருந்திருக்க முடியுமா என்று எனக்குச் சந்தேகம் தோன்றியது. அப்படி ஒரு போதும் அன்னிய உதவி சுயநலமற்றதாக இருந்திருக்க முடியாது என்றால் இந்நிலையை மாற்றுவது சாத்தியமா? என்னுடையதைப் போன்ற நாடுகள் துன்பத்தில் உழலும் ஏழை நாட்டு மக்களுக்கு உதவக் கட்டாயம் உறுதியான நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. ஆனால் மிக மிக அரிதாகவே துன்புறும் மக்களுக்கு உதவ மற்ற நாடுகளில் அமெரிக்கா தலையீடு செய்தது. அதுவே எனக்குச் சந்தேகம்தான். வேறு காரணங்களுக்காகத்தான் அது ஏராளமான முறை அன்னிய நாடுகளின் உள் விவகாரங்களில் மூக்கை நுழைத்துள்ளது.

ஒரு முக்கியமான கேள்வி திரும்பத் திரும்ப எழுந்து கொண்டே இருந்தது. இந்தக் கடன்களின் நோக்கங்கள் ஏகாதிபத்தியத்தை வளர்த்தெடுப்பதுதான் என்றால் அது அவ்வளவு தவறான விஷயமா? எந்தக் குற்ற உணர்வுமின்றி நமது அமைப்பு முறையை உறுதியாக நம்பி, மற்ற நாடுகள் மேல் அதைத் திணித்து வந்த சார்லி போன்றவர்கள் மீது எனக்குப் பொறாமை தோன்றியது. இந்த உலகின் வரம்புக்குட்பட்ட இயற்கை வளங்களைக் கொண்டு உலக மக்கள் அனைவரும் அமெரிக்கர்கள் போல ஆடம்பர வாழ்க்கை வாழ்வது சாத்தியமா? அதுவும் அமெரிக்காவிலேயே பல லட்சம் மக்கள் பட்டினியாய் வாடும் நிலையில்? மற்ற நாடுகளைச் சேர்ந்த மக்கள் நம்மைப் போல வாழ விரும்புகிறார்களா என்பதும் எனக்குச் சந்தேகமாகவே இருந்தது. நமது சமூகம் ஒருவேளை செல்வச் செழிப்பு மிக்கதாக இருக்கலாம். ஆனால் வன்முறையும், போதைப் பழக்கமும், விவாகரத்தும், விரக்தியும், குற்றங்களும் மலிந்த சமுகம் அது. மிகவும் மகிழ்ச்சியற்ற சமூகங்களில் ஒன்றாகக் கூட இது இருக்கலாமென்று நமது புள்ளி விவரங்களே காட்டுகின்றன.

இவற்றைக் குறித்தெல்லாம் கிளேடின் என்னை எச்சரித்திருந்தாளா என்பதை இப்போது என்னால் உறுதியாகக் கூற முடியவில்லை. அது என்னவாக இருந்தாலும் அப்பாவித்தனம் என்னிடமிருந்து விடை பெற்றுக் கொண்டுவிட்டது. நான் என் கட்டுரையில் எழுதினேன்:

அமெரிக்காவில் யாராவது குற்றமற்றவராக இருக்க முடியுமா? வளர்ச்சியடையாத நாடுகளில் இருந்து அடிக்கப்படும் கொள்ளையின் பெரும்பகுதி பணக்காரர்களின் கைகளுக்கே சென்றாலும்

மற்றவர்களுக்கும் அதில் பங்கு கிடைக்கத்தான் செய்கிறது. நமக்குத் தேவையான அனைத்து இயற்கை வளங்களும், மலிவான உழைப்பும் இந்தோனேஷியா போன்ற வெளிநாடுகளிலிருந்தே பெறப்படுகின்றன. ஆனால் அந்த நாடுகளுக்கு நம்மிடமிருந்து அற்பமானதே திரும்பிச் செல்கிறது. வெளிநாடுகளுக்கு அளிக்கப்படும் கடன்கள் இன்று குழந்தைகளாயிருப்பவர்கள் முதல் அவர்கள் பேரக்குழந்தைகள் வரை தலைமுறை தலைமுறையாக அந்நாட்டவர்களைப் பணயக் கைதிகளாகப் பிடித்து வைக்கவே உதவுகின்றன. அவர்கள் நமது கடன்களைத் திருப்பித் தர தங்கள் மக்களுக்கு கல்வி, சுகாதாரம் போன்ற சேவைகளை அளிப்பதை நிறுத்தி வைக்க வேண்டியிருக்கும். தங்கள் இயற்கை வளங்களைச் சூறையாட நம்மை அனுமதிக்க வேண்டியிருக்கும். உண்மையில் மூன்றாம் உலக நாடுகளை வாட்டி வதைக்கும் இந்தக் கடன்களின் பெரும் பகுதி வணிக ஒப்பந்தங்கள் மூலமாக அமெரிக்காவுக்கே திரும்பி வந்து விட்டன என்ற உண்மை கண்டுகொள்ளப்படுவதே இல்லை. பெரும்பாலான அமெரிக்கர்களுக்கு இந்த விஷயம் தெரியாது என்பது இந்தக் கொடுமையை நியாயப்படுத்தி விடுமா? விஷயம் தெரியாதவர்கள் என்பதும், தவறாக வழிநடத்தப்பட்டவர்கள் என்பதும் வேண்டுமானால் சரியானதாக இருக்கலாம். ஆனால் அவர்களைக் குற்றமற்றவர்கள் என்று கூற முடியுமா?

முழுமூச்சாகப் பொய்த் தகவல்களைப் பரப்பி வருபவர்களில் நானும் ஒருவன் என்ற மறுக்க முடியாத உண்மை ஜீரணிக்கக் கடினமானதாகத்தான் இருந்தது. உலகம் தழுவிய புனிதப்போர் என்ற கருத்து எவ்வளவுதான் சங்கடமளிப்பதாக இருந்தாலும் யோசிக்க, யோசிக்க அது சாத்தியமாக்கக் கூடியது போலத்தான் தோன்றியது. அப்போர் முஸ்லிம்களுக்கும் கிறிஸ்துவர்களுக்கும் இடையிலானதாக இருக்கும் என்பதை விட வளர்ச்சியடைந்த நாடுகளுக்கும் ஏழை நாடுகளுக்கும் இடையிலேயேதான் நடக்க வாய்ப்புள்ளது என்பதை அப்பட்டமாகப் புரிந்து கொள்ள முடிந்தது. ஒருவேளை வளர்ச்சியடையாத நாடுகளின் படையணிகளின் முன்னணியில் முஸ்லிம்கள் இருக்கலாம்.

வளர்ச்சியடைந்த நாடுகளில் வாழும் நாம் இயற்கை வளங்களை நுகர்பவர்கள். ஏழை நாடுகளில் உள்ளவர்கள் அவற்றை நமக்கு வழங்குபவர்கள். இது காலனிய வணிகத்தைத் திரும்பக் கொண்டு வருவதைத் தவிர வேறில்லை. இந்த அமைப்பு முறையானது குறைவான இயற்கை வளங்களும் ஏராளமான வலிமையும் கொண்டவர்கள், இயற்கை வளங்களுக்கு உரிமையாளர்களாக இருக்கும் பலவீனமானவர்களைச் சுரண்ட வழி வகுப்பதற்காகவே உருவாக்கப்பட்ட முறை.

டோன்பீயின் நூலின் பிரதி என்னிடமில்லை. ஆனால் சுரண்டல்

நீண்டகாலம் நீடிக்கும் போது கண்டிப்பாகக் கலகம் வெடித்தே தீரும் என்பதைப் புரிந்து கொள்ளக்கூடிய அளவுக்கு எனக்கு வரலாறு தெரிந்திருந்தது. அமெரிக்க சுதந்திரப் போரையும், டாம் பெய்னையும் நினைத்துக் கொண்டேன். அமெரிக்காவிலும் இப்படித்தான் பிரிட்டிஷ் காலனியாதிக்கவாதிகள் பிரெஞ்சுக்காரர்களிடமிருந்தும், பழங்குடி இந்தியர்களிடமிருந்தும் பாதுகாப்பு அளிப்பதாகக் காரணம் காட்டி அநியாய வரிகளை நியாயப்படுத்தினர். காலனியாதிக்கவாதிகள் எப்போதுமே வித்தியாசமான விளக்கம்தான் தருவார்கள்.

எனது இளம் இந்தோனேஷிய நண்பர்கள் கூறிய அதே விஷயத்தைத்தான் டாம் பெய்ன் தனது அற்புதமான நூலான பொது அறிவில் (common sense) கூறியுள்ளார். நமக்கு மேலே உள்ள சக்திகள் நியாயம் வழங்கும் என்பதில் நம்பிக்கை, பிரிட்டிஷ் முடியரசு, அதன் மேட்டுக்குடி ஆதிக்கம் போன்றவற்றிற்கு எதிராகச் சமத்துவத்தையும் சுதந்திரத்தையும் உயர்த்திப் பிடிக்கும் ஒரு மதம்; இவைதான் தனது நூலில் டாம் பெய்ன் வலியுறுத்தியவை. இந்தோனேஷிய நண்பர்கள் குறிப்பிடும் ஆன்ம பலமும் இதேதான். முஸ்லிம்கள் கருத்தோட்டம் மனிதனுக்கு மேம்பட்ட சக்தியில் நம்பிக்கையையும், பணக்கார நாடுகளுக்கு உலகை அடிமைப்படுத்தும் உரிமையில்லை என்ற கருத்தையும் அடிப்படையாகக் கொண்டுள்ளது. காலனியாதிக்கத்தின் போது சுதந்திரத்துக்காகப் போராடிய அமெரிக்க விடுதலை வீரர்களைப் போலத்தான் இஸ்லாமியர்களும் தங்கள் உரிமைகளுக்காகப் போராட எத்தனிக்கிறார்கள். 1780-களில் இருந்த ஆங்கிலேயர்களைப் போலவே நாமும் இந்தப் போராட்டத்தைப் பயங்கரவாதம் என்கிறோம். வரலாறு திரும்புவது போலத் தோன்றுகிறது.

ஒருவேளை அமெரிக்காவும், அதன் கூட்டணி நாடுகளும், வியட்நாமில் நடப்பது போன்ற ஏகாதிபத்திய யுத்தங்களுக்குச் செலவிட்டு வரும் பணத்தையெல்லாம் உலகில் வறுமையை ஒழிக்கவும், நம் நாட்டவர் உட்பட எல்லா ஏழை மக்களுக்கும் நல்ல கல்வியும் ஆரோக்கியமும் அளிக்கவும் செலவிட்டால் உலகம் எவ்வளவு மகிழ்ச்சியான இடமாகிவிடும்! துன்பத்தின் ஊற்றுக்கண்களைப் போக்க நம்மை நாம் அர்ப்பணித்துக் கொண்டால், நீர்நிலைகளையும், காடுகளையும் பாதுகாக்க உறுதி பூண்டால், உடல்நலத்தோடு ஆன்ம பலத்தையும் பேணிக் காக்க முடிவு செய்தால், அது இனி வரும் தலைமுறைகளுக்கு எவ்வளவு நன்மை பயப்பதாக இருக்கும்? நம் தேசத்தை உருவாக்கியவர்கள், உயிர் வாழும் உரிமை, சுதந்திரம், மகிழ்ச்சியான வாழ்வுக்கான தேடல் போன்றவை அமெரிக்கர்களுக்கு மட்டுமே சொந்தம் என்று கருதியிருப்பார்கள் என்பதை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. நமது தேசத்தின் தந்தையர்கள் எந்த ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடினார்களோ அதே ஏகாதிபத்தியம் உருவாக்கிய தந்திரங்களைத்தான் நாம் நடைமுறைப்படுத்திக் கொண்டிருக்கிறோம்.

இந்தோனேஷியாவில் கழித்த கடைசி இரவில் ஒரு கனவு கண்டேன். என்னுடன் யாரோ இருப்பது போன்ற உணர்வு தோன்றி திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்து அறையில் தொங்கிக் கொண்டிருந்த திரைச்சீலைகளை உற்றுப் பார்த்த போதுதான் கனவு கொஞ்சம் கொஞ்சமாக நினைவுக்கு வந்தது. அதில் ஏசு எனக்கு முன்புறம் நின்று கொண்டிருந்தார். நான் சிறுவனாக இருந்தபோது ஒவ்வோர் இரவும் பிரார்த்தனைக்குப் பின்பு என் எண்ணங்களை அவருடன் பகிர்ந்து கொள்வதை வழக்கமாக வைத்திருந்தேன். குழந்தைப் பருவத்தில் நான் மானசீகமாகக் கண்டு உரையாடிய அதே ஏசுவைப் போலவேதான் இப்போது தோன்றிய ஏசுவும் இருந்தார். ஒரே வித்தியாசம் முன்பு நான் கண்ட ஏசு வெள்ளை நிறமும் பொன்னிற முடியும் கொண்டிருந்தார். இப்போதோ அவர் கரிய நிறத்துடனும் சுருட்டை முடியுடனும் காட்சியளித்தார். அவர் குனிந்து என் தோள் மீது பெருமூச்சுவிட்டார். நான் சிலுவையை எதிர்பார்த்தேன். ஆனால் டயர்களற்ற கார் சக்கரத்துடன் கூடிய ஏக்ஸில் அவர் தலைக்கு மேல் ஒரு உலோக ஒளிவட்டம் போல் ஒளிர்ந்தது. நெற்றியிலிருந்து கிரீஸ் சொட்டிக் கொண்டிருந்தது. என் கண்களுக்குள் ஊடுருவிப் பார்த்தபடி அவர் சொன்னார், “நான் இப்போது வருவதாயிருந்தால் நீ என்னை வேறு விதமாகக் காண்பாய்’’. நான் ஏன் என்று வினவினேன். “ஏனென்றால் உலகம் மாறிவிட்டது’’.

கடிகாரம் ஏறக்குறைய விடிந்துவிட்டது என்பதைக் காட்டியது. திரும்பவும் உறங்குவது சாத்தியமே இல்லாததாகிவிட்டது. ஆடைகளை அணிந்து கொண்டு எலிவேட்டரில் இறங்கி ஆளரவமற்றிருந்த வராண்டாவில் நுழைந்தேன். நீச்சல் குளத்தை அடுத்திருந்த பூங்காக்களில் இலக்கின்றிச் சுற்றித் திரிந்தேன். நிலவு பிரகாசமாக ஒளிர்ந்தது. ஆர்கிட் மலர்களின் இனிய நறுமணம் காற்றில் நிறைந்திருந்தது. காலியாகயிருந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்து இங்கே நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன்; என் வாழ்க்கை எப்படி இந்தப் பாதைக்கு வந்து சேர்ந்தது என்று எண்ணமிடத் தொடங்கினேன். என் வாழ்க்கை மாறிவிட்டது என்பது எனக்குப் புரிந்தது. ஆனால் எவ்வளவு பெரிய அளவிற்கு என்பதை என்னால் அப்போது உணர்ந்து கொள்ள முடியவில்லை.

# 9

# கிட்டாத வாய்ப்பு

இந்தோனேஷியா விவகாரங்களில் வைக்கப்பட இருந்த உண்மையான பரீட்சை மெய்ன் - இல் எனக்காகக் காத்திருந்தது. காலையில் முதல் வேலையாக புரூடென்ஷியல் சென்டரில் இருந்த எங்கள் தலைமையகத்திற்குச் சென்றேன். மற்ற ஊழியர்களுடன் எலிவேட்டரில் ஏறும்போது, எங்கள் நிறுவனத்தின் சேர்மனும், தலைமை நிர்வாக அதிகாரியுமான மெக் ஹால், ஈனாருக்குப் பதவி உயர்வளித்து போர்ட்லாண்ட் ஓகின் அலுவலகத்திற்குத் தலைவராக நியமித்திருந்தார் என்பதை அறிந்து கொண்டேன். மெக். ஹால் எண்பது வயதுக்கு மேலானவர். புரிந்து கொள்ளவே முடியாதவராகக் கருதப்பட்டு வந்தார். அதன் விளைவாக நான் இப்போது புரூனோ ஜம்பாட்டியிடம் அறிக்கை தர வேண்டியிருந்தது.

புரூனோவுக்கு வெள்ளை வெளேரென்ற அவரது தலைமுடியின் காரணமாக "வெள்ளி நரி'' என்ற பட்டப்பெயர் வழங்கப்பட்டிருந்தது. தன் எதிரிகளை வீழ்த்துவதில் அவர் அசாத்தியத் திறமை வாய்ந்தவராயிருந்ததும், மர்மமானவராகக் கருதப்பட்டதும்கூட இந்தப் பெயர் சூட்டப்பட்டதற்குக் காரணங்களாயிருந்திருக்கலாம். அவர் கேரி கிராண்ட்டைப் போன்ற கம்பீரமான தோற்றம் கொண்டிருந்தார். மிகுந்த பேச்சாற்றல் கொண்டவராக இருந்ததோடு பொறியியல் மற்றும் எம்.பி.ஏ. பட்டங்களும் பெற்றிருந்தார். பொருளாதாரக் கணிதவியலின் பங்கின் முழுப்பரிணாமத்தையும் புரிந்து வைத்திருந்தவர் அவர். தவிர மெய்ன் - இன் மின்சக்திப் பிரிவிற்குப் பொறுப்பாளராகவும், பெரும்பாலான சர்வதேசத் திட்டங்களுக்கு உதவித் தலைவராகவும் இருந்து வந்தார். அவருக்குப் பின்புலமாக இருந்து வந்தவர் ஜாக் டூபர். கிழடு தட்டி வந்த டூபர் ஓய்வு பெறும் போது இந்நிறுவனத்தின் தலைவராவதற்கு புரூனோவே சரியான நபர் என்ற கருத்து நிலவி வந்தது. மற்ற பணியாளர்களைப் போலவே நானும் புரூனோ ஜம்பாட்டி - குறித்து அதிர்ச்சியும் பீதியும் அடைந்திருந்தேன்.

மதிய உணவுக்கு முன்பு எனக்கு புரூனோவின் அலுவலகத்திலிருந்து அழைப்பு வந்தது. இந்தோனேஷியா பற்றிய மிகவும் மரியாதை நிமித்தமான உரையாடலுக்குப் பிறகு அவர் கூறியது என்னை ஏறக்குறைய துள்ளிக் குதிக்க வைத்தது. "ஹோவார்டு பார்க்கரை வேலையை விட்டு அனுப்பப் போகிறேன். அவருக்கு எதார்த்தத்தோடு தொடர்பு அற்றுப் போய்விட்டது என்பதைத் தவிர, அது பற்றிய மற்ற விஷயங்களுக்குள் போக வேண்டிய அவசியமில்லை.'' அவரது குறு நகை இனிமை நிறைந்ததாகவும் அதேநேரம் குழப்பமூட்டுவதாகவும்

தோன்றியது. மேசை மேலிருந்த காகிகதங்களின் மீது அவர் விரல்கள் தாளமிட்டுக் கொண்டிருந்தன. “வருடத்திற்கு எட்டு சதவீத வளர்ச்சி. இதுதான் அவர் அளித்துள்ள மின்னுற்பத்தி பற்றிய முன்னறிவிப்பு. உங்களால் நம்ப முடிகிறதா? அதுவும் இந்தோனேஷியா போன்ற ஒரு வளமான நாட்டில்!’’ அவரது இதழ்களில் தவழ்ந்து கொண்டிருந்த புன்முறுவல் மறைந்தது. அவர் விழிகள் நேராக என்னுடையவற்றைச் சந்தித்தன. “உங்களுடைய பொருளாதார முன்னறிவிப்பு சரியான இலக்கைத் தொட்டுவிட்டது. மின் உற்பத்தியின் வளர்ச்சி விகிதம் 17 - இலிருந்து 20 சதவீதம் வரை இருக்கும் என்று உங்கள் ஆய்வுகள் தெரிவிக்கின்றன என்று சார்லி இல்லிங்வொர்த் என்னிடம் கூறினார். அது சரிதானா?’’

சரிதான் என்று உறுதியளித்தேன் நான். புரூனோ எழுந்து நின்று தன் கரத்தை நீட்டினார். “வாழ்த்துகள். நீங்கள் பதவி உயர்த்தப்பட்டிருக்கிறீர்கள்.’’

இதை நான் என் சக ஊழியர்களுடனோ, தனியாகவோ ஏதாவது உணவகத்தில் கொண்டாடியிருக்க வேண்டும். ஆனால் என் மனம் முழுவதும் கிளேடின் மேல் குவிந்திருந்தது. என் பதவி உயர்வையும், இந்தோனேஷிய அனுபவங்களையும் குறித்து அவளிடம் பேச நான் துடித்துக் கொண்டிருந்தேன். வெளிநாட்டிலிருந்து கண்டிப்பாகத் தொலைபேசி மூலம் தொடர்பு கொள்ளக் கூடாது என்று அவள் எச்சரித்திருந்தாள். எனவே நான் அவளைத் தொலைபேசியில் அழைக்கவேயில்லை. இப்போதோ மாற்று எண் கொடுக்கப்படாமல் அவளது தொலைபேசி இணைப்பு துண்டிக்கப்பட்டிருப்பது கண்டு நான் திகைத்துப் போனேன். நேராகவே அவளைத் தேடிச் சென்றேன்.

ஒரு இளம் தம்பதியினர் கிளேடின் குடியிருந்த அடுக்குமாடிக் குடியிருப்புக்குப் புதிதாகக் குடி வந்திருந்தனர். அது மதிய உணவு நேரம் என்றாலும் நான் அவர்களைப் படுக்கையிலிருந்து எழுப்பிவிட்டேன் போலத் தோன்றியது. அவர்கள் எரிச்சலுடன் தங்களுக்குக் கிளேடின் பற்றி எதுவும் தெரியாது என்று தெரிவித்தார்கள். கிளேடினின் ஒன்று விட்ட சகோதரன் என்று சொல்லிக் கொண்டு ரியல் எஸ்டேட் ஏஜென்ஸிக்குச் சென்றேன். அந்தப் பெயரில் அவர்கள் எப்போழுதும் யாருக்கும் எந்தக் குடியிருப்பையும் வாடகைக்கு விடவில்லை என்றும் இந்தத் தம்பிகளுக்கு முன்பு அந்த வீடு தன் பெயர் வெளியே தெரியக் கூடாது என்று வேண்டுகோள் விடுத்திருந்த ஒருவருக்கு வாடகைக்கு வழங்கப்பட்டிருந்தது என்றும் அவர்களது கோப்புகள் காட்டின. மெய்ன் - இன் வேலைவாய்ப்பு அலுவலகமும் அப்படியொரு நபரைப் பற்றி எந்த விவரமும் தங்களிடம் இல்லை என்றே கூறியது. அவர்களிடம் “சிறப்பு ஆலோசகர்கள்’’ குறித்த கோப்பு ஒன்று இருந்தது என்றாலும் அது என் பார்வைக்குக் கிட்டவே கிட்டாது.

மாலை மயங்கும் வேளையில் நான் ஓய்ந்து போய்விட்டேன். விமானப் பயணங்களின் போது ஏற்படும் ஆயாசம் என்னை ஆட்கொண்டது. என் வெறுமையான குடியிருப்புக்குத் திரும்பியதும் தனிமையுணர்ச்சி என்னைத் தாக்கியது. பதவி உயர்வு அர்த்தமற்றதாகத் தோன்றியது. நான் விலை போய்விட்டதையே அது எனக்கு நினைவுபடுத்தியது. கிளேடினால் பயன்படுத்திக் கொள்ளப்பட்டு பின்பு அலட்சியமாக வீசி எறியப்பட்டு விட்டேன். மன உளைச்சலுக்கு இடம் கொடுக்கக் கூடாது என்ற தீர்மானத்துடன் படுக்கையில் கிடந்து சுவர்களை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன். இந்த வெறுமை மணிக்கணக்காக நீண்டது போலத் தோன்றியது.

இறுதியில் ஒரு வழியாக என்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு எழுந்துபோய் ஒரு பீர் பாட்டிலைக் காலி செய்தேன். வெற்றுப் பாட்டிலை மேசையின் மீது அடித்து நொறுக்கினேன். பின்பு ஜன்னலைத் திறந்து தெருவை வெற்றுப் பார்வை பார்த்துக் கொண்டிருந்தேன். தொலைவில் அவள் உருவம் வருவதைப் போலத் தோன்றியது. கதவைத் திறக்க முயன்றவன் இன்னொரு முறை பார்த்துக் கொள்ளலாமென்று ஜன்னலுக்குத் திரும்பினேன். அந்தப் பெண் அருகே வந்துவிட்டிருந்தாள். அவள் கவர்ச்சியாக இருப்பதையும், அவள் நடை கிளேடினை நினைவுபடுத்துவதையும் பார்க்க முடிந்தது. ஆனால் அவள் கிளேடின் அல்ல. நான் துவண்டு போனேன். கோபத்தையும் வெறுப்பையும் கடந்து என் மனதில் ஒரு பயம் தோன்றியது.

கிளேடின் குண்டுகளால் சல்லடையாகத் துளைக்கப்பட்டுக் கிடப்பது போன்ற காட்சி என் மனத்திரையில் பளிச்சிட்டது. அதை வலுக்கட்டாயமாக உதறித் தள்ளிவிட்டு இரண்டு வாலியம் மாத்திரைகளை விழுங்கிவிட்டுத் தூக்கம் வரும்வரை குடித்துக் கொண்டிருந்தேன்.

மறுநாள் காலை மெய்ன் பணியாளர் துறையிலிருந்து வந்த ஓர் அழைப்பு என்னை திக் பிரமையிலிருந்து எழுப்பியது. அந்தத் துறையின் தலைவர் பால் மோர்மினோ, எனக்கு ஓய்வு தேவைப்படுவதைப் புரிந்து கொள்வதாகவும், ஆனால் மதியம் அவசியம் அலுவலகம் வர வேண்டுமென்றும் கூறினார்.

“உங்களைத் தூக்கி நிறுத்தக்கூடிய ஒரு நல்ல செய்தி காத்திருக்கிறது.’’

அழைப்புக்குக் கீழ்ப் படிந்தேன். புரூனோ, தான் சொன்னதை விட அதிகம் செய்திருந்தது அலுவலகத்தில் தெரிய வந்தது. நான் ஹோவார்டின் இடத்திற்குப் பதவி உயர்த்தப்பட்டிருப்பது மட்டுமல்லாமல் தலைமைப் பொருளாதார நிபுணர் என்ற பட்டமும், சம்பள உயர்வும் கூடக் கொடுக்கப்பட்டிருந்தது. இது எனக்குக் கொஞ்சம் உற்சாகமளித்தது.

மதியம் விடுமுறை எடுத்துக் கொண்டு சார்லஸ் நதியருகே வெறுமனே பீர் பாட்டிலுடன் சுற்றிக் கொண்டிருந்தேன். பின்பு ஓரிடத்தில் உட்கார்ந்து பாய்மரப் படகுகளைப் பார்த்தபடி கடுமையான தலைவலியையும் தனிமையுணர்ச்சியையும் போக்கிக் கொள்ள முயன்றேன். கிளேடின் தன் வேலையை முடித்துவிட்டு அடுத்த பணிக்குச் சென்றுவிட்டாள் என்று என்னை நானே தேற்றிக் கொண்டேன். அவள் எப்போதுமே இரகசியத்துக்கு முதலிடம் கொடுப்பவள். மோர்மினோ கூறியது போல, ஒருவேளை அவளே என்னோடு தொடர்பு கொள்ளலாம். என் ஆயாசம் மெதுவாக விலகிச் சென்றது.

அடுத்து வந்த வாரங்களில் கிளேடினைப் பற்றிய சிந்தனைகளை ஒதுக்கி வைத்துவிட்டு இந்தோனேஷியாவின் பொருளாதாரம் பற்றிய என் அறிக்கையை எழுதுவதிலும் ஹோவார்டின் மின் தேவை பற்றிய முன்னறிவிப்புகளை மாற்றியமைப்பதிலும் கவனம் செலுத்தினேன். என் எஜமானர்களின் எதிர்பார்ப்புக்கு ஏற்ற வகையில் ஆய்வு முடிவுகளை உருவாக்கினேன். என் ஆய்வுகளின்படி மின் தேவையின் வளர்ச்சி இப்புதிய திட்டம் நிறைவு பெற்றவுடன் பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு 19% இருக்கும். அதற்கடுத்த எட்டு ஆண்டுகளில் அது 18% ஆகக் குறையும். கால் நூற்றாண்டுத் திட்டத்தில் மீதியுள்ள காலத்திற்கு வளர்ச்சி வீதம் 15 சதவீதமாக இருக்கும்.

முன்னணி பன்னாட்டு நிறுவனங்களுடனான வழக்கமான சந்திப்புகளில் என் முடிவுகள் அறிவிக்கப்பட்டன. அந்த நிறுவனங்களின் நிபுணர் குழுக்கள் என்னை ஈவிரக்கமற்றும், விரிவாகவும் கேள்விகள் கேட்டுத் துளைத்தெடுத்தன. ஒரு இருண்மை நிறைந்த தீர்மானகரமான உறுதி என்னை ஆட்கொண்டது. முதன்மை பெற வேண்டுமென்று பள்ளிப்பருவத்தில் நான் கொண்டிருந்த உத்வேகத்தைப் போலிருந்தது அது. கிளேடினின் நினைவுகளும் அருகிலேயே சுழன்று கொண்டிருந்தன. ஆசிய வளர்ச்சி வங்கியின் ஒரு துடுக்கான இளம் பொருளாதார நிபுணர் தன் திறைமையை நிலைநாட்ட விரும்பி ஒரு பிற்பகல் முழுவதும் ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் கேள்விகள் கேட்டு என்னை வறுத்தெடுத்துவிட்டார். அவரைச் சமாளிக்க கிளேடின் பல மாதங்களுக்கு முன்பு- எனக்கு வழங்கிய அறிவுரைகளை நினைவுபடுத்திக் கொண்டேன்.

“கால் நூற்றாண்டுக் காலம் முன்னோக்கிப் பார்க்க யாரால் முடியும்? எல்லாமே நம்பிக்கைதான். அவர்கள் கருத்தைப் போலவே உங்கள் கண்டுபிடிப்பும் சிறந்ததுதான்.’’

நான் ஒரு நிபுணன் என்று எனக்கு நானே உறுதி கூறிக்கொண்டேன். என் ஆய்வு குறித்துத் தீர்ப்புக் கூற உட்கார்ந்திருப்பவர்களில் பலரையும் விட - அவர்களில் சிலர் என்னைவிட இரண்டு மடங்கு வயதானவர்கள் - எனக்கு வளரும் நாடுகளின் வாழ்க்கை முறை குறித்து அதிக

அனுபவம் உண்டு. யாரும் போக விரும்பாத அமேசானில் வாழ்ந்திருக்கிறேன். ஜாவாவின் மூலை முடுக்கெல்லாம் பயணம் செய்திருக்கிறேன். பொருளாதாரக் கணிதவியலின் சிறப்பம் சங்கள் பற்றி ஒள்றிரண்டு பட்டங்களும் பெற்றிருக்கிறேன். புள்ளி விவரங்கள் ஆராதிக்கும் புதிய தலைமுறையைச் சேர்ந்தவன் நான். ராபர்ட் மெக்னமாராவுக்குப் பிடித்தமான பொருளாதாரக் கணிதவியலை வணங்கும் புத்திசாலிப் பையன்களில் ஒருவன். மெக்னமாரா ஃபோர்டு மோட்டார் நிறுவனத்தின் முன்னாள் தலைவரும், ஜான் கென்னடியின் உள்துறை அமைச்சருமாவார். எண்கள், கணித மாதிரிகள் மீது மட்டுமல்லாமல் (நான் சந்தேகித்தபடி) மிகப் பெரிய தன்னகங்காரத்தின் மீதும் தனது பெரும் புகழைக் கட்டியமைத்துக் கொண்டவர்.

நான் மெக்னமாராவையும், என் எஜமானர் புரூனோவையும் முன்மாதிரியாக எடுத்துக்கொண்டேன். முதலாமவரைப் போலப் பேசுவதையும், அடுத்தவரைப் போல அகம்பாவத்துடன் நடக்கும் பழக்கத்தையும் மேற்கொண்டேன். இப்போது நினைத்துப் பார்த்தால் என் அதிகப்பிரசங்கித்தனம் ஆச்சரியமளிக்கிறது. உண்மையில் என் திறமை சுமாரானதுதான். ஆனால் பயிற்சியிலும், அறிவிலும் எனக்கிருந்த குறைபாட்டினை வாய்ச்சவடால் மூலம் ஈடுகட்டினேன்.

அது சரியாகவே வேலை செய்தது. நிபுணர்கள் குழு எனது அறிக்கைக்கு ஒப்புதலளித்து தங்கள் முத்திரையைப் பதித்தது.

அடுத்து வந்த மாதங்களில் டெல்ரான், காரகாஸ், குவாதமாலா சிட்டி, லண்டன், வியன்னா, வாஷிங்டன் டி.சி. போன்ற இடங்களில் நடைபெற்ற கூட்டங்களில் கலந்து கொண்டேன். ஈரானின் ஷா, பல முன்னாள் அதிபர்கள் உள்ளிட்ட பல புகழ் பெற்றத் தலைவர்களை, ஏன் ராபர்ட் மெக்னமாராவையே கூடச் சந்தித்தேன். நான் படித்த பள்ளியைப் போலவே இதுவும் ஆண்களின் உலகம். என் புதிய பட்டமும், பன்னாட்டு நிபுணர் குழுக்களுக்கு முன் நான் அடைந்த வெற்றியும் ஈட்டித் தந்த பெருமையும் என்னையே திகைப்படையச் செய்தது.

முதலில் இந்தப் புகழ் என்னைத் தலை சுற்ற வைத்தது. என்னை மெர்லினாக நினைத்துக் கொள்ளத் தொடங்கினேன். மெர்லின் தன் மந்திரக்கோலை ஒரு நாட்டின் மீது வீசியாட்டினால் போதும் அங்கு பளிச்சிடும் வண்ண மலர்களைப் போலத் தொழிற்சாலைகள் முளைத்தெழும். பின்பு எனக்குள் தெளிவு ஏற்பட்டது. என்னுடைய நோக்கங்களை மட்டுமல்லாமல் என்னுடன் வேலை செய்த மற்றவர்களின் நோக்கங்களையும் கேள்விக்குள்ளாக்கத் தொடங்கினேன். ஒரு மதிப்பிற்குரிய பட்டமோ முனைவர் பட்டமோ ஜகார்த்தாவில் நாற்றக் குட்டைக்கு அருகே வசித்துவரும் தொழுநோயாளியின் வேதனையைப் புரிந்து கொள்ளக் கொஞ்சம்கூட உதவாது என்பதைப் புரிந்து கொண்டேன். புள்ளி விவரங்களை

விருப்பம் போல் வளைக்கும் திறமையை மட்டுமே கொண்டு எதிர்காலத்தைப் பார்க்க முடியுமா? உலகம் முழுவதையும் பாதிக்கக்கூடிய முடிவுகளை எடுப்பவர்களைப் பற்றி எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகத் தெரிந்து கொண்டேனோ அந்த அளவுக்கு அவர்கள் திறமைகள், நோக்கங்கள் குறித்து எனக்கு நம்பிக்கையின்மை தோன்றியது. ஒவ்வொரு முறையும் கூட்ட அரங்குகளில் உள்ள மேசைகளைச் சுற்றி இருக்கும் முகங்களைப் பார்க்கும்போதெல்லாம் பீறிட்டு வந்த சீற்றத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள நான் கடுமையாகப் போராட வேண்டியிருந்தது.

நாளாவட்டத்தில் இந்தப் பார்வையும் மாறியது. இந்த மனிதர்களில் பெரும்பாலானவர்கள் தாங்கள் செய்வது சரிதான் என்பதில் நம்பிக்கை கொண்டிருந்தார்கள் என்பதை நான் புரிந்து கொண்டேன். தாங்களும், தங்களுக்கு முன்பிருந்தவர்களும் ஆற்றிய செயல்களால் நேரக்கூடிய மோசமான பின்விளைவுகளை விட கம்யூனிசமும், பயங்கர வாதமும் தீய சக்திகள் என்று - சார்லியைப் போல இவர்களும் - நம்பினார்கள். உலகில் முதலாளித்துவத்தை நிலைநாட்டுவதே தங்கள் நாட்டுக்கும், குழந்தைகளுக்கும், கடவுளுக்கும் ஆற்றக்கூடிய உன்னதமான கடமையாக அவர்கள் நினைத்துக் கொண்டிருந்தார்கள். வலிமையே வெல்லும் என்பதே அவர்களது வாழ்க்கைத் தத்துவம். ஓட்டைக் குடிசையில் பிறக்காமல் ஒரு சலுகை பெற்ற வர்க்கத்தில் பிறந்ததன் காரணமாகத் தாங்கள் அனுபவிக்கும் வசதி வாய்ப்புகளைத் தங்கள் பரம்பரைக்கும் அளிக்க வேண்டும் என்ற தீராத ஆவலும், அவ்வாறு அளிக்க வேண்டியது தங்கள் கடமை என்ற எண்ணத்தையும் கொண்டிருந்தார்கள்.

இவர்கள் உண்மையில் சதிகாரர்களா அல்லது உலகை ஆட்டிப் படைக்க உறுதி பூண்டுள்ள இறுக்கமான சகோதரத்துவ உறவு கொண்ட ஒரு சிறிய குழுவைச் சேர்ந்தவர்களா என்று என்னால் முடிவு செய்ய முடியவில்லை. இந்த இரண்டு கருத்துகளுக்கும் இடையே ஊசலாடிக் கொண்டிருந்தேன். இவர்களை அமெரிக்க உள்நாட்டுப் போருக்கு முந்தைய அடிமை உடைமையாளர்களுடன் ஒப்பிட்டுப் பார்ப்பது எனது வழக்கமாகிப் போனது. அமெரிக்க அடிமை உடைமையாளர்கள் பொதுவான நம்பிக்கைகள், வணிக நலன்கள் ஆகியவற்றால் ஒன்றிணைக்கப்பட்டவர்கள். கெட்ட நோக்கங்களோடு இரகசியமாகச் சந்திக்கும் கட்டுப்பாடு மிக்க கொள்ளைக் கூட்டத்தோடு அவர்களை ஒப்பிடவே முடியாது. அமெரிக்க அடிமையுடைமை வர்க்கத்தினர் வேலையாட்கள் மற்றும் அடிமைகளின் நடுவே பிறந்து வளர்ந்தவர்கள், மற்ற மதத்தவர்களைத் தங்கள் மதத்திற்கு மாற்றுவது அவர்களின் கடமை மட்டுமல்ல உரிமையும்கூட என்று கற்பிக்கப்பட்டவர்கள். ஒருவேளை அடிமை முறையை நியாயப்படுத்துவதில் கோட்பாட்டு ரீதியில் அவர்கள் தோல்வி கண்டிருந்தாலும் தாமஸ் ஜெபர்சனைப் போல அடிமை முறை இல்லாமல் போனால் நெருக்கடிகள் ஏற்படும்

என்று அதை நியாயப்படுத்தத்தான் செய்வார்கள். தற்போதைய ஆட்சிக் குழுக்களின் தலைவர்கள் - நிறுவன அதிகார வர்க்கத்தினர் என்று என்னால் இப்பொழுது கருதப்படுபவர்கள் - இந்த வரையறைக்குள் அடங்குவது போலத்தான் தோன்றியது.

போர், பெரிய அளவில் ஆயுதங்கள் தயாரித்தல், ஆறுகளை அணை போட்டுத் தடுத்தல், பழங்குடியினங்களின் பண்பாடுகளையும் சுற்றுப்புறச்சூழலையும் அழித்தல் ஆகியவற்றால் யார் பலனடைகிறார்கள்? லட்சக்கணக்கான மக்கள் உணவின்றியும் சுத்தமான நீரின்றியும் உயிர் காக்கும் மருந்துகளின்றியும் மரணமடைவதால் யார் லாபமடையக் கூடும்? பொதுவாக நீண்டகால அடிப்படையில் யாரும் பலனடைந்து விட முடியாது. ஆனால் குறுகிய கால நோக்கில் சமூகத்தில் உயர் மட்டத்தில் உள்ளவர்களும் என் எஜமானர்களும் நானும் குறைந்தபட்சம் பொருளாதார அடிப்படையில் பலனடைவதைப் போல வெளித் தோற்றத்திற்குத் தோன்றுகிறது.

இதனால் இன்னும் பல கேள்விகள் முளைக்கின்றன. இப்படி யொரு சூழ்நிலை எப்படி இவ்வளவு நீண்ட காலமாக நீடித்து நிலைத்து நிற்கிறது? ஒருவேளை ‘வலிமையே வெல்லும்’ என்ற பழமொழி உண்மைதானா? விடை இவ்வளவு எளிதானதா? வலிமை வாய்ந்தவர்கள் இந்த அமைப்புமுறையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருப்பதாலேயே இந்த அமைப்புமுறை இன்னும் தாக்குப்பிடித்து நின்று வருகிறதா?

வெறும் வலிமை மட்டுமே இந்த அநீதியான சமூக அமைப்பு முறை தொடர்ந்து நீடித்து வருவதற்கு முழுமையான காரணமல்ல என்று எண்ணமிட்டேன். இன்னும் திட்டவட்டமான சக்தி இதற்குப் பின்னே இருக்க வேண்டுமென்றே தோன்றியது. கல்லூரி நாட்களில் எங்களுக்கு அறிமுகமான வட இந்தியாவைச் சேர்ந்த ஒரு பேராசிரியரின் நினைவு வந்தது. அவர் குறைவான இயற்கை வளங்கள், மனிதன் தொடர்ந்து வளர்ந்து கொண்டே இருக்க வேண்டிய தேவை, மற்றும் அடிமையுழைப்பின் அடிப்படைக்கோட்பாடுகள் குறித்து விரிவுரைகள் ஆற்றியவர். இந்தப் பேராசிரியர் எல்லா வெற்றிகரமான முதலாளித்துவ முறைகளையும் ஒரு பிரமிடுக்கு ஒப்பிட்டார். பிரமிடின் உச்சியில் தலைமை உள்ளது. அடியில் பொருளாதார ரீதியில் அடிமைகள் என்று வகைப்படுத்தக் கூடியவர்கள் இருக்கின்றனர். இடையில் முதலாளித்துவ அமைப்பில் பல்வேறு மட்டங்களைச் சேர்ந்தவர்கள் ஒவ்வொரு அடுக்காக அமைக்கப்பட்டுள்ளார்கள் என்பதுதான் அவரது கோட்பாடு. நமது மக்களில் ஒரு சிலரைப் பிரமிடின் உச்சியில் உட்கார வைத்ததும் கடவுள்தான், இந்த அமைப்புமுறையை உலகம் முழுவதும் ஏற்றுமதி செய்ய உரிமை வழங்கியதும் கடவுள்தான் என்று நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதன் மூலம் இந்த அமைப்புமுறையை ஊக்குவிக்கிறோம் என்று எனக்குத்

தோன்றியது.

எப்படியிருந்த போதிலும் இந்தக் காரியத்தில் முதன்முதலில் இறங்கியவர்கள் நாங்கள் அல்ல. இந்த விஷயத்தில் நமது முன்னோடிகளின் பெயர்ப்பட்டியல் மிகவும் நீண்டது. பழங்காலத்தில் வட ஆப்பிரிக்காவில் தோன்றிய பேரரசுகள், பின்பு மத்தியக் கிழக்கு ஆசியா, பாரசீகம் கிரீஸ், ரோம், சிலுவைப் போர்கள், கொலம்பஸ் யுகத்திற்குப் பிந்தைய ஐரோப்பியப் பேரரசுகள்... ஏகாதிபத்தியத்தின் வளர்ச்சியே பெரும்பாலான போர்களுக்கும் படுகொலைகளுக்கும், பட்டினிக்கும், சூழல் மாசுபடுவதற்கும், அரிய விலங்குகள் அழிந்து போவதற்கும் காரணமாக இருந்துள்ளது. இன்னமும் அது தொடர்ந்து வருகிறது. இந்தப் பேரரசுகள் தங்கள் குடிமக்களின் மனசாட்சியைக் கொன்று புதைக்கும் வேலையை ஓயாமல் செய்து வந்துள்ளன. இந்த ஏகாதிபத்திய வளர்ச்சியானது அமைதியற்ற சமூகங்களை உருவாக்குவதில் தான் போய் முடிந்துள்ளது. செல்வச் செழிப்பு மிக்கவையாகக் கருதப்படும் நாடுகள்தான் மிக அதிக அளவிலான தற்கொலைகள், போதைப் பழக்கம் மற்றும் வன்முறையால் பீடிக்கப்பட்டுள்ளன.

இந்த விஷயங்களையெல்லாம் குறித்து மிக விரிவாகச் சிந்தித்த போதிலும் இவற்றில் என் பங்கு குறித்து எண்ணிப் பார்ப்பதை கவனமாகத் தவிர்த்து வந்தேன். நான் ஒரு பொருளாதார அடியாள் என்ற பிம்பத்தை ஆழ்மனதில் இருந்து நீக்கி விட்டு என்னைத் தலைமைப் பொருளாதார நிபுணனாகவே கருதிக்கொள்ள முயன்றேன். தலைமைப் பொருளாதார நிபுணன் என்ற பதவி சட்டப்பூர்வமானதாகவும் இயல்பானதாகவும் தோன்றியது. என் சம்பளப் பட்டியல்கள் எல்லாமே மெய்னில் இருந்து வந்தவை. அது ஒரு தனியார் நிறுவனம். எந்த ஒரு அரசாங்க நிறுவனத்திலிருந்தும் ஒரு பைசாவும் நான் பெறவில்லை. எனவே நான் தலைமைப் பொருளாதார நிபுணன் அல்லாமல் வேறென்ன?

ஒருநாள் மதியம் புரூனோ என்னைத் தன் அலுவலகத்திற்கு அழைத்தார். நான் உட்கார்ந்தவுடன் என் நாற்காலிக்குப் பின் வந்து நின்று என் தோள்களைத் தட்டிக் கொடுத்தார். "அற்புதமான காரியம் செய்துவிட்டீர்கள்'' என்று மகிழ்ச்சியுடன் கிசுகிசுப்பான தொனியில் கூறினார்.

"எங்கள் பாராட்டைத் தெரிவிக்கும் வகையில் உங்களுக்கு ஒரு அற்புதமான பரிசு தர உள்ளோம். அந்த வாய்ப்பு உங்களைவிட இரண்டு மடங்கு வயதானவர்களுக்குக் கூட அவ்வளவு எளிதில் கிடைத்ததில்லை.''

# 10

# வீரம் செறிந்த பனாமா அதிபர்

1972-ஆம் ஆண்டு நான் பனாமாவின் டோகுமென் சர்வதேச விமானநிலையத்தில் வந்திறங்கியபோது வெப்பமண்டலப் பிரதேசங்களுக்கேயுரிய பெருமழை கொட்டிக் கொண்டிருந்தது. அந்த நாட்களில் இருந்த வழக்கப்படி பல நிறுவனங்களின் அலுவலர்கள் ஒரே வாடகைக் காரைப் பகிர்ந்து கொண்டோம். எனக்கு ஸ்பானிஷ்மொழி தெரியும் என்பதால் ஓட்டுனரின் அருகே முன் இருக்கையில் உட்கார வேண்டி வந்தது. மழையினூடே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தபோது முகப்பு விளக்குகளின் ஒளியில் அடர்ந்த புருவங்களும் பளிச்சிடும் விழிகளும் கொண்ட ஒரு மனிதரின் உருவப்படம் தென்பட்டது. அவரது தொப்பியின் அகன்ற விளிம்புகள் மேல் நோக்கி வளைக்கப்பட்டிருந்தன. அவர்தான் பனாமாவின் நாயகன் ஓமர் டோரிஜோஸ்.

இந்தப் பணத்திற்காக என் வழக்கப்படி பாஸ்டன் பொது நூலகத்திற்குச் சென்று பனாமாவைப் பற்றிப் படிப்பதன் மூலம் என்னைத் தயார்படுத்திக் கொண்டிருந்தேன். பனாமாவின் அதிபரான ஓமர் டோரிஜோஸ் அமெரிக்க ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு பனாமாவின் இறையாண்மையை நிலைநாட்டவும், பனாமா கால்வாயின் மீது தனது நாட்டுக்கு உள்ள உரிமையை வென்றெடுக்கவும் எடுத்துவரும் நடவடிக்கைகளின் காரணமாகப் பெரும்புகழ் பெற்றிருந்தார். இந்த நாட்டை அது விழுந்து கிடக்கும் படுகுழியிலிருந்து மீட்டெடுக்கவும் அதன் அவமானகரமான வரலாற்றைத் திருத்தியமைக்கவும் டோரிஜோஸ் உறுதி பூண்டிருந்தார்.

சூயஸ் கால்வாயை வெட்டிய பிரெஞ்சுப் பொறியாளரான பெர்டினன்ட் டி லிப்ஸஸ் அட்லாண்டிக், பசிபிக் பெருங்கடல்களை இணைக்கும் விதமாக மத்திய அமெரிக்க பூசந்தியில் (isthius)[1] ஒரு கால்வாய் அமைக்க முடிவு செய்யும்வரை பனாமா, கொலம்பியா நாட்டின் ஒரு பகுதியாகத்தான் இருந்து வந்தது. இக் கால்வாயை அமைக்க 1881 - இல் பிரெஞ்சுக்காரர்கள் மேற்கொண்ட மாபெரும் முயற்சி ஒன்றன்பின் ஒன்றாகப் பல பெரும் தடைகளைச் சந்தித்தது. 1889 - இல் ஏற்பட்ட பொருளாதாரச் சீரழிவின் காரணமாக பிரெஞ்சுக்காரர்களால் இத்திட்டம் இறுதியாகக் கைவிடப்பட்டது. பிரெஞ்சுக்காரர்கள் கைவிட்டாலும் அமெரிக்கக் குடியரசுத் தலைவராக இருந்த தியோடர் ரூஸ்வெல்ட் அதை அவ்வளவு எளிதில் விட்டுவிட விரும்பவில்லை. இத்திட்டம் அவருக்குள் ஒரு கனவை விதைத்திருந்தது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், இப்

பூசந்தியை வட அமெரிக்கக் கூட்டிணைப்பிடம் (North American Consartium) ஒப்படைக்கும்படி கொலம்பியாவை அமெரிக்கா நிர்பந்தித்தது. கொலம்பியா நெருக்குதலுக்குப் பணிய மறுத்தது.

1903 - இல் ரூஸ்வெல்ட், நாஷ்வில் என்ற போர்க்கப்பலை அனுப்பினார். அமெரிக்க இராணுவ வீரர்கள் பூசந்தியில் கரையிறங்கி அங்கிருந்த ஒரு பிரபலமான உள்ளூர்த் தளபதியைப் பிடித்துக் கொலை செய்துவிட்டு பனாமாவைச் சுதந்திரநாடு என்று அறிவித்தனர். ஒரு பொம்மை அரசாங்கம் நிறுவப்பட்டு முதல் கால்வாய் ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்டது. இந்த ஒப்பந்தத்தின் மூலம் கட்டப்பட உள்ள கால்வாயின் இருபுறமும் உள்ள பகுதிகள் அமெரிக்க அரசின் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வரப்பட்டன. இந்த ஒப்பந்தம் அமெரிக்காவின் தலையீட்டைச் சட்டப்பூர்வமானதாக ஆக்கியதோடு, புதிதாக உருவான ‘சுதந்திர’ நாட்டை வாஷிங்டனின் முழுக் கட்டுப்பாட்டின் கீழ் வைத்தது.

இதில் சுவாரசியமானது என்னவென்றால் பனாமாவின் தலைவிதியைத் தீர்மானிக்கும் இந்த ஒப்பந்தத்தில் ஒரு பனாமா வினன் கூடக் கையெழுத்திடவில்லை. அமெரிக்க உள்துறைச் செயலர் ஹோவும், ஆக்கிரமிப்புக் குழுவில் உறுப்பினராக இருந்த பிரெஞ்சுப் பொறியாளர் பிலிப்பு பனுவ—வரில்லா என்பரும் மட்டுமே கையெழுத்திட்டனர். அடிப்படையில் அமெரிக்காவிற்குச் சேவை புரிவதற்காகவே பனாமா கொலம்பியாவிலிருந்து பலவந்தமாகத் துண்டிக்கப்பட்டது. அதுவும் பனாமாவுக்கோ, கொலம்பியாவுக்கோ சம்பந்தமேயில்லாத ஓர் அமெரிக்கனுக்கும் பிரெஞ்சுக்காரனுக்கும் இடையே ஏற்பட்ட உடன்படிக்கையின் காரணமாக ஒரு புதிய வரலாறு தொடங்கியது[2]

கடந்த அரை நூற்றாண்டுக் காலமாக பனாமா வாஷிங்டனோடு நெருங்கிய தொடர்புடைய சில பணம் படைத்த குடும்பங்களைக் கொண்ட ஒரு குழுவால் ஆளப்பட்டு வந்தது. இந்த ஆட்சியாளர்கள் அனைவரும் அமெரிக்காவுக்குத் தேவைப்பட்ட அனைத்தையும் கொஞ்சம் கூடத் தயங்காமல் செய்த வலதுசாரி சர்வாதிகாரிகளாவார்கள். வாஷிங்டனோடு கூட்டு வைத்துக் கொண்ட பெரும்பாலான லத்தீன் அமெரிக்க சர்வாதிகாரிகளைப் போலவே பனாமாவின் ஆட்சியாளர்களும் அமெரிக்காவின் நலன்களைக் காப்பது என்பதற்கு சோஷலிசத்தின் சாயல் கொண்ட அனைத்து மக்கள் இயக்கங்களையும் ஒழித்துக் கட்டுவது என்றே பொருள் கொண்டார்கள். சி.ஐ.ஏ.வும் என்.எஸ்.ஏ. வும் இந்தப் பிராந்தியம் முழுவதும் கட்டவிழ்த்துவிட்ட கம்யூனிச - எதிர்ப்பு நடவடிக்கைகளை அவர்கள் உறுதியாக ஆதரித்தார்கள். அத்தோடு ராக்ஃபெல்லர் ஸ்டாண்டர்டு ஆயில், யுனைட்டட் புரூட் கம்பெனி போன்ற பெரிய அமெரிக்க நிறுவனங்களுக்கு உதவியளித்துப் பராமரிக்கவும்

செய்தார்கள். (இதில் யுனைட்டட் புரூட் கம்பெனி பின்பு- ஜார்ஜ். எச்.டபிள்யூ. புஷ்ஷால் வாங்கப்பட்டது.) பெரும் பண்ணைகளில் ஏறக்குறைய அடிமைகளைப் போல வாழ்ந்து வரும், கொடும் வறுமையில் உழலும் மக்களின் வாழ்க்கையை மேம்படுத்துவதன் மூலமே அமெரிக்காவின் நலன்களை முன்னிறுத்த வேண்டுமென்று இந்த அரசுகள் கருதவேயில்லை.

பனாமாவின் ஆட்சியாளர்கள் தாங்கள் காட்டி வந்த விசுவாசத்திற்குத் தகுந்த பலனையும் அறுவடை செய்து கொண்டார்கள். பனாமா ‘சுதந்திரமடைந்த’ நாளிலிருந்து 1968 வரை அவர்களைப் பாதுகாக்க அமெரிக்க இராணுவம் ஒரு டஜன் முறைகளுக்கு மேல் அந்நாட்டில் தலையிட்டுள்ளது. ஆனால் 1968-ல், அப்போது நான் ஈக்வடாரில் பணியாற்றி வந்தேன், பனாமாவின் வரலாறு தலைகீழாக மாறியது. சர்வாதிகாரிகளின் வரிசையில் இறுதியில் வந்தவரான அயெஸ், ஓர் ஆட்சிக் கவிழ்ப்பில் தூக்கியெறியப்பட்டு ஓமர் டோரிஜோஸ் நாட்டின் தலைமைப் பொறுப்பில் அமர்ந்தார். அவர் ஆட்சிக் கவிழ்ப்பில் தீவிரமாகப் பங்கெடுத்துக் கொள்ளாவிட்டாலும் கூட[3].

டோரிஜோஸ், பனாமாவின் மத்திய மற்றும் கீழ்த்தட்டு வர்க்கத்தவர்களால் பெரிதும் மதிக்கப்பட்டார். அவரது பெற்றோர் சான்டியாகோவின் புறநகர்ப் பகுதிகளில் ஆசிரியர்களாக இருந்ததன் காரணமாக அவரே சாதாரண மக்கள் வாழும் பகுதிகளில் வளர்ந்தவர்தான். பனாமாவின் முதன்மையான இராணுவப் பிரிவான தேசியப் பாதுகாப்புப் படையின் (National Guards) பதவிகளில் டோரிஜோஸ் மளமளவென உயர்ந்தார். 1960- களில் இப்படைப்பிரிவுக்கு ஏழை மக்களிடையே ஆதரவு அதிகரித்துக் கொண்டிருந்தது. டோரிஜோஸுக்கு ஏழைகளின் குரலுக்குச் செவிமடுப்பவர் என்ற பெயர் நிலவி வந்தது. அவர் சேரிகளிலுள்ள தெருக்களில் நடந்தே சென்றார். மற்ற அரசியல்வாதிகள் நுழையவே துணியாத இடங்களில் கூட்டங்கள் நடத்தினார். வேலையற்றவர்கள் வேலை தேடிக்கொள்ள உதவினார். அவர் அப்படியொன்றும் பெரிய செல்வந்தராக இல்லாவிட்டாலும் கூட பாதிக்கப்பட்டவர்களுக்குச் சொந்தப் பணத்திலிருந்து நன்கொடையளித்தார்.[4]

வாழ்க்கையின் மீதும், மக்கள் மீதும் டோரிஜோஸ் கொண்டிருந்த அன்பாலும், கருணையினாலும், பனாமாவினர் மட்டுமல்லாமல் அன்னிய நாட்டவர்கள் கூடப் பலனடைந்தனர். அரசியல் ரீதியாகப் பழி வாங்கப்பட்டுத் தப்பி வரும் அகதிகளுக்குப் புகலிடமாகத் தனது நாட்டை மாற்ற அவர் உறுதி கொண்டிருந்தார். பனாமாவில் புகலிடம் தேடி வந்தவர்களில் சிலி நாட்டின் பினோசெட் அரசுக்கு எதிரிகளான இடதுசாரிகள் முதல் காஸ்ட்ரோ - எதிர்ப்பு வலதுசாரிகள் வரை எல்லாத் தரப்பினரும் அடங்குவர். இதன் காரணமாக அவர் பனாமாவில்

மட்டுமல்லாமல் அதற்கு வெளியேயும், இந்தப் பிராந்தியம் முழுவதும் புகழ் பெற்றிருந்தார். ஹோண்டுராஸ், குவாதமாலா, எல்சல்வடார், நிகாரகுவா, கியூபா, கொலம்பியா, பெரு, அர்ஜண்டைனா, சிலி, பராகுவே என்று லத்தீன் அமெரிக்கா முழுவதையும் சின்னாபின்னமாக்கி வந்த குழு முரண்பாடுகளைக் களையத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட அமைதியின் தூதராகவே மக்கள் அவரைப் பார்த்தனர். இருபது லட்சம் மக்கள் மட்டுமே வாழ்ந்து வந்த அவரது சின்னஞ்சிறிய நாடு சோவியத் யூனியனைச் சிதறடிக்கத் திட்டமிட்டு வந்த தொழிலாளர் தலைவர்களிலிருந்து, லிபியாவின் மும்மர் கடாஃபியைப் போன்ற போர்க்குணம் மிக்க இஸ்லாமியத் தலைவர்கள் வரை அனைவருக்கும் ஊக்கமளிக்கும், உணர்வூட்டும் முன்னுதாரணமாகத் திகழ்ந்தது.[5]

மழை கொட்டிக் கொண்டிருந்த அந்த இரவில் காரின் இரைச்சல் மிகுந்த வைப்பர்களினூடாகத் தெரிந்த இந்தப் புகழ் பெற்ற, கவர்ச்சி கரமான, வீரம் செறிந்த மனிதரின் முகம் முதல் பார்வையிலேயே என்னைக் கவர்ந்து விட்டது. பாஸ்டன் பொது நூலகத்திலுள்ள நூல்கள் டோரிஜோஸ் எவ்வளவு ஆழமாகத் தன் கொள்கைகளில் ஊன்றி நிற்கிறார் என்பதை ஏற்கனவே எனக்கு அறிவித்திருந்தன. பனாமா தன் வரலாற்றிலேயே முதல்முறையாக யாருடைய கைப்பொம்மையாகவும் இல்லாமல் தனித்து நின்று கொண்டிருந்தது. டோரிஜோஸ் மாஸ்கோ அல்லது பெய்ஜிங்கின் தூண்டுதலுக்குப் பலியாகவே இல்லை. அவர் சமூக சீர்திருத்தத்திலும், வறுமையை ஒழிப்பதிலும் நம்பிக்கை கொண்டிருந்தார். ஆனால் ஒருபோதும் கம்யூனிசப் பிரச்சாரகராக ஆகவில்லை. காஸ்ட்ரோவைப் போலல்லாமல், அமெரிக்காவின் எதிரிகளோடு கூட்டணிகள் அமைக்காமலேயே அதனிடமிருந்து விடுதலை பெற டோரிஜோஸ் உறுதி கொண்டிருந்தார்.

நான் பனாமா வரும் முன் பாஸ்டன் பொது நூலகத்திலிருந்த ஒரு பத்திரிகையில் டோரிஜோஸ் அமெரிக்கக் கண்டங்களின் வரலாற்றை மாற்றியமைக்கக் கூடிய, அமெரிக்காவின் மேலாதிக்கத்தை வீழ்த்தக் கூடிய மனிதர் என்று புகழப்பட்டிருந்ததைப் படித்திருந்தேன். அதன் ஆசிரியர் விதியின் வெளிப்பாடு (Manifest Destiny) என்ற கோட்பாட்டிலிருந்து தனது கட்டுரையைத் தொடங்கியிருந்தார். இந்தக் கோட்பாடு 1840-களில் அமெரிக்கர்களிடையே மிகவும் பிரபலமாக இருந்தது. கடவுளின் கட்டளைப்படியே அமெரிக்கா வெற்றி கொள்ளப்பட்டது (செவ்விந்தியர்கள் தோற்கடிக்கப்பட்டனர்), கடவுள்தான் செவ்விந்தியர்களையும், காடுகளையும், காட்டெருமைகளையும் அழிக்கும்படி உத்தரவிட்டார், கடவுளின் சித்தப்படிதான் சதுப்பு நிலங்களிலிருந்து நீர் வடிக்கப்பட்டது. ஆறுகள் அணைகளால் சிறையிடப்பட்டன. மக்களையும் இயற்கை வளங்களையும் சுரண்டிக் கொழுக்கும் ஓர் அமைப்புமுறை உருவாக்கப்பட்டது என்பதுதான் இந்தக் கோட்பாட்டின்

அடிப்படையாகும்.

இந்தக் கட்டுரை என் நாடு மற்ற நாடுகளின் பால் கொண்டிருந்த போக்கைப் பற்றிச் சிந்திக்கத் தூண்டிவிட்டது. 1823 - இல் ஜனாதிபதி ஜேம்ஸ் மன்றோவால் பிரகடனப்படுத்தப்பட்ட மன்றோ கோட்பாடு இந்த விதியின் வெளிப்பாட்டுக் கோட்பாட்டை இன்னும் ஓரடி முன்னே நகர்த்தியது. இக்கோட்பாட்டின் அடிப்படையிலேயே 1860-களிலும் பின்பு 1960-களிலும் இரு அமெரிக்கக் கண்டங்களிலும் அமெரிக்காவிற்குச் சிறப்பு உரிமைகள் உள்ளன என்பது வலியுறுத்தப்பட்டது. மத்திய மற்றும் தென் அமெரிக்காவில் அமெரிக்காவின் கொள்கைகளைப் பின்பற்ற மறுக்கும் எந்த ஒரு நாட்டையும் பலவந்தமாக ஆக்கிரமிக்கும் உரிமையும் மன்றோ கோட்பாடு குறிப்பிடும் உரிமைகளில் அடங்கும்.

டொமினிக்கன் குடியரசிலும், வெனிசூவேலாவிலும் அமெரிக்கா தலையிட்ட போதும், பனாமாவின் ‘விடுதலை’ பிரகடனப்படுத்தப்பட்ட போதும் அவற்றை நியாயப்படுத்த டெடி ரூஸ்வெல்ட், மன்றோ கோட்பாட்டைத்தான் முன்னிறுத்தினார். அவருக்குப் பின் வந்த மற்ற ஜனாதிபதிகள் குறிப்பாக டே·ஃபட், வில்சன், பிராங்ளின் ரூஸ்வெல்ட் போன்றவர்கள் இரண்டாம் உலகப் போரின் முடிவுக்குப் பின்பு இந்த மன்றோ கோட்பாட்டை உலகம் முழுவதற்கும் விரிவுபடுத்தினர். இதன் அடிப்படையில்தான் கம்யூனிச அபாயத்தைப் பயன்படுத்தி வியட்நாம், இந்தோனேஷியா உள்ளிட்ட உலகம் முழுவதுமுள்ள நாடுகளுக்கு இக்கருத்தை விரிவாக்கம் செய்ய வாஷிங்டன் முயன்றது.

இப்போது வாஷிங்டன் தன் லட்சியங்களை அடைவதற்குக் குறுக்கே ஒரு மனிதர் நிற்பது போலத் தோன்றியது. டோரிஜோஸுக்கு முன்பே ஃபிடல் காஸ்ட்ரோ, அலண்டே போன்றவர்கள் இருந்து வந்திருந்தாலும் டோரிஜோஸ் மட்டும்தான் கம்யூனிச சித்தாந்தத்திற்கு வெளியே நின்றவர். தனது செயல்பாடுகளைப் புரட்சி என்று ஒரு போதும் கூறிக் கொள்ளாதவர். அவர் பனாமாவுக்கு என்று சில உரிமைகள் உள்ளன என்று மட்டுமே எளிமையாகக் கூறி வந்தார். பனாமாவுக்குத் தனது மக்கள், நிலப்பரப்பு, அதன் குறுக்காக வெட்டிச் சென்ற நீர்வழி ஆகியவற்றின் மீது ஆளுமை செலுத்த உரிமை உள்ளது என்பதுதான் அவரது வாதம். அமெரிக்கொ ா இதில் மறுப்பதற்கு எதுவுமில்லை. அமெரிக்கா தான் அனுபவித்து வரும் உரிமைகளைப் போன்றதே இது என்றும், இதுவும் தெய்வத்தால் அங்கீகரிக்கப்பட்டதுதான் என்றும் எளிமையாகவும் ஏற்றுக்கொள்ளத்தக்க விதத்திலும் அவர் வாதிட்டார்.

டோரிஜோஸ், பனாமா கால்வாய்ப் பரப்பில் அமைந்திருந்த அமெரிக்க இராணுவப் பயிற்சிப் பள்ளியான ஸ்கூல் ஆப் அமெரிக்காஸ் - ஐயும், அமெரிக்கத் தென் பிராந்தியத் தலைமையகத்தின் வெப்ப மண்டலப் போர்முறைப் பயிற்சி

மையத்தையும் கண்டனம் செய்தார். பல ஆண்டுகளாக அமெரிக்கத் தென் பிராந்தியத் தலைமையகத்தின் வெப்ப மண்டலப் போர்முறைப் பயிற்சி மையத்தையும் கண்டனம் செய்தார். பல ஆண்டுகளாக அமெரிக்கா, லத்தீன் அமெரிக்கச் சர்வாதிகாரிகள், தலைவர்கள் மற்றும் இராணுவத் தளபதிகளுக்கு இவற்றில் பயிற்சியளித்து வந்தது. அமெரிக்காவுக்கு வெளியே அமைந்துள்ள இராணுவப் பயிற்சி நிலையங்களிலேயே இவைதான் மிகவும் பெரியவையும், நவீன வசதிகள் கொண்டவையுமாகும். அங்கே இந்தச் சர்வாதிகாரிகளின் வாரிசுகளுக்கும், தளபதிகளுக்கும் விசாரணை முறைகள், திரைமறைவுச் செயல்பாடுகளின் நுணுக்கங்கள், இராணுவத் தந்திரங்கள் ஆகியவை கற்றுத் தரப்பட்டன. இங்கே தாங்கள் பெற்ற பயிற்சியை மாணவர்கள் தங்கள் நாடுகளில் கம்யூனிசத்திற்கு எதிராகப் போரிடவும், எண்ணெய் நிறுவனங்கள் உள்ளிட்ட தனியார் நிறுவனங்களின் சொத்துக்களைப் பாதுகாக்கவும் பயன்படுத்தி வந்தனர். அதோடு இப்பயிற்சி மையங்களில் அமெரிக்காவின் தலைமை அதிகாரிகளோடு கலந்து பழகவும் உறவு ஏற்படுத்திக் கொள்ளவும் அவர்களுக்கு வாய்ப்புகள் வழங்கப்பட்டு வந்தன.

இந்த இராணுவப் பயிற்சி நிலையங்கள் அவற்றால் பலனடைந்த ஒரு சில பணக்காரர்களைத் தவிர, பெரும்பாலான இலத்தீன் அமெரிக்கர்களால் அடியோடு வெறுக்கப்பட்டன. பல இலத்தீன் அமெரிக்க நாடுகளில் சர்வாதிகார அரசுகளின் தூண்களாக விளங்கி வரும் வலதுசாரி சித்ரவதையாளர்கள் மற்றும் கொலைகாரக் குழுக்களின் பிறப்பிடமாகவே இப்பயிற்சி மையங்கள் அறியப்பட்டு வந்தன. டோரிஜோஸ் இந்த இராணுவப் பயிற்சி மையங்கள் தனது நாட்டில் இருப்பதைத் தான் விரும்பவில்லை என்பதையும், பனாமா கால்வாய்ப் பகுதி (பனாமா கால்வாயின் இரு கரைகளிலும் உள்ள பகுதி அமெரிக்காவின் கட்டுப்பாட்டில் இருந்து வந்தது) தனது நாட்டின் எல்லைகளுக்குள் சேர்க்கப்பட வேண்டுமென்று தான் கருதுவதையும் தெளிவுபடுத்தியிருந்தார்.

சுவரொட்டியில் தெரிந்த கவர்ச்சிகரமான ஜெனரலின் முகத்திற்குக் கீழே எழுதப்பட்டிருந்த சொற்களைப் படித்தபோது என் முதுகெலும்பில் ஒரு ஜில்லிப்பு ஓடியது. “ஓமரின் லட்சியம் விடுதலை இலட்சியத்தைக் கொல்லும் ஏவுகணை இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை! இது ஒரு தொடக்கம் மட்டும்தான். டோரிஜோஸின் எதிர்ப்பு கூடும் என்ற முன்னுணர்வு என் மனதில் நிழல் போலத் தோன்றியது.

வெப்ப மண்டலப் பிரதேச புயல்மழை காரின் கண்ணாடிகளைச் சுழன்று சுழன்று தாக்கியது. சிக்னலில் விளக்குகள் பச்சைக்கு மாறின. ஓட்டுனர் எங்களுக்கு முன்னிருந்த காருக்கு ஹாரன் கொடுத்தார். நான் என் நிலையைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினேன். பனாமாவிற்கான,

ஒருங்கிணைந்த வளர்ச்சித் திட்டத்திற்கான (Comprehensive) ஒப்பந்தத்தை இறுதி செய்யவே நான் இங்கே அனுப்பப்பட்டுள்ளேன். பனாமாவைப் பொறுத்தவரை இதுதான் மெய்ன்-க்கு உண்மையிலேயே முதன்முதலான திட்டமாகும். உலக வங்கி, இண்டர் அமெரிக்கன் வளர்ச்சி வங்கி, யு.எஸ்.ஏ.ஐ.டி (USAID) போன்றவை பனாமாவில் ஆற்றல் வளத்துறை (energy), போக்குவரத்து, மற்றும் விவசாயத் துறைகளில் பல ஆயிரக்கணக்கான கோடி டாலர்களை முதலீடு செய்வதற்கான அடிப்படையை இந்தத் திட்டம் ஏற்படுத்திக் கொடுக்கும். வளர்ச்சிக்கான முதலீடு என்கிற இந்த விஷயங்களெல்லாம் ஒரு வெளிப்பூச்சுக்காகத்தான். உண்மையான நோக்கம் பனாமாவை என்றென்றைக்குமாகக் கடனில் மூழ்கடித்து அதன் மூலம் அதைப் பழையபடி கைப்பொம்மையாக ஆக்கி விடுவதுதான்.

இருளில் கார் நகர்ந்தபோது என்னுள் ஒரு குற்றவுணர்ச்சி தலை காட்டியது. ஆனால் அதை உடனடியாக நசுக்கிவிட்டேன். எனக்கென்ன கவலை? அதுவும் ஆன்மாவையே விற்று விட்ட பிறகு! ஜாவாவில் முக்குளித்து எழுந்துவிட்ட பிறகு! எனக்குக் கிடைத்துள்ள இந்த அரிதிலும் அரிதான வாய்ப்பை நன்றாகப் பயன்படுத்திக் கொள்ளக்கூடிய வாய்ப்புகள் உள்ளன. ஒரே வீச்சில் பணம், புகழ், அதிகாரம் அனைத்தையும் அடைந்துவிட இப்போது என்னால் முடியும்.

[1] பூசந்தி: இரு பெரும் நிலப்பரப்புகளை இணைக்கும குறுகிய நில இடுக்கு. (மொ-ர்)

[2] பார்க்க David McCulloug, The Path Between te Seas: The Creation of the Panama Canal 1870-1914 (New York: Simon and Schuster, 1999); William Friar, Portrait of the Panama Canal: From Construction to the Twenty-First Century (New York: Craphic Arts Publishing Company, 1999); Graham Greene, Conversations with the General (New York: Pocket Books, 1984).

[3] பார்க்க “”Zapata Petroleum Corp.,’’ Fortune, April 1958, p.248; Drawin Payne, Initiative in Energy: Dresser Industries, Inc. 1880-1978 (New York: Simon and Schuster, 1979); Steve Pizzo et a;., Inside Job: The Looting of America’s Savings and Loans (New York: McGraw Hill, 1989); Gary Webb, Dark Alliance: The CIA, The Contras, and the Crack Cocaine Dennet, Thy Will Be Done, The Conquest of the Amazon: Nelson Rockfeller and Evangelism in te Age of Oil (New York: HarperCollins, 1995).

[4] Manuel Noriega with Peter Eisner, The Memories of Manuel Noriega, America’s Prisoner (New York: Random House, 1997); Omar Torrijos Herrera, Ideario (Editorial Universitaria Centroamericano, 1983); Graham Creene, Conversations with the General (New York: Pocket Books, 1984).

[5] Graham Greene, Conversations with the General (New York: Pocket Books, 1984; Manuel Noriega with Peter Eisner, The Memories of Manuel Noriega, America’s Prisoner (New York: Random House, 1997).

# 11

# கால்வாய்ப் பிரதேசத்தின் கடல் கொள்ளையர்கள்

நான் பனாமா வந்து சேர்ந்த மறுநாள் எனக்கு ஊர் சுற்றிப் பார்க்க உதவும் நோக்கில் அரசு ஃபிடல் என்ற ஒருவனை அனுப்பி வைத்தது. முதல் பார்வையிலேயே எனக்கு அவனைப் பிடித்துவிட்டது. ஒடிசலாக உயரமாக இருந்த ஃபிடல் தன் நாடு குறித்து மிகுந்த கர்வம் கொண்டிருந்தான். அவனது கொள்ளுத் தாத்தாவின் கொள்ளுத் தாத்தா விடுதலைப் போரில் பொலிவரோடு இணைந்து ஸ்பெயினுக்கு எதிராகப் போரிட்டவர் என்று தெரிவித்தான். நானும் டாம்பெய்னின் வழிவந்தவன் என்று அவனிடம் சொன்னேன். ஃபிடல் ஸ்பானிஷில் பொது அறிவு படித்திருக்கிறான் என்று தெரிந்தபோது ஆச்சரியமாக இருந்தது. அவனுக்கு ஆங்கிலம் தெரியும் என்றாலும் ஸ்பானிஷில் என்னால் சரளமாகப் பேச முடியும் என்று கண்டு கொண்ட போது அவன் உணர்ச்சி வசப்பட்டது வெளிப்படையாகத் தெரிந்தது.

“இங்கே ஆண்டுக்கணக்காக வாழ்ந்து வரும் உங்கள் மக்களில் பலர் எங்கள் மொழியைக் கற்றுக் கொள்ள கொஞ்சம் கூட அக்கறை கொள்வதே கிடையாது’’ என்றான்.

அவன் புதிய பனாமா என்றழைக்கப்பட்ட, நகரின் செல்வச் செழிப்பு மிக்க பகுதியூடாக என்னைக் காரில் அழைத்துச் சென்றான். கண்ணாடியாலும், உருக்காலும் நிர்மாணிக்கப்பட்ட ஏராளமான நவீனமயமான கட்டடங்கள் விண்ணைத் தொடுவது போல உயர்ந்து நின்றன. ரியோகிரான்டேக்குத் தெற்கில் பனாமாவில்தான் அதிக அளவில் சர்வதேச வங்கிகள் உள்ளன என்று ஃபிடல் விளக்கினான்.

“நாங்கள் அமெரிக்காக்களின் சுவிட்சர்லாந்து என்று அழைக்கப்படுகிறோம். எங்கள் வாடிக்கையாளர்களிடம் மிகக் குறைவான கேள்விகளே கேட்கப்படுகின்றன,’’ என்றான்.

பசிபிக் கடலில் சூரியன் மறையும் நேரத்தில் விரிகுடாவின் கரை மீது வளைந்து சென்ற ஒரு தெருவிற்கு நாங்கள் வந்து சேர்ந்தோம். அங்கே நீண்ட வரிசையில் கப்பல்கள் நிறுத்தப்பட்டிருந்தன. “கால்வாயில் ஏதாவது பிரச்சனையா?’’ என்று நான் கேட்டபோது “அது எப்போதும் அப்படித்தான்’’ என்று ஃபிடல் சிரிப்புடன் பதிலளித்தான்.

“அவை தங்கள் முறைக்குக் காத்திருக்கின்றன. இவற்றில் பாதி ஜப்பானிலிருந்து வருகின்றன அல்லது ஜப்பானுக்குச் செல்கின்றன. அமெரிக்காவை விட ஜப்பானுக்குத்தான் அதிகக் கப்பல்கள்

செல்கின்றன''.

''இது எனக்கு முற்றிலும் புதிய செய்தி'' என்பதை நான் ஆச்சரியத்துடன் ஒப்புக் கொண்டேன்.

"எனக்கு ஆச்சரியம் ஒன்றமில்லை. வட அமெரிக்கர்களுக்கு வெளியுலகம் பற்றி அதிகம் தெரியாது!''.

எங்கள் கார் ஒரு அழகான பூங்காவிற்கு அருகே நின்றது. பூங்காவிற்கு அண்மையில் இருந்த ஒரு பழங்காலக் கோட்டையின் இடிபாடுகளின் மேல் போகன் வில்லாக் கொடிகள் படர்ந்திருந்தன. அங்கிருந்த ஒரு கல்வெட்டு இந்தக் கோட்டை ஆங்கிலக் கடல் கொள்ளைக்காரர்களின் தாக்குதல்களிலிருந்து நகரத்தைக் காப்பாற்றுவதற்காகக் கட்டப்பட்டது என்று அறிவித்தது. பூங்காவில் ஒரு குடும்பம் மாலைச் சுற்றுலாவிற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தது. ஒரு அப்பா, அம்மா, இரண்டு குழந்தைகள், அப்புறம் குழந்தைகளின் தாத்தா போலத் தோன்றிய ஒரு வயதான மனிதர். அந்தச் சூழலில் இருந்த அமைதி அந்த ஐந்து பேரையும் தழுவிக் கொண்டிருப்பது போலத் தோன்றியது. என்னுள் மெலிதாக ஒரு ஏக்கம் தோன்றியது. ''சுற்றுலாப் பயணிகளா'' என்று நான் கேட்டதற்கு அவர்கள் வாய்விட்டுச் சிரித்தார்கள். குழந்தைகளின் அப்பா போலத் தோன்றியவர், தாங்கள் மூன்று தலைமுறையாக கால்வாய்ப் பகுதியில் வசித்து வரும் அமெரிக்கர்கள் என்றும், தான் மூன்றாவது தலைமுறையைச் சேர்ந்தவன் என்றும் கர்வத்துடன் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார்.

"என் தாத்தா இந்தக் கால்வாய் கட்டப்பட்டு மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு இங்கே வந்தார். கடுப்பரண்களுக்குள் கப்பல்களை இழுத்து நிறுத்துவதற்காகப் பயன்படுத்தப்பட்ட டிராக்டர் ஓட்டுநராக அவர் இங்கே பணியாற்றினார். பின்பு அவர் பிக்னிக் டேபிளை அமைக்கக் குழந்தைகளுக்கு உதவிக் கொண்டிருந்த முதியவர் ஒருவரைச் சுட்டிக் காட்டினார். "என் அப்பா ஒரு பொறியாளர். நான் அவர் வழியில் பொறியாளனாகப் பணியாற்றி வருகிறேன்.''

எங்களுடன் நின்று கொண்டிருந்த குழந்தைகளின் அம்மா டேபிள் அமைக்கப்பட்டுக் கொண்டிருந்த இடத்திற்குத் திரும்பினாள். சூரியன் நீலக்கடலில் மெல்ல மெல்ல முழுகியது. மோனட்டின் ஓவியங்களை நினைவுபடுத்திய அற்புதமான காட்சி அது. நான் அவரிடம், அவர்கள் அமெரிக்கக் குடிமகன்களா என்று கேட்டேன்.

அவர் என்னை வியப்புடன் பார்த்தார். என் கேள்வியை அவரால் நம்ப முடியவில்லை போலத் தோன்றியது. "பின்னே? கால்வாய்ப் பகுதி அமெரிக்கப் பிரதேசம்தானே!". பையன் ஓடி வந்து மாலையுணவு தயாராகிவிட்டது என்று அப்பாவிடம் அறிவித்தான்.

"உங்கள் மகன் நாலாவது தலைமுறையாக இருப்பானா?''.

அவர் பிரார்த்தனை செய்வதற்காகக் கைகளை விரித்து உயர்த்தினார். “அவனுக்கு அந்த வாய்ப்பு- கிடைக்க வேண்டுமென்று தான் தினமும் கடவுளைத் தொழுகிறேன். கால்வாய்ப் பகுதியில் வாழ்வது அற்புதமான வாழ்க்கை’’ என்றார். பின்பு அவர் ஃபிடலை உற்றுப் பார்த்தபடி தொடர்ந்தார். “நாம் இந்தக் கால்வாயை இன்னொரு ஐம்பது ஆண்டுகளுக்குக் காப்பாற்றி வைக்க வேண்டும். இந்தக் கொடுங்கோலன் டோரிஜோஸ் சலசலப்புகளை எழுப்புகிறான். அபாயகரமான ஆள்’’.

திடீரென்று ஒரு அவசரம் என்னைப் பற்றிக் கொண்டது. நான் ஸ்பானிஷில் சொன்னேன், “அடியோஸ் (குட்பை) நீங்களும் உங்கள் குடும்பமும் சந்தோஷமாக வாழ்ந்து பனாமாவின் பண்பாட்டைப் பற்றி நிறையக் கற்றுக் கொள்வீர்கள் என்று நம்புகிறேன்’’.

அவர் ஒரு வெறுப்பான பார்வையை என் மேல் வீசினார். “நான் அவர்கள் மொழியைப் பேசுவதில்லை’’. பின்பு விருட்டென்று திரும்பி பிக்னிக் மேஜையை நோக்கி நடக்கத் தொடங்கினார்.

ஃபிடல் என் தோள் மீது கைபோட்டுக் காதருகே கிசுகிசுத்தான் “நன்றி’’.

நகருக்குத் திரும்பிய பின்பு சேரி என்று அவன் குறிப்பிட்ட பகுதிக்கு காரைச் செலுத்தினான்.

“இது அப்படியொன்றும் மோசமான சேரி அல்ல. இதைவிட மோசமானவைகளும் இருக்கின்றன. நீங்களே நேரில் பார்த்துத் தெரிந்து கொள்ளுங்கள்’’.

சாலையோரத்திலிருந்த சாக்கடைகளில் கழிவுநீர் தேங்கி நின்றது. அதனருகே மர வீடுகள் வரிசை வரிசையாகக் காணப்பட்டன. தொட்டால் விழுந்துவிடும் போலத் தோன்றிய இந்தக் குடிசைகள் சாக்கடைக் குளங்களில் மூழ்கிய சிதிலமான படகுகள் போலிருந்தன. முடை நாற்றம் காரில் நிறைந்தது-. வீங்கிய வயிறுகளைக் கொண்டிருந்த குழந்தைகள் ஓடிவந்து என்னை ‘அங்கிள்’ என்றழைத்துப் பிச்சை கேட்டன. எனக்கு ஜகார்த்தாவின் நினைவு வந்தது.

சுவர்கள் ஏறக்குறைய சுவரொட்டிகளால் மறைக்கப்பட்டிருந்தன. சில இடங்களில் இதயத்தின் படங்கள் வரையப்பட்டு ஜோடிகளின் பெயர்கள் கிறுக்கப்பட்டிருந்தன. அமெரிக்காவின் மீது வெறுப்பைக் கக்கும் முழக்கங்கள் இடம்பெற்றிருந்த சுவரொட்டிகள்தான் பெரும்பான்மையாகக் காணப்பட்டன. “திரும்பிப் போ கிரிங்கோ! எங்கள் கால்வாயில் மலம் கழிப்பதை நிறுத்து!’’ “நிக்ஸனிடம் சொல்லு, பனாமா வியட்நாம் அல்ல.’’ ஒரு சுவரொட்டியில் எழுதப்பட்டிருந்தது என் இதயத்தைச் சில்லிட வைத்தது. “விடுதலைக்காக மரணம் அடைவதே ஏசுவின் வழி’’. இவற்றினூடே ஓமர் டோரிஜோஸின் சவரொட்டிகளும் இடம் பெற்றிருந்தன.

“சேரி போதும். இனி இன்னொரு பக்கத்தைப் பார்க்கலாம்’’ என்றான் ஃபிடல். “என்னிடம் அரசு ஆவணங்கள் உள்ளன. நீங்கள் அமெரிக்கக் குடிமகன். எனவே நாம் அங்கே செல்லத் தடையேது மில்லை’’. பொன்னிறமாக (மஜண்டா) ஒளிர்ந்து கொண்டிருந்த வானத்திற்குக் கீழே தெரிந்த கால்வாய்ப் பகுதியை நோக்கி எங்கள் கார் திரும்பியது. முரண்பாட்டைக் காண ஓரளவுக்கு நான் தயாராகத்தான் இருந்தேன் என்றாலும் கண் முன் தோன்றிய யதார்த்தம் என்னைப் பேச்சிழக்க வைத்தது. இப்படியொரு செல்வச் செழிப்பை இங்கே நான் எதிர்பார்க்கவேயில்லை. பிரம்மாண்டமான ஆடம்பரமான மாளிகைகள், கால்பந்து மைதானங்கள், அரங்குகள், கடைகள், சீர்படுத்தப்பட்ட புல் தரைகள்……

“இங்குள்ள அனைத்துமே அமெரிக்காவின் சொத்து. அனைத்து வியாபார நிறுவனங்கள் மற்றும் சூப்பர் மார்க்கெட்டுகள், சலூன்கள், அழகு நிலையங்கள், உணவகங்கள் எல்லாமே! எல்லாமே! இவையனைத்துமே பனாமாவின் சட்டங்களுக்கும் வரிகளுக்கும் அப்பாற்பட்டவை. பதினெட்டு துவாரங்கள் கொண்ட கோல்ப் மைதானங்கள் இங்கே ஏழு உள்ளன. இங்குள்ளவர்களின் வசதிக்காகச் சுற்றிலும் அமெரிக்காவுக்குச் சொந்தமான தபால் நிலையங்கள் உள்ளன. நீதிமன்றங்களும், பள்ளிக்கூடங்களும் கூட அமெரிக்க நாட்டைச் சேர்ந்தவைதான். உண்மையில் இது நாட்டுக்குள் ஒரு நாடு’’.

“அவமானகரமான விஷயம்தான்!’’

ஆழம் பார்ப்பது போல் ஃபிடல் என்னை உற்றுப் பார்த்தான்.

“ஆமாம், சரியான சொல். நாம் கடந்து வந்தோமே அந்தச் சேரியில் ஒரு நபரின் சராசரி வருட வருமானம் ஆயிரம் டாலருக்கும் குறைவு. 30 சதவீதம் பேர்களுக்கு வேலையில்லை. உண்மையில் அந்தச் சேரியில் யாராலும் ஆயிரம் டாலரை நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. வேலை கிடைக்குமென்ற பேச்சுக்கே இங்கு இடமில்லை’’.

“என்னதான் இங்கே நடக்கிறது?’’

ஃபிடலின் பார்வை கோபத்திலிருந்து வருத்தத்திற்கு மாறியது.

“எனக்குத் தெரியாது. ஆனால் டோரிஜோஸ் முயற்சி செய்கிறார் என்று தோன்றுகிறது. அதனால் அவருக்கு மரணம் கூட நிகழலாம். ஆனால் அவர் தன்னால் முடிந்ததை எல்லாம் செய்கிறார். உண்மையிலேயே மக்களுக்காகப் போராடி விழக்கூடிய மனிதர் அவர்’’.

கால்வாய்ப் பகுதியிலிருந்து வெளியேறும் போது ஃபிடல் முறுவலித்தான். “நீங்கள் நடனமாட விரும்புகிறீர்களா?’’ அவன் என் பதிலுக்குக் காத்திருக்கவில்லை. “இரவு உணவுக்குப் பிறகு பனாமாவின் அந்த முகத்தையும் நீங்கள் பார்த்து விடலாம்’’.

# 12

# இராணுவ வீரர்களும் விபசாரிகளும்

சுவையான இறைச்சித் துண்டு, குளிர்ந்த பீருடன் இரவு உணவை முடித்த பின், எங்கள் வாடகைக் கார் ஃபிடலின் உத்தரவின்படி ஒரு இருண்ட வீதிக்குச் சென்றது. இந்தப் பகுதியில் நடந்து செல்வது நல்லதல்ல என்றான் அவன். “இங்கே வருவதாயிருந்தால் முன்கூட்டியே கார் பிடித்துக் கொள்ளுங்கள். முன் கதவு வரை அதை விட்டு இறங்காதீர்கள்'' என்று கூறிவிட்டு அவன் ஒரு வேலியைச் சுட்டிக் காட்டி அதற்குப் பின்னே இருப்பதுதான் கால்வாய்ப் பகுதி என்றான்.

கார்கள் நிறுத்தப்பட்டிருந்த இடத்தில் ஒரு காலி இடத்தைக் கண்டுபிடித்து எங்கள் காரை நிறுத்தினோம். விந்தி விந்தி எங்களை நெருங்கிய கிழவன் முதுகில் ஃபிடல் நட்புடன் தட்டிக் கொடுத்தான்.

பின்பு தன் காரை வாஞ்சையுடன் தடவியபடி “என் சீமாட்டியை நன்றாகப் பார்த்துக் கொள்'' என்று கூறிவிட்டுக் கிழவனின் கையில் ஒரு நோட்டைத் திணித்தான்.

வண்டி நிறுத்துமிடத்திற்குக் குறுக்காகச் சென்ற நடைபாதையில் நடந்தபோது திடீரென்று பளிச்சிடும் நியான் விளக்குகளால் ஒளியூட்டப்பட்ட ஒரு தெரு எதிரே தோன்றியது. இரண்டு சிறுவர்கள் குச்சிகளைத் துப்பாக்கிகளைப் போல ஏந்தியபடி சுடுவது போல சத்தமெழுப்பிக் கொண்டு ஓடி வந்தார்கள். ஒரு பையன் ஃபிடலின் கால்களில் மோதிக் கொண்டு ஓடும்போது, அந்த பையன் ஃபிடலின் தொடையளவுக்கே உயரம் கொண்டவனாய் இருந்தான்.

“மன்னித்துக் கொள்ளுங்கள் சார்'' மோதிய பையன் ஸ்பானிஷில் திக்கினான்.

ஃபிடல் பையனின் தோளில் கையை வைத்து அவனை ஆசுவாசப்படுத்தினான். “பரவாயில்லை தம்பி. நீயும் உன் அண்ணனும் எதைப் பார்த்துச் சுட்டுக் கொண்டிருக்கிறீர்கள்?''

இன்னொரு சிறுவனும் எங்களை நெருங்கி வந்தான். முதலாமவனின் தோள்களைத் தழுவியபடி “என் தம்பிதான், மன்னித்து விடுங்கள்'' என்று அவனும் இன்னொரு முறை மன்னிப்புக் கேட்டுக் கொண்டான்.

“அது ஒன்றுமில்லை'' ஃபிடல் மென்மையாகக் கூறினான்.

“வலிக்கிற அளவுக்கு ஒன்றுமில்லை. எதைப் பார்த்துச் சுட்டுக் கொண்டிருக்கிறீர்கள் என்றுதான் கேட்டுக் கொண்டிருந்தேன். நானும்

இதே விளையாட்டை விளையாடியவன்தான்’’.

பையன்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். பெரிய பையன் புன்னகை செய்தான். “கால்வாய்ப் பகுதியைச் சேர்ந்த அமெரிக்க ஜெனரல் ஒருவன் என் அம்மாவைக் கற்பழிக்க முயன்றான். நான் அவனை அவனுடைய இடத்திற்கு விரட்டிக் கொண்டிருக்கிறேன்’’.

ஃபிடல் ஓரக்கண்ணால் என்னை நோக்கினான். “அவன் இடம் எது?’’

“அமெரிக்காவில் இருக்கும் அவனுடைய வீடுதான்’’.

“உங்கள் அம்மா இங்கே வேலை செய்கிறார்களா?’’

“அதோ அங்கேதான்’’ பையன்கள் பெருமையாகத் தெரு முனையில் எரிந்து கொண்டிருந்த நியான் விளக்கைச் சுட்டிக் காட்டினார்கள். “மது விடுதியில் பரிமாறுபவராக வேலை செய்கிறார்’’.

“சரி, போங்கள்’’ ஃபிடல் ஆளுக்கொரு நாணயம் கொடுத்தான். “பார்த்து விளையாடுங்கள். வெளிச்சத்திலேயே இருங்கள்’’.

நாங்கள் திரும்பவும் நடக்கத் தொடங்கியபோது பனாமா நாட்டுப் பெண்கள் விபசாரத்தில் ஈடுபடுவது சட்டப்படி தடை செய்யப்பட்டுள்ளது என்று ஃபிடல் விளக்கினான். “அவர்கள் மது விடுதியில் பரிமாறலாம், நடனமாடலாம், ஆனால் உடலை விற்கக்கூடாது. அந்த வேலை இறக்குமதி செய்யப்பட்ட பெண்களுக்காகவே ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளது’’.

நாங்கள் நுழைந்த மது விடுதியில் ஒரு பிரபலமான அமெரிக்கப் பாடல் செவிப்பறையைக் கிழிப்பது போல் உச்சஸ்தாயியில் அலறிக் கொண்டிருந்தது. அந்தச் சூழலுக்குப் பழகிக் கொள்ள எனக்குக் கொஞ்ச நேரம் பிடித்தது. இரண்டு தடித்த அமெரிக்க இராணுவ வீரர்கள் கதவருகே நின்று கொண்டிருந்தனர். அவர்கள் தங்கள் கைகளைச் சுற்றி இராணுவப் போலீசைச் சேர்ந்தவர்கள் என்று அடையாளம் காட்டும் பட்டைகளை அணிந்திருந்தார்கள்.

ஃபிடல் மது விடுதிக்குள் வழிகாட்டி என்னை அழைத்துச் சென்றான். நான் மேடையைப் பார்த்தேன். தலையில் அணிந்திருந்த தொப்பிகளைத் தவிர வேறெந்த ஆடையும் இல்லாமல் மூன்று இளம் பெண்கள் நடனமாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒரு பெண் மாலுமிகள் அணியும் தொப்பியும், இன்னொருத்தி ஒரு பச்சை நிறமான தொப்பியும், மூன்றாமவள் கௌபாய் தொப்பியும் அணிந்திருந்தனர்.

அவர்கள் உடலமைப்பு சுண்டியிழுக்கக் கூடியதாக இருந்தது. அவர்கள் போட்டி போட்டுக் கொண்டு நடனமாடிக் கொண்டிருந்தாலும் தங்களுக்குள் விளையாடிக் கொண்டிப்பது போலத்தான் தோன்றியது.

இந்த இசை, நடனம், மேடை எல்லாமே ஃபாஸ்டனில் உள்ள எந்த ஒரு டிஸ்கோவையும் போலத்தான் இருந்திருக்கும், அந்தப் பெண்கள் மட்டும் நிர்வாணமாக இல்லாமலிருந்தால்!

ஆங்கிலத்தில் பேசிக் கொண்டிருந்த ஒரு இளைஞர்கள் குழுவை நாங்கள் தாண்டிச் சென்றோம். அவர்கள் டி-சர்ட்டுகளும், நீல ஜீன்ஸ்களும் அணிந்திருந்தாலும் ஒட்ட வெட்டப்பட்ட கிராப் தலைகள் அ வ ர் க ள் கால்வாய்ப் பகுதியிலிருந்த இராணுவத்தளத்தைச் சேர்ந்தவர்கள் என்பதைக் காட்டின. ஃபிடல் ஒரு பணிப் பெண்ணின் தோளைத் தட்டினான். திடுக்கிட்டுத் திரும்பிய அவள் மகிழ்ச்சிக் கூச்சலுடன் அவன் தோளில் தொற்றிக் கொண்டாள். இளைஞர்கள் குழு இதைக் கவனித்து வெறுப்பை உமிழும் பார்வைகளைத் தங்களுக்குள் பரிமாறிக் கொண்டது. ஒருவேளை விதியின் வெளிப்பாடு கோட்பாட்டுக்கு பனாமாப் பெண்களும் விதிவிலக்கல்ல என்று அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்களோ என்று எனக்கு ஆச்சரியம் ஏற்பட்டது. அந்தப் பணிப்பெண் எங்களை ஒரு மூலைக்கு அழைத்துச் சென்றாள். பின்பு எங்கேயோ சென்று ஒரு சிறிய மேசையையும் இரண்டு நாற்காலிகளையும் கொண்டு வந்தாள்.

ஃபிடல் எங்களுக்கருகே உட்கார்ந்திருந்தவர்களுடன் ஸ்பானிஷில் வாழ்த்துகளைப் பரிமாறிக் கொண்டான். இராணுவ வீரர்களைப் போலில்லாமல் இவர்கள் அரைக்கைச் சட்டைகளும் மடிப்புக் கலையாத கால்சட்டைகளும் அணிந்திருந்தனர். இரண்டு பல்போவா பீர் பாட்டில்களுடன் வந்த பணிப்பெண் அவற்றை மேசையில் வைத்துவிட்டுத் திரும்பியபோது ஃபிடல் அவள் பின்புறத்தில் தட்டினான். அவள் சிரிப்புடன் ஒரு முத்தத்தைக் காற்றில் பறக்கவிட்டாள். நான் கலவரத்துடன் அந்த இளைஞர்களை நோக்கினேன். அவர்கள் கவனம் நடனத்தில் லயித்திருந்தது எனக்கு நிம்மதியளித்தது.

விடுதியிலிருந்தவர்களில் பெரும்பாலோர் ஆங்கிலம் பேசும் இராணுவத்தினர் என்றாலும் பனாமாவினரும் அங்கே இருக்கத்தான் செய்தனர். அவர்களது தலைமுடியும் - அது பார்வைக்குத் தப்பவே தப்பாது - ஜீன்ஸ், டி-ஷர்ட்டில் இல்லாததும் பனாமாவினரைத் தனித்துக் காட்டின. அவர்களில் சிலர் மேசைகளில் உட்கார்ந்திருந்தனர். மற்றவர்கள் சுவர்களில் சாய்ந்து நின்று கொண்டிருந்தனர். ஆனால் பனாமாவினர் எல்லோருமே ஏதோ ஆட்டு மந்தையைக் காவல் காக்கும் கூலியாட்களைப் போல் மிகுந்த எச்சரிக்கையுடனிருந்தனர்.

இறுக்கமான குட்டைப் பாவாடைகளும், டீ-ஷர்டுகளும், ஜீன்ஸ்களும், உடலை இறுக்கிப் பிடிக்கும் விதம் விதமான உடைகளும் ஹை ஹீல்ஸ்களும் அணிந்திருந்த பெண்கள் மேசைகளைச் சுற்றிச் சுற்றி வந்தனர். அவர்கள் ஆட்களின் மடியில் உட்கார்ந்தும், பணிப் பெண்களை நோக்கிக் கூச்சலிட்டுக் கொண்டும், சுழன்றும், பாடியும்

முறை வைத்துக் கொண்டு மேடையில் ஏறி நடனமாடிக் கொண்டும் தொடர்ந்து இயங்கிக் கொண்டிருந்தனர். அவர்களில் ஒருத்தி விக்டோரியா மகாராணி காலத்து கவுனும் முகத்திரையும் அணிந்திருந்தாள். மற்றொருத்தி நீச்சலுடை மட்டுமே அணிந்திருந்தாள். மிக மிக அழகான பெண்களால் மட்டுமே அந்தச் சூழலில் சமாளித்து நிற்க முடியும் என்பது தெளிவாகத் தெரிந்தது. பனாமாவிற்கு வந்து குவிந்துள்ள பெண்களின் எண்ணிக்கை என்னை மலைக்க வைத்தது. எந்தளவுக்கு நெருக்கடியிருந்தால் இவர்கள் இந்த நிலைக்குத் தள்ளப்பட்டிருப்பார்கள் என்று திகைப்படைந்தேன்

“இந்தப் பெண்கள் எல்லோருமே வெளிநாட்டினரா?’’ இசையின் இரைச்சலுக்கு மேலாக ஃபிடலிடம் உரக்கக் கேட்டேன்.

அவன் தலையசைத்தான். பின்பு பணிப்பெண்களைச் சுட்டிக் காட்டினான். “இவர்களைத் தவிர. பணிப்பெண்கள் மட்டும் பனாமாவினர்…’’.

“எந்த நாடுகளைச் சேர்ந்தவர்கள்?.

“ஹோண்டுராஸ், எல்சால்வடார், நிகாரகுவா, குவாதமாலா’’.

“பக்கத்து நாடுகள் இல்லையா!’’.

“ரொம்பவும் பக்கத்திலுள்ள நாடுகள் என்று சொல்ல முடியாது. கொல்பியாவும், கோஸ்டா ரீகாவும்தான் எங்களுக்கு மிகவும் பக்கத்திலுள்ள நாடுகள்’’.

எங்களுக்கு இடத்தைக் காட்டிய பணிப்பெண் ஃபிடலின் முழங்காலில் உட்கார்ந்து கொண்டாள். அவன் கை இயல்பாக அவள் முதுகைத் தடவிக் கொடுத்தது.

“கிளாரிஸ்ஸா, என் வட அமெரிக்க நண்பனுக்கு அவர்கள் ஏன் தங்கள் நாடுகளை விட்டு வெளியேறி இங்கே வந்திருக்கிறார்கள் என்று சொல்லு’’ ஃபிடல் மேடையைக் குறிப்பாக நோக்கியபடி கூறினான்.

அங்கே மூன்று புதிய இளம் பெண்கள், ஆடி முடித்துவிட்டு உடையணிந்து கொண்டிருந்தவர்களிடமிருந்து தொப்பிகளைப் பெற்றுக் கொண்டிருந்தார்கள்-. இசை சல்ஸாவுக்கு மாறியது. புதிதாக வந்தவர்கள் நடனமாடியபடியே உடைகளைக் கழற்றத் தொடங்கினார்கள்.

கிளாரிஸ்ஸா தனது வலது கரத்தை நீட்டினாள். “உங்களைச் சந்தித்ததில் மகிழ்ச்சி’’ பின்பு காலி பாட்டில்களைச் சேகரித்துக் கொண்டே கூறினாள். “அவர்கள் கொடுங்கோன்மையிலிருந்து தப்பத் தான் இங்கே வந்துள்ளார்கள். ஃபிடலின் கேள்விக்கு பதில் இதுதான். இன்னும் இரண்டு பல்யோஸா கொண்டு வருகிறேன்’’.

அவள் போன பிறகு நான் ஃபிடலிடம் திரும்பினேன்.

“உண்மையைச் சொல்லுங்கள் அவர்கள் அமெரிக்க டாலர்களுக்காகத்தானே இங்கே இருக்கிறார்கள்?’’

“உண்மைதான். ஆனால் ஃபாஸிஸ்ட் சர்வாதிகாரிகளின் நாடுகளிலிருந்து மட்டும் ஏன் இவ்வளவு பேர் ஓடி வருகிறார்கள்?’’.

நான் மேடையைப் பார்த்தேன். அந்தப் பெண்கள் கலகலவென்று சிரித்தபடி மாலுமித் தொப்பியைப் பந்து போல் வீசிக் கொண்டிருந்தார்கள். ஃபிடலின் கண்களை உற்று நோக்கியபடி கேட்டேன். “நீங்கள் விளையாடவில்லை இல்லையா?’’.

“இது விளையாட்டாக இருக்க வேண்டுமென்றுதான் நானும் விரும்புகிறேன். ஆனால் உண்மை அப்படியில்லை. இந்தப் பெண்களில் பெரும்பாலானவர்கள் தங்கள் குடும்பங்களை இழந்தவர்கள்; அப்பாக்கள், சகோதரர்கள், கணவர்கள், காதலர்கள் என்று யாரேனும் ஒருவரையாவது இழந்தவர்கள். மரணத்தினூடாகவும், சித்ரவதையின் ஊடாகவும் வளர்ந்தவர்கள். விபசாரமும், நடனமும் அவர்களுக்கு அவ்வளவு மோசமானதாகத் தெரிவதில்லை. இங்கே நிறைய சம்பாதிக்கலாம். பின்பு வேறெங்காவது சென்று புது வாழ்க்கையைத் தொடங்கலாம். ஒரு சிறிய கடையை வாங்கலாம், அல்லது ஒரு கபே…’’.

திடீரென்று எழுந்த கூச்சல் அவன் பேச்சை இடை மறித்தது. ஒரு பணிப்பெண் இராணுவ வீரர்களில் ஒருவனை நோக்கித் தன் முஷ்டியை வீசிக் கொண்டிருந்தாள். அவன், அவள் மணிக்கட்டைப் பிடித்து முறுக்கத் தொடங்கினான். அவள் அலறிக் கொண்டு தன் முழங்காலில் மடிந்து சரிந்தாள். கையை முறுக்கியவன் தன் நண்பனைப் பார்த்து ஏதோ கூச்சலிட்டான். அவர்கள் எல்லோரும் சிரித்தார்கள். பணிப்பெண் இன்னொரு கையால் அவனை அடிக்க முயன்றாள். இராணுவத்தினன் மணிக்கட்டை இன்னும் மூர்க்கமாகத் திருக அவள் முகம் வலியால் கோணியது.

இராணுவக் காவலர்கள் அசையாமல் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். ஃபிடல் துள்ளியெழுந்தான். எங்களுக்கு அருகே உட்கார்ந்திருந்தவர்களில் ஒருவன் அவனைத் தடுத்து அமைதிப்படுத்தினான். “பதறாதே தம்பி! என்ரிக் பார்த்துக் கொள்வான்’’.

மேடைக்கு அருகே இருளிலிருந்து ஒரு உயரமான பனாமாவினன் வெளியே வந்தான். அடுத்த வினாடி அவன் ஒரு பூனையைப் போலப் பாய்ந்து இராணுவ வீரனின் மேலிருந்தான். என்ரிக்கின் ஒரு கை இராணுவ வீரனின் கழுத்தை வளைத்து இறுக்கத் தொடங்கியது. இன்னொரு கரம் அவன் முகத்தில் ஒரு குவளை தண்ணீரை விசிறியடித்தது. பணிப்பெண் ஓசைப்படாமல் நழுவிவிட்டாள். சுவரில் சாய்ந்து கொண்டிருந்த பனாமாவினர் என்ரிக்கைச் சுற்றிப் பாதுகாப்பு

வளையம் அமைத்தனர். அவன் இராணுவ வீரனைத் தலைக்கு மேலே உயர்த்தி ஏதோ சொன்னான். என்னால் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

பின்பு அவன் இசையின் இரைச்சலுக்கு மேலாகக் குரலை உயர்த்தி ஒவ்வொரு வார்த்தையாக நிதானமாக ஆங்கிலத்தில் உச்சரித்தான்.

“பணிப்பெண்கள் மீது நீங்கள் கை வைக்க முடியாது. மற்றவர்களையும் பணம் கொடுப்பதற்கு முன் தொடக் கூடாது!’’.

நின்று கொண்டிருந்த இரண்டு இராணுவப் போலீஸ்காரர்களும் கடைசியில் இறக்கி கடைசிமுறையாக அவன் கழுத்தை ஒரு நசுக்கு நசுக்கி வலியால் அலற வைத்தான்.

“நான் செல்வது புரிகிறதா?’’.

படைவீரனிடமிருந்து ஒரு பலவீனமான முனகல்தான் வெளியிடப்பட்டது.

“நல்லது’’ என்ரிக் அவனை இராணுவப் போலீஸ்காரர்களை நோக்கி நெட்டித் தள்ளினான். “இவனை வெளியேற்றுங்கள்!’’.

# 13

# ஜெனரலுடன் சந்திப்பு

அந்த அழைப்பு முற்றிலும் எதிர்பாராததாயிருந்தது. 1972 - இல் என் முதல் பனாமா பயணத்தின் போதுதான் அது நிகழ்ந்தது. பனாமாவின் அரசு சார்ந்த மின் நிறுவனமான இன்ஸிடி யூட்டோ டி ரெகர்ஸோஸ் வெரடிராலிகோஸி எலெக்ட்ரிபிகேஷனில் எனக்குத் தரப்பட்டிருந்த அறையில் அன்று அமர்ந்து புள்ளிவிவரங்களால் நிறைந்திருந்த ஒரு காகிதத்தை மேய்ந்து கொண்டிருந்தபோது கதவை ஒருவர் தட்டினார். எண்களிடமிருந்து தப்பக் கிடைத்த வாய்ப்பால் மகிழ்வடைந்து அவரை உள்ளே அழைத்தேன். தன்னை ஜெனரல் டோரிஜோஸின் ஓட்டுநர் என்று அறிமுகப்படுத்திக் கொண்டு என்னை ஜெனரலின் பங்களாக்களில் ஒன்றுக்கு அழைத்துச் செல்ல வந்திருப்பதாகக் கூறினார்.

ஒரு மணி நேரத்தில் நான், ஓமர் டோரிஜோஸின் மேசைக்கு எதிரே உட்கார்ந்திருந்தேன். டோரிஜோஸ்[1] பனாமா முறையில் எளிமையாக உடையணிந்திருந்தார். காக்கிக் கால்சட்டைகளும், வெளிர்நீல வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருந்த பச்சை அரைக்கைச் சட்டையும் அணிந்திருந்தார். அவரது அகன்ற நெற்றியின் மீது விழுந்து கிடந்த கருங்கேசம் காற்றில் இலேசாகப் புரண்டு கொண்டிருந்தது. அவர் உயரமாகவும், கச்சிதமான உடலமைப்புடனும் வசீகரமாகத் தோன்றினார். அவரது பொறுப்புகளைப் பார்க்கும்போது வியப்பூட்டும் அளவிற்கு அவரது நடத்தை இயல்பாக இருப்பது போல் தோன்றியது.

டோரிஜோஸ் இந்தோனேஷியா, குவாதமாலா, ஈரான் போன்ற நாடுகளுக்கு நான் மேற்கொண்ட பயணங்கள் குறித்துக் கேட்டார். இந்த மூன்று நாடுகளைப் பற்றியும் அவர் ஆழ்ந்த அக்கறை கொண்டவராகத் தோன்றினார். குறிப்பாக ஈரான் மன்னர் ஷா முகமது ரேஸாபால்வியின் சதி வேலைகள் அவரது கவனத்தைக் கவர்ந்திருப்பதாகத் தோன்றியது. 1941- இல் ஷாவின் தந்தை ஹிட்லரோடு ஒத்துழைக்கிறார் என்று குற்றம் சாட்டப்பட்டு பிரிட்டிஷாராலும், சோவியத்துகளாலும் தூக்கியெறியப்பட்ட பின்பு தற்போதைய ஷா ஆட்சிக்கு வந்திருந்தார்.

“சொந்தத் தந்தையைப் பதவியிலிருந்து இறக்கும் திட்டத்தில் பங்கேற்பதென்பதைக் கற்பனையே செய்ய முடியவில்லை இல்லையா?” டோரிஜோஸ் ஆச்சரியத்துடன் கேட்டார்.

தொலைவிலிருந்த இந்த நாட்டைப் பற்றி ஏராளமான செய்திகள் அவருக்குத் தெரிந்திருந்தன. 1951- இல் விஷயங்கள் எப்படித் தலை கீழாகத் திரும்பின என்பது பற்றியும், எப்படி தலைமை அமைச்சர்

முகமது மொஸா டெக் ஷாவை நாட்டை விட்டு ஓடும்படி செய்தார் என்பது பற்றியும் நாங்கள் பேசினோம். பின்பு சி. ஐ. ஏ. தலையிட்டு அந்தத் தலைமை அமைச்சருக்கு கம்யூனிஸ்ட் என்ற முத்திரை குத்தி ஷாவைத் திரும்பவும், பதவியில் அமர்த்தியது என்பது உலகம் முழுவதையும் போலவே டோரி ஜோஸுக்கும் தெரிந்திருந்தது. சி. ஐ. ஏ. வின் இந்த நடவடிக்கை ஏகாதிபத்தியத்தின் வரலாற்றில் ஒரு புது யுகத்தைத் துவக்கி வைத்தது பற்றியும் பின்பு உலகம் முழுவதையும் பற்றிப் படர்ந்த இந்தக் காட்டுத்தீயைத் தொடங்கி வைத்த ‘கெர்மிட் ரூஸ்வெல்ட்’ டின் புத்திசாலித்தனமான நடவடிக்கைகளைப் பற்றியும் அவர் அறிந்ததாகக் காட்டிக்கொள்ளவில்லை.

“ஷா திரும்பவும் பதவிக்கு வந்த பிறகு ஈரானைப் புது யுகத்திற்கு அழைத்துச் செல்லக்கூடிய, தொழில் வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட பல புரட்சிகரமான திட்டங்களைச் செயல்படுத்தி இருக்கிறார்’’ என்றார் டோரிஜோஸ்.

‘‘ஈரானைப் பற்றி எப்படி இவ்வளவு தூரம் தெரிந்து வைத்திருக்கிறீர்கள்?’’ என்று கேட்டேன்.

“ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்தி விடுகிறேன். ஷாவின் அரசியலை நான் பெரிதாக நினைக்கவில்லை. சொந்தத் தந்தையைத் தூக்கி எறிவதும், சி. ஐ. ஏ. வின் கைப்பொம்மையாக நடந்துகொள்வதும்.... ஆனால் அவர் தன் நாட்டைப் பொறுத்தவரை நல்ல விஷயங்களைச் செய்வது போன்று தோன்றுகிறது. நான் அவரிடம் இருந்து ஏதாவது கற்றுக் கொள்ளலாம் என்று நினைக்கிறேன். அதாவது அவர் தப்பிப் பிழைக்கும் பட்சத்தில்.’’

“அவர் தப்பமாட்டார் என்று நினைக்கிறீர்களா?’’

“அவருக்கு வலிமை வாய்ந்த எதிரிகள் இருக்கிறார்கள்.’’

டோரிஜோஸின் பார்வையில் பரிகாசம் தோன்றியது. “அவரது இரகசிய போலீஸ்காரர்கள் - சாவக் (SAVAK) - இரக்கமற்ற அயோக்கியர்கள் என்று பெயர் பெற்றவர்கள்தான். ஆனால் சாவக் நண்பர்களைப் பெற்றுத் தராது. அவரால் அதிக நாட்கள் தாக்குப்பிடிக்க முடியாது.’’ அவரது கண்கள் இலக்கில்லாமல் அலைந்தன. “மெய்க்காவலர்கள்! எனக்கும் கொஞ்சம் பேர் இருக்கத்தான் செய்கிறார்கள். ஒருவேளை உங்கள் நாடு என்னை ஒழித்துக் கட்ட வேண்டும் என்று முடிவு செய்துவிட்டால் அவர்களால் என் உயிரைக் காப்பாற்ற முடியும் என்று நினைக்கிறீர்களா?’’

அது நடக்கக் கூடியது என்று அவர் எதிர்பார்க்கிறாரா என்று நான் கேட்டேன்.

இந்தக் கேள்வி எவ்வளவு முட்டாள்தனமானது என்று எனக்கு அறிவிக்கும் வகையில் அவர் புருவங்கள் நெரிந்தன. “எங்களிடம்

கால்வாய் இருக்கிறது. அது அர்பென்ஸ் - யும் யுனைடெட் ப்ரூட்டையும் விட மிகவும் முக்கியமானது.’’

நான் ஏற்கனவே குவாதமாலாவைப் பற்றி ஆய்வுகள் செய்திருந்தேன். எனவே டோரிஜோஸ் கூறியதன் பொருள் எனக்குத் தெளிவாகப் புரிந்தது. குவாதமாலாவை பொறுத்தவரை யுனைட்டெட் புரூட் கம்பெனி [2] (United Fruit Company) பனாமா கால்வாய்க்கு ஈடானது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் உருவான அந்த நிறுவனம் விரைவிலேயே மத்திய அமெரிக்காவின் மிகவும் பலம் வாய்ந்த சக்திகளில் ஒன்றாக மாறியது. 1950- களின் முதல் பகுதியில் இந்தப் பகுதி முழுவதும் சிறந்த ஜனநாயக நடைமுறைக்கு எடுத்துக்காட்டு என்று புகழப்பட்ட ஒரு தேர்தலில் சீர்திருத்தவாத வேட்பாளரான ஜேகபோ அர்பென்ஸ் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அந்தக் காலத்தில் மூன்று சதவீதத்திற்கும் குறைவான குவாதமாலா செல்வந்தர்களின் கரங்களில் எழுபது சதவீதத்திற்கும் அதிகமான நிலம் குவிந்திருந்தது. அர்பென்ஸ் ஏழைகளை வறுமையின் பிடியிலிருந்து மீட்க உதவுவதாக வாக்களித்து இருந்தார். வெற்றிக்குப் பிறகு அவர் விரிவான நிலச் சீர்திருத்தத்திற்கு வித்திடும் வகையில் ஒரு திட்டத்தை அமல்படுத்தினார்.

“லத்தீன் அமெரிக்கா முழுவதும் உள்ள ஏழைகளும், மத்திய தர வகுப்பினரும் அர்பென்ஸைப் பாராட்டினார்கள்.’’ டோரிஜோஸ் தொடர்ந்தார்:’’ அர்பென்ஸ் எனது நாயகர்களில் ஒருவர். நாங்கள் மூச்சை பிடித்துக் கொண்டு பார்த்துக் கொண்டிருந்தோம். குவாதமாலாவில் மிகப் பெரிய அளவிற்கு அடக்குமுறை செலுத்தி வந்த நிலவுடைமையாளர்களில் ஒன்றான யுனைட்டெட் புரூட் இந்தத் திட்டங்களை எதிர்த்தது என்பதை நாங்கள் அறிந்திருந்தோம். அவர்களுக்குச் சொந்தமாகக் கொலம்பியாவிலும் கோஸ்டாரீகாவிலும், கியூபாவிலும், ஜமைக்காவிலும், நிகாரகுவாவிலும், ஸான்டா டொமின் கோவிலும் மிகப் பெரிய பண்ணைகள் இருந்தன. அர்பென்ஸின் திட்டங்களால் மற்ற நாடுகளில் உள்ள எங்களைப் போன்றவர்கள் உத்வேகம் பெறுவதை யுனைட்டெட் புரூட்டால் அனுமதிக்கவே முடியாது என்பதும் எங்களுக்குத் தெரிந்தே இருந்தது.’’

பிறகு நடந்தது எனக்கு தெரியும். யுனைட்டெட் புரூட் அமெரிக்காவில் மாபெரும் பிரசாரத்தைக் கட்டவிழ்த்துவிட்டது. அதன் நோக்கம் அர்பென்ஸ் ரஷ்யாவின் கையாள் என்றும், குவாதமாலா சோவியத் ரஷ்யாவின் துணைக் கோள் என்றும் அமெரிக்க மக்களையும், நாடாளுமன்றத்தையும் நம்ப வைத்ததாகும். 1954- இல் சி.ஐ.ஏ. ஓர் ஆட்சிக் கவிழ்ப்பை அரங்கேற்றியது. அமெரிக்க விமானிகள் குவாதமாலா நகரைக் குண்டு வீசித் தாக்கினார்கள். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அர்பென்ஸ் தூக்கி எறியப்பட்டு, ஈவிரக்கமற்ற வலதுசாரி சர்வாதிகாரியான கர்னல் கார்லோஸ்

காஸ்டில்லா அர்மாஸ் ஆட்சிப் பீடத்தில் அமர்ந்தார்.

புதிய அரசாங்கம் எல்லா விதத்திலும் யுனைட்டெட் புரூட்டுக்கு கடன்பட்டிருந்தது. தன் விசுவாசத்தைக் காட்டும் விதமாக அர்பென்ஸின் நிலச் சீர்திருத்த இயக்கத்தை மூட்டை கட்டி வைத்தது. அன்னிய முதலீட்டாளர்களுக்குக் கொடுக்கப்பட்டு வந்த வட்டி மற்றும் ஊக்கத் தொகைகள் மீதான வரிகளை ஒழித்துக் கட்டியது. இரகசிய வாக்கெடுப்பு முறையை நீக்கியது. இவற்றை விமர்சித்த ஆயிரக்கணக்கானவர்களைச் சிறையிலடைத்தது. காஸ்டில்லோவை எதிர்த்துப் பேசத் துணிந்த எவரும் தண்டனைக்குள்ளாயினர். இந்த நூற்றாண்டின் பிற்பகுதி முழுவதும் குவாதமாலாவைப் பீடித்திருந்த வன்முறை மற்றும் தீவிரவாதத்துக்கு யுனைட்டெட் புரூட், சி.ஐ.ஏ. மற்றும் கர்னலின் இராணுவத்திற்கு இடையிலான வெளிப்படையான கூட்டே ஊற்றுக்கண் என்ற முடிவுக்குப் பல வரலாற்றறிஞர்கள் வந்துள்ளார்கள்.[2]

“அரசியல் ரீதியாகவும், பண்பு ரீதியாகவும் அர்பென்ஸ் ஒழித்துக் கட்டப்பட்டார்” டோரிஜோஸ் கொஞ்சம் இடைவெளி விட்டு என்னை யோசனையுடன் ஆழ்ந்து நோக்கினார். “சி.ஐ.ஏ. அவிழ்த்துவிடும் இந்தப் புளுகையெல்லாம் உங்கள் மக்கள் எப்படி ஜீரணித்துக் கொள்கிறார்கள்? என்னை ஒழிப்பது அவ்வளவு சுலபமல்ல. இங்குள்ள ராணுவத்தினர் எனது ஆட்கள். அரசியலிலிருந்து என்னை ஒழித்துக் கட்டுவது சாத்தியமில்லை.” அவர் முகத்தில் ஒரு இளநகை அரும்பியது.

“சி.ஐ.ஏ.வே முன்னின்று என்னைக் கொல்ல வேண்டும்.”

நாங்கள் இருவரும் அவரவர் சிந்தனையில் மூழ்கியபடி சில நிமிடங்கள் அமைதியாக உட்கார்ந்திருந்தோம். டோரிஜோஸ்தான் முதலில் மௌனத்தைக் கலைத்தார்.

“யுனைட்டெட் புரூட் யாருக்குச் சொந்தமானது என்பது உங்களுக்குத் தெரியுமா?” என்று கேட்டார்.

“ஜபாடா ஆயிலுக்குச் சொந்தமானது. அது ஜார்ஜ் புஷ்ஷின் நிறுவனம். புஷ்தான் ஐ.நா.விற்கான எங்கள் தூதர்.”

“பேராசை பிடித்த மனிதன்” குனிந்து தணிந்த குரலில் தொடர்ந்தார். “இப்போது பெக்டெலில் உள்ள அவரது நண்பர்களுக்கு எதிராக நான் செயல்படப் போகிறேன்!”

நான் திகைத்துப் போனேன். உலகிலேயே மிகவும் பலம் வாய்ந்த பொறியியல் மற்றும் கட்டுமான நிறுவனம் பெக்டெல். மெய்னுடன் பல திட்டங்களில் அது ஒத்துழைத்து வந்தது. பனாமாவில் உருவெடுக்கவுள்ள மாபெரும் திட்டங்களைப் பொறுத்தவரை பெக்டெல்தான் எங்களுக்கு முக்கியமான போட்டியாளராக இருக்கும்

என்று நான் நினைத்திருந்தேன்.

“நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?’’ நான் வியப்புடன் கேட்டேன்.

“நாங்கள் ஒரு புதிய கால்வாய் வெட்டுவது குறித்துச் சிந்தித்துக் கொண்டிருக்கிறோம். அது கடல் மட்டத்தில் தடுப்பரண்கள் (locks) இல்லாமல் இதைவிடப் பெரிய கப்பல்கள் வந்து செல்லக்கூடிய விதத்தில் இருக்கும். ஒருவேளை ஜப்பானியர்கள் இதற்கு நிதியுதவி செய்ய விரும்பலாம்.’’

“அவர்கள்தானே கால்வாயின் மிகப் பெரிய வாடிக்கையாளர்கள்?’’

“உண்மைதான். அவர்கள் புதிய கால்வாய்க்கு நிதியுதவியளித்தால் கட்டுமானப் பணிகளையும் அவர்கள்தான் செய்வார்கள்!’’

நான் இமைக்க மறந்தேன், “பெக்டெல் ஆடிப் போய்விடும்!’’

“புதிய கால்வாய் வெட்டும் பணி சமகால வரலாற்றிலேயே மிகப் பெரிய கட்டுமானப் பணியாக இருக்கும். பெக்டெலில் நிக்ஸன், ஃபோர்டு என்று புஷ்ஷின் தோழர்கள் குவிந்திருக்கிறார்கள். பெக்டெல் குடும்பம்தான் குடியரசுக் கட்சியை ஆட்சி செய்ய வைக்கிறது என்று கேள்விப்பட்டிருக்கிறேன்’’ என்றார் டோரிஜோஸ். அவருக்கு அப்போது ஐ.நா. தூதராக இருந்த ஜார்ஜ் புஷ்ஷும் குடியரசுக் கட்சியின் தேசியக் கூட்டமைப்பின் தலைவராக இருந்த ஃபோர்டும் குடியரசுக் கட்சியைச் சேர்ந்த அதிகாரத் தரகர்கள் என்பது நன்கு தெரிந்திருந்தது.

இந்த உரையாடல் என்னைச் சங்கடமான இடத்தில் வைத்தது. அவரால் அந்தளவிற்கு வெறுக்கப்பட்ட அமைப்பைத் தாங்கிப் பிடிப்பவர்களில் நானும் ஒருவன். அது அவருக்குத் தெரியாமலிராது என்பதை நான் அறிந்தேயிருந்தேன். அமெரிக்கப் பொறியியல் நிறுவனங்களைப் பணிக்கு அமர்த்துவதற்கும் அதற்கு ஈடாக அன்னிய நிதியுதவி (கடன்) பெற்றுக் கொள்வதற்கும் அவரை இசையச் செய்ய வேண்டிய என் பணி ஒரு மாபெரும் சுவரில் முட்டிக்கொண்டு நின்றுவிட்டது போல் தோன்றியது. அவரிடம் நேரடியாகக் கேட்டு விடுவது என்று முடிவு செய்தேன்.

“ஜெனரல் என்னை எதற்கு இங்கே அழைத்தீர்கள்?’’

அவர் தன் கடிகாரத்தைப் பார்த்துவிட்டுச் சிரித்தார்.

“ஆமாம்,. நம் வேலையைக் கவனிக்க வேண்டிய நேரம் வந்து விட்டது. பனாமாவிற்கு, எனக்கு உங்கள் உதவி வேண்டும்.’’

நான் அதிர்ச்சியடைந்தேன். “என்ன உதவி? என்னால் உங்களுக்கு என்ன செய்ய முடியும்?’’

“நாங்கள் கால்வாயைத் திரும்ப எடுத்துக் கொள்வோம். ஆனால் அது போதாது.’’ அவர் நாற்காலியில் வசதியாகச் சாய்ந்து கொண்டார். “நாங்கள் ஒரு எடுத்துக்காட்டாகச் செயல்பட வேண்டியிருக்கிறது.

ஏழைகளின் மேல் எங்களுக்கு உண்மையான அக்கறை உள்ளது என்று காட்ட வேண்டியிருக்கிறது. விடுதலையை வென்றெடுக்க வேண்டுமென்ற எங்கள் உறுதி ரஷ்யா, சீனா, கியூபாவின் உத்தரவால் வந்ததல்ல என்று நிரூபித்துக் காட்ட வேண்டியுள்ளது. பனாமா ஒரு நியாயமான நாடு. நாங்கள் அமெரிக்காவுக்கு எதிராக அல்ல, ஏழைகளுக்கு ஆதரவாகவே நிற்கிறோம் என்பதை உலகுக்கு மெய்ப்பித்துக் காட்ட வேண்டும்.''

அவர் சற்றே நிறுத்தி கால் மேல் கால் போட்டுக் கொண்டார். "இவற்றைச் செயல்படுத்த இந்தப் பகுதியில் உள்ள வேறெந்த நாட்டையும் போலல்லாத ஒரு புதிய பொருளாதார அடித்தளத்தைக் கட்டியமைத்தாக வேண்டியுள்ளது. மின்சாரம் வேண்டும். ஆனால் ஏழைகளுக்கும் கிடைக்கக் கூடிய வகையில் மானியம் பெற்ற மின்சாரம் வேண்டும். தொலைத்தொடர்பு, போக்குவரத்து வசதிகள் அனைத்தும் இதையே அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். இவற்றைச் செய்து முடிக்கப் பணம் வேண்டும். உங்கள் பணம் உலக வங்கியின், அமெரிக்க வளர்ச்சி வங்கியின் பணம்!''

டோரிஜோஸ் திரும்பவும் முன்னால் சாய்ந்தார். அவர் விழிகள் என்னுள் ஊடுருவிப் பார்த்தன.

"உங்கள் நிறுவனத்திற்கு ஏராளமான வேலை வேண்டியிருக்கிறது. அது தன் நோக்கத்தைப் பெரும்பாலும் திட்டங்களைத் தேவைக்கு அதிகமாக ஊதிப் பெருக்கிச் சாதித்துக் கொள்கிறது என்பது எனக்குப் புரிகிறது. இப்போது உங்கள் நிறுவனம் வேறு மாதிரி செயல் பட வேண்டியிருக்கும். எங்கள் மக்களுக்கு எது சிறந்ததோ அதைக் கொடுங்கள். நான் உங்களுக்கு நீங்கள் விரும்பும் அளவிற்கு வேலை கொடுப்பேன்.''

அவர் முன்மொழிந்த விஷயம் முற்றிலும் எதிர்பாராததாயிருந்தது. அது எனக்குள் ஒரே நேரத்தில் அதிர்ச்சியையும், உத்வேகத்தையும் தோற்றுவித்தது. அவரது பார்வை நான் மெய்ன்-னில் கற்றுக் கொண்ட அனைத்தையும் பொய்யாக்கியது. அன்னிய நிதியுதவி என்பது ஒரு கேலிக்கூத்து என்பது அவருக்கு உறுதியாகத் தெரியும், தெரிந்திருக்க வேண்டும். தனிப்பட்ட முறையில் அவரைப் பணக்காரராக்குவதும் அதே நேரம் அவரது நாட்டை அடிமைச் சங்கிலியால் விலங்கிடுவதுவே அன்னிய நிதியுதவியின் நோக்கம். பனாமாவை என்றென்றைக்குமாக அமெரிக்காவுக்கும், நிறுவன - அதிகார வர்க்கத்திற்கும் கடன்பட்டிருக்கச் செய்வதற்காகவே இந்தக் கடன்கள் வழங்கப்படுகின்றன. லத்தீன் அமெரிக்காவை வாஷிங்டனின் நுகத்தடியிலிருந்து தப்ப விடாமல் அழுத்திப் பிடித்துக் கொள்வதே இந்தக் கடன்களின் அடிப்படையான நோக்கம்.

அன்னிய நிதியுதவி என்ற தந்திரம் அதிகாரத்தில் உள்ளவர்கள் ஊழலுக்கு ஆட்படக் கூடியவர்கள் என்ற கருத்தையே

அடிப்படையாகக் கொண்டுள்ளது. எனவே இதைத் தன் சொந்த நலனுக்குப் பயன்படுத்திக் கொள்ளக்கூடாது என்ற டோரிஜோஸின் தீர்மானம் இந்த அமைப்பு முறைக்கு எதிராக விடுக்கப்பட்ட சவாலாகப் பார்க்கப்படும். இந்தப் புதிய விளையாட்டு அனுமதிக்கப்பட்டால் ஒரு சங்கிலித்தொடர் போல முழு அமைப்பையும் சிதறடித்துவிடும் என்று நிறுவன அதிகார வர்க்கத்தால் கருதப்படும் என்பதை அவர் கட்டாயம் அறிந்திருப்பார் என்று எனக்கு உறுதியாகத் தெரிந்தது.

கால்வாயின் காரணமாகத் தான் அடைந்துள்ள தனிச்சிறப்பு வாய்ந்த வலிமையையும், அதன் காரணமாகவே தற்போது தானிருக்கும் மிக, மிக அபாயகரமான நிலைமையையும் ஒருசேரப் புரிந்து கொண்டுள்ள இந்த மனிதரை வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தேன். ஏற்கனவே அவர் வளரும் நாடுகளின் தலைவர்களுக்குள் தனக்கென சிறப்பு வாய்ந்த ஓரிடத்தை உருவாக்கிக் கொண்டு விட்டவர். அவர் எச்சரிக்கையாக இருக்க வேண்டியது அவசியம். ஒருவேளை அவர் தனது நாயகனான அர்பென்ஸைப் போல உறுதியான நிலையெடுத்து நிற்பதென்று முடிவு செய்துவிட்டால் அது உலகம் முழுவதின் கவனத்தையும் ஈர்க்கும். அமெரிக்கா எப்படி எதிர்வினையாற்றும்? லத்தீன் அமெரிக்காவின் வரலாறு முழுவதும் படுகொலை செய்யப்பட்ட நாயகர்களால் நிறைந்துள்ளது.

இந்த மனிதருக்கு முன் உட்கார்ந்திருக்கும் போது என் செயல்களை நியாயப்படுத்திக்கொள்ள நான் சேர்த்து வைத்திருந்த நியாயங்களெல்லாம் சந்தேகத்திற்குள்ளாக்கப்படுவதை உணர்ந்தேன். ஒருவேளை இவரிடம் சில தனிப்பட்ட குறைகள் இருக்கலாம். ஆனால் இவர் ஒரு கடற்கொள்ளைக்காரனல்ல. இங்கிலாந்து அரசர்கள் அளித்த அனுமதிக் கடிதங்களைக் கொண்டு கடற்கொள்ளையைச் சட்டப்பூர்வமானதாக மாற்றிக் கொண்ட ஆணவம் பிடித்த ஹென்றி மார்க்கன், பிரான்சிஸ் டிரேக் போல அல்ல டோரிஜோஸ். அவரது உருவப்படம் பொறித்த விளம்பரப் பலகைக்குக் கீழ் எழுதப்பட்டிருந்த வாசகங்கள் அரசியல்வாதிகளின் வெற்றுச் சவடால் அல்ல. “ஓமரின் லட்சியம் விடுதலை. லட்சியத்தைக் கொல்லும் ஏவுகணை இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை!” டாம் பெய்ன் எழுதியுள்ளதும் ஏறக்குறைய இதைப் போன்ற ஒன்றுதானே!

ஒருவேளை லட்சியங்கள் சாகாமலிருக்கலாம். ஆனால் அவற்றின் பின்னுள்ள மனிதர்கள்? சே, அர்பென்ஸ், அலெண்டே... இதில் அர்பென்ஸ் மட்டுமே இன்னும் உயிரோடிருக்கிறார், ஆனால் எவ்வளவு காலத்திற்கு? ஒருவேளை டோரிஜோஸுக்கும் அந்த நிலை ஏற்பட்டால் அதை நான் எப்படி எதிர்கொள்வேன்?

நான் அவரிடமிருந்து விடைபெறும் போது மெய்ன் இந்த ஒப்பந்தத்தைப் பெறும் என்பதையும், டோரிஜோஸின் உத்தரவு நடை முறைப்படுத்தப்படுவதை உறுதிப்படுத்தும் பொறுப்பு என்னுடையது

என்பதையும் நான் தெளிவாகப் புரிந்து கொண்டேன்.

[1] William Shawcross: The Shah’s Last Ride: The Fate of an Ally (New York: Simon ad Schuster, 1988); Stephen Kinzer, All the Shah’s Men: An American Coup and the Roots of Middle East Terror (Hoboken, NJ: John Wiley & Sons, Inc., 2003), p.45.

[2] அர்பென்ஸைப் பற்றியும், யுனைடெட் புரூட் நிறுவனத்தைப் பற்றியும் குவாதமாலாவின் கொந்தளிப்பான வரலாற்றைப் பற்றியும் ஏராளமாக எழுதப்பட்டுள்ளன.

உதாரணத்திற்கு பார்க்க: Howard Zinn, A People’s History of the United States (New York: Harper & Row, 1980); Diane K. Stanley, For the Record: The United Fruit Company’s Sixty-Six Years in Guatemala (Guatemala City: Centro Impresor Piedra Santa, 1994). “”The Banana Republic: The United Fruit Company,’’ http://www.mayaparadise.com/uscle. html; “”CIA Involved in Guatemala Coup, 1954’’, http://www.english.upenn.edu/afilreis/50s/guatemala.html. புஷ் குடும்பத்தின் தொடர்புகள் பற்றிய விவரங்களுக்குப் பார்க்க: “Zapata Petroleum Corp.,’’ Fortune, April 1958, p.248.

# 14

# வஞ்சகம் நிறைந்த தொடக்கம்

தலைமைப் பொருளாதார நிபுணன் என்ற முறையில் உலகம் முழுவதும் மெய்ன் நிறுவனம் மேற்கொண்டு வந்த ஆய்வுகளுக்கு நான் பொறுப்பாளனாக இருந்தேன். அது தவிர தற்காலப் பொருளாதாரப் போக்குகள் மற்றும் சிந்தனைகள் குறித்து எனக்கு நல்ல அறிமுகம் இருக்க வேண்டுமென்று நிறுவனத்தில் எதிர்பார்க்கப்பட்டது. 1970-களின் தொடக்கமானது சர்வதேசப் பொருளாதாரத்தில் மிகப்பெரிய மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருந்த காலமாகும். அதற்குக் கொஞ்ச காலம் முன்பு 1960-களில் சில எண்ணெய் வளம் மிக்க நாடுகள் ஒன்றிணைந்து ஓபெக் (OPEC) அமைப்பைத் தோற்றுவித்தன. இந்த அமைப்பு பலம் வாய்ந்த எண்ணெய்ச் சுத்திகரிப்பு நிறுவனங்களுக்குத் தகுந்த பதிலடி கொடுத்தது. ஈரானும் ஓபெக்கில் முக்கியமான பங்கு வகித்தது. ஈரானின் ஷா தனது பதவி, ஏன் உயிருக்கே கூட அமெரிக்காவிற்குக் கடமைப்பட்டிருந்தார், மொஸாடெக்கோடு நடந்த போராட்டங்களின் போது அமெரிக்காவின் சட்ட விரோதமான தலையீடுதான் ஷாவைக் காப்பாற்றியது. ஆனால் இந்த அமெரிக்க ஆதிக்கம் எந்த நேரத்திலும் தனக்கு எதிராகவும் திரும்பலாம் என்பதையும் ஷா நன்கறிந்திருந்தார். இதே வகையான விழிப்புணர்வும், கவிழ்க்கப்படலாமென்ற பீதியும் மற்ற எண்ணெய் வள நாடுகளின் தலைவர்களுக்கும் இருந்து வந்தன. ‘ஏழு சகோதரிகள்’ என்றழைக்கப்பட்ட மாபெரும் பன்னாட்டு எண்ணெய் நிறுவனங்கள் தங்களுக்குள் கூட்டு அமைத்துக் கொண்டு தாங்கள் அடிக்கும் கொள்ளை லாபத்தில் எண்ணெய் வளம்மிக்க நாடுகளுக்கு அதிகப் பங்கு அளிப்பதைத் தவிர்ப்பதற்காக பெட்ரோலியத்தின் விலை உயர்வதைத் தடுத்து வந்தன. இந்த நிலையை உடைப்பதற்காகவே ஓபெக் உருவாக்கப்பட்டது.

1970-களில் இந்த மாபெரும் நிறுவனங்களை ஓபெக் மண்டியிடச் செய்தபோது இவையனைத்தும் வெளிச்சத்துக்கு வந்தன. ஓபெக் மேற்கொண்ட தொடர்ச்சியான, ஒருமுகப்படுத்தப்பட்ட நடவடிக்கைகள் 1973-ல் எண்ணெய் உற்பத்திக்குத் தடை விதிப்பதில் வந்து முடிந்தன. அமெரிக்க எரிவாயு நிலையங்களில் வாகனங்கள் நீண்ட வரிசைகளில் காத்திருக்கத் தொடங்கின. பெரும் பணவீக்கத்தின்போது ஏற்பட்டதைப் போன்ற பொருளாதார வீழ்ச்சியை ஏற்படுத்துமளவிற்கு இந்த நடவடிக்கைகள் தீர்மானகரமானவையாக இருந்தன. வளர்ச்சியடைந்த நாடுகள் பேரதிர்ச்சி அடைந்தன. அவற்றின் பொருளாதாரம் ஆடிப் போயிற்று. மிகச் சிலராலேயே இந்த நடவடிக்கைகளின் முழுப் பரிமாணத்தையும் வீச்சையும் புரிந்து

கொள்ள முடிந்தது.

அமெரிக்காவைப் பொறுத்தவரை இந்த எண்ணெய்ப் பிரச்சனை இன்னும் மோசமான பாதிப்பை ஏற்படுத்தியது. அன்றைய அமெரிக்கா அவமானகரமான வியட்நாம் போரில் வதைபட்டுக் கொண்டிருந்தது. பயம் நிறைந்ததாகவும், தன்னம்பிக்கை அற்றதாகவும், குழம்பிப் போனதாகவும் இருந்தது அந்த நாடு. அதன் அதிபர் பதவி விலக வேண்டிய நெருக்கடியில் இருந்து வந்தார். நிக்ஸனின் பிரச்சனைகள் தென்கிழக்கு ஆசியாவுடனும், வாட்டர் கேட் ஊழலுடனும் நின்று விடவில்லை. அவர் அரசியலரங்கில் தோன்றியிருந்த காலம் உலக அரசியல் பொருளாதாரத்தில் புது யுகத்தின் தொடக்கம் என்று கருதப்பட்ட காலம். அந்த நாட்களில் ‘சின்னப் பையன்கள்’ என்றழைக்கப்பட்ட ஓபெக் நாடுகளின் கை வலுத்து வருவது போலத் தோன்றியது.

உலக நிகழ்ச்சிகளால் நான் கிளர்ச்சியடைந்திருந்தேன். என்னுள் இருந்த ஒரு இரகசியமான பகுதி என் எஜமானர்கள் திண்டாடுவதை இரசித்தது. ஒருவேளை அது எனக்குள்ளிருந்த குற்றவுணர்ச்சிக்கு மருந்தாகவும் இருந்திருக்கக் கூடும். தாமஸ் பெய்ன்னின் உருவம் ஒரு ஓரமாக நின்று ஓபெக்கை உற்சாகப்படுத்துவதை என் மனக்கண்ணில் கண்டேன்.

பொருளாதாரத் தடை அமுலில் இருந்த காலத்தில் எங்களில் யாருக்கும் அதன் முழு வீச்சும், பாதிப்பும் தெரிந்திருக்கவில்லை. எங்களிடம் எங்களுக்கேயுரிய கோட்பாடுகள் இருந்தபோதிலும் (எண்ணெய் நெருக்கடிக்குப் பின்னர்) துலக்கமாகி வந்த பொருளாதார பாதிப்புகளை அப்போது நாங்கள் புரிந்து கொண்டிருக்கவில்லை. இந்த எண்ணெய் நெருக்கடிக்குப் பிந்தைய காலத்தில் பொருளாதார வளர்ச்சி, அதற்கு முந்தைய இருபதாண்டு காலத்தில் இருந்ததைவிடப் பாதியளவாகக் குறைந்தது. இந்த நெருக்கடி ஏற்படுத்திய மிகப்பெரிய தேக்கநிலைக்கு இடையிலும் இந்த வளர்ச்சி சாத்தியமானதை எங்களால் காண முடிந்தது. ஆனால் இந்தக் காலகட்டத்தில் ஏற்பட்ட வளர்ச்சி முற்றிலும் வேறு வடிவத்தில் இருந்தது. அது வேலைவாய்ப்புகளை உருவாக்கவில்லை. எனவே வேலையில்லாத் திண்டாட்டம் உச்சத்திற்குச் சென்றது. எல்லாவற்றிற்கும் மேலாக பன்னாட்டு நாணய அமைப்பு முறை (International monetary system) பலத்த அடி வாங்கியது.. இரண்டாம் உலகப் போருக்குப் பின்னிருந்து நடைமுறையில் இருந்து வந்த நாணயப் பரிமாற்ற விகிதங்கள் விழுந்து நொறுங்கின.

இந்தக் காலகட்டத்தில் நானும் எனது நண்பர்களும், மதிய உணவு இடைவேளையின் போதோ, மாலையில் பீர் அருந்தும் போதோ அடிக்கடி இந்தப் பிரச்சனைகள் குறித்து விவாதிப்போம். என் நண்பர்களில் சிலர் என்னிடம் வேலை செய்து வந்த துடிப்பான

இளைஞர்கள். சுதந்திரமான சிந்தனை உடையவர்கள். மற்றவர்களில் பெரும்பாலோர் பாஸ்டனைச் சேர்ந்த சிந்தனாவாதிகள் (Think Tanks), நிர்வாகிகள் அல்லது உள்ளூர் பேராசிரியர்கள். மாகாண சபை உறுப்பினர் ஒருவரின் உதவியாளரும் கூட என் நண்பராக இருந்து வந்தார். மிக இயல்பாக நடைபெற்ற இத்தகைய கூட்டங்களில் ஆறு, ஏழு பேர் வரை பங்கு கொண்டனர். இரண்டே இரண்டு பேர் மட்டும் கலந்து கொண்ட கூட்டங்களும் கூட உண்டு. உக்கிரமான விவாதங்கள் நடைபெற்றாலும் உரையாடல்கள் இனிமையானவையாகவே இருந்தன.

அந்த விவாதங்களின் போது எனக்குள்ளிருந்த உயர்வு மனப்பான்மை இப்போது நினைத்துப் பார்க்கும்போது சங்கடத்தை ஏற்படுத்துகிறது. மற்றவர்களோடு பகிர்ந்து கொள்ள முடியாத பல விஷயங்கள் எனக்குத் தெரிந்திருந்தன. என் நண்பர்களில் சிலர் தங்கள் தகுதிகள், திறமைகள், மேலிடத்துத் தொடர்புகள், பேராசிரியர் பதவிகள், டாக்டர் பட்டங்கள் குறித்துப் பெருமையடித்துக் கொண்டனர். மிகப் பெரிய ஆலோசனை நிறுவனத்தின் தலைமைப் பொருளாதார நிபுணன், உலகம் முழுவதும் முதல் வகுப்புப் பயணியாகச் சுற்றி வந்தவன் என்ற முறையில் அவர்கள் வாய்வீச்சை நான் எதிர்கொண்டேன் என்றாலும் டோரிஜோஸ் போன்றவர்களுடனான எனது சந்திப்புகள் பற்றியோ, உலகம் முழுவதும் உள்ள நாடுகளில் நாம் நடத்தி வரும் மோசடிகள் குறித்தோ என்னால் வெளிப்படையாகப் பேச முடியாது. என் உள்மனதில் உலவி வந்த ஆணவம், வெறுப்பு என இரண்டுக்கும் இதுவே காரணமாக இருந்தது.

முக்கியமாக ‘சின்னப் பையன்களின்’ வலிமை குறித்துப் பேச்சு நடந்த போதெல்லாம் நான் மிகவும் அடக்கி வாசிக்க வேண்டியிருந்தது. நிறுவன - அதிகார - வர்க்கம், பொருளாதார அடியாள் கும்பல்கள், அவர்களுக்குப் பின்னணியில் காத்திருக்கும் ஓநாய்கள் ஒருபோதும் இந்தச் சின்னப் பையன்கள் பலம் பெற அனுமதிக்கமாட்டார்கள் என்ற இரகசியத்தை நான் அறிந்திருந்தேன். அர்பென்ஸ், மொஸாடெக் இன்னும் அண்மைக்கால உதாரணமான சிலியின் அலெண்டே ஆகியோருக்கு ஏற்பட்ட கதியைப் பார்க்கும்போது நான் இந்த முடிவுக்குத்தான் வர வேண்டியிருந்தது. உண்மையில் உலகின் குரல்வளையை நெரித்துவரும் உலகப் பேரரசின் இரும்புப்பிடி பலவீனமடையவில்லை. ஓபெக் விடுக்கும் சவால்களையும் கடந்து அது மென்மேலும் வலிமை பெற்றுத் தான் வருகிறது. ஒருவேளை ஓபெக்கின் உதவியோடு அதன் பிடி மேலும் இறுகி வருகிறதோ என்று நான் சில நேரங்களில் சந்தேகித்தேன். அந்தச் சந்தேகம் சரியானதுதான் என்பது பின்னால் எனக்குப் புரிந்தது.

எங்களது கலந்துரையாடல்கள் 1930- களின் தொடக்க காலத்திற்கும்

1970-களின் தொடக்க காலத்திற்கும் இடையேயிருந்த ஒற்றுமைகளையே பெரும்பாலும் மையமாகக் கொண்டிருந்தன. 1930-களில் ஏற்பட்ட பொருளாதார நெருக்கடி சர்வதேசப் பொருளாதார வரலாற்றில் ஒரு மைல் கல்லாகக் கருதப்படுகிறது. அந்த அடிப்படையிலேயே அது ஆய்வுக்குட்படுத்தப்பட்டும் பயிலப்பட்டும் வந்தது. 1930-களில் கெனீசியன் பொருளாதாரக் கொள்கைகளுக்குக் கதவுகள் திறக்கப்பட்டன. சந்தைகளை நிர்வகிப்பது, ஏனைய சமூக நடவடிக்கைகளுக்கு அரசாங்கம் முதலிடம் தர வேண்டும் என்ற அதன் அடிப்படைக் கருத்து நடைமுறைக்கு வந்தது. கெனீசியன் பொருளாதாரம்[1] முக்கிய இடத்தைப் பிடித்துக் கொண்டது-. சந்தைகள் தங்களைத் தாங்களே கட்டுப்படுத்திக் கொள்ளும். அரசின் தலையீடு குறைந்தபட்சமாக இருக்க வேண்டும் என்பது போன்ற பழைய கருத்தோட்டங்களிலிருந்து நாம் வெகுதூரம் நகர்ந்து வந்து விட்டிருந்தோம்.

பணவீக்கத்தின் காரணமாகப் புதிய ஒப்பந்தம் (New deal)[2] பொருளாதாரத்தில் கட்டுப்பாடு, அரசாங்கத்தின் நிதியை மிகத் திறம்படக் கையாள்வது, நிதிக்கொள்கையை விரிவாக நடைமுறைப்படுத்துவது போன்ற கோட்பாடுகளும் உருவாயின. அத்தோடு பணவீக்கம் மற்றும் இரண்டாம் உலகப் போரின் காரணமாக உலக வங்கி, சர்வதேச நிதி நிறுவனம், காட் ஒப்பந்தம் போன்றவை தோன்றின. 1960-களில்தான் புதிய வகையான பழமைவாதத்திலிருந்து கெனீசியப் பொருளாதாரத்திற்கு மாறிச் செல்வது நடைபெற்றது. கென்னடி மற்றும் ஜான்சன் ஆட்சிகளில் அது நடைபெற்றாலும், இப்போக்கின் மேல் மிகப்பெரிய ஆதிக்கம் செலுத்திய ஒரு தனி மனிதன் ராபர்ட் மெக்னமாரா.

எங்கள் விவாதங்களில் மெக்னமாராவின் [3] பெயர் அடிக்கடி அடிபட்டது. 1949-இல் ஃபோர்டு மோட்டார் நிறுவனத்தின் நிதி ஆய்வு மேலாளராக இருந்த மெக்னமாரா புயல் வேகத்தில் வளர்ந்து 1960-களில் அந்த நிறுவனத்தின் தலைவரானார். ஃபோர்டு குடும்பத்தைச் சேராத ஆனால் அந்த நிறுவனத்திற்குத் தலைவரான முதல் மனிதர் மெக்னமாராதான். அதன்பின் குறுகிய காலத்திலேயே கென்னடி அவரைப் பாதுகாப்புத் துறைச் செயலராக நியமித்தார். (நம் நாட்டு வழக்கில் இராணுவ அமைச்சர் மொ-ர்)

வியட்நாமில் உள்ள துருப்புகளின் அளவு, அதற்கான நிதி ஒதுக்கீடு மற்றும் வியட்நாமுக்கான ஏனைய தந்திரோபாயங்களில் கணித வகை மாதிரிகளையும், புள்ளிவிவரங்களை அடிப்படையாகக் கொண்ட அணுகுமுறைகளையும் பயன்படுத்தியதன் மூலம் மெக்னமாரா கெனீசியன் பாணி அணுகுமுறையின் உறுதி வாய்ந்த ஆதரவாளராக மாறினார். மெக்னமாரா உயர்த்திப் பிடித்த வளைந்து கொடுக்காத ‘உக்கிரமான (Aggressive) தலைமை’ என்ற கோட்பாடு அரசு

அதிகாரிகளிடம் மட்டுமல்லாமல் தனியார் நிறுவன நிர்வாகிகளிடமும் பேராதரவு பெற்றது. நாட்டின் முன்னணி வணிகப் பள்ளிகள் நிர்வாகிகளைப் பயன்படுத்தத் தொடங்கின. இதன் காரணமாக இப்பள்ளிகளால் உருவாக்கப்பட்ட புதிய தலைமுறை நிர்வாகிகள் தவிர்க்க இயலாத விதத்தில் உலகப் பேரரசின் முன்னோடிகளாகவே செயல்பட்டனர்.

உலக வங்கியின் தலைவர் என்ற முறையில் மெக்னமாரா ஆற்றிய பணிகள் எங்களுக்கு மிகுந்த வியப்பளித்தன. அவர் பாதுகாப்புச் செயலர் பதவியை விட்டு விலகிய பின் இப்பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்தார். இராணுவத்திற்கும், தொழில்துறைக்கும் இடையிலான கூட்டு என்று பரவலாக அறியப்பட்ட விஷயத்தின் மொத்த உருவமாகவே மெக்னமாரா விளங்கினார் என்பதிலேயே என் நண்பர்கள் கவனம் செலுத்தினர். அவர் ஒரு மிகப்பெரிய நிறுவனத்தில் தலைமைப் பொறுப்பு வகித்தார். பின்பு அரசில் அமைச்சராகப் பணியாற்றினார். தற்போது உலகிலேயே மிகவும் பலம் வாய்ந்த வங்கியான உலக வங்கியின் தலைவராகச் செயல்பட்டு வருகிறார். அரசு அதிகாரத்திற்கும் தொழில்துறைக்கும் இடையே இருந்து வந்த இடைவெளி இவ்வளவு அப்பட்டமாக உடைந்து நொறுங்கிப் போனது பலருக்கும் அச்சமூட்டியது. எங்களில் இது குறித்து கொஞ்சம்கூட வியப்படையாதவன் நான் ஒருவன் மட்டும்தான்.

உலக வங்கியை உலகப் பேரரசின் முகவராக மாற்றியதுதான் வரலாற்றுக்கு ராபர்ட் மெக்னமாரா அளித்த மிகப்பெரிய வஞ்சம் நிறைந்த பங்களிப்பு என்று இப்போது நான் கருதுகிறேன். நிறுவன அதிகார வர்க்கத்தின் இரு பிரிவுகளுக்கு, அதாவது வணிக நிறுவனங்களுக்கும் அதிகார வர்க்கத்துக்கும் இடையே இருந்த இடைவெளிகளை நிரப்புவதில் அவருக்கு அசாத்தியமான திறமை இருந்தது. மெக்னமாராவின் பங்களிப்பை அவருக்குப் பின் வந்தவர்கள் இன்னும் மெருகேற்றினர், செழுமைப்படுத்தினர். உதாரணமாக நிக்ஸன் ஆட்சியில் நிதித்துறைச் செயலராகவும் பொருளாதாரக் கொள்கை வகுக்கும் குழுவின் சேர்மனாகவும் இருந்த ஜார்ஜ் ஷூல்ட்ஸ் பெக்டெல் நிறுவனத்தின் தலைவராகப் பணிபுரிந்தவர். ஷூல்ட்ஸ் பின்பு ரீகன் ஆட்சியில் உள்துறைச் செயலர் ஆனார். பெக்டெலின் துணைத் தலைவராக இருந்த கேஸ்பர் வெய்ன் பெர்கர், ரீகன் ஆட்சியில் பாதுகாப்புத் துறைச் செயலராக நியமிக்கப்பட்டார். ரிச்சர்ட் ஹெல்மஸ், ஜான்சன் ஆட்சியில் சி.ஐ.ஏ. இயக்குநராக இருந்து பின்பு நிக்ஸனின் ஆட்சியில் ஈரானுக்குத் தூதராக அனுப்பப்பட்டார். எச்.டபிள்யூ. புஷ்ஷின் கீழ் பாதுகாப்புத் துறைச் செயலராக இருந்த ஜார்ஜ் டபிள்யூ. புஷ்ஷின் ஆட்சியில் துணை ஜனாதிபதியாகப் பணிபுரிந்து வரும் ரிச்சர்ட் செனி, ஹாலிபர்ட்டன் நிறுவனத்தின் தலைவராக இருந்தவர். எச். டபிள்யூ.பு-ஷ் கூட ஜபாட்டா பெட்ரோலியம் நிறுவனத்தின் நிறுவனராகத் தொடங்கி பின்பு நிக்ஸன்

காலத்தில் ஐ.நா.வுக்கான அமெரிக்கத் தூதராகவும், ஃபோர்டின் ஆட்சியில் சி.ஐ.ஏ-வின் இயக்குநராகவும் பணியாற்றியவர்தான்.

இப்போது நினைத்துப் பார்க்கும்போது அந்த நாட்களில் எவ்வளவு அப்பாவித்தனமாக இருந்திருக்கிறோம் என்று எனக்குத் திகைப்பாக இருக்கிறது. பேரரசை உருவாக்குவது என்றால் பழைய பாணியையே நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். கெர்மிட் ரூஸ்வெல்ட், ஓர் ஈரானிய ஜனநாயகவாதியைத் தூக்கியெறிந்துவிட்டு அவரிடத்தில் ஒரு கொடுமைக்கார சர்வாதிகாரியை உட்கார வைத்ததன் மூலம் ஒரு புதிய வழியை, பழைய பாணியை விட ஒரு நல்ல வழியை நமக்குக் காட்டி விட்டார். பொருளாதார அடியாட்களான நாங்கள் இந்தோனேஷியா, ஈக்வடார் போன்ற நாடுகளில் எங்கள் குறிக்கோள்களை நிறைவேற்றியிருந்தாலும் கூட, பழைய பாணி முழுவதும் மறக்கப்பட்டு விடவில்லை என்பதை வியட்நாம் நினைவூட்டிக் கொண்டுதான் இருக்கிறது.

ஒபெக்கின் முன்னணி உறுப்பு நாடான சவூதி அரேபியா முற்றிலும் வித்தியாசமான ஒரு பாதையைக் காட்டியது.

[1] கெனீசியப் பொருளாதாரம்: ஜான் மேனார்ட் கெய்ன்ஸ் என்பவரின் கருத்துகளின் அடிப்படையில் உருவானது. அரசும் தனியார் நிறுவனங்களும் இணைந்து செயலாற்ற வேண்டும். வேலையில்லாத் திண்டாட்டத்திற்கும், பணவீக்கத்திற்கும் எதிரான போரில் அரசின் கொள்கைகளுக்கு முக்கியமான பங்கு இருக்கவேண்டும் என்பவை கெனீசியப் பொருளாதாரத்தின் அடிப்படை அம்சங்களாகும். (மொ-ர்)

[2] 1932-இல் அமெரிக்க அதிபர் ரூஸ்வெல்ட்டால் அறிவிக்கப்பட்ட ஒரு புதிய கொள்கை (மொ-ர்)

[3] “Robert S. McNamara: 8th Secretary of Defense,’’ http://www.defenselink.mil (accessed December 23, 2003).

# 15

# சவூதி அரேபிய கருப்புப் பண விவகாரம்

1974 -ஆம் ஆண்டு சவூதி அரேபியாவைச் சேர்ந்த ஒரு ராஜதந்திரி தனது நாட்டின் தலைநகர் ரியாத்தின் புகைப்படங்களைக் காண்பித்தார். அவற்றில் ஒரு அரசு அலுவலகத்திற்கு வெளியே குவிந்திருந்த குப்பையைக் கிளறிக் கொண்டிருந்த ஆட்டு மந்தையின் படம் ஒன்றும் இருந்தது. அதற்கு அவர் அளித்த விளக்கம் திகைப்பூட்டியது. இதுதான் நகரின் முக்கியமான குப்பை அகற்றும் முறை என்றார் அவர்.

“எந்தச் சுயமரியாதையுள்ள சவூதியும் குப்பை அள்ள மாட்டான். எனவே நாங்கள் அந்த வேலையை ஆடுகளிடம் விட்டு விட்டோம்.’’

ஆடுகள்! உலகிலேயே எண்ணெய் வளம் மிக்க நாட்டின் தலை நகரத்தில் குப்பை அகற்றும் வேலையைச் செய்பவை ஆடுகள்! என்னால் இதை நம்பவே முடியவில்லை.

அந்தக் காலகட்டத்தில் எண்ணெய் நெருக்கடிக்குத் தீர்வு காண முயன்று கொண்டிருந்த ஆலோசனையாளர் குழுவில் நானும் இடம் பெற்றிருந்தேன். எண்ணெய் நெருக்கடிக்கான தீர்வு எங்கிருந்து வரவுள்ளது என்பதைப் பற்றிய புரிதலை ஆடுகள் எனக்குக் கொடுத்தன.

சவூதி அரேபியாவின் வரலாறு வன்முறையும் மதவெறியும் நிறைந்தது. பதினெட்டாம் நூற்றாண்டில் உள்ளூர் யுத்தப் பிரபுவான முகமது இபின் சவுத் அதி தீவிர பழமைவாதிகளான வகாபி பிரிவினருடன் இணைந்து ஒரு வலிமை வாய்ந்த கூட்டணியை உருவாக்கினார். அடுத்து வந்த இரண்டு நூற்றாண்டுக் காலத்தில் சவுத்தின் குடும்பமும் அவர்களது வகாபி கூட்டாளிகளும் இஸ்லாத்தின் மிகப் புனிதத் தலங்களான மெக்கா, மெதீனா உட்பட அரேபிய தீபகற்பத்தின் பெரும் பகுதியை வெற்றி கொண்டனர்.

சவுதி சமூகம் அதை உருவாக்கியவர்களின் கலப்பற்ற இலட்சிய வாதத்தைப் பிரதிபலித்தது. குரானின் விதிகள் கடுமையாகப் பின்பற்றப்பட்டன. மதக் காவலர்களின் கண்டிப்பான மேற்பார்வையில் ஐந்து வேளைத் தொழுகை கட்டாயமாக அமல் படுத்தப்பட்டது. பெண்கள் உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரை தங்களை மூடிக் கொள்ள வேண்டியிருந்தது. குற்றவாளிகளுக்குக் கடும் தண்டனைகள் அளிக்கப்பட்டன. பொது இடங்களில் மரண தண்டனைகள் நிறைவேற்றப்படுவதும், கல்லெறிந்து கொல்வதும் மிகச் சாதாரணமாக நடைபெற்று வந்தன. ரியாத்துக்கு முதன் முதலில் சென்றபோது கேமரா, சூட்கேஸ் ஏன் மணிபர்ஸைக் கூட காரில் பார்வையில் படும்படி விட்டு

விட்டுச் செல்லலாம். காரைப் பூட்ட வேண்டுமென்ற அவசியம்கூட இல்லை என்று என் ஓட்டுநர் சொன்னபோது நான் பிரமித்துப் போனேன்.

“திருடுவதைப் பற்றி இங்கே யாரும் நினைத்துக் கூடப் பார்க்க மாட்டார்கள். திருடர்களின் கைகள் துண்டிக்கப்படும்’’ என்றார் அவர்.

அதே நாளில் அதே ஓட்டுநர் துண்டாடும் சதுக்கத்திற்குச் சென்று தலை வெட்டப்படுவதைப் பார்க்க விரும்புகிறேனா என்று என்னைக் கேட்டார். தூய்மைவாதத்தின் உச்சக்கட்டமான வகாபியிஸம் சட்டத்தை மீறுபவர்களுக்கு மரண தண்டனையைக் கோருகிறது. அதுவும் மிகக் கொடூரமான வடிவத்தில். எனவே, தெருக்கள் நூறு சதவீதம் பாதுகாப்புள்ளவைகளாகத் திகழ்கின்றன. நான் அழைப்பை நிராகரித்துவிட்டேன்.

மேற்குலகைப் பேரதிர்ச்சிக்கு உள்ளாக்கிய எண்ணெய்த் தடையைச் செயல்படுத்துவதில், அரசியல் பொருளாதாரத்திலிருந்து மதத்தைப் பிரிக்க முடியாத அம்சமாகக் கருதும் சவூதி அரேபியாவின் பார்வை முக்கியப் பங்காற்றியது. 1973-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் ஆறாம்தேதி எகிப்து, சிரியாவுக்கு எதிராக இஸ்ரேல் நடத்திய போர்களில் நான்காவதும், மாபெரும் சேதம் விளைவித்ததும், உலகம் முழுவதும் மிகப்பெரிய பாதிப்பை ஏற்படுத்தியதுமான யோம் கிப்பூர் போர் (யூத மதப் பண்டிகைகளிலேயே யோம் கிப்பூர் மிகவும் புனிதமானது) வெடித்தது. எகிப்தின் ஜனாதிபதியான சாதத், எண்ணெயை ஆயுதமாகப் பயன்படுத்தி, இஸ்ரேலுடன் கூடிக் குலவும் அமெரிக்காவிற்கு பதிலடி கொடுக்கும்படி சவூதி மன்னரான ஃபைசலை வற்புறுத்தினார். அக்டோபர் மாதம் 16 -ஆம் தேதி சவூதி அரேபியா உள்ளிட்ட ஐந்து அரபு நாடுகள் எண்ணெய் விலையில் 70 சதவீத உயர்வை அறிவித்தன.

பின்பு அரபு நாடுகளின் பெட்ரோலியத் துறை அமைச்சர்கள் குவைத் நகரில் சந்தித்து மேல் நடவடிக்கை குறித்து ஆராய்ந்தனர். அமெரிக்காவைக் குறி வைக்க வேண்டுமென்று ஈராக் நாட்டின் பிரதிநிதி கடுமையாக வாதிட்டார். அரபு உலகிலுள்ள அனைத்து அமெரிக்க வணிக நிறுவனங்களையும் நாட்டுடைமை ஆக்க வேண்டுமென்றும் அமெரிக்கா மற்றும் இஸ்ரேலுக்கு ஆதரவாக உள்ள மற்ற நாடுகள் மீது முழுமையான எண்ணெய்த் தடையைச் செயல்படுத்த வேண்டுமென்றும், அமெரிக்க வங்கிகள் அனைத்திலிருந்தும் அரபு நிதியைத் திரும்பப் பெற வேண்டுமென்றும் அவர் அறைகூவல் விடுத்தார். அரபு வங்கிக் கணக்குகள் கணிசமானவை என்பதையும் இப்படியொரு நடவடிக்கை எடுக்கப்பட்டால் அது 1929- ஆம் ஆண்டில் ஏற்பட்ட பணவீக்கத்தைப் போன்ற நெருக்கடியையும், பீதியையும் ஏற்படுத்தும் என்றும் அவர் சுட்டிக் காட்டினார்.

மற்ற அரபு நாடுகளைச் சேர்ந்த அமைச்சர்கள் இவ்வளவு புரட்சிகரமான திட்டத்திற்கு ஒப்புதலளிக்கத் தயங்கினர். ஆனால் அக்டோபர் 17 - இல் வரையறைக்குட்பட்ட தடையைச் செயல்படுத்த முடிவு செய்யப்பட்டது. இதன்படி எண்ணெய் உற்பத்தியில் 5 சதவீதத்தைத் துண்டிப்பதில் தொடங்கி தங்களது அரசியல் நோக்கங்கள் நிறைவேறும் வரை ஒவ்வொரு மாதமும் மேலும் ஐந்து சதவீத உற்பத்திக் குறைப்புச் செய்ய வேண்டுமென்று முடிவெடுக்கப்பட்டது. இஸ்ரேலை ஆதரிக்கும் தனது நிலைக்காக அமெரிக்கா தண்டிக்கப்பட வேண்டுமென்றும் அதற்கு எதிராகத் தடையைக் கடுமையாகச் செயல்படுத்த வேண்டுமென்றும் அவர்கள் முழு மனதுடன் ஒப்புக்கொண்டார்கள். இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்ட நாடுகளில் பல தாங்கள் 5 சதவீத உற்பத்திக் குறைப்பைவிட 10 சதவீத உற்பத்திக் குறைப்பை முதல் மாதமே செயல்படுத்தப் போவதாக அறிவித்தன.

அக்டோபர் 19-ஆம் தேதி ஜனாதிபதி நிக்ஸன் இஸ்ரேலுக்கு உதவ 2.2 பில்லியன் டாலர் நிதியளிக்க வேண்டுமென்று நாடாளு மன்றத்தில் கோரினார். அடுத்தநாள் சவூதி அரேபியாவும் மற்ற எண்ணெய் வளம் மிக்க அரபு நாடுகளும் அமெரிக்காவிற்கு எண்ணெய் ஏற்றுமதி செய்வதை முழுமையாகத் தடை செய்தன.[1]

இந்த எண்ணெய்த் தடை 1974 மார்ச் 18- ஆம் தேதி முடிவுக்கு வந்தது. குறுகிய காலமே நீடித்த இத்தடை மிகப் பெரிய பாதிப்பை ஏற்படுத்தியது. 1970, ஜனவரி 1 அன்று பீப்பாய் ஒன்றுக்கு 1.39 டாலராக இருந்த சவூதி எண்ணெயின் விலை 1974, ஜனவரி 1 -இல் 8.32 டாலராக உயர்ந்தது[2]. அந்தக் காலகட்டத்தில் கற்றுக் கொண்ட பாடங்களை அரசியல்வாதிகளும் நிர்வாகிகளும் ஒரு நாளும் மறக்கமாட்டார்கள். சில மாதங்களே நீடித்த பொருளாதாரத் தடை தந்த உளவியல் அதிர்ச்சி நீண்டகால நோக்கில் நிறுவன - அதிகார வர்க்கத்தைப் பலப்படுத்தவே உதவியது. இதன் மூன்று பெரும் தூண்களான பன்னாட்டு நிறுவனங்களும், உலக வங்கியும், அரசும் முன்னெப்போதையும் விட இறுக்கமாகப் பிணைக்கப்பட்டன. இந்தப் பிணைப்பு நீடித்து நிலைத்து நிற்கக் கூடியதாக மாறியது.

இந்தத் தடை நமது பார்வையிலும் கோட்பாட்டிலும் முக்கியமான மாற்றங்களுக்கு வித்திட்டது. இன்னொரு தடையை இனி ஒருபோதும் சகித்துக் கொள்ளவே முடியாது என்பதை வால் ஸ்ட்ரிட்டும்,[3] வாஷிங்டனும் உணர்ந்து கொண்டன. நமது எண்ணெய்த் தேவைகளுக்கான அடிப்படைகளைப் பாதுகாப்பதென்பது எப்போதுமே தலையாய விஷயமாகத்தான் இருந்து வந்தது. ஆனால் 1973-க்குப் பின்பு அது ஒரு கோட்பாடாகவே மாறிவிட்டது. இந்தத் தடை உலக அரங்கில் சவூதி அரேபியாவுக்கு ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுத் தந்ததோடு இந்த முடியரசின் கேந்திர முக்கியத்துவத்தை ஒப்புக் கொண்டேயாக வேண்டிய நிலைக்கு வாஷிங்டனைத் தள்ளி

விட்டு விட்டது. எல்லாவற்றுக்கும் மேலாக பெட்ரோ - டாலர்களை திரும்ப அமெரிக்காவுக்குத் கொண்டு வருவதற்கான வழிவகைகளை அமெரிக்க நிறுவன - அதிகார வர்க்கம் ஜுர வேகத்தில் தேடத் தொடங்கியது. சவூதி அரசிடம் குவிந்து கொண்டிருக்கும் பணத்தைப் பயன்படுத்தத் தேவையான உள்கட்டமைப்பு வசதிகள் இல்லை என்பதைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளத் தேவையான வழிகளை ஆராய வேண்டிய அவசியமும் நிறுவன - அதிகார வர்க்கத்திற்கு ஏற்பட்டுவிட்டது.

எண்ணெய் விலையேற்றத்தால் சவூதி அரேபியாவுக்குக் கிடைத்த அபரிமிதமான வருமானம் நல்லவற்றையும், தீயவற்றையும் ஒருங்கே கொண்டு வந்து சேர்த்தது. நாட்டின் கருவூலங்களை அது கோடிக்கணக்கான டாலர்களைக் கொண்டு நிரப்பிய அதே சமயத்தில் வகாபிகளின் கடுமையான மத நம்பிக்கைகள் சிலவற்றைத் தகர்க்கவும் செய்தது. பணக்கார சவூதிகள் உலகம் முழுவதும் பயணம் செய்தார்கள். ஐரோப்பியப் பல்கலைக்கழகங்களில் படித்தார்கள். உயர் ரகக் கார்களையும், மேற்கத்திய ஆடம்பரப் பொருட்களையும் கொண்டு தங்கள் வீடுகளை அலங்கரித்தார்கள். ஒரு புதிய வகையான நுகர்வுவாதம் பழைய மத நம்பிக்கைகளின் இடத்தைப் பிடித்துக் கொண்டது. பணமே பிரதானம் என்ற இந்தக் கோட்பாடுதான் எதிர்காலத்தில் இன்னொரு எண்ணெய் நெருக்கடி ஏற்படக்கூடும் என்ற பயத்திற்குத் தீர்வு அளித்தது.

எண்ணெய்த் தடை முடிவுக்கு வந்த உடனேயே வாஷிங்டன் சவூதிகளோடு பேச்சுவார்த்தையைத் தொடங்கியது. தொழில்நுட்ப உதவியும், இராணுவத்திற்கான கன ரக ஆயுதங்களும், பயிற்சியும் அளிப்பதன் மூலம் அந்த நாட்டை இருபதாம் நூற்றாண்டுக்குள் அழைத்துச் செல்லும் வாய்ப்பை அளித்தது. பதிலாக அமெரிக்கா, சவூதியிடமிருந்து பெட்ரோ - டாலர்களையும், இனி எப்போதும் இன்னொரு எண்ணெய்த் தடை வராது என்ற உறுதியையும் கோரியது. இந்தப் பேச்சுவார்த்தைகளின் மூலமாக முற்றிலும் மாறுபட்ட ஒரு அமைப்பு உருவாக்கப்பட்டது. அமெரிக்க மற்றும் சவூதி அரேபிய கூட்டுப் பொருளாதார ஆணையம் (JECOR) என்று அழைக்கப்பட்ட இந்தத் திட்டம் பாரம்பரியமான அன்னிய நிதியுதவித் திட்டங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்ட ஒரு புதுமையான கருத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தது. சவூதி அரேபியாவைக் கட்டியமைக்க, அமெரிக்க நிறுவனங்களைப் பணிக்கமர்த்த சவூதிப் பணமே பயன்படுத்தப்பட இருந்தது.

இந்தக் கூட்டுப் பொருளாதார நிறுவனத்தின் ஒட்டுமொத்த நிர்வாகமும், பொருளாதாரப் பொறுப்புகளும் அமெரிக்கக் கருவூலத் துறையிடமே இருந்தபோதிலும் இவ்வாணையம் மிக அதிகமான சுதந்திரம் உள்ளதாக இருந்தது. எல்லாவற்றிற்கும் மேலாக அமெரிக்க

நாடாளுமன்றத்தின் பார்வைக்கே வராமல் ஆயிரக்கணக்கான கோடி டாலர்களைச் செலவழிக்கும் அதிகாரம் படைத்ததாக இந்த ஆணையம் இருந்தது. அமெரிக்கப் பணம் இதில் சம்பந்தப்படாததால் இந்த விஷயத்தில் நாடாளுமன்றத்திற்கு எந்த அதிகாரமும் இருக்கவில்லை. இந்தக் கூட்டுப் பொருளாதார ஆணையத்தைப் பற்றி விரிவாக ஆராய்ந்த டேவிட் ஹோல்டனும், ரிச்சர்ட் ஜோன்ஸும்[4] பின்வரும் முடிவை முன் வைத்தனர். "ஒரு வளரும் நாட்டோடு அமெரிக்கா செய்து கொண்ட ஒப்பந்தங்களிலேயே மிகவும் தொலைநோக்குடையது இந்த ஒப்பந்தம்தான். இந்த ஒப்பந்தம் அந்த முடியரசில் அமெரிக்கா ஆழமாக ஊடுருவவும், இந்த இரு நாடுகளையும் ஒருவரை ஒருவர் சார்ந்திருக்கவும் வழிவகை செய்வதற்கான அடித்தளத்தைப் பெற்றுள்ளது.''

கருவூலத்துறை ஆரம்பக்கட்டத்தில் ஆலோசகராகச் செயல்பட மெய்ன் நிறுவனத்தைக் கொண்டு வந்தது. நான் அழைக்கப்பட்டேன். என் பணி கடினமானது என்றும், அது தொடர்பான ஒவ்வொரு விஷயமும் இரகசியமானதாகக் கருதப்பட வேண்டுமென்றும் அறிவுறுத்தப்பட்டது. அந்த நேரத்தில் மெய்னே முதன்மையான ஆலோசகராக இயங்கி வந்தது என்று நான் நம்ப வைக்கப்பட்டேன். பின்புதான் எங்கள் நிறுவனத்தைப் போலவே இன்னும் ஏராளமான ஆலோசகர்கள் உள்ளனர் என்பது தெரிய வந்தது.

இந்த நடவடிக்கைகள் எல்லாமே மிகவும் இரகசியமாக நடைபெற்றதால் மற்ற ஆலோசகர்களோடு கருவூலத்துறை என்ன பேச்சுவார்த்தை நடத்தியது என்பது எனக்குத் தெரியவில்லை. எனவே இந்த ஒப்பந்தத்தைப் பொறுத்தவரை என்னுடைய பங்கு எவ்வளவு தூரம் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது என்பது குறித்து என்னால் எதுவும் கூற முடியவில்லை.. ஆனால், இந்த ஏற்பாடுகள் பொருளாதார அடியாட்களுக்குப் புதிய தகுதிகளை ஏற்படுத்திக் கொடுத்தன என்பதையும், பழைய அணுகுமுறைகளுக்கு மாற்றாகப் பேரரசின் நோக்கங்களைச் செயல்படுத்துவதற்காக புதுமையான மாற்றுகள் உருவாக்கப்பட்டன என்பதையும் நான் அறிந்திருந்தேன். எனது ஆய்வு முடிவுகள் கவனத்துடன் செயல்படுத்தப்பட்டன என்பதையும் பெரும் லாபம் தரும் முதலாவது பெரிய ஒப்பந்தம் (சவூதி அரேபியாவில்) மெய்ன்-க்குப் பரிசாக வழங்கப்பட்டது என்பதும் எனக்குத் தெரிய வந்தது. அந்த ஆண்டு நான் மிகப் பெரிய லாபம் அடைந்தேன்.

மிகப் பெரிய அளவுக்கு சவூதி அரேபியாவின் உள் கட்டுமானத்தை வளர்த்தெடுப்பதில் பணம் முதலீடு செய்யப்பட்டால் என்னென்ன மாற்றங்கள் ஏற்படும் என்பது பற்றிய முன்னறிவிப்புகளை உருவாக்குவதும், பணத்தை முதலீடு செய்ய மென்மேலும் புதிய தளங்களைத் தேர்ந்தெடுப்பதும் எனது பணியாகும். சுருக்கமாகச் சொல்லப் போனால் சவூதி அரேபியப் பொருளாதாரத்தில் பல நூறு

கோடி டாலர்களைக் கொட்டுவதை நியாயப்படுத்துவதற்காக என் கற்பனைத் திறனை முழுமையாகப் பயன்படுத்த வேண்டுமென்று என்னிடம் கேட்டுக் கொள்ளப்பட்டது. நிபந்தனை வழக்கம் போல முதலீடுகள் அமெரிக்க நிறுவனங்களுக்கு லாபமளிப்பதாக இருக்க வேண்டும் என்பதுதான். இப்பணியை நான் தனியாகவே செய்ய வேண்டும் என்றும், உதவியாளர்களை நம்பியிருக்கக் கூடாது என்றும் கூறப்பட்டது. என் துறை அமைந்திருந்த இடத்திற்குப் பல மாடிகள் மேலே ஒரு சிறிய கூட்டரங்கில் நான் தனியாக அமர்த்தப்பட்டேன். என் பணி நாட்டின் பாதுகாப்புக்கு அத்தியாவசியமானது என்பதோடு மெய்ன்-க்கு மிகப் பெரிய அளவுக்கு லாபம் பெற்றுத் தரக் கூடியது என்பதாலேயே இந்த முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் என்று என்னிடம் கூறப்பட்டது.

சவூதி அரேபியாவைப் பொறுத்தவரை நோக்கம் அதைக் கடன் சுமையில் மூழ்கபடிப்பது அல்ல. பதிலாக பெட்ரோ - டாலர்களில் பெரும் பகுதி அமெரிக்காவுக்குத் திரும்பி வருவதற்கான பாதைகளைக் கண்டுபிடிப்பதுதான் என்பது எனக்குத் தெளிவாகப் புரிந்தது. இந்தப் போக்கில் சவூதி அரேபியா முழுமையாக உள்ளிழுக்கப்பட்டு நமது பொருளாதாரத்துடன் இரண்டறக் கலந்து விடும். பின் அது தனது தனித்துவத்தை இழந்து நம்மைச் சார்ந்து இருக்க வேண்டிய நிலையை அடைவது தவிர்க்க முடியாததாகி விடும். தவிர இந்த நாடு மேற்கத்திய மயமாக ஆக அது மென்மேலும் நம்மை ஆதரித்து நிற்பதாக, மேற்குலகோடு கலந்து விட்டதாக மாறிவிடும்.

ரியாத்தின் தெருக்களில் சுற்றிக் கொண்டிருக்கும் ஆடுகள்தான் நமது நோக்கங்களை நிறைவேற்ற மிகப் பெரிய உதவி செய்யப் போகின்றன என்பதை நான் ஆரம்பக் கட்டத்திலேயே புரிந்துகொண்டு விட்டேன். நவீன உலகுக்குள் நுழையத் துடித்துக் கொண்டிருக்கும் இந்தப் பாலைவன அரசுக்கு ஆடுகளை விடப் பொருத்தமான ஒரு மாற்று கண்டுபிடிக்கப்பட்டே ஆக வேண்டும். அதே நேரத்தில் ஓபெக் நாடுகளின் பொருளாதார நிபுணர்கள் தங்கள் பெட்ரோலியத்தைப் பயன்படுத்தி மற்ற பொருட்களைப் பெற வேண்டியதன் தேவை குறித்து வற்புறுத்தி வருகிறார்கள் என்பதையும் நான் அறிந்திருந்தேன். இந்தப் பொருளாதார நிபுணர்கள் கச்சா எண்ணெயை மட்டும் ஏற்றுமதி செய்வதற்குப் பதிலாக சொந்தத் தொழிற்சாலைகளை உருவாக்கியும் கச்சா எண்ணெயை விட அதிக விலைக்கு விற்கக் கூடிய பெட்ரோலியப் பொருட்களைத் தயாரித்து உலகம் முழுவதும் விற்பனை செய்ய வேண்டுமென்று வலியுறுத்தி வந்தனர்.

இந்த இரண்டு விஷயங்களைப் பற்றிய புரிதல் இரு தரப்பினருக்கும் வெற்றியளிக்கும் என்று நான் உறுதியாக நம்பிய ஒரு திட்டத்திற்கு வித்திட்டது. ஆடுகள் ஒரு தொடக்கப் புள்ளி மட்டும்தான். ஆடுகளுக்குப் பதிலாக உலகின் மிக நவீனமான குப்பை அகற்றும்

திட்டத்திற்கு அமெரிக்க நிறுவனங்கள் அமர்த்தப்படும் - பெட்ரோலியப் பணத்தைக் கொண்டுதான். சவூதிகள் உண்மையிலேயே கர்வம் கொள்ளக் கூடிய வகையில் இந்தத் திட்டம் கலைநுட்பம் கொண்டதாக இருக்கும்.

வெற்றிக்கான சூத்திரத்தில் ஆடுகள் பிரிக்க முடியாத அங்கமாகி விட்டன. இந்தச் சூத்திரம் ஆடுகளையும் குப்பையையும் கடந்து சவூதி அ ரே பி யா வி ன் எல்லாத் துறைகளிலும் பயன்படுத்தக் கூடியதாயிருந்தது. அமெரிக்கக் கருவூலத் துறை, சவூதி அரச குடும்பம், மெய்ன் நிறுவனத்திலுள்ள அனைவரும் இந்த வெற்றிச் சூத்திரத்தை ஏற்றுக் கொள்ளத் தொடங்கிவிட்டனர். இந்தத் திட்டத்தின்படி கச்சா எண்ணெயைச் சுத்திகரிக்கப்பட்ட பெட்ரோலியமாக மாற்றுவதற்கு அவசியமான தொழிற்சாலைகளை நிர்மாணிக்கப் பணம் ஒதுக்கப்படும். பாலைவனத்தின் நடுவே மாபெரும் பெட்ரோ கெமிக்கல் ஆலைகள் முளைத்து எழும். அவற்றைச் சுற்றிப் பிரம்மாண்டமான பூங்காக்கள் உருவாக்கப்படும். இதற்கு ஆயிரக்கணக்கான மெகா டன் மின்சாரம் தேவைப்படும். மின்சாரத்தை வழங்கத் தேவையான சாதனங்களும் (கடத்திகள்- கம்பிகள் போன்றவை) வேண்டியிருக்கும். தவிர நெடுஞ்சாலைகள், தொலைத் தொடர்பு வசதிகள், புதிய விமான நிலையங்கள், சீரமைக்கப்பட்ட துறைமுகங்கள், பல்வேறு வகையான தேவைகளைப் பூர்த்தி செய்யக்கூடிய தொழிற்சாலைகள் போன்றவை அமைக்கப்பட வேண்டும். இவையனைத்தும் தடையில்லாமல் இயங்கக் கூடிய விதத்தில் நாட்டின் உள் கட்டுமானம் சீரமைக்கப்பட வேண்டியிருக்கும். சவூதி அரேபியாவில் நிறைவேற்றப்பட உள்ள திட்டத்திற்கு இவையனைத்துமே தேவைப்படும்.

உலகின் மற்ற பகுதிகளுக்கு இந்தத் திட்டம் ஒரு முன்மாதிரியாக இருக்கும் என்பதில் நாங்கள் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தோம். சவூதிகள் உலகம் முழுவதும் நமது புகழைப் பரப்புவார்கள். பல நாடுகளின் தலைவர்களைச் சவூதிக்கு அழைப்பார்கள். ஒபெக் வளையத்திற்கு வெளியே உள்ள நாடுகளின் தலைவர்களே முக்கியமாக அழைக்கப்படுவார்கள். அந்தத் தலைவர்கள் தங்கள் நாடுகளிலும் இதே போன்ற திட்டங்களைச் செயல்படுத்த நம்மை அணுகுவார்கள். நிதியுதவிக்கு உலக வங்கியை நாடுவார்கள் அல்லது நிதியுதவி அளிப்பது என்ற பெயரில் அவர்களைக் கடனில் மூழ்கடிக்க நாம் விரித்து வைத்திருக்கும் வேறு வலைகளில் சிக்கிக் கொள்வார்கள். உலகப் பேரரசு மிகுந்த நன்மையடையும்.

இந்தச் சிந்தனைகளில் நான் மூழ்கியிருந்தபோதும் ஆடுகள் என் மனதை விட்டு அகலவேயில்லை. என் ஓட்டுநரின் சொற்களும் என் காதுகளில் ரீங்கரித்துக் கொண்டே இருந்தன. “சுய மரியாதையுள்ள எந்த சவூதியும் குப்பை அள்ள மாட்டான்?’’ குப்பையைப் பொறுக்க

மட்டுமல்ல. வேறு பல விஷயங்களிலும் இதே நிலைமைதான். வெவ்வேறு ஆட்கள் இதே பல்லவியை வெவ்வேறு விதமாகப் பாடக் கேட்டேன். தொழிற்சாலைகள், கட்டுமானப் பணிகள் போன்றவற்றில் உள்ள கீழ்மட்டப் பணிகளில் தங்கள் மக்களை ஈடுபடுத்தும் எண்ணம் சவூதிகளுக்கு அறவே இல்லை என்பது தெளிவானது. சவூதி அரேபியாவின் மக்கள் தொகையே மிகவும் குறைவுதான் என்பதும் இதற்கு ஒரு முக்கியமான காரணம். கூடவே தங்கள் மக்களின் வாழ்க்கைத் தரத்தை மிக உயர்ந்த நிலைக்குத் கொண்டு செல்லப் போவதாக சவூதி அரச குடும்பம் உறுதியளித்திருந்தது. எனவே உடலுழைப்புத் தேவைப்படும் பணிகளில் தங்கள் மக்களை ஈடுபடுத்துவது இந்த உறுதிமொழியைப் பொய்யாக்கிவிடும் என்று கருதப்பட்டது. மொத்தத்தில் தொழிலாளிகளாகவோ, கட்டுமானப் பணியாளர்களாகவோ பணியாற்ற வேண்டுமென்ற விருப்பம் சவூதிகளுக்கு அறவே இல்லை. எனவே மலிவான கூலிக்கு ஆட்கள் கிடைக்கக் கூடிய நாடுகளிலிருந்து தொழிலாளர்களை இறக்குமதி செய்ய வேண்டியிருந்தது. முடிந்தவரை எகிப்து, பாலஸ்தீனம், பாகிஸ்தான், ஓமன் போன்ற மற்ற இஸ்லாமிய நாடுகளிலிருந்து தொழிலாளர்களைத் தருவிக்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்பட்டது.

தொழிலாளர்களை வெளியிடங்களிலிருந்து தருவிக்க வேண்டுமென்ற நிலை எங்கள் திட்டத்தை இன்னும் விரிவடையச் செய்தது. வெளிநாடுகளிலிருந்து வரவுள்ள தொழிலாளர்களுக்காகப் பிரம்மாண்டமான குடியிருப்பு வளாகங்கள் கட்டப்பட வேண்டியிருந்தது. அவர்களுக்காகப் பிரம்மாண்டமான ஷாப்பிங் மால்கள், மருத்துவமனைகள், தீயணைப்பு மற்றும் பாதுகாப்பு வசதிகள், தண்ணீர் மற்றும் கழிவுநீர் சுத்திகரிப்பு மையங்கள், மின்சாரம், தொலைத்தொடர்பு மோன்றவை அமைக்கப்பட வேண்டியிருந்தது. உண்மையில் முன்பு பாலைவனமாக இருந்த இடத்தில் நவீன நகரங்களை உருவாக்குவதே எங்கள் இலக்காக இருந்து வந்தது. அத்தோடு இந்த நாட்டில் புதிதாக உருவாகி வந்த தொழில்நுட்பங்களைப் பரிசோதித்துப் பார்ப்பதற்கான வாய்ப்புகளும் இருந்தன. உதாரணமாக கடல் நீரைச் சுத்திகரிக்கும் நிலையங்கள், மைக்ரோ வேவ் ஸிஸ்டம், உடல் நலம் பேணும் நிலையங்கள், கணினி தொழில்நுட்பம் போன்றவற்றை இங்கே பரிசோதித்துப் பார்க்க போதிய வாய்ப்புகளிருந்தன.

ஒரு திட்டமிடுபவனின் கனவுகளனைத்தும் கைகூடியது சவூதி அரேபியாவில்தான். அங்கே பொறியியலிலும், கட்டுமானத் துறையிலும் ஒவ்வொரு கற்பனையும் நனவானது. வரலாறு முன்னெப்போதும் கண்டிராத வாய்ப்புகளைப் பொருளாதாரத் துறையில் வழங்கியது சவூதி அரேபியா. அது புதுயுகத்தில் அடி வைக்க ஆவல் கொண்டு துடித்துக் கொண்டிருக்கும் தேசம்.

என் வேலையை நான் மிகவும் இரசித்துச் செய்தேன் என்பதை ஒப்புக் கொள்ள வேண்டும். பொருளாதார வளர்ச்சி குறித்துத் திட்டமிடுவதற்கும் முன்னறிவிப்பதற்கும் தேவையான துல்லியமான புள்ளிவிவரங்கள் பாஸ்டனிலோ, சவூதி அரேபியாவிலோ கிடைக்கவில்லை. வேறெங்கிருந்தும் அவை கிடைப்பதற்கான வாய்ப்புகளுமில்லை. ஒருவேளை அப்படியே ஒரு புள்ளிவிவரங்கள் கொண்ட தொகுப்பு இருந்திருந்தாலும் கூட முன் எப்போதும் இல்லாத வகையில் ஒரு நாட்டையே தலைகீழாக மாற்றியமைத்திடும் இந்தப் பணிக்கு அந்தப் புள்ளிவிவரங்களால் ஒரு பலனும் இருந்திருக்காது.

அதே போல இந்த விளையாட்டின் ஆரம்பக் கட்டங்களில் யாரும் ஒரு துல்லியமான பகுப்பாய்வை எதிர்பார்க்கவும் இல்லை. நான் என் கற்பனைக் குதிரையைத் தட்டிவிட்டு சவூதி அரேபியாவுக்கும் பிரகாசமான எதிர்காலம் உண்டு என்று ஜோதிடம் கூறும் அறிக்கைகளை எழுதித் தள்ளினேன். எண்களைப் பொறுத்தவரை எனக்கு என்ன தோன்றுகின்றதோ அதுதான். ஒரு மெகாவாட் மின்சாரத்தை உற்பத்தி செய்ய ஆகக்கூடிய செலவையோ, ஒரு மைல் நீளமுள்ள சாலையை நிர்மாணிக்கத் தேவையான பணத்தையோ அல்லது ஒரு தொழிலாளிக்குத் தேவையான நீர், வீட்டு வசதி, உணவு பொது வசதிகள் போன்றவற்றையோ மதிப்பிட இந்த முறையைத்தான் பயன்படுத்தினேன். அப்போது எனக்கு என்ன தோன்றுகிறதோ அது தான் மதிப்பீடு. அதுதான் புள்ளிவிவரம். இந்த மதிப்பீடுகளை மாற்றியோ, திருத்தியோ அமைக்க வேண்டிய அவசியமே ஏற்படவில்லை. என்னுடைய வேலை சாத்தியமாகக் கூடிய திட்டங்கள் மற்றும் அவற்றிற்கு உத்தேசமாகத் தேவைப்படும் பணம் குறித்து மதிப்பீடுகள் செய்வதுதான்.

சவூதி அரேபியாவை நவீனப்படுத்துவது குறித்து எவ்வளவுதான் வெளியே பேசினாலும் இந்தத் திட்டங்களின் உண்மையான நோக்கங்கள் என் மனதை விட்டு ஒருபோதும் அகலவேயில்லை. சவூதி அரேபியாவிலிருந்து அமெரிக்க நிறுவனங்களுக்கு வர வேண்டிய தொகையை முடிந்தவரை அதிகரிப்பதும், அந்த நாட்டை மேலும் மேலும் அமெரிக்காவைச் சார்ந்திருக்கச் செய்வதும்தான் இந்தத் திட்டங்களின் உண்மையான நோக்கங்கள். இந்த இரண்டு நோக்கங்களும் அடிப்படையில் ஒன்றுதான் என்பதைப் புரிந்து கொள்ள எனக்கு நீண்டநாள் பிடிக்கவில்லை. புதிதாகச் செயல்படுத்தப்பட்ட திட்டங்கள் அனைத்திற்குமே தொடர்ச்சியான பராமரிப்புத் தேவைப்பட்டது இந்தத் திட்டங்கள் மிகவும் உயர் தொழில்நுட்பம் கொண்டவையாக இருந்ததால் இவற்றை வளர்த்தெடுத்த நிறுவனங்களால் மட்டுமே அவற்றைத் தொடர்ந்து பராமரிக்கவும், சீரமைக்கவும் முடியுமென்ற சூழ்நிலை நிலவியது. நாட்கள் செல்லச் செல்ல நான் வடிவமைக்கும் திட்டங்கள் ஒவ்வொன்றுக்கும் இரண்டிரண்டு பட்டியல்களை உருவாக்கத் தொடங்கினேன்.

திட்டங்களை உருவாக்கவும், வளர்த்தெடுக்கவும் (கட்டுமானப் பணிகளுக்கு) தேவையான விஷயங்கள் குறித்து ஒரு பட்டியல். இந்தத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்ட பின்பு அவற்றை மேற்பார்வை செய்வதையும், நீண்டகால அடிப்படையில் பராமரிப்பதையும் அடிப்படையாகக் கொண்ட இன்னொரு பட்டியல். இந்த ஒப்பந்தங்களின் காரணமாக வரவிருக்கும் பல பத்தாண்டுகளுக்கு மெய்ன், பெக்டெல், பிரவுன் அன்ட் வெப்ஸ்டர் போன்ற அமெரிக்க நிறுவனங்கள் மாபெரும் லாபம் அடையும்.

இதில் லாப நோக்கத்தைத் தவிர இன்னொரு நோக்கமும் இருந்தது. எண்ணெய் வளம் மிகுந்த இந்த முடியரசை நவீன மயமாக்குவதென்பது எதிர்வினைகளைத் தூண்டிவிடும். உதாரணமாகப் பழமைவாத முஸ்லிம்கள் கோபமடைவார்கள். இஸ்ரேல் உள்ளிட்ட அண்டை நாடுகள் தாங்கள் அச்சுறுத்தப்படுவதாக உணரும். எனவே அரேபியத் தீபகற்பத்தைப் பாதுகாப்பதென்ற விஷயம் முன்னுரிமை பெறும். இது இன்னொரு தொழில்துறையின் வளர்ச்சிக்கு வித்திடும். அமெரிக்க இராணுவமும், அது தொடர்பான தொழிற்துறைகளும், பாதுகாப்புத் துறையில் தனிச்சிறப்புப் பெற்ற தனியார் நிறுவனங்களும் கணிசமான ஒப்பந்தங்களைப் பெறும் என்று எதிர்பார்க்கலாம். பின்பு வழக்கம் போல் இராணுவத் தளவாடங்களுக்கான நீண்டகாலப் பராமரிப்பு மற்றும் மேற்பார்வையிடுவதற்கான ஒப்பந்தங்கள் தேவைப்படும். இந்த பாதுகாப்புத் தேவைகள் இன்னொரு வகையான கட்டுமானப் பணிகளுக்கான தேவைகளை உருவாக்கும். விமான நிலையங்களும், ஏவுகணைத் தளங்களும், இராணுவத் தளங்களும் அவற்றோடு தொடர்புடைய மற்ற விஷயங்களும் நிர்மாணிக்கப்பட வேண்டியிருக்கும்.

நான் எனது அறிக்கைகளை உறைகளில் இட்டு ‘கருவூலத் துறை திட்ட மேலாளருக்கு’ அனுப்பினேன். எங்கள் குழுவிலுள்ள மற்ற உறுப்பினர்களில் ஒன்றிரண்டு பேர்களையும், மெய்னின் துணைத் தலைவரையும், எனது வேறு சில மேலதிகாரிகளையும் மட்டும்தான் இந்தக் காலகட்டத்தில் சந்தித்தேன். அதுவும் எப்போதாவதுதான். இந்தத் திட்டம் இன்னும் ஆய்வுக் கட்டத்திலேயே இருந்து வந்ததால் அதற்கு அதிகாரப்பூர்வமான பெயர் சூட்டப்படவில்லை. இந்தத் திட்டம் ஜே.ஈ.சி.ஓ.ஆர். (JECOR) இன் பகுதியாகவும் மாறியிருக்கவில்லை. நாங்கள் இந்தத் திட்டத்தை எங்களுக்குள் இரகசியமாக சாமா (SAMA) என்று அழைத்து வந்தோம். இதன் முழுப்பொருள் சவூதி அரேபிய கருப்புப் பண விவகாரம் என்பதாகும். (Saudi Arabian Money laundering Affair) இதில் ஒரு கிண்டலும் இருந்தது. சவூதி அரேபியாவின் மத்திய வங்கியான சவூதி அரேபியன் மானிடரி - ஏஜென்சி சுருக்கமாக சாமா என்றழைக்கப்பட்டு வந்தது.

இந்தக் காலகட்டத்தில் கருவூலப் பிரதிநிதியும் சில நேரங்களில்

எங்களோடு சேர்ந்து கொள்வார். அவருடனான சந்திப்புகளின் போது நான் தேவைக்கு அதிகமாகக் கேள்விகள் எதுவும் எழுப்புவதில்லை. என்னைப் பொறுத்தவரை எனது பணியை விவரித்தேன். என்னிடம் என்ன எதிர்பார்க்கப்பட்டாலும் அதை முயன்று பார்க்க ஒப்புக் கொண்டேன். எங்கள் நிறுவனத்தின் துணைத் தலைவர்களும், கருவூலப் பிரதிநிதியும், நீண்டகாலப் பராமரிப்பு மற்றும் மேற்பார்வைக்காக ஒப்பந்தங்கள் செய்து கொள்ள வேண்டுமென்ற எனது கருத்தால் பெரிதும் ஈர்க்கப்பட்டார்கள். எங்கள் துணைத் தலைவர்களில் ஒருவர் இதைக் கேட்டுவிட்டு சவூதி அரேபியாவுக்கு ‘சூரியன் மறைந்து நாம் களைத்துச் சாயும் வரை பால் கறக்கும் பசு’ என்று பெயர் சூட்டினார். பின்பு இந்த வாக்கியம் எங்களிடையே மிகவும் பிரபலமாகிவிட்டது. எனக்கு இந்த வாக்கியம் எப்போதுமே பசுக்களைவிட ஆடுகளையே அதிகம் நினைவூட்டியது.

இந்தச் சந்திப்புகளின் போதுதான் எங்கள் நிறுவனத்தின் போட்டியாளர்கள் பலரும் இதே போன்ற வேலைகளில் ஈடுபட்டிருப்பதைத் தெரிந்து கொண்டேன். இறுதியில் எங்கள் முயற்சிகளுக்குப் பரிசாகக் கவர்ச்சிகரமான ஒப்பந்தங்கள் வழங்கப்படுமென்ற எதிர்பார்ப்பு எங்களில் எல்லோருக்குமே இருந்து வந்தது. மெய்ன்-ம் மற்ற நிறுவனங்களும் இந்த ஆரம்பகட்ட வேலைகளுக்கான செலவு-களைக் கண்டு கொள்ளவேயில்லை என்று எனக்குத் தோன்றியது. பெரும் போட்டியில் இறங்குவதற்கு முன் செய்யப்படும் சிறிய தயாரிப்பு போலிருந்தன இந்தச் செலவுகள். இந்த வேலைகளுக்காக நான் செலவழித்த நேரம் பொதுக்கணக்கில் வைக்கப்பட்டது. இந்த அணுகுமுறை வழக்கமானதுதான் என்றாலும் இங்கே தொடக்க மூலதனம் வழக்கத்தை விட மிகவும் அதிகமாக இருந்தது. ஆனால் இந்தத் துணைத் தலைவர்கள் மிகப்பெரிய அளவிற்கு அறுவடை செய்ய முடியும் என்பதில் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

எங்களுக்குப் போட்டியாளர்கள் இருக்கிறார்கள் என்பது தெரிந்திருந்தாலும் எல்லோருக்கும் போதுமான வேலை உள்ளது என்பதில் எங்களுக்குச் சந்தேகமே வரவில்லை. எங்களுக்கு அளிக்கப்படும் வெகுமதிகள் எங்கள் வேலையை எந்த அளவுக்குக் கருவூலத்துறை அங்கீகரிக்கிறது என்பதைப் பிரதிபலிக்கின்றன என்று எனது நீண்டகால அனுபவம் கூறியது. இறுதியாகத் தேர்ந்தெடுக்கப்படும் அணுகுமுறைகளை உருவாக்கிய ஆலோசகர்களுக்கு மிகச் சிறந்த ஒப்பந்தங்கள் வழங்கப்படும். இதை எனது தனிப்பட்ட சவாலாக நான் எடுத்துக் கொண்டேன். ஏற்கனவே மெய்ன்-னில் என் செல்வாக்கு விரைவாக வளர்ந்து கொண்டிருந்தது. ‘சாமா’வில் பங்காற்றுவது அதை மேலும் எச்சத்திற்குக் கொண்டு செல்லும். அதாவது நான் வெற்றியை எட்டிப் பறிக்கும் பட்சத்தில்.

எங்கள் சந்திப்புகளின் போது சாமாவும் ஜே.ஈ.சி.ஓ.ஆர் செயல்திட்டமும் ஏற்படுத்த உள்ள புதிய முன்மாதிரிகள் குறித்து வெளிப்படையாகவே பேசிக் கொண்டோம். உலக வங்கியிடமிருந்து கடன் வாங்குவதற்கு அவசியமில்லாத நாடுகளில் கொள்ளை லாபம் ஈட்டுவதற்கு இந்தப் புதிய அணுகுமுறை வழி வகுக்கும். ஈரானும், ஈராக்கும் இந்த வரிசையில் அடுத்துள்ள நாடுகளாகும். எல்லாவற்றிற்கும் மேலாகப் பொதுவான மனித இயல்பின் அடிப்படையில் இந்த நாடுகளின் தலைவர்கள் சவூதி அரேபியாவைப் பின்பற்ற முயல்வார்கள் என்று நாங்கள் நினைத்தோம். 1973- ஆம் ஆண்டில் பெருஞ்சவாலாகத் தோன்றிய எண்ணெய்த் தடை இறுதியில் பொறியியல், கட்டுமானத்துறைக்குப் பெரும் பரிசுகளை அள்ளித் தருவதாகவும், உலகப் பேரரசுக்குப் பாதை அமைக்க உதவுவதாகவும் மாறி விடப் போகிறது என்பது சந்தேகத்திற்கு இடமில்லாமல் தெளிவுபட்டது.

ஏறக்குறைய எட்டு மாத காலம் இந்த ஆரம்ப கட்டப் பணிகளில் மூழ்கியிருந்தேன். ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் என் குடியிருப்பில் அல்லது அலுவலக அறையில் தனிமையில் தீவிரமாக இயங்கி வந்தேன். என் பணியாளர்களுக்கு வேறு வேலைகள் இருந்தன. நான் முறையாக அவர்களை மேற்பார்வையிட்டு வந்தாலும் அவர்கள் தங்களைத் தாங்களே கவனித்துக் கொண்டார்கள் என்பதுதான் உண்மை. நாளா வட்டத்தில் எங்கள் பணியை மூடி மறைத்திருந்த மர்மத்திரை கொஞ்சம் கொஞ்சமாக விலகியது. சவூதி அரேபியா சம்பந்தப்பட்ட ஏதோ பெரிய விஷயம் நடந்து வருகிறது என்பதை நிறையப் பேர் தெரிந்து கொண்டார்கள். உணர்ச்சி வேகம் அதிகரித்தது. வதந்திகள் இறக்கை கட்டிக் கொண்டு பறந்தன. நிறுவனத் துணைத் தலைவர்களும் கருவூலப் பிரதிநிதிகளும் இன்னும் கொஞ்சம் வெளிப்படையானவர்களாக மாறினார்கள். உண்மையில் அவர்களுக்கே கொஞ்சம் கொஞ்மாகத்தான் திட்டத்தின் முழுப் பரிணாமமும் புரிந்து வந்தது.

உருவாகி வந்த இந்தத் திட்டத்தின் முக்கிய அம்சமாக, எண்ணெய் விலையில் ஏற்ற இறக்கம் இருந்தாலும் அது அமெரிக்காவும் அதன் நேச நாடுகளும் ஏற்றுக்கொள்ளக்கூடிய அளவைத் தாண்டிப் போய்விடக் கூடாது என்ற உறுதியை சவூதிகளிடமிருந்து வாஷிங்டன் பெற்றுக்கொள்ள விரும்பியது. இப்படியொரு உறுதி கிடைக்கும் பட்சத்தில் ஒருவேளை ஈரான், ஈராக், இந்தோனேஷியா அல்லது வெனிசுவேலா போன்ற நாடுகள் பெட்ரோலியத்திற்குத் தடை போடுவதாகப் பயமுறுத்தினால் சவூதிகளின் பரந்து விரிந்த எண்ணெய் வளம் அந்த அச்சுறுத்தலை முறியடிக்கப் பயன்படும். நீண்டகால நோக்கில் பார்த்தால், எண்ணெய் உற்பத்திக்குத் தடை என்ற ஆயுதத்தைப் பயன்படுத்த மற்ற நாடுகள் தயங்கும். இந்த உறுதிமொழிக்கு மாற்றாக வாஷிங்டன் சவூதி அரச குடும்பத்திற்கு ஒரு

மறுக்கவே முடியாத வெகுமதியை வழங்கியது. அமெரிக்கா, சவூதி அரச குடும்பத்திற்கு எந்த நிபந்தனையுமற்ற அரசியல் உதவி - தேவைப்பட்டால் இராணுவ ஆதரவு - வழங்க ஒப்புதல் அளித்தது. மொத்தத்தில் சவூதி அரசின் மீதான அரச குடும்பத்தின் பிடி நழுவாமலிருக்க வாஷிங்டன் எல்லா உதவிகளும் செய்யும் என்பதுதான் அமெரிக்கா அளித்த உறுதியின் சாராம்சமாகும்.

சவூதி அரேபியா அமைந்துள்ள கேந்திர முக்கியத்துவ மிக்க பகுதி, அதன் இராணுவ பலவீனம் மற்றும் அண்டை நாடுகளான ஈரான், ஈராக், சிரியா, இஸ்ரேலுக்குப் பலியாகக் கூடிய வாய்ப்பு ஆகிய ஜீவாதாரமான பிரச்சனைகளைக் கருத்தில் கொண்டு பார்க்கும்போது வாஷிங்டன் அளிக்கும் இந்த வாய்ப்பு சவூதி அரச குடும்பத்தால் மறுக்க முடியாததாகும். அரச குடும்பத்தின் இந்த நிலையைப் பயன்படுத்திக் கொண்டு வாஷிங்டன் இன்னொரு பிரச்சனைக்குரிய நிபந்தனையைத் திணிப்பதில் வெற்றி கண்டது. உலகில் பொருளாதார அடியாட்கள் ஆற்றி வந்த பாத்திரத்தை அடியோடு மாற்றிவிட்டது இந்த நிபந்தனை. நாங்கள் இதைப் பின்பு பல நாடுகளில் பயன்படுத்த இருந்தோம். குறிப்பாக ஈராக்கில். இப்போது நினைத்துப் பார்க்கும் போது எப்படி இப்படிப்பட்ட ஒரு நிபந்தனையை சவூதி அரேபியா ஏற்றுக் கொண்டது என்பதை என்னால் சிலசமயம் புரிந்து கொள்ளவே முடியவில்லை. ஓபெக் நாடுகளும், மற்ற இஸ்லாமிய நாடுகளும், உலக நாடுகள் பலவும் இந்த ஒப்பந்தத்தின் ஷரத்துக்களையும், சவூதி அரசின் சரணாகதியையும் அறிந்து கொண்டபோது கடும் அதிர்ச்சியடைந்தன.

அந்த நிபந்தனை என்னவென்றால் சவூதி அரேபியா தனது பெட்ரோ - டாலர்களை அமெரிக்க அரசின் பங்குப் பத்திரங்களை (securities) வாங்கப் பயன்படுத்த வேண்டும். பதிலாக இந்தப் பங்குப் பத்திரங்களிலிருந்து கிடைக்கும் வட்டி மத்திய காலத்திலேயே இன்னும் இருந்து வரும் சவூதி அரேபியாவை நவீனமான, தொழில்மயமான நாடாக மாற்றப் பயன்படுத்தப்படும். வேறு சொற்களில் கூறுவதானால் சவூதியின் எண்ணெய் வருமானத்திலிருந்து கிடைக்கும் பல்லாயிரம் கோடி ருபாய் அமெரிக்க நிறுவனங்களுக்குக் கொடுக்கப்படும். இந்த நிறுவனங்கள்தான் (இவற்றில் எங்கள் போட்டியாளர்களுமிருந்தனர்) அரேபியாவை நவீனமான தொழில்மயமான நாடாக மாற்றும் கனவை நனவாக்க உள்ளவை. அரேபியத் தீபகற்பம் முழுவதும் புத்தம் புதிய நகரங்களை நிர்மாணிக்கவும், உள்கட்டுமானத் திட்டங்களைக் கட்டியமைக்கவும் அமெரிக்கக் கருவூலத்துறை, சவூதி அரேபியாவின் செலவில் எங்களை அமர்த்தும்.

அடிப்படையில் திட்டங்களுக்குப் பணம் பட்டுவாடா செய்யும் உரிமையை சவூதிகள் தங்களிடமே வைத்துக் கொண்டார்கள். ஆனால் உண்மையில் உயர்தரமான பயிற்சி பெற்ற வெளிநாட்டவர்களின் குழுதான் அரேபியாவின் எதிர்காலத்தைத் தீர்மானிக்க இருந்தது.

(இந்தக் குழுவிலிருந்தவர்கள் இஸ்லாமியர்களின் பார்வையில் பெரும்பாலும் மத நம்பிக்கையற்றவர்கள்.) பழமைவாத வகாபி கோட்பாடுகளின் அடிப்படையில் பல ஆண்டுகளாக நிர்வகிக்கப்பட்டு வந்த ஒரு முடியரசில் இந்த நவீனப்படுத்தும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட இருந்தன. வெளித் தோற்றத்திற்கு இந்தத் திட்டத்தை ஏற்றுக்கொண்டதன் மூலம் சவூதிகள் தாங்களாகவே பழமைவாதக் கோட்பாடுகளை விட்டுவிட்டு வெகுதூரம் வந்துவிட்டது போல் தோன்றியபோதிலும் வாஷிங்டன் கொடுத்த அரசியல், ராணுவ அழுத்தங்களின் காரணமாகவே சவூதி அரச குடும்பம் தங்களுக்கு வேறு வழியில்லை என்பதைப் புரிந்து கொண்டதனாலேயே இது சாத்தியமானது என்று நான் சந்தேகிக்கிறேன்.

சவூதியில் கொள்ளை லாபம் அடிப்பதற்கான வாய்ப்புகள் கொட்டிக் கிடந்தன. ஏற்கனவே திகட்டுமளவிற்கு இனிமையானதாக இருந்த இந்த ஒப்பந்தத்திற்கு மேலும் சுவையூட்டியது இன்னொரு விஷயம். அமெரிக்க நாடாளுமன்றத்தின் ஒப்புதலைப் பெற வேண்டிய அவசியம் யாருக்கும் இல்லை என்பதுதான் அது. இந்த நாடாளுமன்ற ஒப்புதல் பெறும் விஷயம் பெக்டெல், மெய்ன் போன்ற நிறுவனங்களால் வெறுக்கப்பட்டது. தங்கள் வரவு - செலவை மற்றவர்களுக்குக் காட்டுவதை அல்லது தங்களுடைய இரகசியங்கள் அம்பலமாவதை அவை எப்போதுமே வெறுத்து வந்தன.. தாமஸ் டபிள்யூ. லாப்மன் மத்தியக் கிழக்குக் கழகத்தைச் சேர்ந்த ஒரு தேர்ந்த அறிவுஜீவியும், முன்னாள் பத்திரிகையாளரும் ஆவார். அவர் இந்த ஒப்பந்தத்தின் முக்கிய அம்சங்களை இப்படி அழகாகச் சுருக்கிக் கூறினார்:

‘‘பணத்தில் புரளும் சவூதிகள் பல்லாயிரம் கோடி டாலர்களை அமெரிக்கக் கருவூலத்திற்கு அளிப்பார்கள். அந்தப் பணம் தேவைப்படும் வரை அங்கேயே வைக்கப்பட்டிருக்கும். இந்த முறை சவூதிப் பணம் திரும்பவும் சுழற்சி முறையில் அமெரிக்காவுக்குத் திரும்பி வருவதை உறுதிப்படுத்தும்… உபயோகமானது என்று ஆணையத்தின் நிர்வாகிகளும் சவூதிகளும் ஏற்றுக் கொள்ளும் எந்தத் திட்டத்தையும் நாடாளுமன்றத்தின் முன் அனுமதியின்றியே மேற்கொள்ள இந்த ஒப்பந்தம் வகை செய்கிறது.

இந்த வரலாற்றுச் சிறப்பு மிகுந்த ஒப்பந்தத்திற்கான அளவுகோல்களை உருவாக்க மிகக் குறைந்த காலமே பிடித்தது. திட்டத்தைத் தொடங்கி வைக்க அமெரிக்க அரசின் மிக உயர்ந்த அதிகாரி யாரோ ஒருவர் சவூதி அரேபியாவுக்கு ரகசியமாக அனுப்பி வைக்கப்பட்டார். என்னால் உறுதியாகச் சொல்ல முடியாவிட்டாலும் அந்த ரகசியத் தூதர் ஹென்ற கிஸிங்கர் ஆக இருக்கலாம் என்று நான் ஊகித்தேன்.

தூதர் யாராக இருந்தாலும் அருகிலுள்ள ஈரானில் மொஸாடெக் அரசு

பிரிட்டிஷ் பெட்ரோலிய நிறுவனத்தை வெளியேற்ற முயற்சி மேற்கொண்டபோது என்ன நடந்தது என்பதை அரச குடும்பத்திற்கு நினைவூட்டுவதுதான் அவரது முக்கியமான வேலை. அடுத்த பணி சவூதிகளால் மறக்கவே முடியாத அளவிற்கு ஒரு கவர்ச்சிகரமான திட்டத்தை முன் வைப்பது. இந்தத் திட்டத்தை ஏற்றுக் கொள்வதைத் தவிர சவூதிகளுக்கு வேறு வழியில்லை என்பதைப் புரிய வைப்பதும் ஆகும். நாங்கள் வழங்கும் ஆதரவையும் பாதுகாப்பையும் பயன்படுத்திக் கொண்டு தங்கள் அரசை உறுதிப்படுத்திக் கொள்வது அல்லது மொஸாடெக்கின் வழியில் செல்வது இந்த இரண்டே இரண்டுதான் சவூதி அரச குடும்பத்திற்கு முன்னிருந்த வழிகள். இது தூதரால் அவர்களுக்குத் தெளிவாகப் புரிய வைக்கப்பட்டிருக்கும் என்பதில் சந்தேகமேயில்லை. தூதர் வாஷிங்டன் திரும்பியபோது சவூதிகள் இணங்கி விட்டார்கள் என்ற செய்தியைக் கொண்டு வந்தார்.

இன்னும் ஒரே ஒரு தடைதான் மீதியிருந்தது. சவூதி அரசில் முக்கியப் பொறுப்பிலுள்ளவர்களை நாங்கள் ஒப்பந்தத்திற்கு இணங்கச் செய்ய வேண்டியிருந்தது. இது ஒரு குடும்ப விவகாரம் என்று எங்களிடம் தெரிவிக்கப்பட்டது. சவூதி அரேபியா ஒரு குடியரசு நாடல்ல தான் என்றாலும் அரச குடும்பத்திற்குள் ஒத்த கருத்து எட்டப்படுவது அவசியமென்று கருதப்பட்டது.

1975 - இல் இப்படிப்பட்ட ஒரு முக்கியமான நபரைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பு எனக்கு அளிக்கப்பட்டது. அவர் இளவரசரா, இல்லையா என்று எனக்குத் திட்டமாகத் தெரியாவிட்டாலும் நான் எப்போதுமே அவரை இளவரசர் டபிள்யூ என்றே நினைத்து வந்தேன். என் வேலை இந்த சவூதி அரேபிய கருப்புப் பண விவகாரம் அவரது நாட்டுக்கும், அதோடு தனிப்பட்ட முறையில் அவருக்கும் பலனளிக்கக் கூடியது என்பதை அவர் ஏற்றுக் கொள்ளச் செய்ய வேண்டும் என்பதாகும்.

முதலில் தோன்றியதைப் போல் இந்த விஷயம் அவ்வளவு எளிதானதாக இருக்கவில்லை. இளவரசர் டபிள்யூ தன்னை ஒரு நல்ல வகாபி என்று சொல்லிக் கொண்டதோடு, தனது நாடு மேற்கத்திய வணிக மயமாக்கலைப் பின்பற்றுவதைத் தான் விரும்பவில்லை என்று அழுத்தமாகக் கூறி வந்தார். நாங்கள் வாக்களிக்கும் விஷயங்களுக்கும் பின்னிருக்கும் கபடமான உள்நோக்கத்தையும் தான் உணர்ந்து வைத்திருப்பதாக அறிவித்துக் கொண்டார். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வந்த சிலுவைப்போர் வீரர்களுக்கும் எங்களுக்கும் ஒரே நோக்கம்தான்; அது அரபு உலகைக் கிறிஸ்துவ மயமாக்குவது என்று அவர் அடித்துக் கூறினார். உண்மையில் அவர் கூறியவற்றில் ஓரளவு உண்மையும் இருந்தது. சிலுவைப்போர் வீரர்களுக்கும் எங்களுக்கும் அடிப்படையில் பெரிய வேறுபாடுகள் ஏதும் இல்லை என்பதுதான் என் கருத்தும். மத்திய காலத்தைச் சேர்ந்த ஐரோப்பியக் கத்தோலிக்கர்கள்

தங்கள் நோக்கம் இஸ்லாமியர்களை பாவங்களிலிருந்து காப்பதுதான் (purgatory) என்று கூறிக் கொண்டார்கள். சவூதிகளை நவீனமயமாக்க விரும்புகிறோம் என்று நாங்கள் கூறிக் கொண்டோம். நிறுவன - அதிகார வர்க்கத்தைப் போலவே சிலுவைப்போர் வீரர்களும் தங்கள் பேரரசை விரிவாக்கம் செய்யவே விரும்பினார்கள்.

மத நம்பிக்கைகளையும் கடந்து இளவரசர் டபிள்யூவு-க்கு அழகான, பொன்னிறக் கூந்தல் கொண்ட, இளம் பெண்கள் மீது ஒரு பலவீனம் இருந்து வந்தது. இப்போது சர்வ சாதாரணமாகிவிட்ட இந்த விஷயத்தைப் பற்றிப் பேசுவது அபத்தமாகத் தோன்றினாலும் நான் இதைச் சொல்லியே ஆக வேண்டும். இப்படியொரு விருப்பம் உள்ளதென்று எனக்குத் தெரியும்படி வெளிக்காட்டிக் கொண்ட ஒரே ஒருவர் இளவரசர் டபிள்யூதான். ஆனாலும் இந்தச் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த ஒப்பந்தத்தைத் செதுக்குவதில் இந்த மோகம் ஒரு முக்கியப் பங்காற்றியதோடு நான் எந்த அளவிற்குக் கீழிறங்கத் தயாராக இருந்தேன் என்பதையும் எனக்கு நடைமுறையில் உணர்த்தியது.

[1] 1973—ல் விதிக்கப்பட்ட எண்ணெய்த் தடைக்கு வித்திட்ட நிகழ்ச்சிகள் மற்றும் அவற்றின் பாதிப்புகளைப் பற்றி மேல் விவரங்களுக்குப் பார்க்க: Thomas W. Lippman, Inside the Mirage: America’s Gragile Partnership with Saudi Arabia (Boulder CO: Westview Press, 2004), pp 155-159; Daniel Yergin, The Epic Quest for Oil, Money Revolution (Baltimore: Johns Hopkins University Press, 1983); Ian Seymour, OPEC: Instrument of Change (London: McMillan, 1980).

[2] Thomas W. Lippman, Inside the Mirage: America’s Fragile Partnership with Saudi Arabia (Boulder CO: Westview Press, 2004), p.160.

[3] வால் ஸ்ட்ரீட்: நியூயார்க் நகரில் பங்குச் சந்தை அமைத்துள்ள தெரு. (மொ-ர்)

[4] David Holden and Richard Johns, The House of Saud: The Riuse and Rule of the Most Powerful Dynasty in the Arab World (New York: Holt Rinehart and Winston, 1981), p.359.

# 16

# மாமா வேலையும் ஒசாமா பின்லேடனுக்கு தியுதவியும்

இளவரசர் டபிள்யூ தான் எப்போது என்னைப் பார்க்க பாஸ்டன் வந்தாலும் தன்னோடு பொழுதைக் கழிக்க தன் ரசனைக்கேற்ற ஒரு பெண்ணை ஏற்பாடு செய்யப்பட வேண்டுமென்று தெரிவித்திருந்தார். அப்படி ஏற்பாடு செய்யப்படும் பெண் ஒரு சாதாரண உதவியாளைவிட தன்னுடன் அதிக நெருக்கமாக இருக்க வேண்டுமென்பதுதான் அவரது விருப்பம். ஆனால் ஒரு தொழில் ரீதியான விபசாரியையோ ஏதாவது விருந்துகளிலோ வீதியிலோ தனது குடும்பத்தவர்கள் யாரேனும் எதிர்ப்படக்கூடிய வாய்ப்புடையவளையோ தன்னால் ஒப்புக்கொள்ள முடியாது என்பதையும் உறுதிபடக் கூறியிருந்தார். இளவரசருடனான எனது சந்திப்புகள் இரகசியமாகவே நடந்ததால் அவரது இச்சைகளை என்னால் எளிதாக நிறைவேற்ற முடிந்தது.

'சாலி' பொன்னிறக் கூந்தலும் நீலக் கண்களும் கொண்ட அழகி. யுனைடெட் ஏர்லைன் விமானியான அவள் கணவன் தொழில் நிமித்தமாகவும், தனிப்பட்ட முறையிலும் நிறையப் பயணம் செய்து வந்தான். தன் கள்ள உறவுகளை மறைத்துக்கொள்ள அவன் அப்படியொன்றும் அதிக முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. சாலி தன் கணவனின் நடவடிக்கைகளைப் போர்க்குணத்துடன் எதிர்கொண்டாள். அதே நேரத்தில் அவனது சம்பளத்தையும் ஆடம்பரமான பாஸ்டன் பங்களாவையும் விமானிகளின் மனைவிகள் அனுபவித்து வந்த சலுகைகளையும் அவள் இழக்க விரும்பவில்லை. பத்தாண்டுகளுக்கு முன்பு சாலி ஹிப்பியாக இருந்தவள் என்பதால் வரைமுறையற்ற பாலியல் உறவுகளுக்குப் பழகிப் போயிருந்தாள். எனவே ரகசியமாய்ப் பணம் சம்பாதிக்கக் கிடைத்த இந்த வழி அவளுக்குக் கவர்ச்சிகரமானதாகத் தோன்றியது. சாலி, இளவரசர் டபிள்யூவுக்கு ஒரு வாய்ப்பளிக்க ஒப்புக் கொண்டாள், ஒரு நிபந்தனையின் பேரில். அவர் தன்னிடம் எப்படி நடந்து கொள்கிறார் என்பதை வைத்தே இந்த உறவின் எதிர்காலம் அமையும்!

அதிர்ஷ்டவசமாக இருவரும் ஒருவருக்கொருவர் பொருத்தமாக அமைந்துவிட்டனர்.

சவூதி அரேபியக் கருப்புப் பண விவகாரத்தில் இந்த சாலி அத்தியாயம் எனக்குச் சில சில்லறைத் தொந்தரவுகளைக் கொடுத்தது. மெய்ன் நிறுவனம் தனது பங்குதாரர்கள் சட்டவிரோதமாக எதுவும்

செய்வதைக் கண்டிப்பாகத் தடை செய்திருந்தது. சட்டத்தின் நோக்கில் நான் செய்வது அப்பட்டமான மாமா வேலையைத் தவிர வேறில்லை. மாமா வேலை மஸாஸுஸெட்ஸில் தடை செய்யப்பட்டிருந்தது. எனவே சாலியின் சேவைக்குப் பணம் கொடுப்பது எப்படி என்பதில்தான் முக்கியமான பிரச்சனை வந்தது. திரும்பவும் அதிர்ஷ்டம் எனக்குக் கைகொடுத்தது. வரவு - செலவுத் துறை எனது செலவுக் கணக்குகளில் பெரிய அளவிற்குச் சுதந்திரம் வழங்கியிருந்தது. நான் தாராளமாக டிப்ஸ் தரக் கூடியவன். எனவே பாஸ்டனின் உயர் தரமான உணவு விடுதிகளின் சேவகர்கள் எனக்காக வெற்று ரசீதுகளைப் பெற்றுத் தந்தார்கள். ரசீதுகள் கைகளால் நிரப்பப்பட்ட காலம் அது.

போகப் போக இளவரசர் தைரியமடைந்தார். சவூதி அரேபியாவிலுள்ள தன் மாளிகைக்கு சாலியை அழைத்து வந்து தன்னுடன் தங்க வைக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று அவர் விரும்பினார். இது அந்த நாட்களில் அப்படியொன்றும் விசித்திரமான வேண்டுகோள் அல்ல. அந்தக் காலத்தில் சில ஐரோப்பிய நாடுகளுக்கும் மத்தியக் கிழக்குக்கும் இடையே இளம்பெண்கள் வியாபாரம் சுறுசுறுப்பாக நடந்து வந்தது. இந்தப் பெண்கள் குறிப்பிட்ட காலத்திற்கு ஒப்பந்தம் செய்யப்பட்டார்கள். ஒப்பந்த காலம் முடிந்ததும் அவர்கள் தங்கள் வங்கிக் கணக்குகளில் கணிசமான பணத்துடன் சொந்த நாடுகளுக்குத் திரும்பிச் சென்றனர். ராபர்ட் பயர் இருபதாண்டுகள் சி. ஐ. ஏ. அதிகாரியாக இருந்தவர். பல நடவடிக்கைகளில் பங்கெடுத்துக் கொண்டவர். மத்தியக் கிழக்கு விவகாரங்களில் நிபுணர் என்று பெயர் பெற்றவர். அவர் இப்படிக் கூறுகிறார்: “1970- களின் தொடக்கத்தில் பெட்ரோ - டாலர்கள் வெள்ளமாகப் பாயத் தொடங்கியபோது வணிகத்தில் ஈடுபட்டிருந்த லெபனான்காரர்கள் இளவரசர்களுக்காக விபசாரிகளைக் கடத்தி வரத் தொடங்கினார்கள்… அரச குடும்பத்தில் யாருக்கும் காசோலைப் புத்தகத்தை எப்படிக் கையாள்வது என்பது தெரியாததால் இந்த லெபனான்காரர்கள் பெரும் பணக்காரர்கள் ஆகிவிட்டார்கள்.’’[1]

எனக்கு இந்த நிலைமை பழக்கமானதுதான். இந்த வகையான தொடர்புகளை ஏற்பாடு செய்யக்கூடிய சிலரையும் நான் ஏற்கனவே அறிந்திருந்தேன். ஆனாலும் எனக்கு இரண்டு பெரிய தடைகள் இருந்தன; சாலியும் சம்பளமும்! சாலி ஒருபோதும் பாஸ்டனை விட்டு ஒரு பாலைவன மாளிகைக்குப் போக விரும்பவே மாட்டாள். தவிர எத்தனை வெற்று ரசீதுகளைச் சேகரித்தாலும் அந்தச் செலவை ஈடுகட்ட முடியாது.

இளவரசர் டபிள்யூ தன் ஆசைநாயகியின் அத்தனை செலவுகளையும் தானே ஏற்றுக் கொள்ள விரும்புவதாகக் கூறிவிட்டார். அத்தோடு சவூதி அரேபியா வரவிருக்கும் சாலி அமெரிக்காவில்

அவரோடு உறவாடிய அதே சாலியாகத்தான் இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை என்று கூறி என் இரண்டாவது கவலைக்கும் முற்றுப்புள்ளி வைத்தார். நான் நிம்மதிப் பெருமூச்சு விட்டேன். லண்டனிலும், ஆம்ஸ்டர்டாமிலும் லெபனானியர்களுடன் தொடர்பு வைத்திருந்த நண்பர்களைத் தொலைபேசியில் பிடித்தேன். ஒன்றிரண்டு வாரங்களுக்குள் இன்னொரு சாலி ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டாள்.

இளவரசர் ஒரு வினோதமான மனிதர். சாலி விஷயத்தில் நான் காட்டிய திறமைக்காக அவர் என்னிடம் நம்பிக்கை கொண்டிருந்தார். ஆனால் 'சாமா'வுக்கு நற்சான்றிதழ் அளிக்கவும் அதைத் தன் நாட்டிற்குச் சிபாரிசு செய்யவும் அவரை ஒப்புக்கொள்ளச் செய்யவே முடியவில்லை. நான் கடுமையாகப் போராட வேண்டி வந்தது. அவருக்குப் பு-ள்ளிவிவரங்களைக் காட்டுவதில் பல மணி நேரங்களைச் செலவிட்டேன். இந்தோனேஷியா செல்லும் முன் குவைத்துக்காக நான் உருவாக்கிய பொருளாதாரப் புள்ளி விவர ஆய்வுகளையும், மற்ற நாடுகளில் நாங்கள் மேற்கொண்ட ஆய்வுகளையும் அவருக்கு முன் வைத்தேன். அவற்றை ஆராயவும் அவருக்கு உதவினேன். இறுதியில் அவர் வழிக்கு வந்துவிட்டார்.

மற்ற சவூதி முக்கியஸ்தர்களுக்கும், என் சக பொருளாதார அடியாட்களுக்கும் இடையே என்ன நடந்தது என்பது குறித்துத் தெரியவில்லை. எனக்குக் தெரிந்ததெல்லாம் இறுதியில் இச் செயல்திட்டம் முழுவதும் அரச குடும்பத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டது என்பது தான். மெய்ன்-க்குப் பரிசாகப் பணம் கொழிக்கக் கூடிய முதல் ஒப்பந்தங்களில் ஒன்று அமெரிக்கக் கருவூலத்துறையால் வழங்கப்பட்டது. இந்த நாட்டின் காலாவதியாகிப் போன ஒழுங்கற்ற மின் வினியோக முறை குறித்து ஆய்வு மேற்கொள்ளவும் அதை மாற்றிவிட்டு அமெரிக்கத் தரத்திற்கு இணையான ஒரு புதிய நவீனமான மின் வினியோக முறையை வடிவமைத்துத் தரும்படியும் எங்களிடம் கேட்டுக் கொள்ளப்பட்டது.

எப்போதையும் போல முதல் குழுவோடு சவூதி அரேபியாவுக்குச் சென்று அந்த நாட்டில் பகுதிவாரியாகப் பொருளாதார வளர்ச்சி மற்றும் மின்சாரத் தேவை பற்றிய முன்னறிவிப்புகளை உருவாக்க வேண்டியதுதான் என் வேலை. இது போன்ற சர்வதேசத் திட்டங்களில் பணிபுரிந்த அனுபவம் கொண்ட என் ஊழியர்கள் மூன்று பேர் ரியாத்துக்குச் செல்லத் தயாராகிக் கொண்டிருந்த போது எங்கள் சட்டத் துறையிலிருந்து ஒரு செய்தி வந்தது. ஒப்பந்த விதிகளின்படி அடுத்த சில வாரங்களில் எங்களுக்கு ரியாத்தில் ஒரு முழுமையான அலுவலகம் செயல்படத் தொடங்க வேண்டும். இந்த விதி ஒரு மாதமாகக் கவனிக்கப்படவேயில்லை. ஒப்பந்தத்தில் உள்ள இன்னொரு முக்கியமான விஷயம் எல்லாச் சாதனங்களும் ஒன்று அமெரிக்காவில் தயாரிக்கப்பட்டவையாக இருக்க வேண்டும் அல்லது அரேபியாவில்

தயாரிக்கப்பட்டவையாக இருக்க வேண்டும். சவூதி அரேபியாவில் எங்களுக்குத் தேவையான பொருட்களைத் தயாரிக்கக் கூடிய தொழிற்சாலைகள் இல்லாததால் பொருட்கள் அமெரிக்காவிலிருந்தே அனுப்பப்பட்டாக வேண்டும். சவூதியில் சரக்கேற்றிச் செல்லும் டேங்கர் லாரிகள் துறைமுகங்களுக்குள் செல்லவே நீண்ட நாட்கள் பிடிக்கும் என்ற உண்மை எங்களுக்கு மேலும் எரிச்சலூட்டியது. கப்பலில் சவூதிக்குள் பொருட்களைக் கொண்டு செல்லப் பல மாதங்கள் பிடிக்கலாம்.

ஒரு சில அறைகளில் வைக்கப்பட வேண்டிய சில சாமான்களுக்காக மெய்ன் இப்படிப்பட்ட ஓர் ஒப்பந்தத்தை விட்டுக் கொடுப்பதென்பது நடக்கவே நடக்காது. சம்பந்தப்பட்ட எல்லாப் பங்குதாரர்களும் ஒன்றுகூடி மூளையைக் கசக்கிக் கொண்டோம். இறுதியில் ஒரு போயிங் 747 விமானத்தை வாடகைக்கு எடுத்து அதை பாஸ்டன் கடைகளில் கிடைக்கும் பொருட்களால் நிரப்பி சவூதி அரேபியாவுக்கு அனுப்பி விடுவதென்று முடிவு செய்தோம். ஒருவேளை அந்த விமானம் யுனைட்டெட் ஏர்லைன்சுக்குச் சொந்தமானதாக இருந்து சாலியின் கணவன் அதைச் செலுத்தினால் இன்னும் பொருத்தமாக இருக்கும் என்று அப்போது நான் நினைத்துக் கொண்டது இன்னும் எனக்கு மறக்கவேயில்லை.-

*

இந்த ஒப்பந்தம் சவூதி அரேபியாவை ஒரே நாளில் தலைகீழாக மாற்றிவிட்டது. ஆடுகளுக்குப் பதிலாக பளிச்சிடும் மஞ்சள் வண்ணங் கொண்ட இருநூறு அமெரிக்கக் குப்பை அள்ளும் டிரக்குகள் ரியாத்தின் தெருக்களில் வலம் வரத் தொடங்கின. இந்த டிரக்குகள் வேஸ்ட் மேனேஜ்மெண்ட் நிறுவனத்துடனான 200 மில்லியன் டாலர் ஒப்பந்தத்தின் அடிப்படையில் வழங்கப்பட்டவை.[2] விவசாயம், எரிசக்தி, கல்வி, தொலைத் தொடர்பு என்று சவூதி சமூகத்தின் ஒவ்வொரு பகுதியும் நவீனமாக்கப்பட்டது. 2003-இல் தாமஸ் லிப்மன் இந்த மாற்றத்தை இவ்வாறு விளக்கினார்:

> “நாடோடிகளின் கூடாரங்களும் விவசாயிகளின் மண் குடிசைகளும் மட்டுமே காணப்பட்ட இந்தப் பரந்து விரிந்த, பாலைவன நிலப்பரப்பை அமெரிக்கர்கள் நிர்மாணித்த நவீனமான கட்டடங்கள் அடியோடு மாற்றிவிட்டன. இன்றைய சவூதி அரேபியா எக்ஸ்பிரஸ் நெடுஞ்சாலைகள், கம்ப்யூட்டர்கள், பணக்கார அமெரிக்கப் புறநகர்ப் பகுதிகளில் மட்டுமே கிடைக்கக்கூடிய பொருட்களால் நிரப்பப்பட்டுள்ள ஏர்கண்டிஷன் கடைகள், கம்பீரமான உணவகங்கள், துரித உணவகங்கள், செயற்கைக்கோள் தொலைக்காட்சி, அதி நவீனமான மருத்துவமனைகள், வானுயர்ந்த கட்டடங்கள், சூசுழல் ராட்டினங்களைக் கொண்ட பூங்காக்கள் ஆகியவற்றைக் கொண்ட ஒரு அதி நவீனமான நாடாக

மாறிவிட்டது.''[3]

1974-இல் நாங்கள் உருவாக்கிய திட்டங்கள் எண்ணெய் வளம் மிக்க நாடுகளுடனான எதிர்காலப் பேச்சு வார்த்தைகளுக்கு முன்மாதிரியாக அமைந்தன. சவூதி அரேபியாவுடன் செய்து கொள்ளப்பட்ட இந்த ஒப்பந்தம் (சாமா/ ஜே.ஈ.சி.ஓ.ஆர்.) ஈரானில் கெர்மிட் ரூஸ்வெல்ட் நிகழ்த்திய சாதனைகளுக்கு இணையாகக் கருதப்பட்டது. இந்த ஒப்பந்தத்திற்குப் பின்பு உலகப் பேரரசின் புதிய தலைமுறைப் போர் வீரர்களின் கைகளில் இருந்த அரசியல், பொருளாதார ஆயுதங்கள் மேலும் கூர்மைப்படுத்தப்பட்டன.

சர்வதேசச் சூழலிலும் இந்த சவூதி அரேபியா கருப்புப் பண விவகாரமும், கூட்டு ஆணையமும் புதிய முன்மாதிரிகளை உருவாக்கின. இது இடி அமீனின் விஷயத்தில் தெளிவாகத் தெரிந்தது. 1979-இல் கொடூரம் நிறைந்த சர்வாதிகாரியான இடிஅமீன் உகாண்டாவில் இருந்து தப்பி வெளியேறிய போது சவூதி அரேபியா அவருக்கு அடைக்கலம் கொடுத்தது. அவரால் கொல்லப்பட்டவர்களின் எண்ணிக்கை ஒன்றிலிருந்து மூன்று லட்சம் பேர் வரை இருக்கலாமென்று கணக்கிடப்பட்டுள்ளது. ஆனால் இடிஅமீன் சவூதி அரேபியாவில் அரசகுடும்பம் வழங்கிய கார்கள், வேலையாட்களுடன் இறுதிவரை சுகபோகமாகத்தான் வாழ்ந்து வந்தார். அமெரிக்கா இதை அமைதியாக ஆட்சேபித்தது என்றாலும் சவூதிகளுடனான ஒப்பந்தங்கள் பாதிக்கப்படுமென்ற பயத்தால் தீவிரமான நடவடிக்கை எதுவும் எடுக்கவில்லை. கடற்கரையில் உலாவியும், மீன் பிடித்தும் நாட்களைக் கழித்த இடிஅமீன் சிறுநீரகக் கோளாறால் 2003-ஆம் ஆண்டு ஜெட்டாவில் தனது எண்பத்து மூன்றாவது வயதில் மரணமடைந்தார்.[4]

சர்வதேசத் தீவிரவாதத்திற்கு நிதியுதவி அளிப்பதில் சவூதி அரேபியா ஆற்ற அனுமதிக்கப்பட்ட பாத்திரம் நுணுக்கமானதும், பெரும் சேதம் விளைவிக்கக் கூடியதுமாகும். 1980-களில் சோவியத் யூனியனுக்கு எதிராக ஆப்கானிஸ்தானில் நடத்தப்பட்ட போரில் ஒசாமா பின்லேடனுக்கு சவூதி அரச குடும்பம் நிதியுதவி அளிக்க வேண்டுமென்ற தனது விருப்பத்தை அமெரிக்கா என்றுமே மறைத்ததில்லை. ரியாத்தும், வாஷிங்டனும் இணைந்து முஜாஹிதீன்களுக்கு 3500 கோடி டாலர் நிதியுதவி அளித்துள்ளன.[5] இந்த இரு நாடுகளும் ஆப்கன் போரில் ஆற்றிய பாத்திரம் இந்தப் புள்ளிவிவரங்கள் தெரிவிப்பதைவிட மிக மிகப் பெரியது.

2003-ஆம் ஆண்டின் இறுதியில் அமெரிக்கச் செய்திகள் & உலக அறிக்கை என்ற ஏ 'சவூதித் தொடர்பு' என்ற தலைப்பில் ஒரு விரிவான ஆய்வு மேற்கொண்டது. ஆயிரக்கணக்கான பக்கங்கள் கொண்ட நீதிமன்ற ஆவணங்கள், அமெரிக்க மற்றும் ஏனைய நாடுகளைச் சேர்ந்த உளவுத் துறைகளின் அறிக்கைகள், இன்னும் ஏராளமான ஆவணங்கள்

இந்த ஆய்வின் போது பரிசீலிக்கப்பட்டன. டஜன் கணக்கான அரசு அதிகாரிகள், மத்தியக் கிழக்கு தீவிரவாதம் பற்றிய விஷயங்களில் நிபுணத்துவம் பெற்றவர்கள் உள்ளிட்டவர்கள் பேட்டி காணப்பட்டனர். அந்த ஆய்வு முடிவுகளில் சில கீழே தரப்பட்டுள்ளன:

மறுக்கவே முடியாத சாட்சியங்கள் உள்ளன: அமெரிக்காவின் நீண்டகாலத் தோழனும், உலகின் மிகப் பெரிய எண்ணெய் உற்பத்தியாளருமான சவூதி அரேபியா எப்படியோ தீவிரவாதத்திற்கு அளிக்கப்படும் நிதியுதவியின் 'மையப்புள்ளியாகி' விட்டது... ஈரானியப் புரட்சி மற்றும் ஆப்கானிஸ்தான் மீதான சோவியத் ஆக்கிரமிப்பு என்ற இரட்டை அதிர்ச்சிக்குப் பின்பு சவூதி அரேபியாவின் அரசு சார்புடைய தொண்டு நிறுவனங்கள் 1980 - களில் விரைந்து வளர்ந்து வந்த ஜிகாத் இயக்கத்திற்கு முக்கியமான நிதியாதாரங்களாக மாறிவிட்டன. சுமார் 20 நாடுகளில் இந்தப் பணம் ஆயுதப் பயிற்சி முகாம்கள் நடத்தவும், ஆயுதங்கள் வாங்கவும், புதிய உறுப்பினர்களைச் சேர்க்கவும் பயன்படுத்தப்பட்டது...

சவூதிப் பணம் அமெரிக்க அதிகாரிகளின் வாயையும் கட்டிப் போட்டு விட்டது என்று சில அனுபவம் மிக்க உளவுத்துறை அதிகாரிகள் கூறுகிறார்கள். பல்லாயிரம் கோடி டாலர் சவூதிப் பணம் முன்னாள் அமெரிக்கத் தூதர்கள், சி. ஐ. ஏ. தலைவர்கள், அமைச்சகச் செயலர்கள் என்று சவூதிகளோடு தொடர்பு கொண்டிருந்த அமெரிக்க அதிகாரிகளுக்குச் சென்றது...

மின்சாதனங்கள் மூலம் உரையாடல்களை மறித்துக் கேட்ட போது அரச குடும்பத்தினர் அல் கொய்தாவை மட்டுமல்லாமல் வேறு பல தீவிரவாதக் குழுக்களையும் ஆதரித்து வந்தது தெரிய வந்தது.[6]

2001-இல் உலக வர்த்தக மையம் மற்றும் பெண்டகன் மீதான தாக்குதல்களுக்குப் பிறகு வாஷிங்டனுக்கும் ரியாத்துக்கும் இடையிலிருந்த உறவில் உள்ள மர்மங்கள் பற்றி இன்னும் அதிகமான சாட்சியங்கள் வெளி வந்துள்ளன. 2003, அக்டோபரில் வானிடி (Vanity Fair) என்ற ஏடு 'சவூதிகளைக் காப்பாற்றுவதற்காக' என்ற தலைப்பில் வெளியிட்ட ஆழமான ஆய்வறிக்கை பல இரகசியங்களை அம்பலப்படுத்தியது.[7] புஷ் குடும்பத்திற்கும், சவூதி அரச குடும்பத்திற்கும், பின்லேடன் குடும்பத்திற்கும் இடையேயான உறவுகள் குறித்து வெளி வந்த செய்திகள் எனக்கு ஆச்சரியமளிக்கவேயில்லை. இந்த உறவுகள் 1974-இல் சவூதி அரேபியக் கருப்புப் பண விவகாரம் தொடங்கிய காலத்திலேயே தொடங்கிவிட்டன. ஜார்ஜ் எச். டபிள்யூ. புஷ் ஐ.நா. சபைக்கான அமெரிக்கத் தூதராக 1971 - இலிருந்து 1973 வரை பதவி வகித்த காலத்திலும், பின்பு 1976- இலிருந்து 1977 வரை சி.ஐ.ஏ.வின் தலைவராகப் பதவி வகித்த போதும் இந்த உறவுகள் வேர்விட்டு வளர்ந்தன என்பதை நான் நன்கறிவேன். இந்த உண்மை எப்படியோ

பத்திரிகைகளில் வெளிவந்ததுதான் எனக்கு ஆச்சரியமூட்டியது. அந்தக் கட்டுரை இப்படி முடிக்கப்பட்டிருந்தது:

‘உலகின் பலம் வாய்ந்த ராஜ குடும்பங்களான சவூதி அரச குடும்பமும் புஷ் குடும்பமும் கடந்த 20 ஆண்டுகளுக்கும் மேலாகத் தங்களுக்குள் நெருக்கமான அரசியல், வணிகத் தொடர்புகள் கொண்டுள்ளன. தனிப்பட்ட முறையிலும் உறவுகளைப் பேணி வருகின்றன.

ஹார்கேன் எனர்ஜி என்ற போண்டியாகிப் போன எண்ணெய் நிறுவனத்தை சவூதிகள் ஆதரித்தனர். அதில் ஜார்ஜ் டபிள்யூ. புஷ்ஷின் மூலதனம் இருந்தது. முன்னாள் ஜனாதிபதி ஜார்ஜ். எச். டபிள்யூ. புஷ் மற்றும் அவரது நீண்டகால நண்பரும், முன்னாள் உள்துறைச் செயலருமான ஜேம்ஸ் பேக்கர் IIIம் கார்லைல் குழுவிற்கு நிதி திரட்டுவதற்காக சவூதிகளை அணுகினார்கள். இந்தக் கார்லைல் நிறுவனம்தான் உலகிலேயே மிகப் பெரிய தனியார் நிறுவனம். இன்றும் முன்னாள் அதிபர் புஷ் இந்நிறுவனத்தின் மூத்த ஆலோசகராகத்தான் இருந்து வருகிறார். அதன் முதலீட்டாளர்களில் ஒருவர் அரேபியாவைச் சேர்ந்த தீவிரவாதக் குழுக்களுடன் தொடர்பு கொண்டிருப்பதாகக் குற்றம் சாட்டப்படுபவர்…

செப்டம்பர் பதினொன்று தாக்குதல் நடந்த சில நாட்களுக்குள் பின்லேடன் குடும்பத்தினர் உள்ளிட்ட பணம் படைத்த சவூதி அரேபியர்கள் அமெரிக்காவிலிருந்து தனியார் ஜெட் விமானங்களில் பாதுகாப்பாக வெளியேற்றப்பட்டனர். இந்த விமானங்களைப் பறக்க அனுமதித்தது நான்தான் என்று இதுவரை யாரும் ஒப்புக் கொள்ளவில்லை. அவற்றில் பயணித்தவர்கள் விசாரிக்கப்படவுமில்லை. ஒருவேளை புஷ் குடும்பம் சவூதிகளோடு கொண்டிருந்த நீண்டகால உறவுதான் இதற்கெல்லாம் காரணமோ?

[1] Robert Baer, Sleeping with the Devil: How Washington Sold Our Soul for Saudi Oil (New York: Crown Publishers, 2003), p.26.

[2] Thomas W.Lippman, Inside the Mirage: America’s Fragile Partnership with Saudi Arabia (Boulder CO: Westview Press, 2004), p.162.

[3] Thomas W.Lippman, Inside the Mirage: America’s Fragile Partnership with Saudi Arabia (Boulder CO: Westview Press, 2004), p.2.

[4] Henry Wasswa, “”Idi Amin, Murderous Ugandan Dictator, Dies,’’ Associated Press, August 17, 2003.

[5] “The Saudi Connection,’’ U.S.New & World Report, December 15, 2003, p.21.

[6] “The Saudi Connection,” U.S.New & World Report, December 15, 2003, pp 219, 20,26.

[7] Craug Unger, “Saving the Saudis,” Vanity Fair, October 2003. பெக்டலுக்கும் புஷ்

குடும்பத்திற்குமான தொடர்புகள் பற்றிய விவரங்களுக்குப் பார்க்க: ‘‘Zapata Petroleum Corp.,’’ Fortune, April 1958, p.248; Darwin Payne, Initiative in Energy: Dresser Industries, Inc. 1880-1978 (New York: Simon and Schuster, 1979) Nathan Vardi, “”Desert Storm: Bechtel Group is Leading the Charge,’’ and “”Contacts for Contracts,’’ both in Forbes, June 23, 2003, pp 63-66; Graydon Carter, “”Editor’s Letter: Fly the Friendly Skies…’’ Vanity Fair, October 2003; Richard A. Oppel with Diana B.Henriques, “”A Nation at War: The Contractor. Company has ties in Washington, and to Iraq,’’ New York Times, April 18, 2003.

# 17

# பனாமா கால்வாய்ப் பேச்சுவார்த்தைகளும் கிரஹாம் கிரீனும்

சவூதி அரேபியா பலருடைய வளர்ச்சிக்குக் காரணமாக அமைந்தது. ஏற்கனவே நான் பாதி தூரத்தைக் கடந்திருந்தேன் என்றாலும் அரேபியப் பாலைவனத்தில் நான் ஈட்டிய வெற்றிகள் எனக்குப் புதிய கதவுகளைத் திறந்து விட்டன என்பதில் சந்தேகமில்லை. 1977 வாக்கில் எனக்கென ஒரு சிறிய பேரரசையே உருவாக்கிவிட்டேன். எங்கள் பாஸ்டன் தலைமையகத்தில் இருபது தொழில்நுட்ப வல்லுநர்கள் கொண்ட ஒரு குழுவும் மெய்னின் மற்ற துறைகளைச் சேர்ந்த இன்னொரு ஆலோசகர் குழுவும் எனக்காகப் பணி புரிந்தன. அத்தோடு உலகம் முழுவதும் பல இடங்களில் எனது அலுவலகங்கள் செயல் பட்டு வந்தன. இந்த நிறுவனத்தின் நூற்றாண்டு கால வரலாற்றிலேயே மிகவும் இளம் வயதில் பங்குதாரனானவன் நான்தான். அத்தோடு தலைமைப் பொருளாதார நிபுணனாகவும், பிராந்தியத் திட்டமிடுதலுக்கான மேலாளராகவும் நான் நியமிக்கப்பட்டிருந்தேன். ஹார்வார்டு பல்கலைக்கழகம் உள்ளிட்ட இடங்களில் விரிவுரைகளும் ஆற்றி வந்தேன். செய்தித்தாள்கள் என் கட்டுரைகளைக் கோரின.[1] எனக்குச் சொந்தமாக ஓர் உல்லாசப் படகும் இருந்தது. அமெரிக்க சுதந்திரப் போருக்குப் பின்பு கடல் கொள்ளைக்காரர்களை அடக்கியொடுக்கிய வரலாற்றுச் சிறப்பு மிக்க கப்பலான கான்ஸ்டியூஷனுக்கு அருகில் என் படகு நிறுத்தப்பட்டிருந்தது. அது ‘ஓல்டு அயர்ன்சைட்ஸ்’ என்றழைக்கப்பட்டது. இந்தக் கப்பல்தான் அமெரிக்க சுதந்திரப் போருக்குப் பின்னர், கடற்கொள்ளையர்களை அடக்குவதில் பெயர் பெற்ற கப்பலாகும். எனக்கு மிகச் சிறந்த சம்பளமும் வழங்கப்பட்டதோடு நாற்பது வயதுக்குள் நிச்சயம் கோடிகளை அள்ளித் தரக் கூடிய பங்குகளும் என்னிடமிருந்தன. என் திருமணம் முறிந்து விட்டது என்பது உண்மைதான். ஆனால் உலகின் பல பகுதிகளைச் சேர்ந்த அழகான, கவர்ச்சிகரமான பெண்களுடன் நான் பழகி வந்தேன்.

இந்த நேரத்தில் புரூனோ முன்னறிவிப்புகளை உருவாக்க ஒரு புதிய அணுகுமுறையை உருவாக்கினார். இந்த அணுகுமுறை இந்த நூற்றாண்டின் ஆரம்ப கட்டத்தைச் சேர்ந்த ரஷ்யக் கணிதவியலாளர் ஒருவரின் எழுத்துகளை அடிப்படையாகக் கொண்டது. இந்தப் பொருளாதாரக் கணிதவியல் (econometric) ஆய்வுமுறை ஒரு பொருளாதாரத்தின் குறிப்பிட்ட பிரிவுகளின் வளர்ச்சி குறித்து

முன்னறிவிப்புகள் செய்யும்போது ஆய்வாளனின் தனிப்பட்ட சிந்தனையின் அடிப்படையிலான முடிவுகளையும் அந்த ஆய்வுகளில் இணைந்து கொள்ள வழி செய்தது. மிகப் பெரிய கடன்களைப் பெறுவதன் மூலம் உச்சக்கட்ட வளர்ச்சி விகிதத்தை எட்ட முடியும் என்று நாங்கள் நிரூபிக்க இந்த ஆய்வுமுறை ஒரு நல்ல கருவியாக இருந்தது. இந்தக் கருத்தைப் பரிசோதித்துப் பார்க்கும்படி புரூனோ என்னிடம் கேட்டுக் கொண்டார்.

டாக்டர். நதிபுரம் பிரசாத் என்ற இளம் எம்.ஐ.டி. கணிதவியலாளரை என் துறைக்கு அழைத்து வந்து ஒரு பட்ஜெட்டைக் கொடுத்தேன்.அவர் ஆறு மாதத்தில் மார்க்கவ் முறை எனப்படும் பொருளாதாரக் கணிதவியல் ஆய்வுமுறையை வளர்த்தெடுத்தார். நாங்கள் இருவரும் இணைந்து பொருளாதார வளர்ச்சிக்கு அவசியமான உள்கட்டுமானத்தை உருவாக்கத் தேவைப்படும் மூலதனத்தின் அளவை முன்கூட்டியே அளவிடும் முறைகளிலேயே மார்க்கவ் முறைதான் மிகவும் புரட்சிகரமானது என்று ஆணித்தரமாக வாதிட்டுக் கட்டுரைகளை எழுதித் தள்ளினோம்.

திருப்பியே கொடுக்க முடியாத கடன்களில் நாடுகளை மூழ்கடிப்பதன் மூலம் அவற்றுக்கு நன்மைதான் செய்கிறோம் என்று ‘விஞ்ஞானப்பூர்வமாக’ நிரூபிக்க வல்ல ஒரு கருவிதான் நாங்கள் வேண்டுவது. மார்க்கவின் சதிகளைக் கண்டுபிடிக்க ஏராளமான நேரமும், பணமும், மிக உயர்ந்த அறிவுக்கூர்மையும் கொண்ட பொருளாதாரக் கணிதவியல் நிபுணரால்தான் முடியும். எங்கள் கட்டுரைகள் பல மரியாதைக்குரிய நிறுவனங்களால் பதிப்பிக்கப்பட்டன. இவற்றை நாங்கள் முறைப்படி பல மாநாடுகளிலும், பல்கலைக்கழகங்களிலும் வெளியிட்டோம். இந்தக் கட்டுரைகளும் அவற்றின் ஆசிரியர்களான நாங்களும் எங்கள் துறை முழுவதும் புகழ் பெற்றோம்.[2]

ஓமர் டோரிஜோஸும் நானும் செய்து கொண்ட ரகசிய ஒப்பந்தத்தை இருவருமே மதித்து நடந்து கொண்டோம். எங்கள் ஆய்வுகள் நேர்மையானவையாக இருக்கும்படியும், பரிந்துரைகள் ஏழைகளையும் கணக்கிலெடுத்துக் கொண்டவையாக இருக்கும்படியும் நான் பார்த்துக் கொண்டேன். பனாமா குறித்த என் முன்னறிவிப்புகள் வழக்கம் போல் ஊதிப் பெருக்கப்பட்டவையாக இல்லை. சோஷலிசத்தின் சாயல் கூட அவற்றில் இருந்தது என்ற முணுமுணுப்பு கூட என் காதில் விழுந்தது ஆனால் மெய்ன்-க்கு டோரிஜோஸ் அரசிடமிருந்து தொடர்ந்து ஒப்பந்தங்கள் கிடைத்துக் கொண்டே இருந்தன. இந்த ஒப்பந்தங்களில் முதல்முறையாக வழக்கமான கட்டுமானத் துறைகளோடு விவசாயத்தையும் உள்ளடக்கிய புதுமையான மாஸ்டர் பிளான் இடம் பெற்றிருந்தது. இந்த நேரத்தில் கால்வாய் ஒப்பந்தத்தை டோரிஜோஸும், கார்ட்டரும் மறுபரிசீலனை செய்வதில் இறங்குவதை

நான் கவனித்துக் கொண்டிருந்தேன்.

கால்வாய்ப் பேச்சுவார்த்தைகள் மிகப் பெரிய உணர்ச்சிக் கொந்தளிப்பையும், ஆர்வத்தையும் தூண்டிவிட்டன. உலகம் முழுவதுமுள்ள மக்கள், பனாமாவினருக்குச் சொந்தமான கால்வாயைப் பனாமாவினரிடம் ஒப்படைக்கும் சரியான காரியத்தை அமெரிக்கா செய்யப் போகிறதா அல்லது வியட்நாமில் பலத்த அடி வாங்கிய 'விதியின் வெளிப்பாடு' கோட்பாட்டைத் திரும்பவும் நிலைநாட்ட முயலப் போகிறதா என்பதை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தனர். சரியான நேரத்தில் ஒரு நியாயமான, இரக்கமுள்ள மனிதர் அமெரிக்க ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதாகப் பலருக்குத் தோன்றியது. ஆனால் வாஷிங்டனில் இருந்த பழமைவாத முகாம்களும், வலதுசாரி மத பீடங்களும் வெறுப்பையும் கோபத்தையும் கக்கின... தேசியப் பாதுகாப்பின் முக்கியமான அரணை எப்படி விட்டுத் தர முடியும்? அமெரிக்காவின் அறிவுக்கும், திறமைக்கும் சாட்சியாக விளங்கும் இந்தக் கால்வாயை, தென் அமெரிக்காவின் பொக்கிஷங்களை அமெரிக்க நிறுவனங்களின் இலாப வேட்கையுடன் இணைக்கும் இந்த நீர்வழியை எப்படி விட்டுத் தர முடியும்?

பனாமாவில் நான் வழக்கமாக கான்டினென்டல் ஹோட்டலில் தான் தங்குவது வழக்கம். ஆனால் ஐந்தாவது முறையாக நான் பனாமா சென்றிருந்தபோது அங்கே பழுது பார்க்கும் பணி நடந்து வந்தது. அதனால் ஏற்பட்ட இரைச்சலின் காரணமாக வீதியின் மறுபுறமிருந்த பனாமா ஹோட்டலில் தங்கினேன். எனக்கு முதலில் எரிச்சல் வந்தது. ஆனால் பிரம்பு நாற்காலிகள் போடப்பட்டிருந்த மரத்தாலான துடுப்பு போன்ற இறக்கைகளைக் கொண்டிருந்த மின் விசிறிகள் சுழன்று கொண்டிருந்த இந்த அழகான வராந்தா எனக்கு மிகவும் பிடித்து விட்டது. இது 'காஸாபிளங்கா' திரைப்படத்தில் வரும் அரங்கு போலத் தோன்றியது. எந்த நேரமும் அதன் கதாநாயகனான ஹம்ப்ரே போகார்ட் வந்துவிடுவார் என்ற எண்ணம் மனதில் உதித்தது. என் கையில் இருந்த 'நியூயார்க் ரிவ்யூ ஆப் புக்ஸ்' இதழில் கிரஹாம் கிரீன் எழுதியிருந்த பனாமா பற்றிய கட்டுரை இடம் பெற்றிருந்தது. அதைப் படித்து முடித்துவிட்டு இரண்டு ஆண்டுகளுக்கு முந்தைய ஒரு மாலை நேரத்தை நினைவு கூர்ந்தபடியே சுற்றிக் கொண்டிருந்த மின்விசிறிகளை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

"ஃபோர்டு ஒரு பலவீனமான அதிபர். அவர் திரும்பவும் தேர்ந்தெடுக்கப்பட மாட்டார்'' என்று 1975- லேயே ஓமர் டோரிஜோஸ் கூறியிருந்தார். செல்வாக்கு மிக்க பனாமாவினர் கூடியிருந்த ஒரு கூட்டத்தில்தான் அவர் இக்கருத்தை வெளியிட்டார். சுழன்றடிக்கும் மின்விசிறிகள் கொண்ட ஒரு கம்பீரமான பழமையான கிளப்பில் நடந்த

அந்தக் கூட்டத்திற்கு அழைக்கப்பட்டிருந்த ஒரு சில வெளிநாட்டவர்களில் நானும் ஒருவன். “இதன் காரணமாகத்தான் நான் கால்வாய் விவகாரத்தைத் தீவிரப்படுத்தத் தீர்மானித்திருக்கிறேன். அதைத் திரும்பப் பெறுவதற்கான முழுமையான அரசியல் போரைத் தொடங்க இதுதான் சரியான நேரம்'' என்று டோரிஜோஸ் அந்த உரையை முடித்திருந்தார்.

இந்தப் பேச்சு எனக்கு எழுச்சியூட்டியது. அறைக்குத் திரும்பியவுடன் ஒரு கடிதத்தைக் கிறுக்கி ‘பாஸ்டன் குளோப்’ பத்திரிகைக்கு அனுப்பினேன். அதன் ஆசிரியர் பாஸ்டனிலிருந்து என் அலுவலகத்திற்குத் தொடர்பு கொண்டு தலையங்கத்திற்கு மறுப்புத் தெரிவிக்கும் வகையில் ஒரு கட்டுரையை எழுதித் தரச் சொல்லிக் கேட்டிருந்தார். “1975-ல் பனாமாவில் காலனியாதிக்கத்திற்கு இடமில்லை'' என்ற தலைப்பில் நான் எழுதிய அந்தக் கட்டுரை 1975, செப்டம்பர் 19 பதிப்பில் தலையங்கத்திற்கு எதிராக ஏறக்குறை பாதிப்பக்கத்தை அடைத்துக் கொண்டது.

பனாமா கால்வாயைப் பனாமாவிற்குத் திருப்பிக் கொடுக்க வேண்டியது அவசியம் என்பதற்கு கட்டுரையில் மூன்று காரணங்கள் சுட்டிக் காட்டப்பட்டிருந்தன. “தற்போதுள்ள நிலைமை நியாயமற்றது'' என்பது முதலாவது காரணம். கால்வாயின் கட்டுப்பாட்டைப் பனாமாவினருக்கு மாற்றிக் கொடுப்பதால் ஏற்பட உள்ள பிரச்சனைகளைவிட தற்போதுள்ள ஒப்பந்தம் அதிகமான அபாயங்களை ஏற்படுத்தக் கூடியது என்பது இரண்டாவது காரணமாகும். இந்த இரண்டாவது காரணத்தை வலியுறுத்த நான் இன்டர்ஓலனிக் கால்வாய் ஆணையம் நடத்திய ஆய்வை மேற்கோள் காட்டியிருந்தேன். கேன்டூன் அணைக்கு அருகில் ஒரே ஒரு மனிதன் ஒரே ஒரு குண்டு வைத்தால் போதும்; இரண்டு ஆண்டுகளுக்குக் கால்வாயில் கப்பல் போக்குவரத்தை நிறுத்திவிடலாம் என்று அந்த ஆய்வில் கூறப்பட்டிருந்தது. இதே கருத்தை ஜெனரல் டோரிஜோஸும் வெளியிட்டிருந்தார். மூன்றாவதாக நான் குறிப்பிட்டிருந்த காரணம் கால்வாயைப் பனாமாவிற்கு விட்டுக் கொடுக்க மறுப்பதால் ஏற்கனவே பாதிப்புக்குள்ளாகியிருக்கும் அமெரிக்காவிற்கும் இலத்தீன் அமெரிக்காவுக்கும் இடையிலான உறவுகள் மேலும் மோசமடையக் கூடும் என்பதாகும். அந்தக் கட்டுரையை நான் கீழ்க்கண்டவாறு முடித்திருந்தேன்:

கால்வாயைத் தொடர்ந்து சிறப்பாகப் பயன்படுத்த உள்ள சிறந்த வழி என்னவென்றால், பனாமாவினர் அதைக் கட்டுப்படுத்தவும், கால்வாய்க்குப் பொறுப்பேற்றுக் கொள்ளவும் உதவுவதுதான். இந்த வழியைப் பின்பற்றும் பட்சத்தில் இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு சுய நிர்ணய உரிமையைக் காப்போம் என்று நாம் ஏற்றுக் கொண்ட உறுதிப்பாட்டை மறந்துவிடவில்லை; அதன் மீது நமக்குள் விசுவாசம்

மாறிவிடவில்லை என்று நாம் கர்வம் கொள்ளலாம்.

காலனியாதிக்கம் என்பது இயல்பானதாகக் கருதப்பட்டு வந்த இந்த நூற்றாண்டின் தொடக்கக் காலகட்டத்தில் வேண்டுமானால் இந்த ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்வதும், தொடர்வதும் புரிந்து கொள்ளக்கூடிய விஷயமாக இருந்திருக்கலாம். அது அந்தக் காலகட்டத்திற்கு ஏற்றதாகவும் இருந்திருக்கலாம். இந்தக் காலத்தில் இந்த ஒப்பந்தத்தை நியாயப்படுத்தவே முடியாது. 1975-இல் காலனியாதிக்கத்திற்கு இடமேயில்லை. இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பே விடுதலையடைந்து விட்டதாகக் கூறிக் கொள்ளும் நாம், அதைக் கொண்டாடிக் கொண்டிருக்கும் நாம் இந்த விஷயத்தைப் (அதாவது காலனியாதிக்கம் காலாவதியாகிவிட்டது என்பதை) புரிந்து கொண்டு அதற்கேற்றவாறு நடந்து கொள்ள வேண்டும்.[3]

என் இடத்திலிருந்து பார்த்தால் இப்படியொரு கட்டுரையை எழுதுவது ஒரு துணிச்சலான நடவடிக்கைதான். இந்தக் கட்டுரையை எழுதுவதற்குக் கொஞ்சகாலம் முன்புதான் நான் மெய்ன் நிறுவனத்தில் பங்குதாரனாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டிருந்தேன். பங்குதாரர்கள் பத்திரிகைகளிடமிருந்து விலகியிருக்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்பட்டார்கள். அதிலும் நியூ இங்கிலாந்தின் மிகவும் மரியாதைக்குரிய செய்தி ஏட்டின் தலையங்கத்திற்கு எதிரான கருத்துகளை வெளியிடுவது போன்ற காரியங்களில் ஈடுபடுவது நிச்சயம் விரும்பத்தகாத ஒன்று. அலுவலகங்களுக்கு இடையிலான அஞ்சல் தொடர்பு மூலம் எனக்கு ஒரு கோப்பு அனுப்பப்பட்டது. பத்திரிகையில் பிரசுரமான என் கட்டுரையின் நகலுடன் ஆபாசமான மொட்டைக் கடிதங்களும் அதில் இணைக்கப்பட்டிருந்தன. அதுபோன்ற ஒரு கடிதத்தில் சார்லி இல்லிங்வொர்த்தின் கையெழுத்தை நான் கண்டு கொண்டேன். நான் பணியாற்றிய முதல் திட்டத்திற்கு மேலாளராக இருந்த அவர் பத்து ஆண்டுகளுக்கும் மேலாக மெய்னில் பணியாற்றி வந்தார். நான் ஆறு ஆண்டுகளாகத்தான் மெய்னில் இருந்து வருகிறேன். ஆனால் அவர் இன்னமும் பங்குதாரர் ஆக்கப்படவில்லை. அவர் கையெழுத்திலிருந்த அந்தக் கடிதத்தில் ஒரு பயங்கரமான மண்டையோடும் எலும்புகளும் வரையப்பட்டிருந்தன. அதிலிருந்த செய்தி என்னவோ எளிமையானதுதான். “இந்தக் காமி (கம்யூனிஸ்ட்) உண்மையிலேயே நமது நிறுவனத்தின் பங்குதாரர் தானா?’’

புரூனோ என்னைத் தன் அலுவலகத்திற்கு அழைத்தார். “உன் பிரச்சனை இத்தோடு முடியப் போவதில்லை. மெய்ன் ரொம்பவும் ஆச்சாரமான இடம். ஆனால் என்னைப் பொறுத்தவரை உன்னைப் புத்திசாலி என்றுதான் நினைக்கிறேன். இதை நீயும் தெரிந்துகொள்ள வேண்டுமென்று விரும்புகிறேன். உன் கட்டுரை டோரிஜோஸுக்கு மிகவும் பிடிக்கும். நீ அவருக்குக் கட்டுரையின் ஒரு பிரதியைக்

கட்டாயம் அனுப்பியிருப்பாய் என்று நம்பு-கிறேன். இங்கே இந்த அலுவலகத்தில் இருக்கும் கோமாளிகள், டோரிஜோஸுக்கு சோஷலிஸவாதி என்று முத்திரை குத்துபவர்கள், தங்களுக்கு வேலை கிடைத்துக் கொண்டிருக்கும் வரை அதைப் பற்றிக் கடுகளவும் கவலைப்படமாட்டார்கள்!''

எப்போதும் போல புரூனோவின் கருத்து சரியானதாகவே இருந்தது. இப்போது - அதாவது 1977-இல் - வெள்ளை மாளிகையில் பேச்சு வார்த்தைகள் தீவிரமாக நடைபெற்று வந்தன. மெய்ன்-னின் போட்டியாளர்கள் பலர் தவறான தரப்பை ஆதரித்ததன் காரணமாகப் பனாமாவிலிருந்து வெளியேற்றப்பட்டனர். அதே நேரத்தில் பனாமாவில் எங்கள் வேலை பல்கிப் பெருகியது. இப்போது நான் கிரஹாம் கிரீனின் கட்டுரையை 'நியூயார்க் ரிவ்வியூ ஆப் புக்ஸ்'ல் படித்து முடித்துவிட்டு ஹோட்டல் பனாமாவின் வராந்தாவில் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். ஐந்து எல்லைகளைக் கொண்ட நாடு (The country with five frontiers) என்ற அந்தப் புயல் போன்ற உக்கிரமான கட்டுரையில் பனாமாவின் தேசியப் பாதுகாப்புப் படையின் மூத்த அதிகாரிகளிடையே நிலவி வரும் ஊழல் பற்றிய விவாதமும் இருந்தது. டோரிஜோஸே தன் அதிகாரிகளுக்குச் சிறந்த வீடுகள் உள்ளிட்ட சிறப்பு வசதிகள் கொடுப்பதை ஒப்புக் கொண்டுள்ளார் என்பதைக் கட்டுரை ஆசிரியர் சுட்டிக்காட்டியிருந்தார். "நான் செய்யாவிட்டால் சி.ஐ.ஏ. செய்யும்''. இதன் பொருள் அமெரிக்க உளவுத்துறை ஜனாதிபதி கார்ட்டரின் நோக்கங்களைச் சிதறடிக்க உறுதி பூண்டுள்ளது என்பதும், தேவைப்பட்டால் கால்வாய் ஒப்பந்தம் பற்றிய பேச்சுவார்த்தைகளை முடித்துக் கட்ட பனாமா இராணுவத்தின் தளபதிகளுக்கு லஞ்சம் கொடுக்கவும் தயாராக உள்ளது என்பதுதான்.[4] ஒருவேளை குள்ளநரிகள் இதற்குள்ளாகவே டோரிஜோஸைச் சுற்றி வரத் தொடங்கிவிட்டனவோ என்று நான் திகைப்படைந்தேன்.

'டைம்' அல்லது 'நியூஸ் வீக்' ஏட்டில் 'மக்கள்' பகுதியில் டோரிஜோஸும் கிரஹாம் கிரீனும் ஒன்றாக அமர்ந்திருக்கும் புகைப்படத்தை நான் ஏற்கனவே பார்த்திருந்தேன். அந்த எழுத்தாளர் சிறந்த நண்பராகி விட்ட ஒரு சிறப்பு விருந்தினர் என்று பொருள்படும் விதத்தில் அந்தக் கட்டுரைக்கு ஒரு தலைப்பு கொடுக்கப்பட்டிருந்தது. ஜெனரல் டோரிஜோஸ் தன் நம்பிக்கைக்குரிய ஒருவர் இப்படியொரு கட்டுரை எழுதியதை எப்படி எடுத்துக் கொண்டிருப்பார் என்று நான் வியப்படைந்தேன். 1972 - இல் நான் டோரிஜோஸுடன் காபி அருந்திய அந்த நாள் தொடர்பான ஒரு கேள்வியையும் கிரீனின் கட்டுரை எழுப்பியிருந்தது. அவரோடு காபி மேசையில் உட்கார்ந்திருந்த போதே இந்த அன்னிய நிதியுதவி அவரைப் பணக்காரர் ஆக்குவதற்கும், அவரது நாட்டுக்குக் கடனால் கடிவாள வார் பூட்டுவதற்கும்தான் வழங்கப்படுகிறது என்பதை அவர் கண்டிப்பாக அறிந்திருப்பார் என்பதை நான் உணர்ந்திருந்தேன். இந்த நடைமுறை பதவியில்

உள்ளவர்கள் ஊழலுக்கு இலக்காகக் கூடியவர்கள் என்ற பொதுவான கருத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதையும் அவர் புரிந்து கொண்டிருப்பார் என்று எனக்குத் தெளிவாகத் தோன்றியது. இதைவிடத் தனிப்பட்ட லாபத்தை எதிர்பார்க்காமல் அன்னிய நிதியுதவியை உண்மையிலேயே மக்களுக்குப் பயன்படுத்த வேண்டுமென்னும் அவரது நோக்கம் நிறுவன - அதிகார வர்க்கத்தின் அடித்தளத்தையே அசைக்கக் கூடிய ஒரு மிரட்டலாகக் கருதப்படும் என்பதுவும் அவருக்குத் தெரியாமலிராது. உலகம் அவரைக் கவனித்துக் கொண்டிருந்தது. அவரது நடவடிக்கைகள் ஏற்படுத்தும் பாதிப்புகள் பனாமாவைக் கடந்தும் செல்லும். எனவே அவற்றை அலட்சியப்படுத்த முடியாது.

பனாமாவிற்குக் கொடுக்கப்படும் கடன்கள் அதனால் திருப்பித் தரவே முடியாத பெருஞ்சுமையாக மாறுவதற்குப் பதிலாக அந்நாட்டின் ஏழை மக்களுக்கு உதவிக் கொண்டிருப்பதை நிறுவன- அதிகார வர்க்கம் எப்படி எடுத்துக் கொள்ளும்? எப்படி எதிர்வினையாற்றும்? என்று நான் வியப்படைந்தேன். டோரிஜோஸ் என்னுடன் செய்து கொண்ட ஒப்பந்தம் குறித்து எப்பொழுதாவது வருந்தியிருப்பாரா என்பது எனக்குத் தெரியவில்லை. இந்த ஒப்பந்தம் குறித்து நான் என்ன நினைத்தேன் என்பதே எனக்குத் தெரியவில்லை. இப்போது நினைத்துப் பார்க்கும் போது வியப்பளித்தாலும் உண்மை இதுதான். இந்த ஒப்பந்தத்தை ஏற்றுக்கொண்டதன் மூலம் நான் எனது பொருளாதார அடியாள் பாத்திரத்திலிருந்து விலகியிருந்தேன். பனாமாவில் என்னுடைய விளையாட்டை விளையாடுவதற்குப் பதிலாக அவருடைய விளையாட்டை விளையாடிக் கொண்டிருந்தேன். ஒப்பந்தங்கள் தொடர்ந்து கிடைத்து வர வேண்டுமென்பதற்காக, நாங்கள் நேர்மையு-டன் செயல் பட வேண்டுமென்ற டோரிஜோஸின் எதிர்பார்ப்பைப் பூர்த்தி செய்வதாக ஒப்புக் கொண்டிருந்தேன். நேர்மையைக் கடைப்பிடிப்பது என்ற என்னுடைய முடிவு மெய்ன்- ஐப் பொறுத்தவரை லாபகரமானதுதான் என்றாலும் கிளேடின் என் மூளைக்குள் திணித்த விஷயங்களிலிருந்து இந்த முடிவு முரண்பட்டிருந்தது. உலகப் பேரரசைப் பொறுத்தவரை என் முடிவு அதற்கு உதவக் கூடியதல்ல. அதனால்தான் குள்ள நரிகள் கட்டவிழ்த்து விடப்பட்டு விட்டனவோ?

அன்று டோரிஜோஸிடம் விடை பெற்றுத் திரும்பியபோது லத்தீன் அமெரிக்காவின் வரலாறு முழுவதும் வீர மரணமடைந்த நாயகர்கள் இறைந்து கிடக்கிறார்கள் என்ற எண்ணம் என் மனதில் நிழலாடியது; திரும்பவும் நினைவுக்கு வந்தது. பொது வாழ்வில் உள்ளவர்களை லஞ்சத்தில், ஊழலில் மூழ்கடிப்பதையே அடிப்படையாகக் கொண்ட ஓர் அமைப்புமுறை நேர்மையைக் கடைப்பிடிக்க விரும்புபவர்களை அன்புடன் நடத்தாது.

திடீரென்று எனக்கு உலுக்கிப் போட்டது. கண்கள் என்னை ஏமாற்றுகின்றனவோ என்று தோன்றியது. ஒரு பழக்கமான உருவம் வராந்தாவில் மெதுவாக நடந்து வந்து கொண்டிருந்தது. எனக்கு ஏற்பட்ட குழப்பத்தில் அது ஹம்ரி போகார்ட் என்று நினைத்தேன். ஆனால் போகார்ட்தான் நீண்ட நாட்களுக்கு முன்பே இறந்துபோய் விட்டாரே? கொஞ்ச நேரம் கழித்துதான் என் முன்னால் நடந்து சென்றவர் தற்காலத்திலுள்ள மாபெரும் ஆங்கில இலக்கியவாதிகளில் ஒருவரும் அதிகாரமும் மாண்பும் (power and the glory) வேடிக்கையாளர்கள் (The Comedians) போன்ற நாவல்களை எழுதியவரும், இப்போது தான் நான் படித்து முடித்திருந்த அந்தக் கட்டுரையின் ஆசிரியருமான கிரஹாம் கிரீன் என்பது புரிந்தது. கிரீன் வராந்தாவில் நின்று சற்றே தயங்கிவிட்டு காஃபி ஷாப்பை நோக்கிச் சென்றார்.

அவருக்குப் பின்னால் துள்ளியோட வேண்டுமென்ற உந்துதல் எனக்குள் தோன்றியது. ஆனால் என்னை நானே கட்டுப்படுத்திக் கொண்டேன். எனக்குள் ஒரு குரல் அவரது தனிமையைக் கெடுக்கக்கூடாது என்றது. இன்னொரு குரல் என்னை அவர் வெறுத்து ஒதுக்கக்கூடும் என்று எச்சரித்தது. அவர் கட்டுரை வந்திருந்த நூலை எடுத்துக்கொண்டேன். அடுத்த வினாடி காஃபி ஷாப் அருகில் நின்று கொண்டிருந்தேன்.

நான் முன்பே காலையுணவு அருந்திவிட்டபடியால் அங்கிருந்த சிப்பந்தி என்னை வினோதமாகப் பார்த்தான். நான் சுற்றிலும் கண்களை ஓட்டினேன். கிரீன் சுவரோரமாக இருந்த ஒரு மேசையில் தனியாக உட்கார்ந்திருந்தார்.

“அங்கே’’ நான் அவர் அருகில் இருந்த மற்றொரு டேபிளை ஓட்டல் சிப்பந்தியிடம் சுட்டிக் காட்டினேன். “நான் இன்னொரு காலையுணவிற்கு உட்காரலாமா?’’

நான் எப்போதும் டிப்ஸில் தாராளமாக இருப்பவன். அவன் புரிந்து கொண்டு என்னை அந்த மேசைக்கு அருகே அழைத்துப் போனான்.

நாவலாசிரியர் செய்தித்தாளில் மூழ்கியிருந்தார். நான் காபியும் தேனுடன் கூடிய பிரெஞ்சு ரொட்டியும் கொண்டு வரச் சொல்லி உத்தரவிட்டேன். பனாமா கால்வாய்ப் பிரச்சனை பற்றியும், டோரிஜோஸ் பற்றியும் கிரஹாம் கிரீன் என்ன நினைக்கிறார் என்பதைத் தெரிந்துகொள்ள ஆவல் கொண்டு துடித்துக் கொண்டிருந்தேன். அதே நேரம் உரையாடலை எப்படித் தொடங்குவது என்ற தயக்கமும் இருந்தது. காபி உறிஞ்சுவதற்காக கிரீன் செய்தித்தாளிலிருந்து சற்றே விழிகளை உயர்த்தினார்.

“என்னை மன்னியுங்கள்’’ என்றேன். அவர் என்னை முறைத்தார் அல்லது எனக்கு அப்படித் தோன்றியது.

“உங்கள் தனிமையைக் கெடுக்க நான் விரும்பவில்லைதான். ஆனால் நீங்கள் கிரஹாம் கிரீன்தானே?’’

“ஆமாம்’’ என அவர் உற்சாகமாக முறுவலித்தார். தொடர்ந்து பனாமாவில் பெரும்பாலோருக்குத் தன்னைத் தெரியாது என்றார். நான் எனது வாழ்க்கை, மெய்னில் செய்து வரும் வேலை, டோரிஜோஸுடனான எனது சந்திப்பு என்று மடமடவென்று கொட்டித் தள்ளிவிட்டேன்.

அமெரிக்கா பனாமாவை விட்டு வெளியேற வேண்டுமென்று வலியுறுத்தும் ஒரு கட்டுரையை எழுதிய ஆலோசகர் நான்தானா என்று அவர் கேட்டார். “நான் நினைப்பது சரியாக இருந்தால் பாஸ்டன் குளோபில்’’.

நான் பிரமித்துப் போனேன். “உங்களிடத்திலிருந்து பார்க்கும் போது இது ஒரு துணிச்சலான காரியம்தான்’’ என்று கூறிவிட்டு அவர் என்னைத் தன் மேசைக்கு அழைத்தார்.

நாங்கள் ஏறக்குறைய ஒன்றரை மணி நேரம் பேசிக் கொண்டிருந்தோம். டோரிஜோஸுக்கு அவர் எவ்வளவு தூரம் நெருக்கம் என்பதை அவர் பேச்சிலிருந்து என்னால் உணர்ந்து கொள்ள முடிந்தது. சில சமயம் அவர் டோரிஜோஸைப் பற்றிப் பேசும்போது ஒரு மகனைப் பற்றி தந்தை பேசுவதைப் போலிருந்தது.

“இந்த ஜெனரல் தன் நாட்டைப் பற்றி ஒரு புத்தகம் எழுத எனக்கு அழைப்பு விடுத்தார். நான் இப்போது அதைத்தான் செய்து கொண்டிருக்கிறேன். இது நாவல் அல்ல. நாவல் வடிவிலில்லாத ஒரு நூல் எழுதுவது எனக்குக் கொஞ்சம் பழக்கமில்லாத விஷயம்தான்.’’

அவர் ஏன் எப்போதும் நாவல்களே எழுதுகிறார் என்று கேட்டேன்.

“நாவல் பாதுகாப்பானது. எழுதுவதற்கு நான் எடுத்துக் கொள்ளும் விஷயங்கள் பெரும்பாலும் பிரச்சனைக்குரியவை. வியட்நாம், ஹைதி, மெக்ஸிகோ புரட்சி... தவிர பெரும்பாலான வெளியீட்டாளர்கள் இது போன்ற விஷயங்கள் குறித்து வேறுவிதமான புத்தகங்களை வெளியிடப் பயப்படுவார்கள்.’’ அவர் மெலிதாகச் சிரித்துக் கொண்டார். பின்பு மேசை மேல் கிடந்த தனது கட்டுரை வெளிவந்திருந்த நியூயார்க் ரிவ்யூ ஆப் புக்ஸைச் சுட்டிக்காட்டி இதைப் போன்ற கட்டுரைகள் பெரும் பாதிப்பை ஏற்படுத்தக்கூடும். அதோடு கூட நாவல்கள் எழுதுவதுதான் எனக்கு விருப்பமானது. அதில்தான் எனக்குச் சுதந்திரம் கிடைக்கிறது. இவற்றைப் போன்ற கவனிக்க வேண்டிய விஷயங்களைப் பற்றி எழுதியே ஆக வேண்டும் என்பதுதான் அடிப்படையானது. வடிவம் அப்புறம்தான். பாஸ்டன் குளோபில் வந்த கால்வாயைப் பற்றிய உங்கள் கட்டுரையைப் போல.’’

டோரிஜோஸின் மேல் அவருக்கு இருந்த பிரமிப்பு புரிந்துகொள்ளக்

கூடியதுதான். டோரிஜோஸ் அனைத்துத் தரப்பினரையும் கவர்ந்திழுத்துவிடக் கூடியவர். கிரீன் தன் நண்பரின் பாதுகாப்பு குறித்துக் கவலை கொண்டிருந்தார்.

"டோரிஜோஸ் ஈடுபட்டிருப்பது ஒரு மகத்தான செயல். வடக்கத்திய அரக்கனைப் பகைத்துக் கொள்வதும் எதிர்கொள்வதும் சாதாரண விஷயமல்ல,'' என்றவர் கவலையுடன் தலையசைத்தபடி "ஜெனரலின் பாதுகாப்பு குறித்து எனக்குப் பயமாயிருக்கிறது'' என்றார்.

கிரீன் புறப்பட வேண்டிய நேரம் வந்தது. "பிரான்ஸுக்குப் போகும் விமானத்தைப் பிடிக்க வேண்டும்'' என்று கூறிக்கொண்டே அவர் மெதுவாக எழுந்து என் கையைப் பிடித்துக் குலுக்கினார். பின்பு ஏதோ நினைத்துக் கொண்டு என் விழிகளை ஊடுருவிப் பார்த்தவர் "நீங்கள் ஏன் ஒரு புத்தகம் எழுதக்கூடாது?'' என்று கேட்டார். "உங்களால் முடியும். உங்களிடம் அது இருக்கிறது. ஆனால் நினைவு வைத்துக் கொள்ளுங்கள். கவனத்துக்குரிய விஷயங்களை மட்டுமே எடுத்துக் கொள்ளுங்கள்''. கிரீன் என்னை உற்சாகப்படுத்தும் விதத்தில் தலையசைத்துவிட்டுச் சில அடிகள் எடுத்து வைத்தார்.

பின்பு சட்டென்று திரும்பி "ஜெனரலைப் பற்றிக் கவலைப் படாதீர்கள். அவர் கட்டாயம் வெல்வார். கால்வாயைத் திரும்பப் பெறுவார்'' என்றார்.

டோரிஜோஸ் கால்வாயைத் திரும்பப் பெறத்தான் செய்தார். அதே ஆண்டில் அதாவது 1977-இல் அமெரிக்க ஜனாதிபதி கார்ட்டருடன் அவர் நடத்திய பேச்சுவார்த்தைகள் வெற்றியடைந்தன. பனாமா கால்வாய் மற்றும் கால்வாய்ப் பிரதேசம் முழுவதும் பனாமா அரசின் கட்டுப்பாட்டின் கீழ் வந்தது. வெள்ளை மாளிகை பேச்சு வார்த்தைகளில் எட்டப்பட்ட முடிவுகளைச் செயல்படுத்தும் முன் அமெரிக்க நாடாளுமன்றத்தின் ஒப்புதலைப் பெற வேண்டியிருந்தது. இறுதியில் கார்ட்டரும் டோரிஜோஸும் செய்துகொண்ட கால்வாய் ஒப்பந்தம் ஒரே ஒரு வாக்கு வித்தியாசத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அமெரிக்காவிலிருந்த பழமைவாதிகள் பழி வாங்கச் சபதம் பூண்டனர்.

ஜெனரலை அறிந்து கொள்வதற்காக (Getting to know the General) என்ற கிரஹாம் கிரீனின் நூல் இது நடந்து பல ஆண்டுகள் கழித்து வெளிவந்தது. அது "நிகாரகுவாவிலும், எல்சார்வடாரிலும், பனாமாவிலும் உள்ள டோரிஜோஸின் நண்பர்களுக்கு'' அர்ப்பணிக்கப்பட்டிருந்தது.

[1] உதாரணத்திற்கு பார்க்க: John M. Perkins, ""Colonialism in Panama Has No Place in 1975,'' Boston Evening Globe, Op-Ed page, September 19, 1975; John M. Perkins, ""U.S.-Brazil Pact Upsets Ecuador'', The Boston Evening Globe, Op-Ed Page, September 19, 1975; John M. Perkins, ""U.S.-Brazil Pact Upsets Ecuador,'' The Boston Globe, Op-Ed page, May 10, 1976.

[2] தொழில்நுட்ப ஏடுகளில் வெளியிடப்பட்ட ஜான் பெர்க்கின்ஸின் கட்டுரைகளுக்குப்

பார்க்க: John M. Perkins et al., “”A Markov Process Applied to Forecasting, Part I - Economic Development’’ and “”A Markov Process Applied to Forecasting, Part II - The Demand for Electricity,’’ The Institute of Electrical and Electronics Engineers, Conference Papers C 73 475 - 1 (July 1973) and C 74 146-7 (January 1974), respectively; John M. Perkins and Nadipuram R. Prasad, “”A Model for Describing Direct and Indirect Inter relationships Between the Economy and the Environment,’’ Consulting Engineer, April 1973; Edwin Vennard, Jhon M. Perkins, and Robert C.Ender, “”Electric Demand from Interconnected Systems,’’ TAPPI Journal (Technical Assiociation of the Plup and Paper Industry), 28th Conference Edition, 1974; John M. Perkins et al., “”Iranian Steel: Implications for the Economy and the Demand for Electricity’’ and “”Markov Method Applied to Planning’’ presented at the Fourth Iranian Conference on Engineering, Pahlavi University, Shiraz, Iran, May 12-16, 1974; and Economic Theories and Applications: A Collection of Tecnical Paper with a Foreward by John M. Perkins (Boston: Chas. T.Main, Inc., 1975).

[3] John M. Perkins, “”Colonialism in Panama Has No Place in 1975;’’ Boston Evening Globe, Op-Ed page, September 19, 1975.

[4]Graham Greene, Getting to know the General (New York: Pocket Books, 1984), pp 89-90.

# 18

# ஈரானின் மன்னர் மன்னன்

**1975**-க்கும் 1978-க்கும் இடையே நான் பல முறை ஈரானுக்குச் சென்று வந்தேன். சில நேரங்களில் லத்தீன் அமெரிக்காவுக்கும், இந்தோனேஷியாவுக்கும், டெஹ்ரானுக்கும் மாறி மாறிப் பறக்க வேண்டியிருந்தது. ஷாக்களுக்கு எல்லாம் ஷா (இதன் பொருள் மன்னாதி மன்னன் என்பதாகும். இதுதான் ஈரான் ஷாவின் அதிகாரப்பூர்வமான பட்டம்) ஒரு முற்றிலும் மாறுபட்ட சூழ்நிலையை உருவாக்கியிருந்தார்.

ஈரான் அள்ள அள்ளக் குறையாத எண்ணெய் வளம் கொண்டது. சவூதி அரேபியாவைப் போலவே ஈரானும் கடன் படாமலேயே தனது பேராவல் மிகுந்த திட்டங்களை நிறைவேற்றிக் கொள்ளக்கூடிய அளவிற்குப் பணபலம் மிக்கதாக இருந்தது. ஆனால் சவூதி அரேபியாவுக்கும், ஈரானுக்கும் இரண்டு அடிப்படையான வேறுபாடுகள் இருந்தன. ஒன்று ஈரானின் மக்கள் தொகை, அது சவூதி அரேபியாவை விட மிக அதிகம். இன்னொன்று ஈரான் ஒரு மத்தியக்கிழக்கு நாடாகவும் இஸ்லாமிய நாடாகவும் இருந்த போதிலும் அது அரபு நாடு அல்ல. தவிர ஈரானின் அரசியல் வரலாறு கொந்தளிப்பு மிக்கது. அண்டை நாடுகளுடன் இந்த நாடு கொண்டிருந்த உறவுகளும் முரண்பாடுகள் நிறைந்தவையாகவே இருந்து வந்தன. எனவே நாங்கள் ஒரு வித்தியாசமான அணுகுமுறையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டோம். வாஷிங்டனும் அமெரிக்க வணிகச் சமூகமும் உலகின் கண்களுக்கு முன் ஷாவை வளர்ச்சியின் சின்னமாக நிலை நிறுத்த ஒன்றிணைந்தன.

அமெரிக்க நிறுவனங்கள் மற்றும் அரசியல் சக்திகளின் உறுதி வாய்ந்த ஆதரவாளராக இருப்பதன் மூலம் ஜனநாயகவாதியான ஷாவால் எப்பேர்ப்பட்ட விஷயங்களைச் சாதிக்க முடிகிறது என்பதை உலகுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டும் முயற்சியில் நாங்கள் இறங்கினோம். ஜனநாயகத்துக்குக் கொஞ்சம்கூடச் சம்பந்தமே இல்லாத அவரது ‘மன்னாதி மன்னன்’ பட்டத்தை நாங்கள் பொருட்படுத்தவேயில்லை. ஜனநாயகப்பூர்வமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மொஸா டெக்கை சி.ஐ.ஏ. உதவியுடன் கவிழ்த்து விட்டுத்தான் ஷா ஆட்சியைக் கைப்பற்றினார் என்ற விஷயத்தையும் நாங்கள் கண்டுகொள்ளவில்லை. வாஷிங்டனும் அதன் ஐரோப்பியப் பங்காளிகளும், அமெரிக்க - எதிர்ப்புணர்வுப் பீறிட்டுக் கிளம்பிக் கொண்டிருந்த ஈராக், லிபியா, சீனா, கொரியா போன்ற நாடுகளுக்கு

மாற்றாக ஈரானை முன்னிறுத்துவதில் மும்முரமாக முனைந்திருந்தன.

வெளிப்பார்வைக்கு ஷா அடித்தட்டு மக்களின் நண்பன் என்றே தோன்றியது. ஷா 1962 - இல் பெரும் பண்ணைகளை விவசாயிகளுக்குப் பிரித்துக் கொடுக்க வேண்டுமென்று உத்தரவிட்டார். அடுத்த ஆண்டில் மிக விரிவான சமூகப் பொருளாதாரச் சீர்திருத்தங்களை நடைமுறைப்படுத்தும் நோக்கில் ‘வெள்ளைப்புரட்சியைத்’ தொடங்கி வைத்தார். 1970-களில் ஒபெக் நாடுகளின் பலம் அதிகரித்தது. உலக அரங்கில் ஷாவின் செல்வாக்கு மென்மேலும் வளர்ந்து வந்தது. அதே நேரத்தில் மத்தியக் கிழக்கிலுள்ள இஸ்லாமிய நாடுகளிலேயே பலம் வாய்ந்த இராணுவங்களில் ஒன்றாகத் தனது ராணுவத்தை ஈரான் கட்டியமைத்தது.[1]

வடக்கே காஸ்பியன் கடற்கரையோரம் உள்ள சுற்றுலாத் தலங்களிலிருந்து தெற்கே ஹோர்முஸ் ஜலசந்தியை நோக்கி அமைந்துள்ள இரகசிய இராணுவத் தளங்கள் வரை நாட்டின் பெரும் பகுதிகளில் நடைபெற்று வந்த திட்டங்களில் மெய்ன் சம்பந்தப்பட்டிருந்தது. எப்போதும் போல எங்கள் பணியின் அடிப்படை பகுதிவாரி வளர்ச்சி வாய்ப்புகள் குறித்து முன்னறிவிப்பது, இந்த முன்னறிவிப்புகளை உண்மையாக்குவதற்காகத் தொழில் மற்றும் பொருளாதார வளர்ச்சியைக் கட்டியமைக்க வல்ல ஆற்றல் வளங்களை வினியோகிக்கும் முறைகளை வடிவமைப்பதும்தான்.

இந்தக் காலகட்டத்தில் ஈரானில் நான் காலடி வைக்காத முக்கியப் பகுதிகள் எதுவுமில்லை. கிரமானியிலிருந்து பண்டார் அப்பாஸ் வரை பாலைவன மலைகளை ஊடறுத்துச் சென்ற வணிகப் பாதைகளில் பயணம் செய்தேன். பழங்கால உலக அதிசயங்களில் ஒன்றும், பழம்பெரும் மன்னர்களின் பிரசித்தி பெற்ற மாளிகையுமான பெர்ஸிபொலிசின் இடிபாடுகளைச் சுற்றிப் பார்த்தேன். இன்னும் புகழ்பெற்ற அற்புதமான இடங்களான சிராஸ், இஸ்ஃபாஹான், பெர்ஸிபோலிஸுக்கு அருகிலுள்ள, ஷா முடிசூட்டிக்கொண்ட இடமான கூடார நகரம் அனைத்தையும் நேரில் சென்று பார்த்தேன். இந்த நாட்டை எவ்வளவுக்கெவ்வளவு நான் அறிந்து கொண்டேனோ அந்தளவுக்கு இதன் மக்களை ஆழமாக நேசிக்கத் தொடங்கிவிட்டேன்.

மேலோட்டமாகப் பார்க்கும்போது ஈரான், கிறிஸ்துவ இஸ்லாமிய ஒத்துழைப்புக்கு ஒரு முன்னுதாரணம் போல்தான் தோன்றியது. ஆனால் இந்த வெளித்தோற்றத்திற்கு உள்ளே கனன்று கொண்டிருந்த வெறுப்புணர்வைச் சீக்கிரமே நான் புரிந்து கொண்டேன்.

1977-இல் ஒரு பின் மாலைப்பொழுதில் என் அறைக்குத் திரும்பியபோது ஒரு குறிப்பு அட்டை கதவிடுக்கில் திணிக்கப்பட்டிருந்தது அதில் யாமின் என்று கையெழுத்திடப்பட்டிருந்ததைக் கண்டு அதிர்ந்து போனேன். அவரை நான் நேரடியாகச் சந்தித்ததில்லை என்றாலும் அரசு ஏற்பாடு

செய்திருந்த கூட்டம் ஒன்றில் அவர் ஒரு படுமோசமான கலகக்காரர் என்று வருணிக்கப்பட்டதைக் கேட்டிருந்தேன்.

இப்போது என் கையிலிருந்த, ஆங்கிலத்தில் மிக நேர்த்தியாக எழுதப்பட்டிருந்த கடிதத்தில் ஒரு குறிப்பிட்ட உணவு விடுதிக்கு வந்து அவரைச் சந்திக்கும்படி எனக்கு அழைப்பு விடுக்கப்பட்டிருந்தது. அதில் ஒரு எச்சரிக்கையும் இடம் பெற்றிருந்தது. என்னைப் போன்றவர்கள் ஒருபோதும் பார்த்திராத ஈரானின் இன்னொரு பக்கத்தைப் பார்க்கும் ஆவல் இருந்தால் மட்டுமே நான் வரலாம் என்று அதில் குறிப்பிடப்பட்டிருந்தது. இந்த அழைப்பை ஏற்றுக் கொண்டால் ஒரு வேளை பெரிய அபாயத்தைச் சந்திக்க வேண்டியிருக்கலாம் என்பது தெரிந்திருந்த போதிலும் இந்த மர்ம மனிதனைச் சந்திக்க வேண்டுமென்ற ஆவல் என்னை உந்தித் தள்ளியது.

என் வாடகைக் கார் ஒரு உயரமான சுவரில் பொருத்தப்பட்டிருந்த சிறிய கதவுக்கு முன் வந்து நின்றது. பின்னால் என்ன இருக்கிறதென்பதையே காண முடியாத அளவிற்கு அவ்வளவு உயரமாக இருந்தது அந்தச் சுவர். நீண்ட கருப்பு கவுன் அணிந்திருந்த ஓர் அழகான ஈரானியப் பெண் என்னை வரவேற்று உள்ளே அழைத்துப் போனாள். நடைபாதை உயர்ந்த விளக்குகள் பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தன. நாங்கள் ஓர் அறைக்குள் கால் வைத்ததும் ஒரு வினாடி கண்கள் குருடாகிவிட்டன போல் தோன்றியது. அந்த அறை வைரத்தின் உட்புறம்போல் ஒளிர்ந்து கொண்டிருந்தது. கண்கள் இயல்பு நிலைக்குத் திரும்பியதும் அறையின் சுவர்கள் சிப்பிகளாலும், விலையுயர்ந்த கற்களாலும் இழைக்கப்பட்டிருப்பதைக் கண்டேன். நுணுக்கமான வேலைப்பாடுகள் கொண்ட வெண்கல சர விளக்குகளில் பொருத்தப்பட்டிருந்த நீண்ட வெண்மையான மெழுகுத்திரிகள் சுடர் வீசிக் கொண்டிருந்தன.

நேவி புளூ சூட் அணிந்திருந்த ஓர் உயரமான மனிதர் என்னை நெருங்கிக் கைகுலுக்கித் தன்னை யாமின் என்று அறிமுகப்படுத்திக் கொண்டார். அவரது உச்சரிப்பு அவர் பிரிட்டிஷ் கல்விமுறையில் நடத்தப்படும் பள்ளியில் பயின்றவர் என்பதைக் காட்டியது. அவருக்கும் என் கற்பனையிலிருந்த பயங்கரமான கலகக்காரனுக்கும் கொஞ்சம்கூட சம்பந்தமே இல்லை. தம்பதிகள் அமர்ந்து அமைதியாக உணவருந்திக் கொண்டிருந்த மேசைகளைத் தாண்டி ஓர் ஒதுக்குப்புறமான அறைக்கு என்னை அழைத்துச் சென்றார். அவருடன் நடந்து செல்லும்போது இந்த விடுதி இது போன்ற இரகசியமான சந்திப்புகளுக்காகவே கட்டப்பட்டதோ என்ற எண்ணம் லேசாகத் தலைகாட்டியது.

யாமின் என்னை மிகுந்த மரியாதையுடன் நடத்தினார். அவருடன் கொஞ்சம் பேசியதுமே அவர் என்னை வெறும் பொருளாதார

ஆலோசகன் என்று மட்டுமே எண்ணியிருந்ததைப் புரிந்துகொண்டேன். என்னுடைய மர்மமான உள் நோக்கங்கள் குறித்து அவருக்கு எதுவுமே தெரிந்திருக்கவில்லை. நான் அமைதிப்படையில் பணி புரிந்தவன் என்பதனாலும், ஈரானைப் பற்றித் தெரிந்து கொள்ளவும் அதன் மக்களோடு கலந்து பழகவும் கிடைக்கும் வாய்ப்புகளைத் தயங்காமல் பயன்படுத்திக் கொள்கிறேன் என்பதனாலுமே அவர் இந்தச் சந்திப்புக்கு என்னைத் தேர்ந்தெடுத்ததாகக் கூறினார்.

“உங்கள் துறையிலுள்ள மற்றவர்களோடு ஒப்பிடும்போது உங்களுக்கு வயது மிகவும் குறைவு. உங்களுக்கு எங்கள் வரலாற்றிலும், தற்போதைய பிரச்சனைகளிலும் உண்மையான ஆர்வம் இருக்கிறது. உங்கள் மீது எங்களுக்கு நம்பிக்கை இருக்கிறது’’ என்றார் யாமின்.

யாமின் பழகிய விதமும், அவரது தோற்றமும், எல்லாவற்றுக்கும் மேலாக அந்த உணவகத்தில் மேலும் பலர் இருந்ததும் எனக்குக் கொஞ்சம் நிம்மதியளித்தது. ஜாவாவில் ராஸி, பனாமாவில் ஃபிடல் என்று மக்கள் என்னிடம் நட்புப் பாராட்டுவது எனக்குப் பழக்கமானதுதான். இதை நான் எனக்களிக்கப்படும் கௌரவமாகவே கருதி வந்தேன். நான் பார்க்கும் இடங்களின் மேலெல்லாம் தீராக் காதல் கொண்டிருந்தேன் என்பதை நான் ஏற்கனவே அறிந்திருந்தேன். நீங்கள் மக்களை அறிந்து கொள்ள உங்கள் இதயத்தை, கண்களை, காதுகளைத் திறந்து வைத்திருந்தால் அவர்கள் உங்கள் மேல் இயல்பாகவே நேசம் கொள்வார்கள் என்பதை அனுபவம் எனக்குக் கற்றுத் தந்திருந்தது.

‘பாலைவனம் பூத்துக் குலுங்கும்’[2] (Flowering Desert Project) திட்டம் பற்றி எனக்குத் தெரியுமா என்று யாமின் கேட்டார். “எங்கள் பாலைவனங்கள் ஒரு காலத்தில் பசுமை நிறைந்த சமவெளிகளாகவும், அடர்ந்த காடுகளாகவும் இருந்தன என்று ஷா நம்புகிறார். அல்லது அவ்வாறு கூறிக் கொள்கிறார். ஷாவின் கருத்துப்படி மகா அலெக்சாண்டரின் படையெடுப்பின் போது இலட்சக்கணக்கான மனிதர்களும், செம்மறி ஆடுகளும் இப்பகுதிகளைக் கடந்து சென்றபோது புல்லும், தாவரங்களும் அழிக்கப்பட்டுப் பாலைவனமாகிவிட்டது. ஷா என்ன சொல்கிறாரென்றால் லட்சோபலட்சம் மரங்களை நாங்கள் நட்டால் போதும், மந்திரம் போட்டது போல் மழை திரும்ப வந்துவிடும். பாலைவனம் பூத்துக் குலுங்கத் தொடங்கிவிடும். இதற்காக நாங்கள் பல்லாயிரம் கோடி டாலர்கள் செலவிட வேண்டியிருக்கும்’’ அவர் சற்றே நிறுத்திக் கழிவிரக்கத்தைக் காட்டும் வகையில் ஒரு புன்னகையை உதிர்த்தார். “இந்தத் திட்டத்தின் மூலம் உங்களுடையதைப் போன்ற கம்பெனிகள் கொள்ளை லாபம் அடிக்கும்.’’

“நீங்கள் இந்தக் கோட்பாட்டை நம்பவில்லை. இல்லையா?’’ நான் கேட்டேன்.

“இந்தப் பாலைவனம் ஓர் அடையாளச் சின்னம், பசுமையாக்கப்பட வேண்டிய ஒன்று என்பதை விடப் பெரிய விஷயங்கள் அதில் இருக்கின்றன.’’

உணவு வகைகள் அழகாக அடுக்கப்பட்டிருந்த தட்டுகளை ஏந்திய பல ஊழியர்கள் எங்களை நோக்கி வந்தார்கள். என்னிடம் அனுமதி பெற்றுக்கொண்டு யாமின் உணவு வகைகளைத் தேர்ந்தெடுக்கும் வேலையில் ஈடுபட்டார். பின்பு என்னிடம் திரும்பினார்.

“திருவாளர். பெர்க்கின்ஸ், உங்களிடம் உரிமையோடு ஒரு கேள்வி கேட்கலாமா? உண்மையிலேயே உங்கள் நாட்டுக்குச் சொந்தக் காரர்களான பழங்குடி இந்தியர்களின் பண்பாட்டை அழித்தது எது?’’

‘‘பேராசை, உயர்தரமான ஆயுதங்கள் உள்ளிட்ட பல காரணங்கள் இருப்பதாக நான் நினைக்கிறேன்’’ என்று பதிலளித்தேன்.

“உண்மைதான். எல்லாவற்றையும்விடச் சுற்றுச்சூழலை அழித்தது அந்தப் பண்பாடுகள் அழிந்துபோக முக்கியமான காரணமல்லவா?’’ காடுகளும், காட்டெருமை போன்ற விலங்குகளும் அழிக்கப்பட்டவுடன், செவ்விந்திய மக்கள் அவர்களுக்கு என்று ஒதுக்கப்பட்ட இடங்களில் பலவந்தமாகக் குடியேற்றப்பட்டவுடன் அவர்களின் பண்பாடு நீடித்து நிலைத்திருப்பதற்கான அடித்தளமே நொறுங்கிப் போய்விட்டது’’ என்பதை யாமின் தொடர்ந்து விளக்கினார்.

“பாருங்கள். ஈரானிலும் அதே போலத்தான். இந்தப் பாலைவனம் தான் எங்கள் சுற்றுக்சூழல். இந்தத் திட்டம் எங்கள் ஜீவாதாரத்தையே அழித்துவிடக் கூடியது. இதை எப்படி நாங்கள் அனுமதிக்க முடியும்?’’

பாலைவனம் பூத்துக் குலுங்கும் என்ற இத்திட்டத்தை உருவாக்கியவர்கள் ஈரானியர்தானே என்று கேட்டேன். யாமின் ஒரு கசப்பான புன்னகையை உதிர்த்துவிட்டு, ‘‘இந்தக் கருத்தை ஷாவின் மூளையில் திணித்தது அமெரிக்க அரசுதான்’’ என்றார். ஷா அமெரிக்காவின் கைப்பொம்மைதானே! ஓர் உண்மையான ஈரானியனால் பாலைவனம் அழிக்கப்படுவதை ஒருபோதும் அனுமதிக்க முடியாது என்றார். பின்பு பெதுயின்கள் என்றழைக்கப்படும் தனது மக்களுக்கும், பாலைவனத்திற்கும் இடையேயுள்ள உள்ளப்பூர்வமான பிணைப்பைப் பற்றி நீண்ட நேரம் விளக்கினார். நகர மயமாகிவிட்ட பல ஈரானியர்கள் கூட தங்கள் விடுமுறையைப் பாலைவனத்தில் கழிக்கிறார்கள் என்று சுட்டிக்காட்டினார். குடும்பம் முழுவதும் தங்கக்கூடிய அளவிற்குப் பெரிய கூடாரங்கள் அமைத்து அதில் ஒரு வாரமோ, அதற்கு மேலோ தங்குவது அவர்கள் வழக்கம்.

“நாங்கள் - எங்கள் மக்கள் - பாலைவனத்தின் பிரிக்க முடியாத ஓர் அங்கம். இரும்புக்கரம் கொண்டு ஆள்வதாக இந்த ஷா சொல்லிக்

கொள்ளும் மக்கள் பாலைவனத்தில் வாழ்பவர்கள் மட்டுமல்ல. அதோடு பிரிக்க முடியாதபடி இரண்டறக் கலந்து விட்டவர்களும் கூட.’’

பின்பு பேச்சு பாலைவனம் தொடர்பான அவரது சொந்த அனுபவங்களை நோக்கித் திரும்பியது. இரவு கவியத் தொடங்கியதும் யாமின் அந்தச் சிறிய கதவு வரை வந்து விடை கொடுத்தார். என்னுடைய வாடகைக் கார் அங்கேதான் காத்துக்கொண்டிருந்தது. விடைபெறும் முன் யாமின் மீண்டும் ஒருமுறை கைகுலுக்கி அவரது அழைப்பை ஏற்றுக் கொண்டதற்குத் தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்டார். என் இளம் வயதையும், ஒளிவு மறைவற்ற தன்மையையும் வியந்து பேசியதோடு என்னைப் போன்றவர்கள் இப்படிப்பட்ட பதவிகளில் இருப்பது தனக்கு எதிர்காலம் குறித்த நம்பிக்கையைத் தருகிறது என்றும் குறிப்பிட்டார்.

அதன் பின்பும் அவர் என் கையை விடவில்லை. அவரது தோற்றம் அவர் எதற்கோ பீடிகை போடுகிறார் என்று என்னை நினைக்கத் தூண்டியது. நான் நினைத்தது சரிதான்.

“இன்னும் ஒரே ஒரு உதவியை மட்டும் உங்களிடம் வேண்டுகிறேன். இந்த மாலை நேரம் உங்களுக்கு அர்த்தமுள்ளதாக இருந்திருக்கும் என்பது எனக்குத் தெரியும். அதனாலேயே இந்த உதவியை உங்களிடம் கோருகிறேன். அது உங்களுக்கும் பயனுள்ளதாகத்தான் இருக்கும்.’’

“நான் உங்களுக்கு எப்படி உதவ முடியும்?’’

“என் நெருங்கிய நண்பர் ஒருவரை உங்களுக்கு அறிமுகப்படுத்த விரும்புகிறேன். இந்த மன்னாதி மன்னனை நன்கு அறிந்தவர் அவர். அவரைச் சந்திப்பது உங்களுக்கு அதிர்ச்சியளிப்பதாக இருந்தாலும் நிச்சயம் உங்கள் நேரத்தை வீணடிப்பதாக இருக்காது. அதற்கு நான் உறுதியளிக்கிறேன்.’’

[1] William Shawcross, The Shah’s Last Ride: The Fate of an Ally (New York: Simon and Schuster, 1988). ஷா அரசைக் கைப்பற்றியவிதம் பற்றிய விவரங்களுக்குப் பார்க்க: H.D.S. Greenway, “”The Iran Conspiracy,’’ New York Review of Books, September 23, 2003; Stephen Kinzer, All the Shah’s Men: An American Coup and the Roots of Middle East Terror (Hoboken, NJ: John Wiley & Sons, Inc., 2003).

[2] யாமின், பாலைவனம் பூத்துக் குலுங்கும் திட்டம் மற்றும் ஈரானைப் பற்றி மேலும் அறிந்து கொள்ள பார்க்க: John Perkins, Shapeshifting (Rochester, VT: Destiny Books, 1997).

# 19

# வதைபட்ட ஆன்மா

யாமினுடனான முதல் சந்திப்புக்குப் பல நாட்கள் கழித்து அவர் ஒரு நாள் என்னை டெஹ்ரானுக்கு வெளியே அழைத்துச் சென்றார். நாங்கள் சென்ற பழங்கால வணிகத் தடம் பாலைவனத்தை ஒட்டியிருந்த புழுதியும் வறுமையும் போர்வை போலப் போர்த்தியிருந்த ஒரு சேரியின் வழியாகச் சென்றது. சூரியன் மறையும் நேரத்தில் பனை மரங்களுக்கு நடுவே காணப்பட்ட சில குடிசைகளின் அருகே யாமின் காரை நிறுத்தினார்.

“இது ஒரு பழைய பாலைவனச் சோலை’’ அவர் என்னிடம் விளக்கினார். “மார்க்கோ போலோவின் காலத்திற்கும் பல நூற்றாண்டுகள் முன்பிருந்தே இந்தப் பாலைவனச் சோலை இருந்து வருகிறது’’ என்று சொல்லிவிட்டு அந்தக் குடிசைகளில் ஒன்றிற்கு அருகே என்னை அழைத்துச் சென்றார். வாயிலில் என் கையைப் பிடித்து நிறுத்திவிட்டுக் காதருகே கிசுகிசுத்தார்: “இதற்குள் இருக்கும் ஆள் உங்களுடைய புகழ்பெற்ற பல்கலைக்கழகங்களில் ஒன்றில் டாக்டர் பட்டம் பெற்றவர். இப்போதைக்கு அவர் பெயரில்லாதவராகவே இருக்கட்டும். அதன் காரணத்தை நீங்களே சீக்கிரம் தெரிந்து கொள்வீர்கள். அவரை நீங்கள் டாக் (Doc) என்று அழைக்கலாம்..

பின்பு அவர் மரக்கதவைத் தட்டினார். உள்ளிருந்து ஒரு கரகரப்பான குரல் கேட்டது. யாமின் கதவைத் திறந்து என்னை உள்ளே அனுமதித்தார். ஜன்னல்களே இல்லாத அந்த அறையில் ஒரே ஒரு எண்ணெய் விளக்கு மட்டும் மங்கலாக எரிந்து கொண்டிருந்தது. இருளுக்குக் கண்கள் பழகிய பின்புதான் தரையில் பாரசீகக் கம்பளங்கள் விரிக்கப்பட்டிருந்தது தெரிய வந்தது. இருளில் கம்பளிகளால் சுற்றப்பட்ட ஓர் உருவம் அறையின் ஒரு மூலையில் நாற்காலியில் உட்கார்ந்திருந்தது. அந்த மனிதர் தலையில் குல்லாய் போல் ஏதோ ஒன்று இருந்தது. வேண்டுமென்றே அந்த மனிதர் விளக்குக்கு எதிரில் எங்களுக்கு முதுகைக் காட்டியபடி உட்கார்ந்திருந்தார். அவர் உட்கார்ந்திருந்தது ஒரு சக்கர நாற்காலி என்பதும் மெல்ல மெல்லப் புலப்பட்டது. அதைத் தவிர விளக்கு வைக்கப்பட்டிருந்த மேசை ஒன்றுதான் அந்த சக்கர நாற்காலியைத் தவிர்த்து அந்த அறையிலிருந்த ஒரே ஒரு சாமான்.

யாமின் என்னைக் கம்பளத்தின் மீது உட்காரும்படி சைகை செய்துவிட்டு நாற்காலியிலிருந்த உருவத்தை நெருங்கி மென்மையாகத் தழுவிக் கொண்டு ஏதோ கிசுகிசுத்தார். பின்பு என்னருகில் வந்து

அமர்ந்து கொண்டார்.

“நான் ஏற்கனவே உங்களிடம் சொல்லியிருக்கிறேன் அல்லவா அந்தப் பெர்க்கின்ஸ் இவர்தான். உங்களைச் சந்திப்பதற்குக் கிடைத்த வாய்ப்பை நாங்கள் இருவருமே எங்களுக்கு அளிக்கப்பட்ட கௌரவமாகக் கருதுகிறோம்.’’

“நல்வரவு திருவாளர்.பெர்க்கின்ஸ்’’ சக்கர நாற்காலியில் அமர்ந்திருந்தவர் புரிந்து கொள்ளவே முடியாத அளவிற்குத் தணிந்த குரலில் பேசியபோதிலும் அவர் குரல் கரடுமுரடானதாகவே தோன்றியது. உற்றுக் கேட்பதற்காக என்னையறியாமலேயே நான் முன்னே கழுத்தை நீட்டுவதை உணர்ந்தேன். அந்த மனிதர் அதே கரகரப்பான குரலில் தொடர்ந்து பேசினார். “பெர்க்கின்ஸ் நீங்கள் இப்போது ஒரு உடைந்து நொறுங்கிப் போன மனிதனைப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் ஒரு காலத்தில் நானும் உங்களைப் போலவே ஒரு வலிமையான மனிதனாகத்தான் இருந்தேன். ஷாவின் முதன்மையான ஆலோசகனாக இருந்தவன் நான்’’ பின்பு- திடீரென்று அவர் மௌனமானார். நீண்ட இடைவெளிக்குப் பின்பு கசப்புடன் “ஷாக்களுக்கெல்லாம் ஷா மன்னர் மன்னன்’’ என்றார். அவர் குரலில் கோபத்தைவிட சோகமே அதிகம் இழையோடி இருப்பது போல் எனக்குப் பட்டது.

“உலகத் தலைவர்களில் பலரை எனக்குத் தனிப்பட்ட முறையிலேயே தெரியும். ஐஸன்ஹோவர், நிக்ஸன், டி கால்... அவர்கள் எல்லோரும் இந்த நாட்டை முதலாளித்துவ முகாமுக்குள் அழைத்து வர நான் உதவியாக இருப்பேன் என்ற நம்பிக்கை கொண்டிருந்தார்கள். ஷாவும் என்னை நம்பினார்.’’ இருமலைப் போன்ற ஒரு சத்தம் அவர் தொண்டையிலிருந்து வெளிவந்தது. நான் அதைச் சிரிப்பு என்று எடுத்துக் கொண்டேன். அவர் தொடர்ந்தார். “நானும் ஷாவை நம்பினேன். அவரது வாக்குறுதிகளை நம்பினேன். ஈரான் நாடு இஸ்லாமிய உலகைப் புது யுகத்திற்கு அழைத்துச் செல்லப் போகிறது என்றும், பாரசீகம் தன் வரலாற்றுக் கடமையை நிறைவு செய்யும் என்றும் உறுதியாக நம்பிக் கொண்டிருந்தேன். ஷா, நான், எங்களுடனிருந்த மற்றவர்கள் எல்லோரும் சாதிக்கப் பிறந்திருக்கிறோம் என்றும், நாங்கள் உன்னதமானவை என்று கருதிய லட்சியங்களை முன்னெடுத்துச் செல்வதுதான் எங்களுக்கு விதிக்கப்பட்டது என்றும் கருதிக் கொண்டிருந்தோம்.’’

சக்கர நாற்காலி ‘ஸ்’ என்ற சத்தத்துடன் மெதுவாகத் திரும்பியது. அந்த மனிதரின் முகத்தை ஓரளவு நன்றாக என்னால் காண முடிந்தது. நான் அதிர்ந்தேன். அவரது ஒழுங்கில்லாத, தாடி மண்டிய முகம் தட்டையாக இருந்தது. அவருக்கு மூக்கு இல்லை. எனக்கு உதறல்

எடுத்தது. மூச்சே நின்று விடும் போலிருந்தது.

“ரசிக்கும்படியான காட்சியில்லை, இல்லையா திருவாளர் பெர்க்கின்ஸ்! இந்த விகாரத்தைப் பகல் வெளிச்சத்தில் பார்க்க முடியாமல் போனது உங்களுடைய துரதிர்ஷ்டம்தான்.’’ திரும்பவும் சடசடவென்று மழைத்துளி விழுவது போன்ற அந்தச் சிரிப்பொலி.. “நான் தலைமறைவாக இருக்க வேண்டுமென்பதை நீங்கள் புரிந்துகொள்வீர்கள், அங்கீகரிப்பீர்கள் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். ஒரு வேளை முயற்சி செய்தால் நான் யார் என்பதைக் கண்டு பிடித்துவிட உங்களால் முடியும். நான் இறந்துவிட்டேனென்று அந்தத் தேடலின் முடிவு கூறினாலும்கூட, ஏனென்றால் அதிகாரப்பூர்வமான ஆவணங்களின்படி நான் உயிருடன் இல்லை. ஆனால் நீங்கள் அது போன்ற செயல்கள் எதிலும் இறங்க மாட்டீர்கள் என்று நான் உறுதியாக நம்புகிறேன். தவிர நான் யாரென்று தெரிந்து கொள்ளாமல் இருப்பதுதான் உங்களுக்கும், உங்கள் குடும்பத்திற்கும் நல்லது. ஷாவின் கரங்களும், சாவக்கின்* கரங்களும் ரொம்ப தூரம் நீளக்கூடியவை.’’

அவரது சக்கர நாற்காலி கிறீச்சிட்டு விளக்கை நோக்கித் திரும்பியது. அந்த முகத்தைப் பாராமலிருப்பது எனக்கு நிம்மதியளித்தது. அதே நேரத்தில் இந்த உருவத்தைப் பார்க்க மறுப்பது நிகழ்த்தப்பட்ட வன்முறையை அலட்சியப்படுத்தும் செயல் என்றும் தோன்றியது. சில இஸ்லாமியச் சமூகங்களில் இந்த மூக்கை அறுக்கும் பழக்கம் இன்னும் தொடர்ந்து வருவதை அப்போது நான் அறிந்திருக்கவில்லை. சமூகத்தையோ, அதன் தலைவர்களையோ அவமதிப்பவர்களுக்கு இந்த வகையான தண்டனை அளிக்கப்பட்டு வந்தது. தண்டிக்கப்பட்ட மனிதனின் முகம் வாழ்நாள் முழுவதும் அவனை மக்களுக்கு அடையாளம் காட்டி வரும்.

“நாங்கள் உங்களை ஏன் இங்கே அழைத்தோம் என்று நீங்கள் ஆச்சரியப்படலாம்’’ என் பதிலுக்குக் காத்திராமல் அவர் தொடர்ந்து பேசினார். “நீங்களே பார்க்கிறீர்கள்அல்லவா? தன்னை மன்னர் மன்னன் என்று அழைத்துக் கொள்ளும் இந்த மனிதன் உண்மையில் சாத்தானைப் போன்றவன். இவனது தந்தையை சி.ஐ.ஏ. என் உதவியுடன் வெளியேற்றியது. இதை இப்போது சொல்லவே எனக்கு வெறுப்பாக இருக்கிறது. வெளியேற்றப்பட்டதற்கு அவர் நாஜிகளோடு ஒத்துழைத்தார் என்று காரணம் சொல்லப்பட்டது. அப்புறம் மொஸாடெக் பேரழிவு. இன்று ஹிட்லரையே தோற்கடிக்குமளவிற்குக் கொடுமை புரிந்து வருகிறார் இந்த ஷா. ஷாவின் செயல்கள் அனைத்துமே உங்கள் நாட்டின் ஆதரவோடும் ஆசியுடனும்தான் நடத்தப்பட்டு வருகின்றன.’’

“ஏன் அப்படி?’’

“காரணம் மிகவும் எளிமையானது. மத்தியக் கிழக்கில் அவர் ஒருவர்தான் உங்களுக்கு உண்மையான நண்பர். எண்ணெய்தான் உலகம் இயங்குவதற்கு அச்சாணி போன்றது. அந்த எண்ணெய் மத்தியக்கிழக்கில் கொட்டிக் கிடக்கிறது. உங்களுக்கு (அமெரிக்காவிற்கு) இஸ்ரேல் இருக்கிறது என்பது உண்மைதான். ஆனால் உங்களுக்கு அதனால் ஒரு பயனுமில்லை. அது எப்போதும் உங்களுக்குச் சுமையாகத்தானிருக்கும். உங்கள் அரசியல்வாதிகளுக்கு யூதர்களின் வாக்குகள் வேண்டும். பிரசாரத்திற்கு யூதர்களின் பணம் வேண்டும். அதற்கு இஸ்ரேல் வேண்டுமென்பதால்தான் அதனோடு ஒட்டிக் கொண்டிருக்கிறீர்கள் என்று நான் நினைக்கிறேன். எப்படியிருந்தாலும் உங்களுக்கு உண்மையில் தேவைப்படுவது ஈரான்தான். உங்கள் எண்ணெய் நிறுவனங்களுக்கு நாங்கள் வேண்டும். அவை யூதர்களை விட வலிமை வாய்ந்தவை. ஊழலில் ஊறிப்போன தென் வியட்நாமியத் தலைவர்கள் உங்களுக்கு அவசியமாயிருப்பதைப் போலவே எங்கள் ஷாவும் உங்களுக்கு வேண்டும்.’’

“நீங்கள் சொல்வது எனக்கு மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. ஈரானை எப்படி வியட்நாமோடு ஒப்பிட முடியும்?’’ என்றேன் நான்.

“ஈரான் வியட்நாமை விட மோசமானதாக இருக்கும். ஷா நீண்ட நாளைக்குத் தாங்க மாட்டார். முஸ்லிம் உலகம் அவரை வெறுக்கிறது. அரேபியர்கள் மட்டுமல்ல. உலகம் முழுவதுமுள்ள இஸ்லாமியர்கள், இந்தோனேஷியர்கள், அமெரிக்காவிலுள்ள இஸ்லாமியர்கள் அனைவரும் அவரை வெறுக்கிறார்கள். அவரது சொந்த நாட்டிலேயே பெரும்பகுதி மக்கள் கொதித்துப் போயிருக்கிறார்கள்.’’ அவர் முஷ்டியால் நாற்காலியைக் குத்தும் ஓசை கேட்டது. “ஷா அயோக்கியன், கெட்டவன். பாரசீகர்களாகிய நாங்கள் அவனை அடியோடு வெறுக்கிறோம்!’’ பின்பு டாக் அமைதியாகிவிட்டார். அவரது கனத்த மூச்சை மட்டுமே என்னால் கேட்க முடிந்தது. உணர்ச்சி வசப்பட்டுப் பேசியதால் அவர் களைத்துப் போய்விட்டார் போலிருந்தது.

“டாக் முல்லாக்களுக்கு ரொம்பவும் நெருக்கமானவர்.’’ யாமின் முதல் முறையாகப் பேசினார். “இங்கே மதப்பிரிவுகளிடையே பெரிய அளவிற்கு மாறுபாடான, முரண்பாடான கருத்துகள் நிலவி வருகின்றன. நாட்டின் எந்தப் பகுதியும் அதன் வீச்சுக்குத் தப்பவில்லை. ஷாவின் முதலாளித்துவக் கொள்கைகளால் பலன் பெற்ற ஒரு சில வியாபாரிகள் மட்டுமே அவரை ஆதரிக்கிறார்கள்.’’

“நான் உங்கள் கருத்தை நம்பவில்லை என்று தயவு செய்து நினைத்துக் கொள்ளாதீர்கள். நான் இந்த நாட்டுக்கு நான்கு முறை

வந்திருக்கிறேன். ஆனால் நீங்கள் சொல்வது போன்ற விஷயங்கள் எதையும் நான் காணவில்லை. என்னோடு பேசிய ஒவ்வொருவரும் ஷா மீது அன்பு கொண்டவர்களாகவே, அவர் கொண்டு வந்துள்ள பொருளாதாரச் சீர்திருத்தங்களை ஆதரிப்பவர்களாகவே தோன்றுகிறார்கள்?''

"உங்களுக்கு பார்ஸி மொழி தெரியாது. ஷாவால் பெரிய அளவிற்குப் பலனடைந்தவர்கள்தான் உங்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் கேட்பதெல்லாம் இப்படிப்பட்டவர்களின் பேச்சை மட்டும்தான். அமெரிக்காவிலோ இங்கிலாந்திலோ படித்தவர்கள் எல்லோரும் கடைசியில் ஷாவுக்கு ஊழியம் செய்வதில் தான் வந்து நிற்கிறார்கள். டாக் மட்டும்தான் ஒரு விதிவிலக்கு இப்போது!''

தான் பேச விரும்பியவற்றை முறைப்படுத்திக் கொள்வதற்காக யாமின் கொஞ்சம் இடைவெளி விட்டு விட்டுத் தொடர்ந்தார். "உங்கள் பத்திரிகைகளும் உங்களைப் போலத்தான் இருக்கின்றன. அவற்றைச் சேர்ந்தவர்களும் தங்களுக்கு வேண்டியவர்கள் சிலரிடம் மட்டுமே பேசுகிறார்கள். தவிர உங்கள் செய்தி ஏடுகளும் பெருமளவு எண்ணெய் நிறுவனங்களால் கட்டுப்படுத்தப்படுகின்றன என்பது உண்மைதானே! எண்ணெய் நிறுவனங்களைச் சேர்ந்தவர்கள் எதைக் கேட்க விரும்புகிறார்களோ அதையே ஊடகங்களைச் சேர்ந்தவர்கள் பேசுகிறார்கள். முதலாளிகள் எதைப் படிக்க விரும்புகிறார்களோ அதையே எழுதுகிறார்கள்.''

"நாங்கள் ஏன் உங்களிடம் இதையெல்லாம் பேசிக்கொண்டிருக்கிறோம் என்பது தெரியுமா திருவாளர். பெர்க்கின்ஸ்?'' டாக்டரின் குரல் முன்னைவிட மோசமாக ஒலித்தது. இந்தச் சந்திப்பிற்காக அந்த மனிதன் சேமித்து வைத்திருந்த சக்தி முழுவதும் வடிந்துவிட்டது போலத் தோன்றியது. "உங்கள் நிறுவனத்தை எங்கள் நாட்டை விட்டு வெளியேறும்படி செய்வதற்கு நீங்கள் முயற்சி செய்ய வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம். இங்கே பெரிய அளவிற்குப் பணம் சம்பாதிக்கலாம் என்று நினைத்திருந்தால் அது நிறைவேறப் போவதில்லை என்று உங்களை முன்கூட்டியே எச்சரிக்க விரும்புகிறோம். இந்த அரசு நீண்ட நாளைக்கு நிலைக்காது!'' திரும்பவும் அவர் முஷ்டியால் நாற்காலியைக் குத்தும் ஓசை கேட்டது. "இந்த அரசு ஒழிந்த பிறகு அதன் இடத்திற்கு வரப் போகும் புதிய அரசு உங்கள் மேலும், உங்களைப் போன்றவர்கள் மேலும் எந்த அனுதாபமும் காட்டாது!''

"எங்களுக்குப் பணம் கொடுக்கப்படாது என்று சொல்கிறீர்களா?''

டாக் இருமத் தொடங்கினார். அவர் உடல் வலிப்பு வந்தது போல

வெட்டி, வெட்டி இழுக்கத் தொடங்கியது. யாமின் அவர் முதுகைத் தடவிக் கொடுத்தார். இருமல் நின்றவுடன் அவர் என்னிடம் திரும்பினார்.

“இந்த இடத்தில் நமது உரையாடலை முடித்துக் கொள்ளலாம். உங்கள் கேள்விக்கு பதில் ஆமாம் என்பதுதான். உங்களுக்குப் பணம் கொடுக்கப்பட மாட்டாது. நீங்கள் எல்லா வேலையையும் செய்வீர்கள். ஆனால் உங்களுக்குப் பணம் தர வேண்டிய நேரம் வரும்போது ஷா இருக்கமாட்டார்.’’

நாங்கள் திரும்பிக் கொண்டிருந்தபோது யாமினிடம் அவர் ஏன் மெய்ன் - ஐ இந்தப் பொருளாதாரப் பேரழிவிலிருந்து காப்பாற்ற விரும்புகிறார்கள் என்று கேட்டேன்.

“உங்கள் கம்பெனி நாசமாகப் போனால் எங்களுக்கு சந்தோஷம்தான். இருந்தாலும் நீங்கள் பிரச்சனையில்லாமல் ஈரானை விட்டு வெளியேறுவதையே நாங்கள் விரும்புகிறோம். ஒரு நிறுவனம் வெளியேறினால் போதும். மற்ற நிறுவனங்களும் அதைப் பின்பற்றத் தொடங்கிவிடும். நாங்கள் எதிர்பார்ப்பது அதைத்தான். ஆனால் ஷாவுக்கு கட்டாயம் முடிவு கட்டப்பட வேண்டும். அதைக் கூடுமானவரை சிக்கலில்லாமல் செய்து முடிக்கவே நாங்கள் விரும்புகிறோம். அதற்காக எல்லா வழிகளையும் முயன்றுப் பார்ப்போம். எனவே இன்னும் நேரம் இருக்கும் போதே உங்கள் (நிறுவனத்தின் தலைவர்) ஜம்பாட்டிக்கு இங்கிருக்கும் நிலையை நீங்கள் உணர்த்த வேண்டுமென்றும், உங்கள் நிறுவனத்தை இங்கிருந்து வெளியேறச் செய்ய வேண்டும் என்றும் அல்லாவை வேண்டுகிறோம்!’’

“இந்த வேலைக்கு என்னை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்?’’

“நாம் ஒன்றாக இரவு உணவு அருந்தினோமே அன்று நான் பாலைவனம் பூத்துக் குலுங்கும் திட்டத்தைப் பற்றிப் பேசியபோது நீங்கள் திறந்த மனதுடன் இருக்கிறீர்கள் என்பதையும், உண்மையை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறீர்கள் என்பதையும் புரிந்துகொண்டேன். உங்களைப் பற்றி எங்களுக்குக் கிடைத்த செய்தி சரியானது என்பதை நான் அறிவேன், நீங்கள் இரண்டு உலகங்களுக்கு நடுவே உள்ள மனிதர்.’’

என்னைப் பற்றி அவர் எவ்வளவு தூரம் தெரிந்து வைத்திருக்கிறார் என்பதைக் கண்டு நான் வியந்து போனேன்.

# 20

# மன்னர் மன்னனின் வீழ்ச்சி

1978- ஆம் ஆண்டு. ஒரு மாலை வேளையில் டெஸ்ரானிலுள்ள இன்டர்கான்டினென்டல் உணவு விடுதியின் ஆடம்பரமான மது விடுதியில் தனியாக அமர்ந்திருந்தேன். யாரோ என் தோளில் தட்டினார்கள். நிமிர்ந்து பார்த்தபோது பிஸினெஸ் சூட் அணிந்த ஒரு பருத்த ஈரானியன் என் முன்னே நிற்பதைக் கண்டேன்.

“பெர்க்கின்ஸ்! என்னை அடையாளம் தெரிகிறதா?'' அந்தப் பழைய கால்பந்தாட்ட வீரன் ஏகமாகச் சதை போட்டிருந்தான். ஆனால் குரல் மட்டும் அதே பழைய உற்சாகத்துடன் ஒலித்தது. என் முன்னே நின்று கொண்டிருந்தது என் பழைய மிடில்பெரிக் கல்லூரி நண்பன் பர்கத்! கடந்த பத்தாண்டுகளாக நாங்கள் சந்தித்துக் கொள்ளவேயில்லை. நாங்கள் தழுவிக் கொண்டோம். பர்கத்துக்கு என் வேலை சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களும் தெரிந்திருக்க வேண்டுமென்று நாங்கள் பேச ஆரம்பித்த கொஞ்ச நேரத்திலேயே எனக்-குத் தோன்றியது. அவன் தன் வேலையைப் பற்றி எதுவும் பேச விரும்பவில்லை என்பதையும் விரைவிலேயே புரிந்து கொண்டேன்.

“நேரடியாக விஷயத்துக்கு வருவோம்''. நாங்கள் இரண்டாவது பீருக்கு உத்தரவிட்டதும் அவன் சொன்னான்: “நான் நாளைக்கு ரோமுக்குப் போகிறேன். என் அப்பாவும் அம்மாவும் அங்கேதான் இருக்கிறார்கள். அதே விமானத்தில் உனக்கும் ஒரு டிக்கெட் வைத்திருக்கிறேன். இங்கே எல்லாமே உடைந்து நொறுங்கிக் கொண்டிருக்கின்றன. நீ வெளியேறியே ஆக வேண்டும்.'' விமான டிக்கெட்டை அவன் என்னிடம் நீட்டினான். நான் கொஞ்சம் கூட அவனைச் சந்தேகப்படவேயில்லை.

ரோமில் பர்கத்தின் பெற்றோருடன் இரவு உணவு அருந்தினோம். பர்கத்தின் அப்பா ஓர் ஓய்வு பெற்ற ஜெனரல். ஒரு காலத்தில் கொலையாளியின் குண்டுகளைத் தான் ஏற்றுக்கொண்டு ஷாவைக் காத்தவர். இப்போது அவர் தன் பழைய எஜமானன் மீது அதிருப்தியைக் கொட்டிக் கொண்டிருந்தார். கடந்த சில ஆண்டுகளில் ஷா தன் ஆணவத்தை, பேராசையை, சுயரூபத்தை அப்பட்டமாகக் காட்டிவிட்டார் என்றார் அவர். அமெரிக்கா இஸ்ரேலையும், ஊழலில் திளைக்கும் தலைவர்களையும், சர்வாதிகார அரசுகளையும் ஆதரிப்பதே மத்தியக் கிழக்கு முழுவதும் பரவி வரும் வெறுப்புணர்வுக்குக் காரணம் என்றதோடு சில மாதங்களுக்குள் ஷா ஒழிந்துவிடுவார் என்று முன்னறிவிப்பும் செய்தார்.

“உங்களுக்குத் தெரியுமா? ஐம்பதுகளின் தொடக்கத்தில் மொஸாடெக்கை நீங்கள் தூக்கியெறிந்தபோதே இந்தக் கலகத்திற்கான விதைகளைத் தூவி விட்டீர்கள். அப்போது நீங்கள் செய்த காரியம் ரொம்பவும் புத்திசாலித்தனமானது என்று நினைத்துக் கொண்டீர்கள். நானும்கூட அப்படித்தான் நினைத்திருந்தேன். ஆனால் இப்போது உங்கள் செயலின் விளைவுகள் விஸ்வரூபமெடுத்து நிற்கின்றன. நம்மை ஆட்டி வைக்கின்றன’’[1]

அவரது பேச்சைக் கேட்டு நான் மலைத்துப் போனேன். யாமினும் டாக்கும் ஏறக்குறைய இதே விஷயத்தைத்தான் சொன்னார்கள் என்றாலும் இந்தச் சொற்கள் ஒரு ஒய்வு பெற்ற ஜெனரலின் வாயிலிருந்து வருவது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகத் தோன்றியது. அதற்குள் ஈரானில் ஒரு பழமைவாத இஸ்லாமிய இயக்கம் தலைமறைவாகச் செயல்பட்டு வருகிறது என்பது எல்லோருக்கும் தெரிந்துவிட்டிருந்தது. ஆனாலும் ஷா மக்களிடையே பெரும் செல்வாக்குப் பெற்றவர்; எனவே அவரை அரசியல் ரீதியாகத் தோற்கடிக்க முடியாது என்று எங்களை நாங்களே ஏமாற்றிக் கொண்டிருந்தோம். ஆனால் ஜெனரல் தன் கருத்தில் பிடிவாதமாக இருந்தார்.

“எழுதி வைத்துக் கொள்ளுங்கள். ஷாவின் வீழ்ச்சி ஒரு தொடக்கம் மட்டும்தான். இஸ்லாமிய உலகம் எதை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது என்பதற்கு அது ஓர் உதாரணம்தான். எங்கள் கோபம் நீண்ட காலமாகப் பாலைவன மணலுக்கடியில் கனன்று கொண்டிருந்தது. விரைவில் அது வெடித்துச் சிதறும்.’’

உணவருந்துகையில் அயதுல்லா ருஹெல்லா கோமேனியைப் பற்றி[2] நிறைய விஷயங்கள் தெரிய வந்தன. பர்கத்தும், அவன் அப்பாவும் தாங்கள் கோமேனியின் வெறித்தனமான ஷியாயிஸத்தை ஆதரிக்க வில்லை என்பதைத் தெளிவுபடுத்தினார்கள். ஆனாலும் ஷாவுக்கு எதிராக கோமேனி ஈட்டிய வெற்றிகள் அவர்களைக் கவர்ந்திருப்பது வெளிப்படையாகத் தெரிந்தது. “கடவுளால் தூண்டப்பட்டவர்’’ என்ற பொருள்படும் இந்தப் பெயரைக் கொண்ட மத போதகர் 1902 - இல் டெஹ்ரானுக்கு அருகே உள்ள ஒரு கிராமத்தில் உறுதியான மத நம்பிக்கை கொண்ட ஷியா அறிஞர்களின் குடும்பத்தில் பிறந்தார்.

ஆரம்பத்தில் மொஸாடெக் மற்றும் ஷாவுக்கு எதிராக நடந்த போராட்டங்களில் தலையிடுவதில்லை என்று கோமேனி உறுதி கொண்டிருந்தார். ஆனால் 1960-களில் துருக்கிக்கு நாடு கடத்தப்படும் அளவிற்கு ஆட்சியாளரை உக்கிரமாக விமர்சிக்கத் தொடங்கினார். பின்பு அங்கிருந்து ஈராக்கிலுள்ள ஷியா புனிதத்தலமான நஜாப்புக்குத் திரும்பவும் நாடு கடத்தப்பட்டார். நஜாப்பில் தங்கியிருந்தபோதுதான் கோமேனி ஈரானின் அனைத்து எதிர்க்கட்சிகளாலும் தலைவராக ஏற்றுக்கொள்ளப்பட்டார். அங்கிருந்து ஷாவை தூக்கியெறியவும்,

மதச்சட்டங்களின் அடிப்படையிலான அரசு அமைக்கவும் ஈரானியர்களைக் கிளர்ந்தெழக் கோரி கடிதங்களையும் கட்டுரைகளையும், உரைகள் பதிவு செய்யப்பட்ட ஒலிநாடாக்களையும் ஈரானுக்கு அனுப்பி வந்தார்.

பின்பு இரண்டே நாட்களில் ஈரானில் குண்டுகள் வெடிப்பதையும், கலவரங்கள் பரவி வருவதையும் பற்றிய செய்திகள் வந்தன. அயதுல்லா கொமேனியும், முல்லாக்களும் இறுதித் தாக்குதலைத் தொடங்கினார்கள். அது விரைவில் வெற்றியைத் தர இருந்தது. பர்க்கத்தின் அப்பா விவரித்திருந்த கோபம் பயங்கரமான இஸ்லாமிய எழுச்சியாக வெடித்தெழுந்தது. 1979 - இல் ஷா நாட்டை விட்டு எகிப்துக்குத் தப்பி ஓடினார். அங்கே அவருக்குப் புற்றுநோய் இருப்பது கண்டு பிடிக்கப்பட்டது. நியூயார்க் மருத்துவமனையில் சேர்ந்தார்.

கொமேனியைப் பின்பற்றியவர்கள் அவர் நாட்டுக்குத் திரும்பி வர வேண்டும் என்று கோரினார்கள். 1979, நவம்பரில் போர்க்குணம் மிக்க இஸ்லாமியக் குழு ஒன்று ஈரானிலிருந்த அமெரிக்கத் தூதரகத்தைக் கைப்பற்றியது. அங்கிருந்த 52 அமெரிக்கர்கள் 444 நாட்கள் பிணைக்கைதிகளாகப் பிடித்து வைக்கப்பட்டிருந்தனர்.[2] பிணைக் கைதிகளை விடுவிப்பதற்காக ஜனாதிபதி கார்ட்டர் நடத்த முயன்ற பேச்சுவார்த்தை தோல்வியில் முடிந்தது. பின்பு கார்ட்டர் ராணுவ நடவடிக்கைக்கு ஒப்புதல் அளித்தார். 1980, ஏப்ரலில் தொடங்கப்பட்ட இந்த இராணுவ நடவடிக்கை பேரழிவில் முடிந்தது. இந்தத் தோல்வி ஜனாதிபதி கார்ட்டரின் பதவியை சவப்பெட்டிக்கு அனுப்பி இறுதி ஆணியை அறைந்தது.

அமெரிக்காவில் உள்ள பல்வேறு பொருளாதார மற்றும் அரசியல் நலன்களைப் பிரதிநிதித்துவப்படுத்திய அரசியல் குழுக்கள் புற்றுநோயால் பாதிக்கப்பட்டிருந்த ஷா, அமெரிக்காவை விட்டு வெளியேற வேண்டுமென்று தீவிரமான அழுத்தம் கொடுக்கத் தொடங்கின. ஈரானை விட்டு வெளியேறிய நாளிலிருந்தே அடைக்கலம் பெறுவது என்பது ஷாவுக்கு ஒரு பிரச்சனையாகவே இருந்து வந்தது. அவரது பழைய நண்பர்கள் அத்தனை பேரும் அவரை விட்டு விலகிப் போனார்கள் அல்லது அவரை ஒதுக்கித் தள்ளினார்கள். ஆனால் பனாமாவின் தளபதி டோரிஜோஸ் தனிப்பட்ட முறையில் ஷாவின் அரசியலை வெறுத்தாலும் தனக்கேயுரிய இரக்க குணத்துடன் புகலிடம் அளித்தார். புதிய பனாமா கால்வாய் ஒப்பந்தம் இறுதி செய்யப்பட்ட அதே ஓய்வு விடுதியில்தான் ஷா இறுதியில் வந்து அடைக்கலமானார்.

அமெரிக்கத் தூதரகத்தில் பிடித்து வைக்கப்பட்டிருந்த பிணைக் கைதிகளுக்குப் பதிலாக ஷாவைத் திருப்பி அனுப்புமாறு முல்லாக்கள் கோரினார்கள். பனாமா கால்வாய் தொடர்பாகப் புதிதாக ஏற்பட்ட ஒப்பந்தத்தை எதிர்த்தவர்கள், டோரிஜோஸ் லஞ்ச ஊழலில்

திளைக்கிறார், ஷாவோடு ஒத்துழைக்கிறார், அதன் மூலம் அமெரிக்கக் குடிமக்களின் உயிர்களுக்கு ஆபத்து விளைவிக்கிறார் என்று குற்றம் சாட்டினார்கள். அவர்களும் ஷாவை அயதுல்லா கோமேனியிடம் ஒப்படைக்க வேண்டுமென்று கோரினார்கள். இதில் வினோதம் என்னவென்றால் இதே ஆட்கள்தான் சில மாதங்களுக்கு முன்பு வரை ஷாவுடன் கூடிக் குலாவியவர்கள். ஆணவம் மிகுந்த மன்னாதி மன்னன் இறுதியில் வேறு வழியில்லாமல் எகிப்துக்குத் திரும்பி அங்கே புற்றுநோய்க்குப் பலியானார்.

டாக் கூறிய தீர்க்கதரிசனம் பலித்தது, மெய்ன் ஈரானில் கோடிக்கணக்கான டாலர்களை இழந்தது. எங்கள் போட்டியாளர்களுக்கும் இதே கதிதான். பிணைக்கைதிகளை விடுவிப்போம், முல்லாக்களை ஆட்சியை விட்டு விரட்டுவோம், ஈரானில் ஜனநாயகத்தைக் கொண்டு வருவோம், பனாமாக் கால்வாய் நெருக்கடியைச் சரி செய்வோம் என்ற வாக்குறுதிகளோடு ரீகன், புஷ் அரசாங்கங்கள் வெள்ளை மாளிகைக்குள் நடை போட்டன. இந்த நாட்களில் மறக்கவே முடியாத பல பாடங்களை நான் கற்றுக் கொண்டேன். அமெரிக்கா தன் உண்மை முகத்தை மறைத்துக் கொண்டு உலகின் கண்களுக்கு முன் போலியாக நடித்து வருகிறது என்பதை ஈரான் அப்பட்டமாக நிரூபித்துக் காட்டியது. ஷாவைப் பற்றியும், அவர் மேல் மக்களிடையே நிலவி வந்த வெறுப்புணர்வைப் பற்றியும் எப்படி நமக்குச் சரியான தகவல்கள் கிடைக்கவில்லை என்பதைப் புரிந்துகொள்ளவே முடியவில்லை. ஈரானில் அலுவலகங்களையும், ஆட்களையும் வைத்திருந்த மெய்ன் போன்ற நிறுவனங்களிலிருந்த எங்களுக்கே உண்மை தெரிந்திருக்கவில்லை. 1972-ஆம் ஆண்டிலேயே என்னுடனான சந்திப்பின்போது டோரிஜோஸ் சர்வ சாதாரணமாக வெளியிட்ட கருத்து சி.ஐ.ஏ.வுக்கும் தேசியப் பாதுகாப்பு நிறுவனத்திற்கும் தெரியாமலிருந்திருக்க வாய்ப்பே இல்லை என்று எனக்குத் தோன்றியது. எங்கள் சொந்த உளவுத்துறையே எங்கள் கண்களை மூடிக்கொள்ள ஊக்குவித்திருந்தது.

[1] ஷா அரசைக் கைப்பற்றிய விதம் பற்றிய விவரங்களுக்குப் பார்க்க: H.D.S.Greenway, ”The Iran Conspiracy,’’ New York Review of Books, September 23, 2003; Stephen Kinzer, All the Shah’s Men: An American Coup and the Roots of Middle East Terror (Hoboken, NJ: John Wiley & Sons, Inc., 2003).

[2] 1979 பிப்ரவரி 12, 1980 ஜனவரி 7, 1987 ஆகஸ்ட் 17 இதழ்களில் ‘டைம்’ ஏட்டில் அட்டைப் படக் கட்டுரையாக வெளியிடப்பட்ட ஆயத்துல்லாஸ் ருஹூல்லா கோமேனி பற்றிய கட்டுரைகளைப் பார்க்க:

# 21

# கொலம்பியா: லத்தீன் அமெரிக்காவின் அச்சாணி

சவூதி அரேபியாவும், ஈரானும், பனாமாவும் கற்றுத் தந்த பாடங்கள் அலட்சியப்படுத்த முடியாதவைதான். ஆனால் முதல் இரண்டு நாடுகளிலிருந்த எண்ணெய் வளம், பனாமாவிலிருந்த பனாமாக் கால்வாய் ஆகியவற்றின் காரணமாக இந்த நாடுகள் மைய நீரோட்டத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டிருந்தன. இது போன்ற அசாதாரணமான சூழல் ஏதும் கொலம்பியாவில் இருக்கவில்லை. அங்கே மெய்ன் ஒரு பிரம்மாண்டமான நீர் மின்சாரத் திட்டத்தை வடிவமைத்து வந்தது.

வட அமெரிக்காவுக்கும், தென் அமெரிக்காவுக்கும் இடையேயான உறவுகளின் வரலாறு குறித்துப் புத்தகம் எழுதி வந்த ஒரு கொலம்பியக் கல்லூரிப் பேராசிரியர், அமெரிக்க ஜனாதிபதியும், முன்னாள் குதிரை வீரருமான டெடி ரூஸ்வெல்டே ஒருமுறை கொலம்பியாவின் புவியியல் முக்கியத்துவத்தைப் பாராட்டியுள்ளதாக என்னிடம் கூறினார். உலக வரைபடத்தைச் சுட்டிக்காட்டிய ரூஸ்வெல்ட், கொலம்பியாவைத் தென் அமெரிகக்வின் அச்சாணி என்று வருணித்திருந்தார். இது உண்மையா என்று நான் உறுதிப்படுத்திக் கொள்ளவில்லை. ஆனால் வரைபடத்தில் பார்க்கும்போது தென் அமெரிக்காக் கண்டத்தின் உச்சியிலுள்ள கொலம்பியா கண்டம் முழுவதும் இணைத்துப் பிடித்துக் கொண்டிருப்பது போலத் தோன்றியதென்னவோ உண்மைதான். கொலம்பியா, பனாமா மற்ற தென் அமெரிக்காக் கண்டத்தின் உச்சியிலுள்ள கொலம்பியா கண்டம் முழுவதையும் இணைத்துப் பிடித்துக் கொண்டிருப்பது போலத் தோன்றியதென்னவோ உண்மைதான். கொலம்பியா, பனாமா மற்ற தென் அமெரிக்க நாடுகளை பனாமா பூசந்தியுடன் இணைக்கிறது. எனவே இந்த நாடு மத்திய மற்றும் வட அமெரிக்காவைத் தெற்கில் உள்ள நாடுகளுடன் இணைக்கிறது.

ரூஸ்வெல்ட் உண்மையிலேயே இப்படிச் சொல்லியிருந்தாரா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் கொலம்பியாவின் கேந்திர முக்கியத்துவத்தை நன்றாகப் புரிந்து கொண்டிருந்த பல அமெரிக்க ஜனாதிபதிகளில் அவரும் ஒருவர் என்பதில் சந்தேகமேயில்லை. கடந்த ஒரு நூற்றாண்டு காலமாக அமெரிக்கா கொலம்பியாவைத் தென் அமெரிக்கா கண்டத்திற்கான நுழைவாயில் என்றே கருதி வந்தது.

இந்த நாட்டின் இயற்கையமைப்பு பேரழகு வாய்ந்தது. பனைமரங்கள் வரிசையாக அணிவகுத்து நிற்கும் எழில் மிகுந்த அட்லாண்டிக், பசிபிக் கடற்கரைகள், கம்பீரமாக உயர்ந்து நிற்கும் மலைகள். வட அமெரிக்காவின் மத்தியிலுள்ள பெரும் சமவெளிக்குச் சவால் விடக்கூடிய பாம்பாஸ் புல்வெளிகள், ஏராளமான உயிரினங்களின் இருப்பிடமாயிருக்கும் பரந்து விரிந்த மழைக்காடுகள்… இயற்கை மட்டுமல்ல, இந்த நாட்டின் மக்களும் தனித்தன்மை வாய்ந்தவர்கள்தான். அவர்களிடம் உள்ளூர் பழங்குடியினமான டைரோனாசின் உடற்கூறுகளும், ஆப்பிரிக்க, ஆசிய, ஐரோப்பிய மற்றும் மத்தியக் கிழக்கைச் சேர்ந்த மக்களினங்களின் உடற்கூறுகளும் இரண்டறக் கலந்திருந்தன. கொலம்பியப் பண்பாடு மேற்கூறிய பல்வேறு மக்களினங்களின் பண்பாடுகள் அனைத்தும் கலந்த தனிச்சிறப்பான ஒன்றாக விளங்கியது.

லத்தீன் அமெரிக்காவின் அரசியல் மற்றும் கலாசார வரலாற்றில் கொலம்பியாவின் பங்கு மகத்தானது. காலனியாதிக்கக் காலத்தின்போது பெருவுக்கு வடக்கிலும், கோஸ்டா ரீகாவுக்குத் தெற்கிலும் உள்ள எல்லா ஸ்பானிஷ் பிரதேசங்களுக்கும் இந்த நாடே தலைமையிடமாகவும், வைஸ்ராயின் இருப்பிடமாகவும் இருந்து வந்தது. தென் அமெரிக்கா முழுவதிலிருந்தும் பெறப்பட்ட விலை மதிப்பற்ற பொக்கிஷங்களை பெரும் போர்க்கப்பல்கள் கொலம்பியாவின் துறைமுக நகரான கார்ட்டே நீனாவிலிருந்துதான் ஸ்பெயினுக்கு அனுப்பின. ஸ்பானியக் காலனியாதிக்கத்திற்கு எதிரான விடுதலைப் போரின் முக்கிய நிகழ்ச்சிகள் கொலம்பியாவில்தான் நடந்தேறின. உதாரணமாக 1819-இல் சைமன் பொலிவரின் படைகள் ஸ்பானிஷ் காலனியாதிக்கவாதிகளின் படைகளை வெற்றிகொண்ட போயாகா போர்க்களம் இங்கேதான் உள்ளது.

தற்காலத்தில் லத்தீன் அமெரிக்காவிலிருந்து வந்து புகழ் பெற்ற,. அறிவுக்கூர்மை மிகுந்த எழுத்தாளர்கள், ஓவியர்களில் கணிசமானவர்கள் கொலம்பியாவைச் சேர்ந்தவர்கள். ஓரளவுக்கு ஜனநாயகமான பொறுப்புள்ள அரசுகளுக்குக் கொலம்பியா பெயர் பெற்றிருந்தது. லத்தீன் அமெரிக்கா முழுவதும் நாடுகளைப் புனர் நிர்மாணம் செய்வதற்காக கென்னடி உருவாக்கிய திட்டத்திற்கு முன்னுதாரணமாக இருந்ததும் கொலம்பியாதான். குவாதமாலா போன்ற நாடுகளைப் போலல்லாமல் கொலம்பிய அரசு மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தது. அது பொதுவுடைமைவாதிகளுக்கும் வலதுசாரி சர்வாதிகாரிகளுக்கும் ஒரு மாற்றாகக் கருதப்பட்டு வந்தபோதிலும், அந்நாடு ஒரு நம்பகமான கூட்டாளி என்ற எண்ணம் தொடர்ந்து வளர்ந்தே வந்தது.[1]

இந்தச் சிறப்பம்சங்களைப் போலவே வன்முறையும், வெறுப்பும் கூட கொலம்பிய வரலாற்றின் பிரிக்க முடியாத அம்சங்களாகவே

இருந்து வந்தன. இந்த நாட்டில் அமைந்திருந்த ஸ்பானிஷ் வைஸ்ராயின் தலைமையகம் சித்ரவதை மையமாகவும் செயல்பட்டு வந்தது. கம்பீரமான கோட்டைகள், இதன் காடுகளின் நடுவே அமைந்துள்ள விளைநிலங்கள், நகரங்கள் எல்லாமே செவ்விந்திய மற்றும் ஆப்பிரிக்க அடிமைகளின் குருதியாலும் வியர்வையாலுமே கட்டி எழுப்பப்பட்டவை. கொண்டு செல்வதற்கு எளிமையாக இருப்பதற்காக உருக்கப்பட்டு தங்கப் போர்க்கப்பல்களில் ஸ்பெயினுக்குக் கொண்டு செல்லப்பட்ட பொக்கிஷங்கள் மற்றும் உன்னதக் கலைப்பொருட்கள் பழங்குடி மக்களின் இதயத்திலிருந்து பிடுங்கி எடுக்கப்பட்டவை. பாரம்பரியம் மிக்க சமூகங்களும், அவற்றின் மக்களும், பண்பாடும் காலனியாதிக்கவாதிகளின் வாளால் அழித்து நாசமாக்கப் பட்டனர். அண்மைக்காலத்தில் (1945-இல்) நடந்த ஒரு சர்ச்சைக்கிடமான ஜனாதிபதித் தேர்தல் அரசியல் கட்சிகளுக்கிடையே பெரும் மோதல்களைக் தோற்றுவித்தது. லா வயலென்சியா (1948 - 1957) என்றழைக்கப்பட்ட அந்தக் கலகத்தில் இரண்டரை லட்சம் மக்கள் உயிரிழந்தார்கள்.

முரண்பாடுகளும், பிரச்சனைகளும் இருந்தபோதிலும் வாஷிங்டனும், வால் ஸ்ரீட்டும் வட, தென் அமெரிக்கர்கள் (Pan - American) முழுவதற்குமான அரசியல் வணிக நோக்கங்களைச் செயல்படுத்துவதற்காக கொலம்பியாவையே மையப் புள்ளியாகக் கருதி வந்தன. இதற்குப் பல காரணங்கள் இருந்தன. கொலம்பியாவின் கேந்திர முக்கியத்துவம், இந்தப் பிரதேசம் முழுவதும் உள்ள தலைவர்களால் கொலம்பியா ஒரு வழிகாட்டியாகக் கருதப்பட்டு வந்தது. அமெரிக்காவிற்குத் தேவையான காபி, வாழைப்பழம், துணி வகைகள், மரகதக் கற்கள், பூக்கள், எண்ணெய் மற்றும் கோகேய்ன் போன்றவை இந்த நாட்டில் ஏராளமாகக் கிடைத்து வந்தது போன்றவை அக்காரணங்களில் அடங்கும். எல்லாவற்றிற்கும் மேலாக நமக்கான முக்கியமான சந்தையாக கொலம்பியா இருந்து வந்துள்ளது.

இருபதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் நாம் கொலம்பியாவுக்கு விற்பனை செய்த மிக முக்கியமான சேவை பொறியியல் மற்றும் கட்டுமானத் தொழில்நுட்பமாகும். நான் ஏற்கனவே சொன்னது போல கொலம்பியா எந்த விதத்திலும் விதிவிலக்காக இருக்கவில்லை. உலக வங்கி முதலிய பன்னாட்டு வங்கிகளிலிருந்து பெரிய அளவிற்குக் கடன்கள் வாங்கி உள்நாட்டில் பல்வேறு திட்டங்களைச் செயல்படுத்தலாம் என்பதையும், அத்திட்டங்களிலிருந்து கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு அக்கடன்களைத்தாம் திரும்பச் செலுத்திவிடலாம் என்பதையும் விளக்குவது இந்நாட்டில் எளிதானதாகவே இருந்தது. மின் உற்பத்தி மையங்களும், நெடுஞ்சாலைகளும், தொலைத்தொடர்பு வசதிகளும் அமைக்கப் பெரும் முதலீடுகள் செய்வது கொலம்பியாவின் இயற்கை எரிவாயு மற்றும் எண்ணெய் வளங்களைப் பயன்பாட்டுக்குக் கொண்டு

வரவும், வளர்ச்சியடையாத அமேசான் பகுதியின் வளர்ச்சிக்கும் உதவும். இந்த இயற்கை வளங்கள் பயன்பாட்டுக்குக் கொண்டு வரப்பட்டு விட்டால் கடன்களை வட்டியுடன் திருப்பிச் செலுத்தத் தேவையான வருமானம் எளிதாகக் கிடைத்துவிடும்!

இதுதான் நமது திட்டம் என்று கூறப்பட்டாலும் உண்மையில் பகோடாவை (கொலம்பியாவின் தலைநகரம்) அடிமைப்படுத்துவதும் உலகப் பேரரசை விரிவுபடுத்துவதும் தான் நமது நோக்கமாக இருந்தது. என் வேலை எப்போதும் போல நாட்டின் வளர்ச்சிக்கு இவ்வளவு பெரிய தொகையைக் கடனாகப் பெறுவது மிகவும் அவசியம் என்ற எண்ணத்தை ஏற்படுத்துவதாகும். கொலம்பியாவில் ஒரு டோரிஜோஸ் இல்லை-. எனவே மிகைப்படுத்தப்பட்ட பொருளாதார மற்றும் மின்திறன் குறித்த முன்னறிவிப்புகளை உருவாக்குவதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை.

அவ்வப்பொழுது எனக்கு ஏற்படும் குற்ற உணர்வுகளிலிருந்து தப்ப கொலம்பியா ஒரு புகலிடமாகவும் அமைந்தது. எழுபதுகளின் தொடக்கத்திலும் ஆனும், நானும் இங்கே இரண்டு மாதங்கள் தங்கியிருந்தோம். கரீபியன் கடற்கரையை ஒட்டியிருந்த மலைகளில் அமைந்திருந்த ஒரு காபி பண்ணைக்கு முன்பணம் கூடக் கொடுத்திருந்தோம். இங்கே எங்களுக்கிடையே ஏற்பட்ட நெருக்கம் பழைய பிணக்குகளை ஏறக்குறைய அகற்றிவிடும் போல் தோன்றியது. ஆனால் காயங்கள் அவ்வளவு எளிதில் ஆறிவிட முடியாத அளவிற்கு ஆழமாகச் சென்றிருந்தன. எங்கள் திருமணம் முறிந்து போனதற்குப் பின்புதான் உண்மையிலேயே இந்த நாடு எனக்கு நன்கு பழக்கமானது.

1970-களில் நாட்டின் உள்கட்டுமானத்தை மேம்படுத்துவதற்கான திட்டங்களை உருவாக்குவதற்காக மெய்ன்-க்கு பல ஒப்பந்தங்கள் வழங்கப்பட்டன. அவற்றில் அடர்ந்த காடுகளின் உட்புறத்தில் தயாரிக்கப்படும் மின்சாரத்தை மலைகளின் மேல் அமைந்துள்ள நகரங்களுக்குக் கொண்டு செல்லும் திட்டமும் ஒன்று. பாரன்குயில்லா என்ற கடற்கரை நகரில் எனக்கு ஓர் அலுவலகம் தரப்பட்டது. 1977- ஆம் ஆண்டில் இங்கேதான் என் வாழ்க்கையையே தலைகீழாக மாற்றிய ஓர் அழகிய கொலம்பிய இளம்பெண்ணைச் சந்தித்தேன்.

பவுலா நீண்ட பொன்னிறக் கூந்தலையும் கவர்ந்திழுக்கும் பச்சைக் கண்களையும் கொண்டிருந்தாள். இந்த இரண்டும் கொலம்பியர்களிடம் காண முடியாதவை. அவளது பெற்றோர் வடக்கு இத்தாலியிலிருந்து குடிபெயர்ந்தவர்கள். எனவே பவுலா தன் பாரம்பரியத்திற்கு ஏற்றபடி ஆடை வடிவமைப்பாளராக மாறினாள். பின்பு அதில் ஒரு படி மேலே சென்று தனக்கென ஒரு சொந்தத் தொழிற்சாலையையும் உருவாக்கிக் கொண்டாள். அதில் அவளது கற்பனைகள் விதம் விதமான ஆடைகளாக உருப் பெற்றன. அவளது தொழிற்சாலையில் தயாரிக்கப்பட்ட ஆடைகள் கொலம்பியா மட்டுமல்லாமல்

பனாமாவிலும், வெனிசுவேலாவிலும் விற்பனையாகி வந்தன.

சுபாவத்திலேயே இரக்க குணம் படைத்தவளான பவுலாவின் உதவியில்லாமல் என் மணமுறிவு தந்த அதிர்ச்சியிலிருந்து என்னால் மீண்டிருக்கவே முடியாது. பெண்கள்பால் எனக்கிருந்த கண்ணோட்டங்கள் சிலவற்றைக் களைந்து கொள்ளவும் பவுலாவின் நட்பு உறுதுணையாக இருந்தது. என் செயல்களின் விளைவுகளை எனக்குப் புரிய வைத்தவளும் அவள்தான்.

நான் முன்பே கூறியபடி வாழ்க்கை தொடர்ச்சியான தற்செயல் நிகழ்வுகளில் இணைக்கப்பட்டுள்ளது. இந்த நிகழ்வுகளின் மேல் நமக்கு எந்தக் கட்டுப்பாடும் இருப்பதில்லை. என்னைப் பொறுத்தவரை ஆசிரியரின் மகனாக நியூ ஹாம்ஷயர் ஆண்கள் பள்ளியில் படித்ததும், ஆனையும், அவள் மாமா ஃபிராங்க்கையும் சந்தித்ததும், வியட்நாம் போரும், ஈனார், கிரீவ்வுடனான சந்திப்பும் என் வாழ்க்கையை அடியோடு மாற்றியமைத்தன. இந்த நிகழ்வுகளின் போது நமக்குத் தேர்ந்தெடுக்க வாய்ப்புகள் உள்ளன என்பதும் உண்மை தான். நாம் எதைத் தேர்ந்தெடுக்கிறோம், எவ்வாறு இந்நிகழ்வுகளை எதிர்நோக்குகிறோம் என்பதில்தான் எல்லாமே அடங்கியிருக்கிறது. உதாரணமாகப் பள்ளியில் முதல் மாணவனாக நான் மேற்கொண்ட உறுதி, ஆனை மணந்து கொண்டது, அமைதிப் படையில் நுழைந்து பொருளாதார அடியாளாக மாறும் பாதையைத் தேர்ந்தெடுத்தது போன்ற எனது முடிவுகள்தான் என்னை இப்போதுள்ள இடத்திற்குக் கொண்டு வந்து சேர்த்துள்ளன.

இந்த வரிசையில் இன்னொரு தற்செயலான நிகழ்வு பவுலாவுடனான சந்திப்பு. இந்தச் சந்திப்பு என் வாழ்க்கையை வேறு விதமாக மாற்ற இருந்தது. அவளைப் பார்க்கும் வரை இந்த அமைப்பு முறையோடு எனக்குப் பெரிய முரண்பாடுகள் எதுவும் ஏற்படவில்லை. குற்ற உணர்வுகள் அவ்வப்போது தலைகாட்டினாலும் கூட ஏதாவது காரணம் கண்டுபிடித்து என் செயல்களை நியாயப்படுத்திக் கொள்வதுதான் என்னுடைய வழக்கம்.

ஒரு வேளை பவுலா சரியான நேரத்தில்தான் என் வாழ்க்கையில் குறுக்கிட்டிருந்தாள் போலும். அவளைச் சந்தித்திராவிட்டாலும் கூட நான் வெளியேறுவதற்கான வாய்ப்புகள் இருக்கத்தான் செய்தன. சவூதி அரேபியாவிலும், ஈரானிலும், பனாமாவிலும் எனக்குக் கிடைத்த அனுபவங்கள் என்னை வெளியேறத்தான் தூண்டியிருக்கும். கிளேடின் என்ற பெண் பொருளாதார அடியாட்களின் பட்டியலில் என் பெயரைச் சேர்ப்பதற்கு உதவினாள் என்றால், அதிலிருந்து வெளியேறுவதற்கான தூண்டுகோலாக இருந்தது பவுலா என்ற பெண். என் மனதை ஆழமாக ஊடுருவிப் பார்க்கும்படி தூண்டியதும், இந்தப் பணியில் நீடித்திருக்கும் காலம் வரையிலும் நான் மகிழ்ச்சியோடு இருக்க முடியாது என்பதை எனக்குக் காட்டியதும் பவுலாதான்.

[1] Gerard Colby and Charlotte Dennet, Thy will be Done, The Conquest of the Amazon: Nelson Rockefeller and Evangelism in the Age of Oil (New York: HarperCollins, 1995, p 381.

# 22

# அமெரிக்கக் குடியரசுக்கு எதிராக உலகப் பேரரசு

“கொஞ்சம் வெளிப்படையாகப் பேசலாம் என்று நினைக்கிறேன்.’’ ஒரு நாள் நாங்கள் காபி அருந்திக் கொண்டிருக்கும் போது பவுலா திடீரென்று இப்படித் தொடங்கினாள். “நீங்கள் அணை கட்டிக் கொண்டிருக்கும் ஆற்றின் ஓரமாக வாழும் அத்தனை பேரும் - பழங்குடி இந்தியர்களும், விவசாயிகளும் - உங்களை வெறுக்கிறார்கள். அணையால் நேரடியாகப் பாதிக்கப்படாத நகரங்களில் வாழும் மக்கள்கூட உங்கள் கட்டுமான முகாமைத் தாக்கிக் கொண்டிருக்கும் கெரில்லாக்களிடம் அனுதாபம் கொண்டிருக்கிறார்கள். உங்கள் அரசாங்கங்கள் இந்த மக்களை கம்யூனிஸ்டுகள், பயங்கரவாதிகள், போதை மருந்துக் கடத்தல்காரர்கள் என்றழைக்கிறது. ஆனால் அவர்கள் உண்மையில் உங்கள் நிறுவனம் அழித்து நாசமாக்கிக் கொண்டிருக்கும் நிலங்களில் குடும்பத்துடன் வாழ்ந்து வரும் சாதாரண விவசாயிகள்தான்.’’

நான் சற்று முன்புதான் அவளிடம் மனுவேல் டோரஸைப் பற்றிச் சொல்லியிருந்தேன். மனுவேல் மெய்ன்-னில் வேலை செய்துவரும் ஒரு பொறியாளன். நாங்கள் அணை கட்டி வரும் பகுதியில் அண்மையில் நடத்த கெரில்லாக்களின் தாக்குதலில் பாதிக்கப்பட்டவர்களில் அவனும் ஒருவன். கொலம்பியக் குடிமகன்.

அமெரிக்க அரசு அமெரிக்கர்களைக் கட்டுமானத் தளத்திற்கு அனுப்பத் தடை விதித்திருந்ததால் அவனுக்கு அந்த வேலை கிடைத்திருந்தது. அதாவது கொலம்பியர்களை மட்டுமே ஆபத்தான வேலைகளில் ஈடுபடுத்தலாம். இதை எக்ஸ்பென்டபிள் கோட்பாடு (Expendable doctrine) என்று நாங்கள் குறிப்பிட்டோம். (நமது குறிக்கோள்களுக்காக மற்றவர்களைப் பலி தருவதில் தவறில்லை என்பதுதான் இதன் சாரமாகும்) நான் வெறுத்த அத்தனை விஷயங்களின் ஒன்று திரண்ட மொத்த உருவமாக இருந்தது இந்தக் கோட்பாடு. இது போன்ற கோட்பாடுகள் இந்த அமைப்பில் நான் தொடர்ந்து நீடிப்பதை மென்மேலும் கடினமாக்கி வந்தன.

“அவர்கள் ஏ.கே. 47 துப்பாக்கியால் தன் தலைக்கு மேலும் காலுக்கு அருகிலும் சுட்டார்கள் என்று மனுவேல் சொல்கிறான்.’’ நான் பவுலாவிடம் சொன்னேன். “அவன் இதைச் சொல்லும்போது அமைதியாக இருப்பது போலத் தோன்றினாலும் அவன் ஏறக்குறைய பைத்தியம் பிடிக்கும் நிலையில் இருந்தான் என்பது எனக்கு நன்றாகத்

தெரிந்தது. கெரில்லாக்கள் யாரையும் சுடவில்லை. தளத்திலிருந்தவர்களிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து அவர்களை ஆற்று வழியாகப் படகில் அனுப்பிவிட்டார்கள்.''

“அடக்கடவுளே! இதற்கே அந்த அப்பாவி அரண்டுவிட்டானா?'' பவுலா ஆச்சரியத்தோடு கேட்டாள்.

“உண்மைதான். நான் அவனிடம் கெரில்லாக்கள் எந்தக் குழுவைச் சேர்ந்தவர்கள் என்று கேட்டேன்.'' எப்.ஏ.ஆர்.சி.யும், எம் - 19ம் தான் பெயர்பெற்ற கொலம்பிய கெரில்லாக் குழுக்கள்.

“அப்புறம்?''

“மனுவேல், வந்தவர்கள் இந்த இரண்டில் எந்தக் குழுவையும் சேர்ந்தவர்கள் அல்ல என்றான். அவர்கள் கடிதத்தில் என்ன சொல்லியுள்ளார்களோ அதை தான் உண்மை என்று நம்புவதாகக் கூறினான்.''

நான் கையில் வைத்திருந்த செய்தித்தாளை பவுலாவிடம் கொடுத்தேன். அவள் வாய்விட்டுப் படித்தாள்:

“உயிர் வாழ்வதற்காக அன்றாடம் உழைத்து வரும் நாங்கள் எங்கள் மூதாதையரின் இரத்தத்தின் மேல் ஆணையிட்டுச் சொல்கிறோம். எங்கள் ஆறுகளின் குறுக்கே அணைகளை அனுமதிக்கவே மாட்டோம். நாங்கள் எளிமையான இந்தியர்கள், மெஸ்டிஸோக்கள். ஆனால் எங்கள் நிலங்கள் வெள்ளத்தால் மூழ்கடிக்கப்படுவதை பார்த்துக் கொண்டிருப்பதைவிட மரணமடைவதே மேல் என்று நினைக்கிறோம். எங்கள் கொலம்பியச் சகோதரர்களை எச்சரிக்கிறோம். கட்டுமான நிறுவனங்களுக்கு வேலை செய்வதை நிறுத்துங்கள்.'' அவள் தாளை மடித்தபடியே கேட்டாள். “நீங்கள் இதற்கு அவனிடம் என்ன சொன்னீர்கள்?''

நான் தயங்கினேன். ஆனால் அது ஒரு வினாடிதான் நீடித்தது. “எனக்கு வேறு வழியில்லை. கம்பெனியின் வழியை நான் பின்பற்றியே ஆக வேண்டும். இந்தக் கடிதம் ஒரு விவசாயியால் எழுதப்பட்டது என்பதை அவன் நம்புகிறானா என்று கேட்டேன்.''

பவுலா பொறுமையுடன் கவனித்துக் கொண்டிருந்தாள்.

“மனுவேல் பதில் ஏதும் சொல்லவில்லை. வெறுமனே தோள்களைக் குலுக்கிக் கொண்டான்.'' எங்கள் கண்கள் சந்தித்தன. “ஓ! பவுலா என்னை நானே எவ்வளவு தூரம் வெறுத்தக் கொள்கிறேன் என்பது தெரியுமா?''

“அப்புறம் என்ன செய்தாய்?'' அவள் தொடர்ந்து வற்புறுத்தினாள்.

“முஷ்டியை மடக்கி மேசையில் குத்தி அவனைப் பயமுறுத்தினேன். விவசாயிகள் ஏ.கே.47 உடன் வந்தார்கள் என்பதை நம்ப முடிகிறதா

என்றேன். பின்பு ஏ.கே.47- ஐக் கண்டுபிடித்தது யார் என்றாவது தெரியுமா என்று கேட்டேன்.''

"அவனுக்குத் தெரிந்திருந்ததா?''

"ஆமாம். ஒரு ருஷ்யன் என்று அவன் கூறியது ஏறக்குறைய என் காதில் விழவேயில்லை. சரிதான். அதைக் கண்டுபிடித்தவர் கலாஷ்னி கோவ் என்ற பெயருடைய கம்யூனிஸ்ட்.. செஞ்சேனையில் மிகவும் கௌரவிக்கப்பட்ட ஒரு அதிகாரி. எனவே இந்தக் கடிதத்தை எழுதியவர்களும் கம்யூனிஸ்டுகளாகத்தான் இருக்க வேண்டும் என்பதை அவன் புரிந்து கொள்ளும்படி செய்தேன்.''

"நீ அதை நம்புகிறாயா?''

பவுலாவின் கேள்வி என்னை ஊமையாக்கி விட்டது. நான் எப்படி இதற்கு நேர்மையான பதிலைச் சொல்ல முடியும்? ஈரானையும், நான் இரண்டு உலகங்களுக்கும் இடையே நிற்கும் மனிதன் என்று யாமின் சொன்னதையும் நினைத்துக் கொண்டேன். ஒன்று நான் கெரில்லாக்களால் தாக்கப்பட்ட முகாமில் இருந்திருக்க வேண்டும். அல்லது கெரில்லாக்களில் ஒருவனாக இருந்திருக்க வேண்டும். அதைத்தான் நான் விரும்பினேன். யாமின் மீதும், டாக் மீதும், கொலம்பியப் புரட்சியாளர்கள் மீதும் பொறாமை தோன்றியது. அவர்கள் லட்சியவாதிகள். உண்மையான உலகங்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டவர்கள். எங்கோ நடுவிலிருக்கும் ஆளில்லாத பிரதேசத்தை அல்ல.

"என்னுடைய வேலையைத் தொடரத்தான் வேண்டும்,'' என்று கடைசியில் சொன்னேன். அவள் இலேசாகச் சிரித்துக் கொண்டாள்.

"இந்த வேலையை நான் வெறுக்கிறேன்,'' நான் தொடர்ந்தேன். கடந்த சில ஆண்டுகளாக என் சிந்தனையில் அடிக்கடி தோன்றி வந்த தலைவர்களை - டாம் பெய்னை, ஏனைய புரட்சிகர நாயகர்களை, கடற்கொள்ளையர்களை, முன்னணி வீரர்களை - நினைத்துப் பார்த்தேன். அவர்கள் ஏதேனும், ஒரு பக்கம் உறுதியாக நின்றார்கள். நடுவில் ஊசலாடவில்லை. உறுதியாக ஒரு நிலையைத் தேர்ந்தெடுத்து அதனால் ஏற்பட்ட விளைவுகளை எதிர்கொண்டார்கள். "ஒவ்வொரு நாள் முடியும் போதும் என் வேலையின் மீதான வெறுப்பு கொஞ்சம் அதிகமாகிறது.''

"உன் வேலையின் மீது மட்டும்தான் வெறுப்பா?'' பவுலா என் கைகளைப் பிடித்து அழுத்தியபடி கேட்டாள்.

"என்னையும் சேர்த்துத்தான்'' அவள் மெதுவாகத் தலையசைத்தாள். எனக்குள் ஓர் ஆசுவாச உணர்வு தொன்றியது.

"சரி, அடுத்து என்ன செய்யப் போகிறாய் ஜான்?''

என்னிடம் பதிலில்லை. வழக்கமாகத் தோன்றும் பாதுகாப்புணர்ச்சி வந்துவிட்டது. என் பதில் திக்கித் திணறி வெளிப்பட்டது. நான் நன்மை செய்யவே முயல்கிறேன். அமைப்பை மாற்ற அதற்குள்ளேயே வழிகள் கண்டுபிடிக்க முயற்சி செய்து கொண்டுதான் இருக்கிறேன். அப்புறம் நான் வெளியேறினால் என்னைவிட மோசமான ஒருவர் என் இடத்திற்கு வந்துவிடக்கூடும். ஆனால் பவுலாவின் பார்வையிலிருந்து அவள் என் வாதங்களைக் கொஞ்சம் கூட ஏற்றுக் கொள்ளவில்லை என்பது தெளிவாகத் தெரிந்தது. அதைவிட மோசமானது என்னவென்றால் நானேகூட அதை நம்பவில்லை. அடிப்படையான உண்மையைப் புரிந்துகொள்ள வேண்டுமென்று பவுலா என்னை வற்புறுத்தினாள். மோசமானது என் வேலை மட்டுமல்ல. நானும் கூடத்தான்.

“நீ என்ன நினைக்கிறாய்?’’ நான் பவுலாவிடம் கேட்டேன்.

அவள் பெருமூச்சு விட்டபடி என் கையை விடுவித்தாள். “நீ பேச்சை மாற்ற விரும்புகிறாய் இல்லையா?’’

நான் ஆமாமென்று தலையசைத்தேன்.

“அப்படியானால் சரி. ஒரு நிபந்தனையின் அடிப்படையில் நான் ஒப்புக் கொள்கிறேன். இன்னொரு நாள் இந்த விஷயத்தைப் பற்றி நாம் கட்டாயம் பேச வேண்டும்’’ பவுலா ஒரு கரண்டியை எடுத்து அதை உற்றுப் பார்த்துவிட்டுக் கோப்பையைக் கலக்கிக் கொண்டே பேசினாள்.

“கெரில்லாக்களில் சிலர் ரஷ்யாவிலும், சீனாவிலும் பயிற்சி பெற்றவர்கள் என்பது எனக்குத் தெரியும். அவர்களுக்கு வேறு வழி என்ன இருக்கிறது? நவீன ஆயுதங்களில் அவர்களுக்குப் பயிற்சி வேண்டியிருக்கிறது. உங்கள் பள்ளிகளில் பயிற்சி பெற்ற ராணுவத்தினரை அவர்கள் எதிர்த்துப் போரிட வேண்டியுள்ளது. சில நேரங்களில் ஆயுதங்களுக்குப் பணம் புரட்டுவதற்காகவே அவர்கள் கோகேய்ன் விற்கிறார்கள். வேறு எப்படி அவர்களால் துப்பாக்கி வாங்க முடியும்? அவர்கள் பயங்கரமான எதிரிகளுக்கு எதிராக நிற்கிறார்கள். உங்கள் உலக வங்கியால் அவர்களுக்கு எந்தப் பயனுமில்லை. உண்மையில் அதுதான் அவர்களை இந்த நிலைக்குத் தள்ளுகிறது. கெரில்லாக்களின் நோக்கம் நியாயமானது என்று நானும் நம்புகிறேன். நீங்கள் கட்டும் அணையிலிருந்து கிடைக்கும் மின்சாரம் ஒரு சில பணக்காரக் கொலம்பியர்களுக்கு மட்டுமே உதவும். ஆனால் அந்த அணை முடிவடைந்த பின்பு மீனும், நீரும் விஷமாக்கப்பட்டு ஆயிரக்கணக்கானவர்கள் சாகப் போகிறார்கள்.’’

எங்களுக்கு எதிராகப் போராடி வரும் ஆட்களைப் பற்றி அவள் இவ்வளவு அனுதாபத்துடன் பேசியது என்னைக் கூனிக் குறுகச் செய்தது.

“கெரில்லாக்களைப் பற்றி இவ்வளவு விஷயங்கள் உனக்கு எப்படித்

தெரியும்?'' இந்தக் கேள்வியைக் கேட்கக் கூடாதென்று ஒரு எச்சரிக்கை உணர்வு என்னைத் தடுத்த போதிலும் சொற்கள் வெளிப்பட்டு விட்டன.

"அவர்களில் சிலர் என்னுடன் பள்ளியில் படித்தவர்கள்.'' அவள் ஒரு வினாடி தயங்கினாள். "என் சகோதரனும் இந்த இயக்கத்தில் இருக்கிறான்.''

எனக்கு மூச்சே நின்றுவிடும் போல் தோன்றியது. அவளைப் பற்றி எனக்கு எல்லாம் தெரியும் என்று நினைத்திருந்தேன். ஆனால் இந்த விஷயம்... தன் மனைவியை அடுத்தவனுடன் படுக்கையில் பார்த்துவிட்டதைப் போன்ற ஓர் உணர்வு என்னுள் தோன்றியது.

"இதை நீ இதுவரை என்னிடம் சொன்னதேயில்லையே.''

"அவசியமில்லை என்று தோன்றியது. ஏன் சொல்ல வேண்டும்? அது ஒன்றும் பெருமையடித்துக் கொள்ளக் கூடிய விஷயமல்லவே! நான் அவனைப் பார்த்தே இரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. அவன் மிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.''

"அவன் உயிரோடு இருக்கிறான் என்று உனக்கு எப்படித் தெரியும்?''

"எனக்குத் தெரியாது. அண்மையில் அரசாங்கம் அவனைத் தேடப்படுவோர் பட்டியலில் சேர்த்துள்ளது என்பது மட்டும்தான் எனக்குத் தெரியும். அது ஒரு நல்ல அறிகுறி.''

என்னுள் தோன்றிய தற்காப்புணர்ச்சியை அடக்கிக்கொள்ள நான் கடுமையாகப் போராட வேண்டியிருந்தது. அவளால் என் பொறாமையைக் கண்டுபிடிக்க முடியாது என்று நினைத்துக் கொண்டேன். "அவன் எப்படி கெரில்லாக்களோடு சேர்ந்தான்?-''

அதிர்ஷ்டவசமாக அவள் தன் கண்களைக் காபி கோப்பையில் இருந்து எடுக்கவேயில்லை "ஒரு எண்ணெய் நிறுவனத்தின், - ஒக்ஸி டென்டல் என்று நினைக்கிறேன் - அலுவலகத்திற்கு வெளியே அவனும் அவனது நண்பர்கள் இருபது, முப்பது பேரும் ஆர்ப்பாட்டம் நடத்தினார்கள். அழியும் தருவாயிலிருந்த ஒரு பழங்குடியினத்திற்குச் சொந்தமான காடுகளில் எண்ணெய்க்காக அந்த நிறுவனம் துளையிடுவதற்கு எதிர்ப்புத் தெரிவித்தார்கள். அவர்களை ராணுவம் தாக்கியது. அடித்து நொறுக்கிச் சிறையில் தள்ளியது. அவர்கள் செய்ததெல்லாம் அந்தக் கட்டடத்திற்கு வெளியே நின்று அட்டைகளை வீசியாட்டியதும் பாடியதும்தான். இதில் சட்ட விரோதமானது எதுவுமேயில்லை..'' "அவர்கள் அவனை ஆறு மாதங்கள் சிறையில் அடைத்திருந்தார்கள். அங்கே என்ன நடந்தது என்பது பற்றி அவன் வாயைத் திறக்கவேயில்லை. ஆனால் வெளியே வந்தபோது அவன் முற்றிலும் வேறுவிதமான ஆளாக மாறியிருந்தான்.''

பவுலாவுடனான உரையாடல்கள் என் மனப்போக்கில் ஏற்படுத்த இருந்த பாதிப்பைப் பற்றி அப்போது நான் அறிந்திருக்கவில்லை. நான்

பெரும் வேதனைக்கு ஆளான போதிலும் பணப்பையின் மீது நான் கொண்டிருந்த காதலே எப்போதும் வெற்றியடைந்து வந்தது. 1968-லேயே தேசியப் பாதுகாப்பு நிறுவனம் இதுதான் என் பலவீனம் என்று சரியாகவே மதிப்பிட்டிருந்தது. என் பலவீனங்களை நான் உணர்ந்து கொள்ளவும் கலக்காரர்கள் மற்றும் கடல் கொள்ளைக்காரர்களின் மேலிருந்த கவர்ச்சிக்குப் பின்னிருந்த உணர்வுகளை ஆழமாகப் பரிசீலிக்கவும் பவுலாவுடனான சந்திப்புகள் தளம் அமைத்துக் கொடுத்தன.

என் சொந்தத் தடுமாற்றங்கள் ஒருபுறம் இருந்தபோதிலும் கொலம்பியாவில் கழித்த நாட்களில்தான் பழைய அமெரிக்கக் குடியரசுக்கும் இப்போதைய புதிய உலகப் பேரரசுக்குமான வேற்றுமைகளைக் கண்டுகொண்டேன். அந்தக் குடியரசு உலகுக்கு ஒரு நம்பிக்கையைக் கொடுத்தது. பணம் அல்ல, ஒழுக்கமும், தத்துவமுமே அதன் அடித்தளமாக இருந்தன. சமத்துவமும் நீதியும்தான் அதன் ஜீவநாடிகளாக இருந்தன. இந்தக் கோட்பாடுகள் வெறும் கற்பனாவாத இலட்சியங்களாக இல்லாமல் யதார்த்தமானவைகா, இயல்பானவையாக, அற்புதமானவையாக இருந்தன. ஒடுக்கப்பட்டோருக்குப் புகலிடமளிக்க அதன் கரங்கள் எப்போதும் நீண்டன. ஊக்கமூட்டக்கூடியதாக அதே நேரத்தில் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டிய சக்தியாகத் தேவைப்பட்டால் செயலில் இறங்கக் கூடியதாகவு-ம் அக்குடியரசு விளங்கியது. இரண்டாம் உலகப் போரின்போது தன் லட்சியங்களுக்காக அமெரிக்கா போரில் இறங்கியது. அதேபோல தற்போது குடியரசை மிரட்டி வரும் இந்த நிறுவனங்கள் - வங்கிகள், அதிகார மையங்கள்- மக்களின் நன்மைக்காகச் செயல்பட்டால் உலகின் பசியையும் பட்டினியையும் நோய்களையும் பெருமளவிற்கு ஒழித்துவிட முடியும். அதற்கான எல்லா வசதிகளையும், தொடர்புகளையும் பலத்தையும் இவை கொண்டுள்ளன. செய்ய வேண்டிய ஒரே காரியம் இவற்றை இந்தப் பாதையை மேற்கொள்ளத் தூண்டுவதுதான்.

குடியரசுக்கு நேரெதிரானது உலகப் பேரரசு. அது சுயநலம் மிக்கது. தனக்கு மட்டுமே சேவை புரியக் கூடியது. வணிகத்தை மட்டுமே, லாபத்தை மட்டுமே அடிப்படையாகக் கொண்டது. தனக்கு முன்பிருந்த எல்லாப் பேரரசுகளையும் போலவே, இயற்கை வளங்களைக் கபளீகரம் செய்யவும் கண்ணில் காணும் அனைத்தையும் கைப்பற்றிக் கொள்ளவும் துடித்துக்கொண்டிருக்கிறது. அதன் தலைமைப் பொறுப்பில் உள்ளவர்களின் காலடியில் மேலும், மேலும் அதிக செல்வத்தைக் கொட்டத் தேவையான அத்தனை வழிமுறைகளையும் பயன்படுத்தக் கூடியது உலகப் பேரரசு.

இந்த வேறுபாடு எனக்குப் புரிய வந்தபோது என் நிலையைத் தெளிவாக உணர முடிந்தது. மெய்ன் என்னிடம் என்ன எதிர்பார்க்கிறது

என்னைக் கிளேடின் நேர்மையாகக் கோடிட்டுக் காட்டியிருந்தாள். உண்மையாகச் சொல்லப் போனால் எச்சரித்திருந்தாள். ஆனாலும் இந்தோனேஷியா, பனாமா, ஈரான், கொலம்பியா போன்ற நாடுகளில் பணிபுரிந்து நேரடி அனுபவம் பெற்ற பின்பே என் செயல்களின் பின் விளைவுகளைக் காண முடிந்தது. இதற்கு என் நேரடி அனுபவங்களோடு பவுலா போன்ற பெண்ணின் அன்பும், சொந்த அனுபவங்களும், பொறுமையும் தேவைப்பட்டன.

அமெரிக்கக் குடியரசுக்கு நான் விசுவாசம் உள்ளவனாக இருந்தேன். ஆனால் இந்தப் புதிய நுட்பம் வாய்ந்த ஏகாதிபத்தியத்தின் பொருளாதாரத் திட்டங்கள் வியட்நாமில் நாம் நடத்திய ராணுவ நடவடிக்கைகளுக்கு எந்த விதத்திலும் குறைந்தவை அல்ல. ராணுவங்களின் வல்லமைக்கு எல்லை உண்டு என்பதைத் தென் கிழக்கு ஆசியா நமக்குக் கற்றுக் கொடுத்தது. எனவே பொருளாதார நிபுணர்கள் இன்னும் சிறப்பான மாற்றுத் திட்டங்களை உருவாக்கினார்கள். அன்னிய நிதியுதவி நிறுவனங்களும், அவற்றிற்குச் சேவை புரியும் ஒப்பந்தக்காரர்களும் இந்த மாற்றுத் திட்டத்தைத் திறம்பட நடைமுறைப்படுத்தினார்கள்.

உலகம் முழுவதுமுள்ள நாடுகளில் அமெரிக்க நிறுவனங்களுக்காகப் பணியாற்றி வரும் ஆண், பெண்கள் அனைவருமே அதிகாரப் பூர்வமாகப் பொருளாதார அடியாட்களின் வலைப்பின்னலில் அங்கமாக இல்லையென்ற போதிலும், அவர்கள் அத்தனை பேருமே கற்பனைக்கே எட்டாத அளவிற்குப் படுநாசம் விளைவிக்கக்கூடிய செயல்களில் ஈடுபட்டிருந்தார்கள். மெய்ன்-னில் வேலை செய்து வந்த பொறியியலாளர்களும் மற்ற ஊழியர்களும் தங்கள் செயல்களின் பின் விளைவுகள் குறித்து எதுவும் அறியாதவர்களாகவே இருந்தார்கள். அமெரிக்கப் பன்னாட்டு நிறுவனங்கள் தங்கள் உதிரி பாகங்களுக்காக மற்ற நாடுகளில் அமைந்துள்ள ஆலைகள் மக்களின் குருதியையே உறிஞ்சி எடுப்பதை இந்த ஊழியர்கள் கொஞ்சம்கூட உணர்ந்து கொள்ளவில்லை. மனிதனைச் சக்கையாகப் பிழிந்தெடுக்கும் இந்தத் தொழிற்சாலைகள் மக்களை வறுமையிலிருந்து மீட்க உதவுகின்றன என்றே எண்ணிக் கொண்டிருந்தார்கள். இந்தத் தொழிற்சாலைகளில் ஏழை மக்கள் மத்திய காலத்தில் அமெரிக்காவில் இருந்த அடிமைகளைப் போலவே நடத்தப்பட்டு வருவதை அவர்கள் ஒருபோதும் ஒப்புக்கொள்வேதயில்லை. அதேபோல இந்தச் தொழிற்சாலைகளில் பணிபு-ரிந்துவரும் தொழிலாளர்களும் ஐரோப்பாவின் இருட்குகைகளிலோ, ஆப்பிரிக்கக் காடுகளிலோ வாழ்பவர்களை விடத் தாங்கள் நல்ல நிலையில் இருப்பதாகவும், நாகரிகம் அடைந்துள்ளதாகவும் நம்ப வைக்கப்பட்டுள்ளார்கள்.

மெய்ன் - இல் தொடர்ந்து இருப்பதா அல்லது வெளியேறி விடுவதா என்ற பெரிய மனப் போராட்டத்தில் நான் சிக்கிக் கொண்டேன். என்

மனசாட்சி நான் வெளியேறுவதையே விரும்பியது என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை. ஆனால் வணிகப் பள்ளியில் பயிற்சி பெற்ற என் இன்னொரு பக்கம் வெளியேறுவதைக் கடுமையாக எதிர்த்தது. என் சொந்தப் பேரரசு விரிவடைந்து வந்தது. புதுப் புது நாடுகளும், அமைச்சகங்களும் என் பங்குதாரர்களானதோடு, என் ஊழியர்களின் எண்ணிக்கையும் தொடர்ந்து உயர்ந்து வந்தது. பண போதையுடன் அதிகாரம் அளித்த மயக்கமும் சேர்ந்து கொண்டது. ஒருமுறை இதற்குள் நுழைந்துவிட்டால் பின் இங்கிருந்து வெளியேறவே முடியாது என்ற கிளேடினின் எச்சரிக்கையை அடிக்கடி நினைவுபடுத்திக் கொண்டேன்.

பவுலா இந்த விஷயத்தை அலட்சியப்படுத்தினாள். “அவளுக்கு என்ன தெரியும்?’’

பல விஷயங்களில் கிளேடின் கூறியது சரியாக இருந்திருக்கிறது என்பதை நான் சுட்டிக் காட்டினேன்.

“அதெல்லாம் முன்பு. இப்போது காலம் மாறிவிட்டது. எப்படியிருந்தாலும் உனக்குப் புதிதாக என்ன பிரச்சனை வந்துவிட முடியும்? ஏற்கனவே உன் மனசாட்சி உன்னை உறுத்திக் கொண்டிருக்கிறது. நீ சந்தோஷமாகவே இல்லை. இதைவிடப் பெரிய நெருக்கடியை மற்றவர்களோ, கிளேடினோ எப்படி ஏற்படுத்திவிட முடியும்?’’

இது பவுலா அடிக்கடி பாடும் பல்லவிதான். நானும் அதை மறுக்கவில்லை. வேதனையையும் குற்ற உணர்ச்சியையும் போக்கும் வல்லமை பணத்திற்கும் அதிகாரத்திற்கும் இல்லை என்று எனக்கு நானே கூறிக்கொண்டேன். பவுலாவிடம் இதனைச் சொல்லவும் செய்தேன். மெய்ன் - ல் பங்குதாரனான பிறகு நான் பணக்காரனாகிவிட்டேன். இனிமேலும் இதிலேயே தொடர்ந்தால் எப்போதுமே வெளியேற முடியாத நிலை வந்துவிடும் என்பதும் எனக்குத் தெளிவாகத் தெரிந்தது.

ஒரு நாள் கார்தே ஜீனாவின் கடற்கரையிலிருந்த ஒரு பழைய ஸ்பானிஷ் கோட்டைக்கு அருகே நானும், பவுலாவும் உலாவிக் கொண்டிருந்தோம். கடற்கொள்ளைக்காரர்களின் எண்ணற்ற தாக்குதல்களைத் தாங்கி நின்றது இந்தக் கோட்டை. திடீரென்று பவுலா கேட்டாள்: “நீ வெளியேறிய பிறகு எதுவுமே பேசாமல் இருந்து விட்டால் என்ன?’’

“அதாவது … சும்மா அமைதியாக இருந்துவிடலாம் என்கிறாயா?’’ எனக்கு இந்த அணுகுமுறை முதலில் தோன்றவே இல்லை.

“அதேதான். அவர்கள் உன்னைத் தேடி வருவதற்கு நீ ஏன் வாய்ப்புக் கொடுக்க வேண்டும்? குட்டையைக் குழப்பாமல் அமைதியாக இருந்து விட்டால் உன்னைத் தொல்லைக்குட்படுத்த அவர்களுக்கு அவசியமே இருக்காது.’’

இது சரியான யோசனையாகத் தோன்றியது. இது ஏன் எனக்கு முன்பே தோன்றவில்லை என்று வியந்தேன். உண்மைகளை அம்பலப்படுத்தி நூல் எழுதுவது போன்ற எந்த வேலையிலும் ஈடுபடாமல் அமைதியாக வாழலாம். லட்சியப் போராளியாக இருப்பதற்குப் பதில் சாதாரண மனிதனாக வாழ்ந்து விடலாம். வாழ்க்கையை அனுபவிப்பதில் கவனம் செலுத்தலாம். பயணம் செய்வதில் உள்ள இன்பத்திற்காக மட்டுமே பயணம் செய்யலாம். ஒருவேளை பவுலா போன்ற ஒருத்தியோடு ஒரு குடும்பத்தைக்கூட ஆரம்பிக்கலாம். போதும் போதுமென்ற அளவிற்குப் பார்த்துவிட்டேன். இப்போது நான் விரும்புவதெல்லாம் இந்தப் பொறியிலிருந்து தப்பி வெளியேற வேண்டும் என்பதைத்தான்.

“கிளேடின் உனக்குக் கற்றுத் தந்த அத்தனையும் பொய்யும் புனைச் சுருட்டும்தான். உன் வாழ்க்கையே பொய்மைகளால் நிறைந்து போய் விட்டது.’’ பவுலாவின் முகத்தில் ஓர் இரக்கம் கலந்த புன்முறுவல் தோன்றியது. “உன் தகுதிக் குறிப்பு (resume) பற்றி ஓர் அறிவிப்பு செய்தித்தாள்களில் வெளிவந்திருக்கிறதே அது உனக்குத் தெரியுமா?’’

நான் பார்க்கவில்லை என்றேன்.

“கட்டாயம் அதைப் பார்’’ பவுலா தொடர்ந்தாள்: “நான் அதன் ஸ்பானிய மொழிபெயர்ப்பைப் பார்த்தேன். ஆங்கிலத்தில் வெளிவந்த அறிவிப்பின் சரியான மொழிபெயர்ப்பாக - ஒருவேளை - அது இருக்குமானால் உனக்கு அது சுவாரசியமானதாக இருக்கும் என்று நினைக்கிறேன்.’’

# 23

# பொய்மை நிறைந்த ஒரு தகுதிக் குறிப்பு

நான் கொலம்பியாவில் இருந்தபாது மெய்ன்-னின் தலைவர் பதவியிலிருந்து ஜான் ட்யூபெர் ஓய்வு பெற்று விட்டார் என்ற செய்தி கிடைத்தது. தலைமை நிர்வாகி மெக்ஷால் அந்த இடத்திற்கு புரூனோவை நியமித்தார். பாஸ்டனிலும் பாரன்குயில்லாவிலும் தொலைபேசிகள் ஓயாமல் அலறிக் கொண்டிருந்தன. எனக்கும்கூட சீக்கிரம் பதவி உயர்வு கிடைக்கும் என்று எல்லோரும் பேசிக்கொண்டார்கள். புரூனோவின் நம்பகமான ஊழியர்களில் நானும் ஒருவன்தானே.

இந்த மாற்றங்களும், வதந்திகளும் என் நிலையை மறுபரிசீலனை செய்வதற்கு ஊக்கமளித்தன. பவுலா கூறியபடி ஸ்பானிஷ் செய்தித்தாள்களில் வந்திருந்த என் தகுதிக் குறிப்பைப் (resume) பார்த்தபோது அதிர்ந்து போனேன். பாஸ்டன் திரும்பிய பிறகு இந்தத் தகுதிக் குறிப்பின் ஆங்கில மூலத்தையும் ‘மெய்ன் லைன்ஸ்’ என்ற வணிக இதழின் 1978-ஆம் ஆண்டு நவம்பர் பதிப்பையும் ஒப்பிட்டுப் பார்த்தேன். அந்தப் பதிப்பில் “நிபுணர்கள் மெய்ன் - னின் வாடிக்கையாளர்களுக்குப் புதிய சேவைகளை அளிக்கிறார்கள்” என்ற தலைப்பில் என்னைப் பற்றிய கட்டுரை வெளிவந்திருந்தது. (பக்-133, 134)

ஒரு காலத்தில் இந்தத் தகுதிக் குறிப்பையும், கட்டுரையையும் குறித்து நான் மிகுந்த கர்வம் கொண்டிருந்தேன். இப்போது அதே குறிப்பை பவுலாவின் பார்வையில் பார்க்கும்போது எனக்குள் கோபமும், விரக்தியும் பொங்கியது. இதிலுள்ள விஷயங்கள் ஒன்று அப்பட்டமான பொய்யாக இருக்க வேண்டும் அல்லது தெரிந்தே செய்த மோசடியாக இருக்க வேண்டும். இந்த ஆவணங்கள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை. உலகப் பேரரசை நோக்கிய நமது பாய்ச்சலை அப்பட்டமாகத் தோலுரித்துக் காட்டக் கூடியவை. வெளித்தோற்றத்தைக் காட்டி உண்மையை மறைக்கும் தந்திரத்தின் கையடக்கமான வடிவம்தான் இந்தத் தகுதிக் குறிப்பு. இந்த விளம்பரம் ஒரு விதத்தில் என் வாழ்க்கையைப் போலிருந்தது. உள்ளிருக்கும் போலித்தனத்தை மறைத்து நிற்கும் பளபளப்பான மேல்பூச்சு.

என் தகுதிக் குறிப்பில் சேர்க்கப்பட்டுள்ள விஷயங்களுக்கு நானும் பொறுப்பேற்றுக் கொள்ளத்தான் வேண்டும் என்பது மகிழ்ச்சியளிப்பதாக இல்லை. வழக்கமான நடைமுறைப்படி நான் தொடர்ந்து எனது அடிப்படைத் தகுதிகள், மேற்கொண்ட பணிகள், சேவை புரிந்த வாடிக்கையாளர்கள் பற்றிய தகுந்த தகவல்களைக்

கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்பட்டது. யாராவது ஒரு திட்ட மேலாளர் ஒரு குறிப்பிட்ட திட்டத்திற்கு என் பெயரைப் பயன்படுத்திக் கொள்ள விரும்பினால், அவருக்குத் தேவைப்படும் விதத்தில் என் தகுதிக் குறிப்பில் உள்ள விஷயங்களைப் பயன்படுத்திக் கொள்வார்.

உதாரணமாக மத்தியக் கிழக்கில் எனக்குள்ள அனுபவத்தைச் சிறப்பாக முன்னிறுத்த அவர் விரும்பலாம். அல்லது உலக வங்கி போன்ற சர்வதேச நிறுவனங்களின் முன் விஷயங்களை எடுத்துரைப்பதில் எனக்குள்ள திறமைகளை வெளிச்சம் போட்டுக் காட்ட விரும்பலாம். ஆனால் என் தகுதிக் குறிப்பை மாற்றியமைப்பதற்கு முன் என் அனுமதியைப் பெற வேண்டும். ஆனால் மற்ற மெய்ன் ஊழியர்களைப் போலவே நானும் பெரிய அளவிற்குப் பயணம் செய்து கொண்டே இருந்ததால் அடிக்கடி இந்த விதி மீறப்பட்டது. எனவே பவுலா குறிப்பிட்ட இந்தத் தகுதிக் குறிப்பு எனக்கு முற்றிலும் புதிதாக இருந்தது. அதிலுள்ள தகவல்கள் என் கோப்பிலிருந்து எடுக்கப்பட்டவைதான் என்றபோதிலும்.

முதல் பார்வைக்கு என் தகுதிக் குறிப்பு சாதாரணமானதாகத்தான் தோன்றும். அனுபவம் என்ற தலைப்பின் கீழ் அமெரிக்காவிலும் மத்தியக் கிழக்கிலும் நான் பெரிய திட்டங்களுக்குப் பொறுப்பாளனாக இருந்தேன் என்று அதில் கூறப்பட்டிருந்தது. மேலும் சலவைத் துணிக்கணக்கு போல நான் பங்குகொண்ட திட்டங்களின் பட்டியல் கொடுக்கப்பட்டிருந்தது. வளர்ச்சிக்கான திட்டங்களை வடிவமைத்தல், பொருளாதார வளர்ச்சி மற்றும் மின்சக்தியின் தேவை குறித்து முன்னறிவிப்புச் செய்தல்... என்று அந்தப் பட்டியல் நீண்டு கொண்டே சென்றது. இந்தப் பட்டியல் அமைதிப்படைத் தொண்டனாக ஈக்வடாரில் நான் இருந்த போது ஆற்றிய பணி பற்றிய குறிப்போடு முடிவடைந்திருந்தது. ஆனால் எந்த இடத்திலும் அமைதிப்படையின் பெயர் குறிப்பிடப்படவேயில்லை. இது நான் ஒரு கட்டுமான நிறுவனத்தின் மேலாளராக ஈக்வடாரில் இருந்தேன் என்பது போன்ற தோற்றத்தை ஏற்படுத்துகிறது. உண்மையில் ஈக்வடாரின் ஆண்டிஸ் மலைகளில் செங்கல் தயாரிக்கும் ஏழை விவசாயிகளின் சிறிய கூட்டுறவு நிறுவனத்திற்கு உதவி வந்த தன்னார்வத் தொண்டனாகவே நான் அப்போது பணியாற்றி வந்தேன் என்பது திட்டமிட்டு மறைக்கப்பட்டிருந்தது.

இதைத் தொடர்ந்து வாடிக்கையாளர்களின் நீண்ட பட்டியல். இதில் மறு நிர்மாணம் மற்றும் வளர்ச்சிக்கான சர்வதேச வங்கி (International Bank for Reconstructon and Developement உலக வங்கியின் அதிகாரபூர்வமான பெயர் இதுதான்) ஆசிய வளர்ச்சி வங்கி, குவைத் அரசாங்கம், ஈரானிய எரிசக்தி அமைச்சகம், சவூதி அரேபியாவில் உள்ள அரேபிய அமெரிக்க எண்ணெய் நிறுவனம், இன்ஸ்டிடுடோ டி ரிகர்சோஸ் ஹைடிராலிகோஸ்

வொய் எலெக்ட்ரிபிகேஷன், பெருஷான்உமும் லிஸ்ட்ரிக் நெகரா உள்ளிட்ட பல பெயர்கள் இடம் பெற்றிருந்தன. கடைசியாகக் குறிப்பிடப்பட்டிருந்த ஒரு பெயர்தான் என் கவனத்தைக் கவர்ந்தது. அமெரிக்கக் கருவூலத் துறை, சவூதி அரேபிய முடியரசு! இது என் கோப்பில் இடம் பெற்றிருந்தாலும் வெளிப்படையாகச் சொல்லப்பட்டிருந்தது எனக்குத் திகைப்பளித்தது.

தகுதிக் குறிப்பை ஒரு நிமிடம் ஒத்தி வைத்துவிட்டு ‘மெய்ன் - லைன்ஸ்’ கட்டுரைக்குத் திரும்பினேன். அதன் ஆசிரியருடனான எனது பேட்டி நினைவில் பசுமையாகப் பதிந்திருந்தது. மிகுந்த திறமையும், நல்லெண்ணமும் கொண்ட இளம் பெண் அவர். பேட்டியைப் பதிப்பிக்கும் முன் ஒப்புதலுக்காக என்னிடம் அதைக் கொடுத்தார். அதைப் படித்தபோது அவர் மேல் ஏற்பட்ட நன்றியுணர்ச்சி இன்னும் என் நினைவில் அழியாமல் பதிந்திருக்கிறது. என்னைப் பற்றி அப்படியொரு அற்புதமான சித்திரத்தைத் தீட்டியிருந்தார். நான் உடனடியாகப் பேட்டியையும், கட்டுரையையும் பதிப்பிக்க ஒப்புதல் அளித்துவிட்டேன். எனவே இந்தக் கட்டுரைக்கு நான் பொறுப்பேற்றுக் கொள்ளத்தான் வேண்டும். அந்தக் கட்டுரை இவ்வாறு தொடங்குகிறது:

‘அங்கே அமர்ந்துள்ள நபர்களைப் பார்த்தாலே போதும். அண்மையில் மெய்ன் நிறுவனத்தில் உருவாக்கப்பட்டுள்ள ‘பொருளாதார மற்றும் பகுதிவாரித் திட்டமிடுதல் துறையானது’ (Economics and Regional Planning) விரைந்து வளர்ந்து கொண்டிருக்கிறது என்பதை எளிதாக உணர்ந்து கொள்ளலாம். இந்தத் துறையை உருவாக்குவதில் பலரது பங்களிப்பு உள்ளது. ஆனால் தற்போது இதற்கு தலைமை வகித்து வரும் ஜான் பெர்க்கின்ஸின் முயற்சியே இத்துறை உருவாக்கப்படுவதற்கு அடிப்படைக் காரணமாகும்.

1971 - இல் தலைமை மின்திறன் முன்னறிவிப்பாளரின் உதவியாளராக ஜான் பணிக்கமர்த்தப்பட்டார். அந்த நேரத்தில் மெய்ன்-ல் வேலை செய்து வந்த ஒரு சில பொருளாதார நிபுணர்களில் ஜானும் ஒருவர். தன் முதல் பணிக்காக அவர் 11 பேர் கொண்ட குழுவில் ஒருவராக இந்தோனேஷியாவுக்கு அனுப்பப்பட்டார். அங்கே தேவைப்படும் மின்சாரத்தின் அளவு- குறித்து ஆய்வு செய்வதே அக்குழுவின் பணியாகும்.

இந்தக் கட்டுரை என் ஆரம்பகாலப் பணிகளைச் சுருக்கமாகத் தொகுத்திருந்தது. ஈக்வடாரில் நான் எப்படி “மூன்றாண்டுகள் கழித்தேன்’’ என்பதை விவரித்து விட்டுக் கீழ்க்கண்டவாறு அதன் ஆசிரியர் எழுதியிருந்தார்.

‘ஈக்வடாரின் பாட் (Paute) நகரத்தில் மெய்ன் செயல்படுத்தி வந்த நீர் மின்சாரத் திட்டத்தில் பணியாற்றி வந்த ஈனார் கிரீவ் - ஐ (மெய்ன்-னின் முன்னாள் ஊழியர்) ஜான் பெர்க்கின்ஸ் சந்தித்தது இந்தக் காலத்தில்தான். (ஈனார் தற்போது டக்ஸன் கேஸ் அன் எலெக்ட்ரிக்

நிறுவனத்தின் தலைவராக உள்ளார்). பின்னர் இவர்கள் இருவரும் நண்பர்களானார்கள். தொடர்ந்து அவர்களுக்கிடையில் ஏற்பட்டக் கடிதத் தொடர்பினால் ஜானுக்கு மெய்ன்-னில் ஒரு வேலை கிடைத்தது.

ஓர் ஆண்டுக்குப் பின்பு ஜான் தலைமை மின்திறன் முன்னறிவிப்பாளராகப் பதவியுயர்வு பெற்றார். உலக வங்கி போன்ற வாடிக்கையாளர்கள் மற்றும் நிறுவனங்கள் விதிக்கும் நிபந்தனைகள் அதிகரிக்க, அதிகரிக்க மெய்ன் - க்கு இன்னும் அதிகப் பொருளாதார நிபுணர்கள் தேவை என்பதை ஜான் உணர்ந்து கொண்டார்.'

இந்த இரண்டில் சொல்லப்பட்டுள்ள விஷயங்களும் அப்பட்டமான பொய்கள் அல்ல; இந்த இரண்டு ஆவணங்களுக்குமான ஆதாரங்கள் என் கோப்பில் இருந்தன. இருந்தபோதிலும் உண்மைகள் திரித்துப் புரட்டப்பட்டிருந்ததை இப்போது நான் கண்டுகொண்டேன். அதிகாரப் பூர்வமான ஆவணங்களுக்கு மிகவும் அதிக மரியாதை அளிக்கப்படும் ஒரு நாட்டில் இது இன்னும் மோசமானதாகும். அப்பட்டமான பொய்களை மறுப்பது எளிது. ஆனால் இந்த இரண்டு ஆவணங்களையும் மறுக்கவே முடியாது. அவை உண்மையின் மேல் பின்னப்பட்டுள்ளன என்பதாலும், உலக வங்கி போன்ற பன்னாட்டு நிறுவனங்களின் மதிப்பைப் பெற்ற ஒரு நிறுவனத்தால் இவை வெளியிடப்பட்டுள்ளன என்பதாலும் இவற்றை மறுக்கவே முடியாது

பத்திரிகையில் வந்த பேட்டியைப் போலல்லாமல் இந்தத் தகுதிக் குறிப்பு ஓர் அதிகாரபூர்வ ஆவணமாகும். அதில் பொறிக்கப்பட்டிருந்த மெய்ன்-னின் அடையாளச் சின்னம் பன்னாட்டு வணிக நிறுவனங்களிடையே பெரு மதிப்பைப் பெற்றதாகும். வழக்குரைஞர்கள், மருத்துவர்களின் அலுவலகங்களில் சட்டமிடப்பட்டுத் தொங்கி கொண்டிருக்கும் சான்றிதழ்களுக்குக் கிடைக்கும் அதே நம்பகத்தன்மை இந்தச் சின்னத்திற்கும் கிடைத்து வந்தது.

இந்த ஆவணங்கள் என்னை ஒரு திறமை வாய்ந்த பொருளாதார நிபுணனாக, உலகம் முழுவதும் சுற்றி வந்தவனாக, உலகை இன்னும் பண்பட்டதாக மாற்றும் நோக்கத்தோடு ஆய்வுகள் மேற்கொண்டவனாகச் சித்திரித்தன. இவற்றில் சொல்லப்பட்ட விஷயங்களில் தவறு எதுவும் இல்லை. சொல்லாமல் விடப்பட்டவற்றிலிருந்துதான் கேள்விகளே எழுகின்றன.

உதாரணமாக நான் தேசியப் பாதுகாப்பு நிறுவனத்தில் சேர்க்கப்பட்டது குறித்தும், ஈனார் கிரீவுக்கு ராணுவத்துடனும், தேசியப் பாதுகாப்பு நிறுவனத்துடனும் உள்ள தொடர்பு குறித்தும் இந்த ஆவணங்களில் எந்தக் குறிப்பும் இல்லை. பொருளாதார வளர்ச்சி பற்றிய மிகைப்படுத்தப்பட்ட முன்னறிவிப்புகளை வெளியிடும்படி நான் எந்த அளவுக்கு நிர்பந்திக்கப்படுகிறேன் என்பது பற்றியோ, இந்தோனேஷியா, பனாமா போன்ற நாடுகளை அவற்றால் திருப்பித்

தரவே முடியாத அளவிற்குக் கடன் சுமையில் மூழ்கடிப்பதே என் அடிப்படைப் பணி என்பது குறித்தோ இவற்றில் எந்தக் குறிப்பும் இல்லை. எனக்கு முன்பு இப்பதவியிலிருந்த ஹோவார்டு பார்க்கர் போன்ற என் முன்னோடிகளின் நோக்கம் குறித்து எந்தவொரு பாராட்டும் இல்லை. நான் வளைந்து கொடுத்ததனாலேயே இன்னும் இந்தப் பதவியில் இருக்கிறேன் என்ற உண்மை பேட்டியில் இடம் பெறவேயில்லை. எனக்கு மிகவும் குழப்பமூட்டியது என் தகுதிக் குறிப்பின் இறுதிப் பகுதியில் தரப்பட்டிருந்த ஒரு விஷயம்தான். என் வாடிக்கையாளர்களின் பட்டியலில் அமெரிக்காவின் கருவூலத்துறையும் சவூதி அரேபிய முடியரசும் இடம் பெற்றிருந்தன.

படிப்பவர்கள் இதைப்பற்றி என்ன நினைப்பார்கள் என்று நான் வியந்து போனேன். அமெரிக்காவின் கருவூலத் துறைக்கும், சவூதி அரேபியாவுக்கும் என்ன உறவு என்று நிச்சயம் கேட்கலாம். சிலர் இரண்டு தனித்தனி வாக்கியங்கள் தவறுதலாக ஒன்றிணைக்கப்பட்டு விட்டன என்று கூட நினைக்கலாம்,. அது ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காகவே சேர்க்கப்பட்டுள்ளது என்பதை வெளியிலிருந்து பார்க்கும் யாராலும் ஊகிக்கவே முடியாது. உலக வரலாற்றின் போக்கை மாற்றியமைத்த, இந்த நூற்றாண்டிலேயே உன்னதமான அந்த ஒப்பந்தத்தை உருவாக்கிய குழுவில் நானும் இருந்தேன் என்பதை என் துறையின் உள்வட்டத்தைச் சேர்ந்தவர்களுக்கு உணர்த்தவே இந்த வரிகள் சேர்க்கப்பட்டிருந்தன. சவூதி அரேபிய ஒப்பந்தத்தைப் பற்றிய செய்திகள் பத்திரிகைகளில் வரவே இல்லை என்பதால் இந்த முறை கையாளப்பட்டுள்ளது. அமெரிக்காவுக்குத் தடையில்லாமல் எண்ணெய் கிடைப்பதை உறுதி செய்ததும், சவூதி குடும்ப ஆட்சியைப் பாதுகாத்ததும், அதே நேரத்தில் ஒசாமா பின்லேடனுக்கு நிதியுதவி அளிக்கவும், இடி அமீனைப் போன்ற சர்வதேசக் கிரிமினல்களுக்குப் புகலிடம் அளிக்கவும் காரணமாக இருந்த அந்த ஒப்பந்தத்தை உருவாக்கிய குழுவில் நானும் இருந்தேன் என்பதை இந்த வரி, விஷயம் தெரிந்தவர்களுக்குக் கிசுகிசுப்பான தொனியில் அறிவித்தது. மெய்ன்-ன் தலைமைப் பொருளாதார நிபுணன், காரியங்களை வெற்றிகரமாக முடிக்கக் கூடியவன் என்று சான்றிதழ் அளித்தன இந்த வரிகள்.

‘மெய்ன் - லைன்ஸ்’ கட்டுரையின் ஆசிரியர் இறுதிப் பகுதியில் கூச்சத்தில் நெளிய வைக்கும் அளவிற்கு என்னைப் புகழ்ந்து தள்ளியிருந்தார்:

பொருளாதார மற்றும் பகுதிவாரித் திட்டமிடுதல் துறையானது அசுரவேகத்தில் வளர்ந்து வரும் இந்த நேரத்தில் தன் ஊழியர்களின் திறமைக்கு உரிய இடத்தைத் தருவதற்கு ஜான் தவறுவதில்லை. தன் ஊழியர்கள் ஒவ்வொருவரும் மிகுந்த திறமை வாய்ந்தவர்களாகவும், கடின உழைப்பாளிகளாகவும் அமைந்திருப்பது தன் அதிர்ஷ்டம் என்று

அவர் கூறுகிறார். தன் ஊழியர்களிடம் அவர் கொண்டிருக்கும் ஈடுபாடும், பற்றுதலும் தெளிவாகத் தெரிகிறது. அவரது இந்தக் குணம் மிகவும் பாராட்டுக்குரியதாகத் தோன்றுகிறது.

உண்மை என்னவென்றால் என்னை நான் எப்போதுமே ஒரு தகுதி வாய்ந்த பொருளாதார நிபுணன் என்று கருதிக் கொண்டதே கிடையாது. பாஸ்டன் பல்கலைக்கழகத்தில் வணிக நிர்வாக இயல் படித்தபோது மார்க்கெட்டிங்தான் என் முதன்மைப் பாடமாக இருந்தது. கணிதமும் புள்ளியியலும் எப்போதுமே எனக்கு ஒத்து வராத விஷயங்களாகவே இருந்து வந்தன. மிடில்பெரிக் கல்லூரியில் நான் படித்தது அமெரிக்க இலக்கியம். எழுதுவதுதான் எனக்கு இயல்பாக வந்தது. தற்போது எனக்குக் கிடைத்துள்ள இந்தத் தலைமைப் பொருளாதார நிபுணன் என்ற பட்டம் நிச்சயமாக அந்தத் துறையில் எனக்கு இருந்த திறமைகளுக்காக வழங்கப்பட்டதல்ல. மாறாக என் எஜானர்களின் விருப்பத்திற்கேற்ற விதத்தில் ஆய்வு முடிவுகளை மாற்றிக்கொள்ள நா ன் தயாராக இருந்ததன் காரணமாகவே எனக்கு இந்தப் பதவி வழங்கப்பட்டது. கூடவே மற்றவர்களைக் கவர்ந்திழுக்கும் விதத்தில் எழுதுவதில் எனக்கிருந்த திறமையும் இதற்கு ஒரு முக்கியமான காரணமாகும். அத்தோடு உண்மையிலேயே திறமை வாய்ந்த ஆட்களைப் பணிக்கு அமர்த்திக் கொள்ளும் அளவிற்கு எனக்குப் புத்திசாலித்தனம் இருந்தது. என்னிடம் வேலை செய்தவர்களில் பெரும்பாலோர் முதுகலை பட்டம் பெற்றவர்கள். டாக்டர் பட்டம் பெற்ற இரண்டு பேர்கூட என்னிடம் பணிபுரிந்து வந்தனர். எனவே “தன் ஊழியர்கள் மீது அவர் கொண்டுள்ள பற்றுதலும் ஈடுபாடும் மிகவும் பாராட்டுக்குரியதாகும்'' என்று அந்த ஆசிரியர் எழுதியது உண்மையில் அப்படியொன்றும் ஆச்சரியமான விஷயமல்ல.

இவற்றைப் போன்ற மேலும் பல ஆவணங்களை அடிக்கடி பார்வையில் படும்படி என் மேசை மேலேயே வைத்திருந்தேன். அடிக்கடி அவற்றை எடுத்துப் பார்க்கவும் செய்தேன். அலுவலகத்தில் இருக்கும்போது என் ஊழியர்கள் வேலையில் ஆழ்ந்திருக்கும் மேசைகளினூடே சிந்தனையில் ஆழ்ந்தவனாக நடந்து கொண்டிருப்பேன். அப்போதெல்லாம் இந்த ஆண்களையும் பெண்களையும் எப்படிப்பட்ட வேலையில் ஈடுபடுத்தி வருகிறேன் என்ற குற்ற உணர்ச்சி என்னை வாட்டி வதைக்கும். நான் செய்து வரும் காரியங்கள் ஏழைகளை மேலும் ஏழைகளாகவும், பணக்காரர்களை மேலும் பணக்காரர்களாகவும் ஆக்குவதற்குத்தானே உதவுகின்றன என்று எண்ணமிட்டபடி நிம்மதியில்லாமல் இலக்கின்றி அலைந்து கொண்டிருப்பேன். நானும், என் ஊழியர்களும் அற்புதமான உணவகங்களில் உணவருந்தி முதல் தரமான விடுதிகளில் உறங்கும்போதும் மூட்டை மூட்டையாகப் பணத்தைக் குவிக்கும்போதும் லட்சோபலட்சம் மக்கள் பட்டினி கிடக்கிறார்கள் என்ற எண்ணம் விடாமல் என்னைத் துரத்தி வரும்.

என்னிடம் பயிற்சி பெற்றவர்கள் பொருளாதார அடியாட்களாக மாறிவிட்டார்கள். அந்தப் பெருமை முழுவதும் எனக்கே உரியது. நான் பொருளாதார அடியாளாக இந்தத் துறையில் கால் வைத்த ஆரம்ப நாட்களைப் போலல்லாமல் நிறுவன - அதிகார வர்க்கம் இப்போது மிகவும் தேர்ச்சி பெற்றுவிட்டது. இன்னும் பேரழிவு விளைவிக்கக் கூடியதாக மாறிவிட்டது. என்னிடம் வேலை செய்பவர்கள் முற்றிலும் வேறுபட்ட அடுத்த தலைமுறையைச் சேர்ந்தவர்கள். தேசியப் பாதுகாப்பு நிறுவனத்தின் உண்மையறியும் கருவிகளோ, கிளேடின்களோ அவர்கள் வாழ்க்கையில் இல்லவே இல்லை. உலகப் பேரரசின் விரிவாக்கத்திற்காக அவர்களிடமிருந்து என்ன எதிர்பார்க்கப்படுகிறது என்று அவர்களுக்கு யாரும் கற்றுத் தருவதில்லை. சொல்லப் போனால் பொருளாதார அடியாள் என்ற சொல்லையே அவர்கள் கேள்விப்பட்டதில்லை. உள்ளே நுழைந்துவிட்டால் வெளியேறவே முடியாது என்று யாரும் அவர்களைப் பயமுறுத்துவதில்லை. அவர்கள் என்னைப் பார்த்தும், நான் பயன்படுத்தும் பரிசளிப்பும் நான் விரும்பும் வகையில் முழு ஆய்வுகளின் முடிவுகளை வழங்க வேண்டும் என்பதும் அவர்களுக்குத் தெரியும். அவர்களது சம்பளம், கிறிஸ்துமஸ் போனஸ், ஏன் வேலையேகூட என்னைத் திருப்திப்படுத்துவதை நம்பித்தான் இருந்தது.

என்னைப் பொறுத்தவரை அவர்களது சுமைகளைக் குறைக்க என்னால் என்னவெல்லாம் செய்ய முடியுமோ அவற்றை எல்லாம் செய்து வந்தேன். மிகப் பெரிய அளவிற்குக் கடன்கள் வழங்கப்படுவது தேசிய மொத்த வருமானத்தை அதிகரிக்கும், பெரும் முதலீடுகள் உலகை மேலும் முன்னேற்றும் ஊக்கமூட்டக்கூடிய முன்னறிவிப்புகள் மக்களுக்கு நன்மையே செய்யும் என்று அவர்களை நம்ப வைக்க ஆய்வுக் கட்டுரைகள், கருத்துரைகள் உள்ளிட்ட சாத்தியமான அனைத்து வழிகளையும் பயன்படுத்தினேன். மயக்குவது, மிரட்டுவது போன்ற முரட்டுத்தனமான அணுகுமுறைகளைக் கைவிட்டு விட்டு மென்மையாக மூளைச் சலவை செய்யும் புதிய அணுகுமுறை இந்தப் பத்தாண்டு காலத்தில் நடைமுறைக்கு வந்து விட்டிருந்தது. என் அலுவல் அறையில் வேலையில் முனைந்திருக்கும் இந்த ஆண்கள், பெண்கள்அனைவரும் பேரரசின் லட்சியங்களைச் செயல்படுத்துவதற்காகப் பொருளாதார அடியாட்களாக மாறப் போகிறவர்கள். உண்மையில் கிளேடின் எனக்கு அளித்த பயிற்சியைத்தான் நான் இவர்களுக்கு வழங்கினேன். ஆனால் என்னைப் போல் இல்லாமல் இவர்கள் முற்றிலும் இருட்டில் வைக்கப்பட்டுள்ளார்கள். பொய்மையையே உண்மை என்று நம்ப வைக்கப்பட்டுள்ளார்கள்.

பல இரவுகள் இவ்வாறு சிந்தித்துக் கொண்டும், புழுங்கிக் கொண்டும் தூங்காமல் விழித்திருப்பேன். எனது தகுதிக் குறிப்பைப் பற்றி பவுலா குறிப்பிட்டது ஒரு களேபரத்தை என்னுள் எற்படுத்திவிட்டிருந்தது. என்

ஊழியர்களின் அறியாமை குறித்து அடிக்கடி என்னுள் பொறாமை ஏற்பட்டது. நான் அவர்களை ஏமாற்றியதன் காரணமாக ஒருவிதத்தில் அவர்களை மனசாட்சியின் உறுத்தலிலிருந்து காப்பாற்றியிருக்கிறேன். தற்போது என்னைத் துரத்திவரும் நீதி, நேர்மை போன்ற விஷயங்களோடு போராட வேண்டிய அவசியம் அவர்களுக்கு இல்லாமல் போய்விட்டது.

இந்தக் காலகட்டத்தில் வணிகத்தில் நேர்மையைக் கடைப்பிடிப்பது பற்றியும், உண்மைக்கும், தோற்றத்திற்கும் உள்ள வேறுபாடு பற்றியும் இடைவிடாது சிந்தித்து வந்தேன். அப்போதெல்லாம் வரலாற்றின் தொடக்கம் முதல் மக்கள் ஒருவரை ஒருவர் ஏமாற்றிக் கொண்டுதான் இருந்திருக்கிறார்கள் என்று எனக்கு நானே கூறிக் கொள்வேன்-.. உருத் திரிக்கப்பட்ட உண்மைக்கும், மோசடி வேலைகளுக்கும் புராணங்களிலும், நாட்டுப்புறக் கதைகளிலும் ஏராளமான உதாரணங்கள் உள்ளன. மோசடியான கம்பளி வியாபாரிகள், கந்து வட்டிக்காரர்கள், மன்னன் உடுத்தியுள்ள ஆடை மன்னனின் கண்களுக்கு மட்டுமே தெரியாது என்று மன்னனை நம்ப வைத்த தையல்காரர்கள்…

மனித இயல்பே ஏமாற்றுவதுதான், மெய்ன் வெளியிட்டுள்ள என் தகுதிக் குறிப்பு-ம் அந்த வகையானதுதான் என்று என்னை நானே ஏமாற்றிக் கொள்ள முயன்றாலும் என் மனம் அதை ஏற்றுக்கொள்ள வில்லை. ஏமாற்றுவதைக்கூட இப்போது நாம் ஒரு புதிய மட்டத்திற்கு உயர்த்திவிட்டோம். அது என்னை அழிவில்தான் கொண்டு போய்விடும். அழிவு என்பது ஒழுக்கரீதியான வீழ்ச்சி என்பது மட்டுமல்ல. உண்மையிலேயே அது நம்மையும் நமது சொந்தப் பண்பாட்டையும் ஒழித்துக் கட்டிவிடும். விரைவில் இந்த அணுகுமுறையில் நாம் மாறுதல் ஏற்படுத்தாவிட்டால் இது நிச்சயம் நடக்கும்.

திட்டமிட்டுச் செயல்படும் குற்றக் கும்பல்கள் ஒரு நல்ல உதாரணம் என்று கூறலாம். மாஃபியா தலைவர்கள் பெரும்பாலும் தெருப் பொறுக்கிகளாகவே தங்கள் வாழ்க்கையைத் தொடங்குகிறார்கள். பின்பு மாசு மருவற்ற அற்புதமான ஆடைகளில் உலா வருகிறார்கள். சட்டப்பூர்வமான தொழில்களில் ஈடுபடுகிறார்கள். மேல்தட்டு வர்க்கத்தைச் சேர்ந்தவர் என்ற தோரணையோடு நடமாடுகிறார்கள். உள்ளூர்த் தொண்டு நிறுவனங்களை ஆதரிக்கிறார்கள். சமூகத்தில் பெரிதும் மதிக்கப்படுகிறார்கள். துன்பத்திலுள்ளவர்களுக்குப் பணம் கொடுத்து உதவுகிறார்கள். மெய்ன் தகுதிக் குறிப்பில் கண்ட ஜான் பெர்க்கின்ஸைப் போல் இந்த மாஃபியாத் தலைவர்கள் முன்மாதிரிக் குடிமக்களாகத் தோன்றுகிறார்கள். ஆனால் இத்தனை வெளிப்பூச்சுகளுக்கும் உள்ளே ரத்தம் தோய்ந்த உண்மை உருவம் மறைந்து கிடக்கிறது. கடன் வாங்கியவர்கள் அதைத் திருப்பித் தராவிட்டால் மாஃபியாக்களின் உண்மை முகம் வெளிப்படும்.

இருட்டிலிருக்கும் அடியாட்கள் வெளிச்சத்துக்கு வருவார்கள். அது சரி வராவிட்டால் குள்ள நரிகள் பேஸ்பால் மட்டைகளுடன் சுற்றி வளைக்கும். இறுதித் தீர்வாகத் துப்பாக்கிகள் நீட்டப்படும்.

தலைமைப் பொருளாதார நிபுணன் மற்றும் பொருளாதார, பகுதிவாரித் திட்டமிடுதல் துறையின் தலைவர் என்ற என் பட்டங்களை கம்பளி வியாபாரியின் எளிமையான மோசடியோடு ஒப்பிட்டு விட முடியாது. கம்பளி வியாபாரி குறித்து அவன் வாடிக்கையாளர்கள் எச்சரிக்கையாக இருக்க முடியும். எனது பணி வாடிக்கையாளரை நரித்தனமாக ஏமாற்றுவதல்ல. மாறாக உலகம் இதுவரை கண்டிராத, மிகவும் நுணுக்கமான, திறமை வாய்ந்த ஏகாதிபத்தியத்தை உருவாக்குவதே ஆகும். என்னிடம் வேலை செய்பவர்களுக்குப் பட்டங்கள் அளிக்கப்பட்டிருந்தன. நிதி ஆய்வாளர், சமூகவியலாளர், பொருளாதார நிபுணர், வழிகாட்டும் பொருளாதார நிபுணர்... இவற்றில் எந்தப் பட்டமும் அவர்கள் தங்கள், தங்கள் துறையில் பொருளாதார அடியாட்களாக உள்ளார்கள் என்பதையோ அவர்கள் உலகப் பேரரசின் நலன்களுக்குச் சேவை செய்து வருகிறார்கள் என்பதையோ சுட்டிக் காட்டுவதில்லை.

எங்களுக்குப் பின்னே ஒரு பெரும் மர்மம் புதைந்துள்ளதை இந்தப் பட்டங்கள் காட்டிவிடுவதில்லை. ஒவ்வொரு பன்னாட்டு நிறுவனத்திலும், அது காலணிகளை உற்பத்தி செய்து வந்தாலும் சரி, விளையாட்டுப் பொருட்களைத் தயாரித்து வந்தாலும் சரி, கனரக இயந்திரங்களை உருவாக்கி வந்தாலும் சரி அவையனைத்தும் தங்களுக்கென்று பொருளாதார அடியாட்களைக் கொண்டுள்ளன. பொருளாதார அடியாட்களின் படை அணிவகுத்துச் செல்லத் தொடங்கிவிட்டது. அது இந்த பூமி முழுவதும் மிக விரைவாகச் சுற்றி வளைத்து வருகிறது. அவர்கள் வணிகர்கள் போல் உடையணிந்து மரியாதைக்குரியவர்கள் ஆகிவிட்டார்கள். நியூயார்க், சிகாகோ, சான் பிரான்சிஸ்கோ, லண்டன் மற்றும் டோக்கியோவில் உள்ள நிறுவனங்களின் தலைமையகங்களிலிருந்து வரும் ஆண்களும், பெண்களும் ஒவ்வொரு கண்டத்திலும் ஊடுருவிப் பரவி வருகிறார்கள். அவர்கள் ஊழல் அரசியல்வாதிகளை நிறுவன - அதிகார வர்க்கத்தின் அடிமைகள் ஆக்குகிறார்கள். அவர்களைக் கொண்டு நாடு முழுவதற்கும் கடிவாளம் இடுகிறார்கள். மனிதனின் இரத்தத்தையே உறிஞ்சி எடுக்கும் கடின உழைப்புத் தொழிற்சாலைகளுக்குத் தங்களைத் தாங்களே விற்றுக் கொள்ளும்படி பாவப்பட்ட மக்களைத் தூண்டுகிறார்கள்.

என்னைப் பற்றிய கட்டுரையிலும், தகுதிக் குறிப்பிலும் சொல்லப்பட்ட விஷயங்களைவிட சொல்லப்படாதவை ஆழமான பொருள் கொண்டவை. அதில் மறைக்கப்பட்டுள்ளவை மர்மமான ஓர் உலகைச் சேர்ந்தவை. அழிவைக் கொண்டு வரக் கூடியவை.

படுமோசமான ஓர் அமைப்பு முறையோடு நம்மைக் கட்டிப் போடக் கூடியவை. இதைப் புரிந்து கொள்வது மன அமைதியைக் குலைக்கக் கூடியதுதான். சொல்லப்படாதவற்றைப் பார்க்க என்னைத் தூண்டியதன் மூலம் பவுலா என்னை வேறு பாதையில் அடியெடுத்து வைக்கத் தூண்டினாள். அது என் வாழ்க்கையையே அடியோடு மாற்ற இருந்தது.

# 24

# பெரும் எண்ணெய் நிறுவனங்களுடன் ஈக்வடாரின் தலைவர் நடத்திய போர்

கொலம்பியாவிலும், பனாமாவிலும் நான் வேலை செய்து வந்தபோது அடிக்கடி ஈக்வடாருக்குச் செல்ல எனக்கு வாய்ப்புகள் கிடைத்தன. ஈக்வடார் எப்போதுமே எனக்கு இன்னொரு சொந்த வீடு போலத்தான் இருந்தது. அந்நாடு நீண்ட காலமாக வலதுசாரிக் குழுக்கள் மற்றும் சர்வாதிகாரிகளால் ஆளப்பட்டு வந்தது. இந்தக் குழுக்களும், சர்வாதிகரிகளும் தங்கள் தாய்நாட்டை விட அமெரிக்காவின் நலன்களையே பெரிதாக மதித்தவர்கள். நிறுவன - அதிகாரவர்க்கத்தின் அப்பட்டமான அடிவருடிகளாகச் செயல்பட்டவர்கள். இந்த ஆட்சியாளர்களின் காலத்தில் மக்கள் மீள முடியாத துன்பத்திலும் வேதனையிலும் மூழ்கிக் கிடந்தனர். வாழைப்பழக் குடியரசு என்ற சொல்லுக்கு இலக்கணமாகத் திகழ்ந்தது ஈக்வடார்.

ஈக்வடாரின் அமேசான் வடிநிலத்தில் இருக்கும் எண்ணெய் வளத்தை பெரிய அளவுக்குச் சுரண்டும் பணி அறுபதுகளின் இறுதியில் தொடங்கியது. இந்த எண்ணெய் வளத்தால் கிடைக்க இருந்த செல்வத்தை நம்பி ஆட்சியாளர்கள் வரன்முறையில்லாமல் கடன் வாங்கினார்கள். இந்த நாட்டை ஆண்டு வந்த சில குடும்பங்கள் எண்ணெயால் வருமானம் வரும் என்ற உறுதிமொழியை நம்பி நாட்டை அன்னியக் கடன் என்ற மீள முடியாத புதைகுழியில் தள்ளிவிட்டன. ஈக்வடார் சர்வதேச வங்கிகளின் கைப்பாவையாகவே மாறிவிட்டது. சாலைகளும், தொழில் பூங்காக்களும், நீர் மின்சார அணைகளும், மற்ற ஆற்றல் வளத்திற்கான திட்டங்களும் நாடு முழுவதும் காளான்கள் போல முளைத்தெழுந்தன. பன்னாட்டு நிறுவனங்கள் மீண்டும் ஒருமுறை கொள்ளை லாபம் அடைந்தன.

ஆண்டிஸ் மலைகளில் அமைந்திருக்கும் இந்த நாட்டின் அத்தனை தலைவர்களும் நிறுவன - அதிகார வர்க்கத்தின் கைப்பாவைகளாக இருக்க ஒரே ஒருவர் மட்டுமே விதிவிலக்காக இருந்தார். அவர்தான் ஜெய்மே ரோல்டோஸ். அவர் ஒரு கல்லூரிப் பேராசிரியரும் வழக்குரைஞரும் ஆவார். நாற்பது வயதைக் கூட எட்டாத இளம் தலைவரான அவரின் புகழ் விரைவாகப் பரவி வந்தது. அவரை நான்

பலமுறை சந்தித்திருக்கிறேன். அவர் கவர்ச்சிகரமானவர். இனிமையானவர். ஒருமுறை நான் உத்வேகமடைந்து எப்போது கேட்டாலும் உடனே குய்டோவிற்குப் பறந்து வந்து இலவச ஆலோசனை அளிப்பதாக அவருக்கு வாக்களித்திருந்தேன். இதை ஓரளவு விளையாட்டாகத்தான் கூறினேன் என்றாலும் விடுமுறை நாட்களில் என் வாக்கை மகிழ்வுடன் நிறைவேற்றியிருப்பேன். எனக்கு அவரைப் பிடித்திருந்தது. நான் எப்போதும் அவரது நாட்டுக்கு வர வாய்ப்புகளை எதிர்நோக்கியிருப்பதாக உடனே அவரிடம் சொல்லிவிட்டேன். அவர் சிரித்தபடியே எண்ணெய் விலை தொடர்பாக எப்போதெல்லாம் பேச்சு வார்த்தை நடத்த வேண்டியிருக்கிறதோ அப்போதெல்லாம் நேராகத் தன்னை வந்து சந்திக்கலாம் என்று எனக்கு உறுதியளித்தார்.

அவர் தன் நாட்டின் மீது பற்றுதல் கொண்டவராகவும், மக்கள் நலனில் அக்கறை கொண்டவராகவும் இருந்தார். இந்தக் குணங்களின் காரணமாகவே அவர் நாட்டு மக்களால் பெரிதும் மதிக்கப்பட்டு வந்தார். 1978-இல் அவர் நாட்டின் குடியரசுத் தலைவர் பதவிக்குப் போட்டியிட்டபோது தன் நாட்டு மக்களின் கவனத்தைக் கவர்ந்ததோடு மட்டுமல்லாமல், அன்னியச் சக்திகளின் இரும்புப் பிடியில் சிக்கித் தவித்து வந்த மக்கள் அனைவரும் விதிவிலக்கில்லாமல் அவர் மேல் ஆர்வம் காட்டினார்கள். ரோல்டோஸ், எதிரிகளின் வலிமையைக் கண்டு அஞ்சாத ஓர் அரிதான அரசியல்வாதி. அவர் எண்ணெய் நிறுவனங்களையும், அவற்றை ஆதரித்து வந்த அரசியல் அமைப்பையும் நேரடியாகத் தாக்கத் தொடங்கினார்.

சம்மர் இன்ஸ்டிடியூட் ஆப் லிங்குஸ்டிக்ஸ் (Summer Institute of Linguistics) என்ற அமெரிக்க இவாஞ்சலிக்கல் அமைப்பு எண்ணெய் நிறுவனங்களோடு ரகசியக்கூட்டு வைத்துள்ளது என்று ரோல்டோஸ் குற்றம் சாட்டினார். எஸ்.ஐ.எல் என்று சுருக்கமாக அழைக்கப்பட்ட இந்த மிஷனரிகள், பழங்குடி மொழிகளைப் படித்தல், பதிவு செய்தல், ஆய்வு செய்தல் போன்ற வேலைகளில் ஈடுபடுவது என்ற போர்வையில் ஈக்வடாரிலும், மற்ற நாடுகளிலும் நுழைந்தனர். நான் ஈக்வடாரில் அமைதிப்படையில் வேலை செய்து வந்த போதுதான் இந்த ஊடுருவலும் நிகழ்ந்தது.

இந்த எஸ்.ஐ.எல். அமைப்பு அமேசான் வடிநிலப் பகுதியில் எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்ட ஆரம்ப ஆண்டுகளில் ஹுவாரானி பழங்குடிகளிடம் வேலை செய்து வந்தது. புவியியல் நிபுணர்கள் (Seismologists) தங்கள் எண்ணெய் நிறுவனங்களின் தலைமையகங்களுக்கு ஒரு குறிப்பிட்ட பகுதியில் எண்ணெய் இருப்பதற்கான வாய்ப்புகள் உள்ளன என்று செய்தி அனுப்பிவிட்டால் போதும், எஸ்.ஐ.எல். அமைப்பைச் சேர்ந்தவர்கள் அந்தப் பகுதியில் வாழும் பழங்குடி மக்களிடம் சென்று அந்த நிலங்களை விட்டு விட்டுத் தங்கள்

அமைப்பிற்குச் சொந்தமான இடங்களுக்கு வந்து விடும்படி கூறுவார்கள். அங்கே பழங்குடி மக்களுக்கு இலவச உணவும், உடைகளும், சிகிச்சையும், இருப்பிடமும் அளிக்கப்படும் என்று ஆசை காட்டுவார்கள். ஒரே நிபந்தனை என்னவென்றால், பழங்குடிகள் தங்கள் நிலங்களை எண்ணெய் நிறுவனங்களுக்கு விட்டுத் தர வேண்டும்.

பழங்குடி மக்களை அவர்கள் நிலங்களிலிருந்து வெளியேற்ற எஸ்.ஐ.எல். மிஷனரிகள் கையாண்டு வந்த மர்மமான வழிமுறைகள் பற்றி ஏராளமான வதந்திகள் பரவின. மிகவும் பிரபலமான ஒரு கதை என்னவென்றால் முதலில் மிஷனரிகள் மக்களுக்கு பேதிமருந்து தடவப்பட்ட உணவை இலவசமாக வழங்குவார்கள். பின்பு- பேதியைக் கட்டுப்படுத்த மருந்தும் கொடுப்பார்கள். ஹுவாரானி பழங்குடி மக்கள் வாழ்ந்து வந்த பகுதி முழுவதும் எஸ்.ஐ.எல். மிஷனரிகள், கண்ணுக்குத் தெரியாத விதத்தில் சிறிய ரேடியோ டிரான்ஸ்மிட்டர்கள் பொருத்தப்பட்ட உணவுப் பொட்டலங்களை விமானங்களிலிருந்து வீசினர். ஷெல் நகரத்தில் இருக்கும் ராணுவத் தளத்தில் உள்ள அமெரிக்க வீரர்கள் இந்த டிரான்ஸ்மிட்டர்கள் வெளியிடும் சிக்னல்களைக் கண்டறிய உயர்தரமான தொலைத்தொடர்புச் சாதனங்களோடு எப்போதும் தயார் நிலையில் காத்திருப்பார்கள். எப்போதெல்லாம் பழங்குடியினத்தைச் சேர்ந்த யாராவது ஒருவர் நோய்வாய்ப்பட்டாலோ, விஷப் பாம்பால் கடிபட்டாலோ எஸ்.ஐ.எல். பிரதிநிதி தேவையான மருந்துகளுடன் சரியான நேரத்துக்கு வந்து சேர்வார். பெரும்பாலும் எண்ணெய் நிறுவனங்களுக்குச் சொந்தமான ஹெலிகாப்டர்களில்!

எண்ணெய் தேடும் பணி நடைபெற்று வந்த ஆரம்ப நாட்களில் ஐந்து எஸ்.ஐ.எல். மத போதகர்கள் (மிஷனரிகள்) ஹுவாரானி ஈட்டிகளால் குத்தப்பட்டுப் பிணமாகக் கிடப்பது கண்டுபிடிக்கப்பட்டது. 'இங்கே வராதே' என்று எஸ்.ஐ.எல் - க்குத் தெரிவிக்கத்தான் ஹுவாரானிகள் இவ்வாறு செய்ததாக அறிவித்தார்கள். ஹுவாரானி பழங்குடியினம் விடுத்த எச்சரிக்கை அலட்சியப்படுத்தப்பட்டது. உண்மையில் அந்தத் தாக்குதலினால் மோசமான பின்விளைவுகளே ஏற்பட்டன. கொல்லப்பட்டவர்களில் ஒருவருடைய சகோதரியான ராக்கோல் செயின்ட் அமெரிக்கா முழுவதும் சுற்றுப்பயணம் மேற்கொண்டும், தனியார் தொலைக்காட்சிகளில் தோன்றியும் 'காட்டுமிராண்டிகளை' பண்பட்டவர்களாக்க உதவி வரும் எஸ்.ஐ-.எல்.க்கும் எண்ணெய் நிறுவனங்களுக்கும் பணமும், ஆதரவும் திரட்டினார்.

எஸ்.ஐ.எல்.க்கு ராக்ஃபெல்லர் தொண்டு நிறுவனங்களிலிருந்து நிதி கிடைத்து வந்தது. இது பழங்குடி மக்களின் நிலங்களைத் திருடவும், அவற்றில் நிறுவனங்களை நிறுவவும் உருவாக்கப்பட்ட ஒரு முன்னணிப் படைதான் எஸ்.ஐ.எல். என்பதை நிரூபிக்கிறது என்றார் ஜெய்மே ரோல்டோஸ். பிதாமகனான ராக்ஃபெல்லர் ஸ்டாண்டர்டு

ஆயிலை உருவாக்கினார். அது பின்பு செவ்ரோன், எக்ஸோன் மற்றும் மோபில் என்று பல பெரிய நிறுவனங்களாகப் பிரிந்தன.[1]

டோரிஜோஸின் பாதையில் ரோல்டோஸும் நடந்து செல்வதாக எனக்குத் தோன்றியது. இந்த இருவரும் உலகிலேயே பலம் வாய்ந்த மிகப்பெரிய வல்லரசை எதிர்த்து நிற்கின்றனர். டோரிஜோஸ் தங்கள் கால்வாயைத் திரும்பப் பெற விரும்பினார். ரோல்டோஸின் நாட்டுப் பற்று உலகின் சக்தி வாய்ந்த எண்ணெய் நிறுவனங்களை அச்சுறுத்தியது. டோரிஜோஸைப் போலவே ரோல்டோஸும் அன்னியத் தலையீட்டுக்கு எதிராகவும் முழுமையான தன்னாட்சிக்காகவும் போராடி வந்தார். அரசியல் வல்லுநர்கள் ரோல்டோஸை பெரிய நிறுவனங்களும், வாஷிங்டனும் சகித்துக் கொள்ளவே மாட்டார்கள் என்றும், ஒருவேளை அவர் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டால் குவாதமாலாவின் அர்பென்ஸ்க்கும், சிலியின் அலெண்டேவுக்கும் ஏற்பட்ட கதியே அவருக்கும் ஏற்படும் என்றும் தீர்க்கதரிசனம் கூறினார்கள்.

ஆனால் இந்த இரு தலைவர்களும் இணைந்து லத்தீன் அமெரிக்காவின் அரசியலில் ஒரு புதிய பாதையை அமைப்பார்கள் என்றும், இந்தப் புதிய போக்கு உலக நாடுகள் அனைத்திலும் பெரும் மாற்றங்களுக்கு வித்திடும் என்றும் எனக்குத் தோன்றியது. இவர்கள் இருவரும் காஸ்ட்ரோக்களோ, கடாஃபிகளோ அல்ல. இவர்கள் ரஷ்யாவையோ சீனாவையோ சார்ந்திருக்கவில்லை. அல்லது அலெண்டேவைப் போல் சர்வதேச சோஷலிச சமூகத்தைச் சார்ந்திருக்கவில்லை. இவர்கள் புகழ் பெற்றவர்கள். அறிவுக்கூர்மை மிக்கவர்கள். மக்களைக் கவர்ந்திழுக்கக் கூடியவர்கள். கோட்பாட்டைவிட யதார்த்தத்தை அதிகம் நம்பியவர்கள். தேசியவாதிகள். அதே நேரத்தில் அமெரிக்க - எதிர்ப்பாளர்கள் அல்லர். பெரும் தொழில்நிறுவனங்கள், சர்வதேச வங்கிகள், இரகசியமாக ஒத்துழைக்கும் அரசாங்கங்கள் என்ற மூன்று தூண்களின் மீது கட்டப்பட்டதுதான் நிறுவன - அதிகார வர்க்கம் ஆகும். இதில் டோரிஜோஸும், ரோல்டோஸும் இரகசியமாக ஒத்துழைக்கும் அரசாங்கம் என்ற தூணை நீக்குவதற்கான சாத்தியம் உள்ளதென்று நடைமுறையில் நிரூபித்துக் காட்டியவர்கள்.

ரோல்டோஸின் ஹைட்ரோ கார்பன் கொள்கையே அவருக்குப் பெரும் செல்வாக்கைப் பெற்றுத் தந்தது. பெட்ரோலியமே ஈக்வடாரின் மாபெரும் இயற்கை வளம் என்பதையும், அதன் எதிர்காலப் பயன்பாடானது பெரும்பான்மை மக்களுக்குப் பயனளிக்கும் விதத்தில் அமைய வேண்டும் என்பதையும் இக்கொள்கை அடிப்படையாகக் கொண்டிருந்தது. ஏழைகளையும், ஆதரவற்றோரையும் அரவணைப்பது அரசின் கடமை என்பதில் ரோல்டோஸ் உறுதியான நம்பிக்கை கொண்டிருந்தார். சமூக மாற்றத்திற்கான வாகனமாக இந்த ஹைட்ரோ

கார்பன் கொள்கையைப் பயன்படுத்த முடியும் என்பதில் அவர் நம்பிக்கை கொண்டிருந்தார். அதன் காரணமாகவே அவரை ஆபத்துகள் சூழ்ந்திருந்தன. தனது கொள்கைகளில் நம்பிக்கை கொண்டிருந்தபோதிலும், குறைந்த பட்சம் ஈக்வடாரில் உள்ள சக்தி வாய்ந்த குடும்பங்களில் ஒரு சிலவற்றின் ஆதரவாவது இல்லாமல் தான் தேர்தலில் வெற்றி பெற முடியாது என்பதையும் ரோல்டோஸ் அறிந்திருந்தார். ஒருவேளை வெற்றியடைந்தாலும் கூட அவர்கள் ஆதரவு இல்லாமல் இந்தத் திட்டங்களை நிறைவேற்றுவது என்பதை நினைத்தே பார்க்க முடியாது.

இந்த இக்கட்டான நேரத்தில் கார்ட்டர் வெள்ளை மாளிகையில் அமர்ந்திருந்தது தனிப்பட்ட முறையில் எனக்கு நிம்மதியளித்தது. டெக்ஸகோ மற்றும் ஏனைய எண்ணெய் நிறுவனங்களிடமிருந்து அழுத்தங்கள் வந்தபோதிலும் வாஷிங்டன் ஒதுங்கியே நின்றது. குடியரசுக்கட்சியாக இருந்தாலும், ஜனநாயகக் கட்சியாக இருந்தாலும் மற்ற நிர்வாகங்களில் இப்படி இருக்காது என்று நான் அறிந்திருந்தேன்.

வேறெந்த விஷயத்தையும் விட ஹைட்ரோ கார்பன் கொள்கையே ரோல்டோஸை வெற்றி பெறச் செய்தது. நீண்ட சர்வாதிகாரிகளின் வரிசைக்குப் பின்பு முதன்முதலாக மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட குடியரசுத் தலைவர் அவர்தான். 1979, ஆகஸ்ட் 10-ஆம் தேதி தன் பதவியேற்பு விழா உரையில் இதன் அடிப்படையைச் சுட்டிக் காட்டினார்:

நம் நாட்டின் எரிசக்தி வளங்களைப் பாதுகாக்க உறுதியான நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். நாடு பலதரப்பட்ட பொருட்களை ஏற்றுமதி செய்வதைத் தொடர வேண்டும். அதே நேரத்தில் தன் பொருளாதாரச் சுதந்திரத்தையும் இழந்து விடக் கூடாது… நமது முடிவுகள் நாட்டின் நலன்களையும், விட்டுக் கொடுக்கவே முடியாத தன்னாட்சி உரிமைகளைப் பாதுகாப்பதையுமே அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும்.[2]

பதவி ஏற்றுக்கொண்ட உடனேயே ரோல்டோஸ், டெக்ஸகோவின் மீது தன் கவனம் முழுவதையும் குவிக்க வேண்டியிருந்தது. இதற்குள் இந்த எண்ணெய் விளையாட்டில் அது முக்கியமான சக்தியாக உருவெடுத்திருந்ததே இதற்குக் காரணம். அசுர பலம் வாய்ந்த இந்த நிறுவனம் புதிய குடியரசுத் தலைவரைக் கொஞ்சம்கூட நம்பவில்லை. பழைய சட்ட திட்டங்களை மாற்றக்கூடிய புதிய வகைமாதிரிகள் எதையும் அது வரவேற்கத் தயாராக இல்லை. இதுபோன்ற கொள்கைகளை நடைமுறைப்படுத்துவதை அனுமதித்தால் இந்த நாடு மற்றவற்றிற்கு ஒரு முன்னுதாரணம் ஆகிவிடும் என்பதை அது நன்கறிந்திருந்தது.

ரோல்டோஸின் முக்கிய ஆலோசகரான ஜோஸ் கர்வ ஜல் நிகழ்த்திய உரை புதிய அரசின் பார்வையைச் சுருக்கமாகத் தந்தது:

ஒரு பங்குதாரர் (டெக்ஸகோ) பிரச்சனைகளைச் சந்திக்க விரும்பவில்லை என்றால், எண்ணெய்க் கண்டுபிடிப்புக்கு முதலீடு செய்ய விரும்பவில்லை என்றால், அல்லது எண்ணெய் இருக்கும் பகுதிகளைப் பயன்படுத்திக் கொள்ள விரும்பவில்லை என்றால் இவற்றைச் செய்ய மற்ற பங்குதாரருக்கு உரிமை உண்டு. நிறுவனம் முழுவதையும் சொந்தமாக்கிக் கொள்ளவும் உரிமை உண்டு.

அன்னிய நிறுவனங்களுடனான நமது உறவுகள் நியாயமானவையாக இருக்க வேண்டும் என்பதில் நாம் நம்பிக்கை கொண்டிருக்கிறோம். இந்தப் போராட்டத்தில் நாம் உறுதியாக ஊன்றி நிற்க வேண்டும். எல்லாவிதமான அழுத்தங்களுக்கும், நெருக்குதல்களுக்கும் நாம் தயாராக இருக்க வேண்டும். அதே நேரத்தில் இந்த அன்னியர்களோடு பேச்சுவார்த்தை நடத்துவதில் நாம் ஒருபோதும் பயத்தையோ, தாழ்வு மனப்பான்மையையோ வெளிப்படுத்தக் கூடாது.[3]

1980-ஆம் ஆண்டு புத்தாண்டு தினத்தன்று நான் ஒரு உறுதி எடுத்துக்கொண்டேன். இன்னும் 28 நாட்களில் எனக்கு 35 வயது ஆகிவிடும். அடுத்த ஆண்டு என் வாழ்க்கையின் போக்கை முற்றிலும் மாற்றி விட வேண்டும் என்றும், நவீன கால வரலாற்று நாயகர்களான ரோல்டோஸையும், டோரிஜோஸையும் அடியொற்றி என் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும் என்றும் தீர்மானித்தேன்.

இதற்குச் சில மாதங்கள் முன்பு அதிர்ச்சியூட்டக்கூடிய ஒரு சம்பவம் நிகழ்ந்தது. லாப நோக்கில் பார்த்தால் புருனோதான் மெய்ன்னின் வரலாற்றிலேயே மிகவும் வெற்றிகரமான தலைவர். மெக்ஹால் எந்த முன்னறிவிப்பும் இல்லாமல் திடீரென்று அவரை வேலையை விட்டு நீக்கிவிட்டார்.

[1] எஸ்.ஐ.எல்.-ன் வரலாறு, நடவடிக்கைகள் மற்றும் எண்ணெய் நிறுவனங்கள் மற்றும் ராக்ஃஃபெல்லருடனான தொடர்புகள் பற்றிய விரிவான விவரங்களுக்குப் பார்க்க: Gerard Colby and Charlotte Dennet, The Will Be Done, The Conquest of the Amazon Nelson Rockefeller and Evangelism in the Age of Oil (New York: HarperCollins, 1995); Joe Kane, Savages (New York: Alfred A.Knopf, 1995) (for information on Rachel Saint, pp 85, 156, 227).

[2] John D. Martz, Politics and Petroleum in Ecuador (New Brunswick and Oxford: Transaction Books, 1987), p 272.

[3] Jose Carvajal Candall, “”Objectivos y Politicas de CEPE’’ (Quito, Ecuador: Primer Seminario, 1979), p 88.

# 25

# நான் வெளியேறினேன்

புரூனோ நீக்கப்பட்ட நிகழ்ச்சி மெய்ன் - ஐ ஒரு பூகம்பம் போல் தாக்கியது. நிறுவனம் முழுவதும் குழம்பிப் போனதோடு பல்வேறு முரண்பட்ட கருத்துகளும் வெளிவரத் தொடங்கின. புரூனோவின் எதிரிகளில் சிலர்கூடத் திகைப்பும் அச்சமும் அடைந்தனர். மெக்ஹாலின் நடவடிக்கைக்கு அடிப்படைக் காரணம் பொறாமைதான் என்பது ஏறக்குறைய எல்லோருக்கும் புரிந்துதான் இருந்தது. மதிய உணவு மேசைகளிலும், காபி கொண்டு வந்த வண்டியைச் சுற்றி அனைவரும் கூடும்போதும் நிறுவனத்தின் வளர்ச்சியை உச்சக்கட்டத்திற்குக் கொண்டு சென்ற புரூனோவின் வளர்ச்சி மெக்ஹாலை அச்சுறுத்தி இருக்கக்கூடும் என்று ரகசியமாகப் பேசிக் கொண்டனர். புரூனோ மெக்ஹாலைவிட பதினைந்து வயது இளையவர். இதுவும்கூட அவருக்கு எரிச்சலூட்டியிருக்கக்கூடும்.

“புரூனோ நாளுக்கு நாள் வளர்ந்து வருவதை அவரால் எப்படி ஒத்துக்கொள்ள முடியும்? புரூனோ எல்லாவற்றையும் கைப்பற்றிக் கொள்ளவும் கிழவனை மாடு மேய்க்க அனுப்பவும் இன்னும் கொஞ்ச நாட்கள்தான் இருக்கின்றன என்பது மெக்ஹாலுக்கு நிச்சயம் தெரிந்திருக்கும்'' என்றார் ஒருவர்.

இந்தக் கருத்தை உறதிப்படுத்துவது போல ஹால், பால் பிரிட்டியை புதிய தலைவராக நியமித்தார். பால் பல ஆண்டுகள் மெய்னின் துணைத்தலைவராக இருந்தவர். நல்லியல்புடையவர். நடைமுறை அறிவு கொண்ட பொறியியலாளர் அவர். என் அபிப்பிராயத்தில் மந்தமானவரும் கூட. அத்தோடு சேர்மனின் விருப்பங்களுக்கு வளைந்து கொடுக்கக்கூடிய ஓர் ஆமாம் சாமி ஆள். அபரிமிதமான திறமையால் சேர்மனை அச்சுறுத்தக்கூடிய வகையான ஆளே அல்ல. என் கருத்தையே வேறு பலரும் கொண்டிருந்தனர்.

என்னைப் பொறுத்தவரை புரூனோ வெளியேற்றப்பட்டது பேரழிவு ஏற்படுத்தக்கூடியதாக இருந்தது. அவர் தனிப்பட்ட முறையில் எனது நலம் நாடுபவராக இருந்தார் என்பதோடு சர்வதேசப் பணிகளில் முக்கிய அங்கம் வகித்தும் வந்தார். புதிதாகப் பொறுப்பேற்ற பிரிட்டி உள்ளூர் வேலைகளிலேயே கவனம் செலுத்தத் தொடங்கினார். வெளிநாடுகளில் நாங்கள் மேற்கொண்டு வந்த வேலைகள் பற்றி அவருக்கு மிகக் குறைவான அளவே தெரிந்திருந்தது. இனி நிறுவனத்தின் எதிர்காலம் எப்படி இருக்கும் என்ற கேள்வி என் மண்டையைக் குடைந்தது. புரூனோவைச் சந்திக்க அவர் வீட்டுக்குச் சென்றேன். அவர் தத்துவார்த்தமாகப் பேசினார்.

“ஜான், என்னை வெளியேற்ற ஒரு காரணமும் இல்லை என்பது அவருக்குத் தெரியும்’’ என்று ஹாலைப் பற்றிச் சொன்னார். “எனவே துண்டித்துக் கொள்ளும்போது நல்ல தொகை கேட்டேன். பெற்றுக் கொண்டேன். வாக்களிக்கும் தகுதியுள்ள பங்குகளில் பெரும் பகுதியை ஹால் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கிறார். எனவே அவர் காய் நகர்த்தத் தொடங்கிவிட்டால் பின்பு நான் செய்யக்கூடியது ஒன்றுமில்லை.’’ எங்கள் வாடிக்கையாளர்களான பன்னாட்டு வங்கிகள் தனக்கு மிக உயர்ந்த பதவிகள் அளிக்க முன்வருவதாகத் தெரிவித்தார்.

நான் என்ன செய்ய வேண்டும் என்று அவரிடம் கேட்டேன். “எப்போதும் விழிப்புடனிருக்க வேண்டும்’’ என்றார் புரூனோ. “மெக்ஹால் யதார்த்தத்தோடு தொடர்பிழந்துவிட்டார். ஆனால் அதை யாரும் அவரிடம் எடுத்துச் சொல்ல மாட்டார்கள். அதுவும் என்னை வெளியேற்றிய பிறகு அதைப் பற்றி நினைத்தே பார்க்கமாட்டார்கள்.’’

1980-ஆம் ஆண்டு, மார்ச் மாத இறுதியில், இந்த வேலை நீக்கம் தந்த அதிர்ச்சியிலிருந்து மீளாத நிலையில் வர்ஜின் தீவுகளுக்குக் கடற்பயணம் சென்றேன். மெய்னில் வேலை செய்து வந்த ‘மேரி’ என்ற இளம்பெண் என்னோடு சேர்ந்து கொண்டாள். விடுமுறையைக் கழிக்க இந்த இடத்தைத் திட்டமிட்டு நான் தேர்ந்தெடுக்கவில்லை என்றாலும் கூட, என் புத்தாண்டுத் தீர்மானத்தை நிறைவேற்ற வரலாற்றுச் சிறப்பு மிக்க இந்தத் தீவுகள் ஒரு காரணமாய் அமைந்தன என்று இப்போது எனக்குத் தோன்றுகிறது. ஒரு மதியவேளையில் செயின்ட் ஜான் தீவைச் சுற்றி வந்த நாங்கள், பிரிட்டிஷ் வர்ஜின் தீவுகளிலிருந்து அமெரிக்காவைப் பிரிக்கும் சர் பிரான்சிஸ் டிரேக் கால்வாயில் புகுந்த போது என் சிந்தனைகளில் முதல் அதிர்வு, முதல் சூசகம் தோன்றியது.

தங்கம் கொண்டு சென்ற ஸ்பானியக் கப்பல்களை ஆங்கிலேயர்கள் கொள்ளையடித்ததன் நினைவாக இந்தக் கால்வாய்க்கு பிரான்ஸிஸ் டிரேக்கின் பெயர் சூட்டப்பட்டது. சர் பிரான்ஸிஸ் டிரேக்கையும், ஹென்றி மார்கனையும் போன்றவர்கள் கொள்ளையடித்தனர், சுரண்டினர், சூறையாடினர். ஆனால் அவர்கள் தங்கள் செயல்களுக்காகப் பாராட்டப்பட்டனர். அவர்களுக்குப் பட்டங்கள் கூட வழங்கப்பட்டன. இவர்களைப் போன்ற ஆட்களுக்கு மரியாதை அளிக்கும்படி வளர்க்கப்பட்ட நான் ஏன் பனாமா, இந்தோனேஷியா, கொலம்பியா, ஈக்வடார் போன்ற நாடுகளைக் கொள்ளையடிப்பது குறித்து மனமயக்கம் கொள்ள வேண்டும்? ஈதென் ஆலன், தாமஸ் ஜெபர்ஸன், ஜார்ஜ் வாஷிங்டன், டேனியல் பூன், டேவி க்ரோக்கெட், லுயிஸ், க்ளார்க் போன்ற என் வரலாற்று நாயகர்கள் பலர் பழங்குடி இந்தியர்களையும், அடிமைகளையும் சுரண்டியவர்கள்தான். மற்றவர்களின் நிலங்களை அபகரித்தவர்கள்தான். எனக்குள் கொழுந்துவிட்டெரிந்த குற்றவுணர்ச்சியைப் போக்கடிக்க இவர்களது செயல்களை அடிக்கடி நினைத்துக் கொள்வது வழக்கம். ஆனால் இன்று

சர் பிரான்சிஸ் டிரேக் கால்வாயில் பயணிக்கும் போது இந்த எண்ணங்கள் எவ்வளவு தூரம் தவறானவை என்பதைக் கண்டுகொண்டேன்.

பல ஆண்டுகளாக நான் வசதியாக மறந்திருந்த சில விஷயங்களை இப்போது நினைவுபடுத்திக் கொண்டேன். ஈதென் ஆலன் பல மாதங்கள் நெரிசலான, துர்நாற்றமடிக்கும் பிரிட்டிஷ் சிறைக்கப்பல்களில் அடைக்கப்பட்டிருந்தார். பெரும்பாலான நாட்கள் முப்பது பவுண்ட் எடையுள்ள இரும்புச் சங்கிலிகள் அவருடைய கால்களில் பூட்டப்பட்டிருந்தன. பிரிட்டிஷ் பாதாளச் சிறைகளிலும் அவர் இதை விட அதிக காலத்தைக் கழித்திருந்தார். அவர் நம் மக்களின் சுதந்திரத்திற்கான போராட்டத்தில் பங்கேற்ற 1775 - ஆம் ஆண்டு மான்ட்ரியேல் போர்க்களத்தில் போர்க்கைதியாகப் பிடிக்கப்பட்ட பின்பே இத்தகைய சிறைவாசங்களை அனுபவிக்க நேர்ந்தது. தாமஸ் ஜெபர்ஸனும், ஜார்ஜ் வாஷிங்டனும் மற்றவர்களும் இதே போன்ற லட்சியங்களுக்காகவே தங்கள் உயிர்களை ஆபத்துக்குள்ளாக்கிக் கொண்டனர். புரட்சி கண்டிப்பாக வென்றே தீரும் என்பது ஒன்றும் ஏற்கனவே முடிவு செய்யப்பட்ட விஷயம் அல்ல. தோல்வியடைந்தால் துரோகிகள் என்று குற்றம் சாட்டப்பட்டுத் தூக்கிலிடப்படுவோம் என்பதும் அவர்களுக்குத் தெரியும். டேனியல் பூன், டேவி க்ரோக்கெட், லூயில், கிளார்க் போன்றவர்களும் தங்களைக் கடும் துன்பங்களுக்கு உள்ளாக்கிக் கொண்டனர், பெரும் தியாகங்கள் புரிந்தனர்.

ஆனால் பிரான்ஸிஸ் டிரேக்கையும், மார்கனையும் இவர்களோடு சேர்க்க முடியுமா? வரலாற்றில் இந்தக் காலகட்டம் எனக்கு எப்போதுமே கொஞ்சம் குழப்பமாகத்தான் இருந்து வந்தது. புராட்டஸ்டன்ட் இங்கிலாந்து, கத்தோலிக்க ஸ்பெயினால் கடுமையான வேதனைக்கு ஆளாகியிருந்த காலகட்டம் அது என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. பணத்திற்காக அல்ல, மாறாக இங்கிலாந்தின் புனிதத்தைப் (Sanctity) பாதுகாக்கவும், ஸ்பானியப் பேரரசின் இதயத்தைக் குறி பார்த்துத் தாக்கவுமே அதன் தங்கக் கப்பல்களைக் கொள்ளையடிக்கும் கடற் கொள்ளையர்களாக டிரேக்கும், மார்கனும் மாறியிருக்க வாய்ப்புள்ளது என்பதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

கால்வாயில் படகு முன்னேறிச் செல்லச் செல்ல இந்த எண்ணங்கள் இன்னும் தீவிரத்துடன் என்னை அழுத்தத் தொடங்கின. மேரி என்னிடம் ஒரு பீரைக் கொடுத்துவிட்டு ஜிம்மி பப்பட் பாடலை ஒலித்துக் கொண்டிருந்த வானொலியின் ஒலியை அதிகரித்தாள். வழக்கமாகக் கடல் பயணங்களின் போது என் மனம் இலேசாகி விடும். கட்டற்றுப் பறந்து கொண்டிருப்பது போன்ற உணர்வு ஏற்படும். இப்போது கோபம் என்னை ஆட்கொண்டிருந்தது. அதை அடக்கும் முயற்சியாக பீரை ஒரே மூச்சில் காலி செய்தேன்.

அதனால் ஒரு பயனும் இல்லை. என் மீதே எனக்கு ஏற்பட்ட கண்மண் தெரியாத கோபம் என்னை விட்டு அகலவேயில்லை. வரலாற்றிலிருந்து வந்த குரல்களைப் பயன்படுத்திக் கொண்டு என் செயல்களை நியாயப்படுத்திக் கொள்ள நான் செய்து வந்த முயற்சி என் மீதே எனக்கு வெறுப்பை ஏற்படுத்தியது. இந்த வரலாறு அனைத்தையும் என் மீது திணித்த என் பெற்றோர்கள் மீதும், குன்றின் மீது அமர்ந்திருந்த பள்ளியான டில்டன் மீதும் கடுங்கோபம் வந்தது. இன்னொரு பீர் பாட்டிலை எடுத்துக் கொண்டேன். அப்போது மட்டும் மெக்ஹால் என் எதிரே இருந்திருந்தால் புரூனோவுக்குச் செய்த காரியத்திற்கு அவரைக் கொலையே செய்திருப்பேன்.

வானவில் கொடியுடன் ஒரு மரப்படகு எங்களைக் கடந்து சென்றது. அதன் பாய்கள் இருபுறமும் புடைத்திருந்தன. காற்றின் போக்கில் அது கால்வாயில் மிதந்து சென்றது. அதிலிருந்த அரை டஜன் இளைஞர்களும், யுவதிகளும் கூச்சலிட்டுக் கை காட்டினார்கள். ஹிப்பிகள்! ஒரு ஜோடி முழு நிர்வாணமாகக் காணப்பட்டது. அவர்கள் தோற்றத்திலிருந்து அந்தப் படகிலேயே வாழ்க்கை நடத்தி வருகிறார்கள் என்பது தெரிந்தது. அந்தப் படகு ஒரு கம்யூன். அவர்கள் நவீன யுகத்தின் கடல் கொள்ளைக்காரர்கள். சுதந்திரமானவர்கள். எந்த மனத்தடையும் இல்லாதவர்கள்.

நான் பதிலுக்குக் கையாட்ட விரும்பினாலும் என் கரங்கள் எனக்கு ஒத்துழைக்கவில்லை. அவை துவண்டு தொங்கிக் கொண்டிருந்தன. இயங்க மறுத்தன. பொறாமை என்னுள் கொழுந்துவிட்டு எரிந்தது.

மேரி தளத்தில் நின்றபடி அந்தப் படகு கண்ணுக்கு மறையும் வரை பார்த்துக் கொண்டிருந்தாள். பின்பு “இந்த வாழ்க்கையை நீங்கள் விரும்புகிறீர்களா?’’ என்று என்னிடம் கேட்டாள்.

அப்போது ஒரு விஷயம் எனக்குத் தெளிவாகப் புரிந்தது. நான் வெறுத்தது என் பெற்றோரையோ, டில்டனையோ, மெக்ஹாலையோ அல்ல, என்னைத்தான். எல்லாவற்றிற்கும் பொறுப்பானவன் நான், வெறுக்கப்பட வேண்டியவனும் நானேதான்.

மேரி ஏதோ கூச்சலிட்டாள். பின்பு என்னை நெருங்கி “லெனிஸ்டர் விரிகுடா’’ என்றாள். “இன்றிரவு நங்கூரமிட வேண்டிய இடம்.’’

இங்கேதான் கடந்த காலத்தில் தங்கம் ஏற்றிய கப்பல்கள் கடந்து செல்லும்போது அவற்றைத் தாக்கக் கடல் கொள்ளையர்கள் காத்திருப்பார்கள். படகின் சுக்கானை மேரியிடம் கொடுத்து விட்டு மேல் தளத்துக்குச் சென்று நங்கூரத்தை அதன் லாக்கரிலிருந்து எடுத்துக் கொண்டேன். மேரி திறமையாக முக்கியமான கடற்பாயைக் கீழே இறக்கினாள். நான் நங்கூரத்தைக் கடலில் இறக்கினேன். சங்கிலி ‘சலசல’ ஓசையுடன் கண்ணாடி போன்ற தெளிந்த நீரில் இறங்கியது. படகு குலுங்கி நின்றது.

மேரி கடலில் கொஞ்சம் நீந்திவிட்டுக் கண்ணயர்ந்தாள். நான் அவளுக்கு ஒரு குறிப்பு எழுதி வைத்துவிட்டுப் படகில் இணைக்கப்பட்டிருந்த சிறிய துடுப்பு-ப் படகில் இறங்கி அதைக் கரையை நோக்கி வலிக்கத் தொடங்கினேன். பழங்காலத்தைச் சேர்ந்த ஒரு கரும்புத் தோட்டத்திற்கருகில் படகை நிறுத்திவிட்டு அங்கேயே உட்கார்ந்துவிட்டேன். அலைபாய்ந்து கொண்டிருந்த மனதை அடக்கவும் மனதை வெறுமையாக்கிக் கொள்ளவும் நான் செய்த முயற்சிகள் படுதோல்வியடைந்தன.

மாலை நேரத்தில் இந்தக் கரும்புத் தோட்டத்தில் இருந்த சிதிலமான சுவர்களின் மீது ஏறி நின்று தொலைவில் தெரிந்த எங்கள் சிறு கப்பலின் மீது பார்வையைச் செலுத்தினேன். கரீபியன் கடலில் சூரியன் வேகமாக இறங்கிக் கொண்டிருந்தது. கடலும் கரையும் மோனத்தில் ஆழ்ந்திருந்தன. ஆனால் இந்தத் தோட்டம் துயரத்தின் நிலைக்களன். நூற்றுக்கணக்கான ஆப்பிரிக்க அடிமைகள் உயிரைவிட்ட இடம் இந்தக் கரும்புத் தோட்டம். அவர்கள் துப்பாக்கி முனையில் மாளிகைகளைக் கட்டியெழுப்பவும், கரும்பு பயிரிடவும் நிர்பந்திக்கப் பட்டவர்கள். இந்தப் பகுதி முழுவதும் போர்வை போலப் போர்த்து நிற்கும் அமைதி இந்தக் கொடூரத்தை மூடி மறைத்துக் கொண்டிருக்கிறது.

மலைகளால் விளிம்பு கட்டப்பட்டிருந்த தீவில் சூரியன் மறைந்தது. வானம் பொன் மஞ்சள் நிறமாக மாறியது. கடல் மென்மேலும் கருமையடையத் தொடங்கியது. மக்களை அடிமைப்படுத்து பவர்களில் நானும் ஒருவன். அதிர்ச்சியூட்டுவதாக இருந்தாலும் மறுக்க முடியாத உண்மை இது. என் வேலை ஏழை நாடுகளுக்குக் கடன் கொடுத்து உலகப் பேரரசை விரிவுபடுத்துவது மட்டுமல்ல. நான் செய்த மிகைப்படுத்தப்பட்ட பொருளாதார முன்னறிவிப்புகள் என் நாட்டுக்கு எண்ணெய் வழங்குவதற்காக மட்டும் பயன்படவில்லை. என் நிறுவனத்தின் லாபத்தை அதிகரிப்பது மட்டும் எனது குறிக்கோள் அல்ல. இப்போது நான் உட்கார்ந்திருக்கும் சுவர்களைக் கட்டுவதற்காக உயிர்விட்ட மக்களுடன் இரத்த உறவு கொண்டிருந்த மக்களை ஒட்டச் சுரண்டுவதும் என் வேலைதான்.

ஆப்பிரிக்கக் காடுகளுக்குச் சென்று ஆண்களையும், பெண்களையும் அடிமைகளாகப் பிடித்து வந்த அடிமை வியாபாரிகளின் வாரிசாகத்தான் கடந்த பத்து வருடங்களாக நான் இருந்து வருகிறேன். என்னுடைய அணுகுமுறை பழைய அடிமை வியாபாரிகளின் அணுகுமுறையிலிருந்து மாறுபட்டது. இறந்த உடல்களைப் பார்க்க வேண்டிய அவசியமோ, அழுகிக் கொண்டிருக்கும் சதைகளின் நாற்றத்தை நுகர வேண்டிய தேவையோ, ஓலமிடும் குரல்களைக் கேட்க வேண்டிய நிலையோ எனக்கு ஏற்பட்டதேயில்லை. ஆனால் என் பணிகள் எப்போதுமே வஞ்சகமும், குரூரமும் நிறைந்தவையாகவே இருந்து வந்திருக்கின்றன. பிணங்களைப் பார்க்காவிட்டாலும்,

அலறல்களைக் கேட்காவிட்டாலும் கூட நான் புரிந்த பாவங்கள் அடிமை வியாபாரிகளின் பாவங்களை விடப் பல மடங்கு அதிகம்.

தொலைவில் தெரிந்த படகின் மேல்தளத்தில் மேரி ஓய்வெடுத்துக் கொண்டிருந்தாள். ஒருவேளை மதுவுடன் எனக்காக அவள் காத்துக்கொண்டிருக்கலாம். இந்த மாலை மயங்கும் வேளையில் கவலையற்றிருக்கும் மேரியைப் பார்த்தபோது அவளுக்கும், என் மேல் முழு நம்பிக்கை வைத்திருக்கும் மற்ற ஊழியர்களுக்கும் அவர்கள் அறியாமலேயே பொருளாதார அடியாட்களாக அவர்களை மாற்றி விட்டதன் மூலம் எவ்வளவு பெரிய தீங்கிழைத்து விட்டேன் என்ற எண்ணம் என்னைப் புயல் போலத் தாக்கியது. கிளேடின் எனக்குச் செய்த அதே விஷயத்தைத்தான் நான் மற்றவர்களுக்குச் செய்திருக்கிறேன். ஆனால் கிளேடினிடம் இருந்த நேர்மை என்னிடம் கொஞ்சம்கூட இல்லை. சம்பள உயர்வுகள். பதவி உயர்வுகள் மூலம் நான் இவர்களை மயக்கி நவீன அடிமை வியாபாரிகளாக மாற்றி வருகிறேன். அதே நேரம் அவர்களையும் என்னைப் போல் அமைப்போடு பிணைத்து அடிமைகளாகவும் ஆக்கி வருகிறேன்.

கடலிலிருந்து ஒரு கணம் பார்வையைத் திருப்பியபோது ஆப்பிரிக்க இல்லங்களிலிருந்து பிய்த்தெடுக்கப்பட்ட அடிமைகளால் கட்டப்பட்ட சுவர்கள் கண்ணில் பட்டன. அதைக் காணச் சகிக்காமல் அப்பால் திரும்பியபோது தரையில் கிடந்த ஒரு பருமனான தடியைக் கண்டேன். பாய்ந்து அதை எடுத்துக்கொண்டு கற்சுவர்களை அதனால் விளாசத் தொடங்கினேன். உடலில் உள்ள சக்தியெல்லாம் வற்றிப் போகும் வரை சுவர்களை அடித்து நொறுக்கிக் கொண்டே இருந்தேன். பின்பு புல்லில் விழுந்து உயரத்தில் மேகங்கள் நகர்வதை வெறுமனே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன்.

என்ன செய்ய வேண்டுமென்று எனக்குப் புரிந்துவிட்டது. இனி பழைய வாழ்க்கைக்குத் திரும்பிச் சென்றால் அவ்வளவுதான். ஒழிந்தே போக வேண்டியதுதான். சம்பள உயர்வுகளும், சலுகைகளும், லாபங்களும் என்னைக் கட்டிப் போட்டுவிடும். பணியில் நீடிக்க, நீடிக்க வெளியேறுவது மென்மேலும் கடினமாகிவிடும், அடிமையாகி விடுவேன். தப்பி ஓடிவிட வேண்டும் அல்லது கற்சுவர்களில் மோதிக் கொண்டிருக்க வேண்டும். வேறு வழியே இல்லை.

இதற்கு இரண்டு நாட்கள் கழித்து பாஸ்டன் திரும்பினேன். 1980-ஏப்ரல் 1 அன்று பால் பிரிட்டியின் அலுவலகத்திற்குச் சென்று என் வேலையை ராஜினாமா செய்தேன்.

# 26

# ஈக்வடார் குடியரசுத் தலைவரின் மரணம்

நான் நினைத்ததுபோல் மெய்னை விட்டு அவ்வளவு எளிதாக வெளியேறிவிட முடியவில்லை,. பால் என்னை நம்ப மறுத்து ‘ஏப்ரல் ஃபூல்’ என்று கண்ணடித்தார்.

நான் விளையாடவில்லை என்பதை மிகவும் சிரமப்பட்டுத்தான் நம்ப வைக்க முடிந்தது. மெய்னின் பெயரைக் கெடுக்கும் காரியம் எதிலும் நான் ஈடுபடப் போவதில்லை என்றும் அவரை நம்ப வைக்க வேண்டியிருந்தது. பவுலாவின் அறிவுரையை நான் மறக்கவேயில்லை. மெய்ன் எனக்குக் கொடுத்த அனைத்திற்கும் நன்றியுணர்வோடு இருக்கிறேன் என்று அழுத்தமாகக் கூறினேன். மெய்னில் வேலை செய்யும் போது உலகம் முழுவதும் பெற்ற அனுபவங்களையும் மெய்ன் எனக்கு அறிமுகப்படுத்திய மனிதர்களைப் பற்றியும் எழுதும் விருப்பம் எப்போதுமே எனக்கு இருந்து வந்திருக்கிறது. அரசியலுக்கும் இதற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. ‘நேஷனல் ஜியோகிரபி’ போன்ற ஏடுகளுக்கு செய்தியாளனாகப் பணிபுரியவும், பயணம் செய்யவும் விரும்புகிறேன். எனவேதான் நான் வெளியேற வேண்டியிருக்கிறது என்றேன். நிறுவனத்திற்கு என் விசுவாசத்தை இன்னொரு முறை ஆணையிட்டுத் தெரிவித்ததோடு, கிடைக்கும் ஒவ்வொரு வாய்ப்பையும் மெய்னின் புகழ் பாடக் கட்டாயம் பயன்படுத்திக் கொள்வேன் என்று அவருக்கு உறுதியளித்தேன். இறுதியில் பால் விட்டுக் கொடுத்தார்.

பின்பு நிறுவனத்திலிருந்த ஒவ்வொருவரும் என் மனதை மாற்ற முயன்றார்கள். என் உயர்ந்த பதவியை அடிக்கடி நினைவூட்டினார்கள். எனக்குப் பைத்தியம் என்றுகூடக் குற்றம் சாட்டினார்கள். அவர்கள் யாரும் நான் விருப்பப்பட்டு வெளியேறுகிறேன் என்பதை நினைத்துப் பார்க்கவே விரும்பவில்லை. அதற்கும் காரணமிருந்தது. எங்கள் எல்லோர் நிலையும் ஏறக்குறைய ஒன்றுதானே! ஒருவேளை வெளியேறுவது என்று முடிவு செய்த நான் பைத்தியக்காரன் இல்லையென்றால் அந்த முடிவை எடுக்காதவர்கள் தங்கள் மனநலம் குறித்து யோசிக்க வேண்டி வருமே. எனவே தங்கள் மனநலம் குறித்து ஆராய்வதைவிட எனக்கு மரை கழன்றவன் என்ற பட்டம் சூட்டுவது அவர்களுக்கு எளிதானதாக இருந்தது.

என்னிடம் வேலை செய்தவர்கள் இந்த முடிவை எதிர்கொண்டவிதம் என்னைக் கலக்கிவிட்டது. அவர்கள் பார்வையில் நான் அவர்களைக் கைவிடுகிறேன். உடனடியாக என் இடத்திற்கு வரக்கூடிய ஆட்கள் யாருமில்லாத நிலையில் அவர்களை இக்கட்டான ஒரு இடத்தில்

விட்டுச் செல்கிறேன். எது எப்படியிருந்தாலும் இத்தனை ஆண்டு ஊசலாட்டத்திற்குப் பின்பு நான் எடுத்த முடிவை மாற்றுவதில்லை என்பதிலும், முழுமையாக விலகிக் கொள்வது என்பதிலும் தீர்மானமாக இருந்தேன்.

ஆனால் அது நான் நினைத்தபடி நடக்கவில்லை. இன்னும் கொஞ்சகாலம் நிறுவனத்தில் நீடித்திருந்தால் நான் கோடீசுவரனாக ஆகியிருப்பேன். ஆனால் அதற்கு ஐந்து ஆண்டுகள் முன்பே, முழுமையான பங்குதாரர் ஆவதற்கு முன்பே நான் ஓய்வு பெறுவதால் என் பங்குகளிலிருந்து வந்த பணம் முழுமையாக ஓய்வு பெறுவதற்குப் போதுமானதாக இல்லை.

ஒரு நாள் பால் பிரிட்டி என்னுடன் தொடர்பு கொண்டு தன்னை நேரில் வந்து சந்திக்கும்படி கேட்டுக் கொண்டார். “நமது வாடிக்கையாளர்களில் ஒருவர் விலகுவதாக மிரட்டுகிறார். நீங்கள் நிபுணர் சாட்சியம் அளிக்க வேண்டுமென்று விரும்பியதாலேயே அவர் நம்மைப் பணிக்கு அமர்த்தியதாகச் சொல்கிறார்.’’

நான் ஆழ்ந்து யோசித்து ஒரு முடிவெடுத்தேன். மெய்னில் நான் பெற்று வந்ததைவிட மூன்று மடங்கு அதிகமான ஒரு தொகையைக் கட்டணமாகக் கேட்டேன். நானே ஆச்சரியப்படும் விதமாக அவர் உடனே ஒப்புக் கொண்டார். என் புதிய பணி தொடங்கியது.

மிக அதிகக் கட்டணம் வசூலிக்கும் நிபுணர் சாட்சியாக (expert witness) அடுத்து வந்த பல ஆண்டுகளில் நான் அறியப்பட்டேன். அமெரிக்காவின் மின்சாரம் உற்பத்தி செய்யும் நிறுவனங்கள் புதிய மின்னுற்பத்தி நிலையங்கள் கட்டுவதற்குப் பொது நல ஆணையங்களின் ஒப்புதல் பெற வேண்டியிருந்தது. எங்கள் வாடிக்கையாளர்களில் நியூ ஹாம்ஷயர் பொதுச் சேவை நிறுவனமும் (Public Service Company) ஒன்றாகும். இந்த நிறுவனம் கட்ட உத்தேசித்திருந்த சர்ச்சைக்குரிய சீபுருக் அணுமின் நிலையத்தால் விளையக்கூடிய பொருளாதார நன்மைகள் குறித்து சத்தியப் பிரமாணம் எடுத்துக் கொண்டு சாட்சியம் அளிப்பதே எனது வேலை.

மெய்னில் இருந்து விலகிய பிறகு லத்தீன் அமெரிக்காவோடு நேரடித் தொடர்பு அற்றுப் போய்விட்டதென்றாலும் அங்கு நடப்பவற்றைத் தொடர்ந்து கவனித்துதான் வந்தேன். நிபுணர் சாட்சியம் அளிக்க அடிக்கடி சாட்சிக் கூண்டில் ஏற வேண்டிய அவசியமேற்படவில்லை. எனவே நிறைய நேரம் கிடைத்தது. பவுலாவுடனான தொடர்பையும் பேணியே வந்தேன். அமைதிப்படையில் பணி செய்த நாட்களில் ஈக்வடாரில் எனக்கிருந்த தொடர்புகளையும் புதுப்பித்துக் கொண்டேன். ஈக்வடார் திடீரென்று பெட்ரோலியப் பொருளாதாரத்தின் மையத்திற்குத் தாவியிருந்தது.

ஜெய்மே ரோல்டோஸ் தொடர்ந்து முன்னேறினார். தன்

வாக்குறுதியை அவர் மறந்துவிடவில்லை. எண்ணெய் நிறுவனங்கள் மீது முழுமையான தாக்குதல் தொடங்கியது. இரு அமெரிக்கக் கண்டங்களிலும் இருந்த பலர் பார்க்கத் தவறிய பல விஷயங்களை அவர் தெளிவாகப் பார்ப்பது போல் தோன்றியது. உலகப் பேரரசின் வளர்ச்சி தன் நாட்டு மக்களுக்கு அடிமைத்தனத்தையே பரிசாகத் தரும் என்பதை அவர் உணர்ந்திருந்தார். அவரது அர்ப்பணிப்பு, ஆழமான புரிதல், கூர்மையான அறிவு பற்றிக் கேள்விப்பட்ட செய்திகள் என்னை மிகவும் கவர்ந்தன. உலக அரசியலில் ஒரு புதிய அத்தியாயம் உருவாகிக் கொண்டிருக்கிறது என்பதை அவை கோடிட்டுக் காட்டின.

1980, நவம்பரில் நடந்த குடியரசுத் தலைவருக்கான தேர்தலில் கார்ட்டர், ரொனால்டு ரீகனிடம் தோல்வியடைந்தார். டோரிஜோஸுடன் கார்ட்டர் செய்து கொண்ட பனாமாக் கால்வாய் ஒப்பந்தமும், ஈரானில் நிலவிய சூழ்நிலையும், குறிப்பாக அமெரிக்கர்கள் பணயக் கைதிகளாகப் பிடித்து வைக்கப்பட்டிருந்ததும், அவர்களை மீட்கச் செய்யப்பட்ட முயற்சி தோல்வியடைந்ததும் அவரது தோல்விக்கு முக்கியமான காரணங்களாக அமைந்தன. இந்தத் தோல்வியால் அமெரிக்க அரசியலில் இன்னொரு நுணுக்கமான மாற்றமும் அரங்கேறி வந்தது. கார்ட்டர் உலக அமைதியைத் தனது லட்சியமாகக் கொண்டிருந்தார். அமெரிக்கா பெருமளவிற்கு எண்ணெயை நம்பி இருப்பதை மாற்ற வேண்டுமென்று உறுதி பூண்டிருந்தார். அமெரிக்கா தான் விரும்புவதை ராணுவ பலத்தால் அடைய வேண்டும், எண்ணெய் வயல்கள் உலகின் எந்தப் பகுதியில் இருந்தாலும் அவற்றைக் கட்டுப்படுத்தும் உரிமை அமெரிக்காவுக்கு உண்டு, இவையெல்லாம் விதியின் வெளிப்பாடு கோட்பாட்டின் பிரிக்க முடியாத பகுதிகள் என்பதில் நம்பிக்கை கொண்டிருந்த ஒருவர் இப்போது அவரிடத்தில் அமர்ந்திருந்தார். வெள்ளை மாளிகையின் கூரைகளில் கார்ட்டர் பதிக்கச் செய்திருந்த சூரிய ஒளித்தகடுகளை ரீகன் முதல் வேலையாக அகற்ற உத்தரவிட்டார்.

கார்ட்டர் ஒருவேளை அவ்வளவு திறமையான அரசியல்வாதியாக இல்லாமலிருந்திருக்கலாம். ஆனால் அமெரிக்கா பற்றிய அவரது பார்வை நமது விடுதலைப் பிரகடனத்தில் சொல்லப்பட்டவற்றை ஒட்டியிருந்தது. இப்போது பார்க்கும்போது அவர் மிகவும் எளிமையான, பண்டைய லட்சியவாதத்திற்குத் திரும்ப ஆர்வம் கொண்டிருந்ததைப் போல் தோன்றுகிறது. அவருக்கு முன்னும், பின்னும் குடியரசுத் தலைவர்களாக இருந்தவர்களோடு ஒப்பிடும்போது கார்ட்டர் மிகவும் வித்தியாசமானவராகத் தோன்றுகிறார். அவரது உலகப் பார்வை பொருளாதார அடியாட்களின் பார்வையிலிருந்து முரண்பட்டு நின்றது.

புதிதாகப் பதவியேற்ற ரீகன் உலகப் பேரரசைக் கட்டியமைக்க முனைந்து நிற்பவராக, நிறுவன - அதிகார வர்க்கத்தின் உறுதிவாய்ந்த

சேவகராகத் திகழ்ந்தார். கட்டளைகளை நிறைவேற்றியே பழக்கப்பட்ட ஹாலிவுட் நடிகர் அவர். வெள்ளைமாளிகையிலும் அதையே தொடர்ந்தார். போகும் பாதையைத் தெளிவாக உணர்ந்திருந்த அரசியல் பெருச்சாளிகளின் கட்டளைகளை அவர் இம்மி பிசகாமல் பின்பற்றியதைக் காண முடிந்தது. பன்னாட்டு நிறுவனங்களின் தலைமை அலுவலகங்களிலிருந்து வங்கி இயக்குனர் குழுக்களும், பின்னர் அரசு நிர்வாகத்திற்கும் மாறி மாறிப் போய் வந்து கொண்டிருந்தவர்களின் தேவைகளை அவர் நிறைவு செய்தார். பார்வைக்கு நிறுவன - அதிகார வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் அவருக்கு சேவை புரிவதைப் போலத் தோன்றினாலும் உண்மையில் ரீகன்தான் அவர்களுக்குச் சேவை செய்து வந்தார். உண்மையில் அரசை நடத்தியவர்கள் உதவி ஜனாதிபதி ஜார்ஜ். எச். டபிள்யூ. புஷ், உள்துறைச் செயலர் ஜார்ஜ் ஷுல்ட்ஸ், ராணுவ அமைச்சர் காஸ்பஸ் வெய்ன்பெர்கர், ரிச்சர்ட் செனி, ரிச்சர்ட் ஹெல்ம்ஸ், ராபர்ட் மெக்னமாரா போன்றவர்கள்தான். இவர்களின் தேவைகளை ரீகன் முழுமையாக அங்கீகரித்தார். உலகை, அதன் இயற்கை வளங்களைத் தன் முழுக் கட்டுப்பாட்டில் வைத்திருக்க விரும்பும் ராணுவம், பன்னாட்டு வங்கிகள் மற்றும் சர்வதேச வணிக நிறுவனங்களின் பிரதிநிதிகள் இவர்கள். உலகப் பேரரசின் தலைமைப் பீடத்தில் அமெரிக்காவை அமர்த்த உறுதி பூண்டவர்கள்.

பொருளாதார அடியாட்களுக்கு மிகவும் பிரகாசமான எதிர்காலம் இருக்கும் போலத் தோன்றியது. இதிலிருந்து வெளியேற நான் இந்தத் தருணத்தைத் தேர்ந்தெடுத்தது விதியின் கோணல்களில் ஒன்றுதான். நான் தேர்ந்தெடுத்த நேரம் சரியானது என்பதில் எனக்கு எந்தச் சந்தேகமும் ஏற்படவில்லை.

நீண்டகால அடிப்படையில் இப் புது நிர்வாகம் எடுத்துவரும் நடவடிக்கைகளின் பின்விளைவுகள் எப்படியிருக்கும் என்பதைக் காட்டக் கூடிய படிகக்கல் (Crystal ball) என்னிடம் இல்லை. ஆனால் எந்தப் பேரரசும் நீடித்து நிலைத்திருந்ததே இல்லை. அவற்றின் எழுச்சியும் வீழ்ச்சியும் கால வெள்ளத்தில் சர்வ சாதாரணம் என்பதை வரலாறு காட்டுகிறது. என்னைப் பொறுத்தவரை ரோல்டோஸ் போன்றவர்களே நம்பிக்கையளித்தனர். ஈக்வடாரின் புதிய ஜனாதிபதி மாறி வரும் அரசியல் சூழலின் நெருக்கடிகளையும், சிக்கல்களையும் நன்றாகப் புரிந்துகொண்டே இருந்தார் என்பதில் எனக்குச் சந்தேகமே எழவில்லை. அவர் டோரிஜோஸைப் பின்பற்றுபவர். பனாமா கால்வாய் விஷயத்தில் கார்ட்டர் எடுத்த துணிச்சலான முடிவுகளுக்காக அவரை வெளிப்படையாகப் பாராட்டியவர். எனவே அவர் பின்வாங்க மாட்டார் என்று தோன்றியது. அவரது மன உறுதி மற்ற நாடுகளின் தலைவர்களையும் செயல்படத் தூண்டும்.

1981 - ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் ரோல்டோஸ் அரசு புதிய

ஹைட்ரோ கார்பன் சட்டத்தை நாடாளுமன்றத்தில் முன் வைத்தது. அது நிறைவேறும் பட்சத்தில் ஈக்வடாருக்கும், எண்ணெய் நிறுவனங்களுக்கும் இடையேயான உறவு தலைகீழாக மாறிவிடும். இச்சட்டம் உலகம் முழுவதிலும் பெரும் பாதிப்பு ஏற்படுத்தக் கூடியதாகத் தோன்றியது.[1]

எண்ணெய் நிறுவனங்கள் எதிர்பார்த்தபடியே எதிர்வினையாற்றின. ரோல்டோஸுக்கு எதிரான பிரசாரத்தில் முழுவீச்சில் இறங்கின. எண்ணெய் நிறுவனங்களின் மக்கள் தொடர்பு அதிகாரிகள் ஜெய்மே ரோல்டோஸை ஒரு பயங்கரமான வில்லனாகச் சித்திரிக்கும் வேலையைத் தொடங்கினார்கள். அவர்களது ஆட்கள் மூட்டை மூட்டையாகப் பணத்தோடும், மிரட்டல்களோடும் குய்டோவிலும், வாஷிங்டனிலும் ஊடுருவினார்கள். முதன்முதலாக ஜனநாயகப்பூர்வமாக நடந்த தேர்தலில் முறைப்படி மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு குடியரசுத் தலைவரை இன்னொரு காஸ்ட்ரோவாகச் சித்திரிக்க தங்களாலான அனைத்தையும் செய்ய முயன்றனர். ஆனால் ரோல்டோஸ் மிரட்டலுக்குப் பணியவில்லை. அரசு, எண்ணெய் நிறுவனங்கள் மற்றும் மத பீடங்களுக்கு இடையே நிலவி வந்த முக்கோணச் சதி வலையை நேரடியாகச் சந்திக்க முடிவெடுத்தார். இவாஞ்சலிக்கல் மத நிறுவனமான சம்மர் இன்ஸிடிடியூட் ஆப் லிங்குஸ்டிக்ஸ் எண்ணெய் நிறுவனங்களோடு நெருக்கமான பிணைப்புகள் கொண்டுள்ளது என்று வெளிப்படையாகக் குற்றம் சாட்டி அந்நிறுவனத்தை நாட்டை விட்டு வெளியேறும்படி கட்டளையிட்டார். இது ஒரு தீர்மானகரமான- ஒருவேளை பின் விளைவுகளைப் பற்றிக் கவலைப்படாத - நடவடிக்கையாக அமைந்தது. [2]

இந்த மிஷனரிகளை வெளியேற்றிய பின்பு இரண்டொரு நாட்களில், எண்ணெய் நிறுவனங்கள் உள்ளிட்ட அனைத்துப் பன்னாட்டு நிறுவங்களும் மக்களுக்கு உதவக்கூடிய திட்டங்களை அமல்படுத்த வேண்டும் என்றும், தவறும் பட்சத்தில் அவை நாட்டை விட்டு பலவந்தமாக வெளியேற்றப்படும் என்றும் எச்சரித்தார். 1981, மே 24-ஆம் தேதி குய்டோவிலுள்ள அதாஹூவெல்பா ஒலிம்பிக் விளையாட்டரங்கில் ஒரு மாபெரும் உரை நிகழ்த்திவிட்டுத் தெற்கு ஈக்வடாரிலுள்ள ஒரு பழங்குடி கிராமத்திற்கு விமானத்தில் புறப்பட்டார். வழியில் ஒரு பயங்கரமான விமான விபத்தில் மரணமடைந்தார்.[3]

உலகம் அதிர்ச்சியில் உறைந்து போனது, லத்தீன் அமெரிக்கா முழுவதும் மக்கள் கடுங்கோபம் அடைந்தனர். அப்பகுதி முழுவதும் செய்தித்தாள்கள், “சி.ஐ.ஏ. நடத்திய படுகொலை” என்று அலறின. வாஷிங்டனும், எண்ணெய் நிறுவனங்களும் ரோல்டோஸை நஞ்சென வெறுத்து வந்தன என்ற அடிப்படை உண்மையைத் தவிர இக்குற்றச்சாட்டுக்கு வேறு பல நேரடிக் காரணங்களும் இருந்தன.

மேலும், மேலும் அதிக உண்மைகள் வெளிவர, வெளிவரச் சந்தேகங்களும் பன்மடங்கு அதிகரித்தன. எதுவுமே, எப்போதுமே நிரூபிக்கப்படவில்லை என்றாலும், ரோல்டோஸ் தன் உயிரைப் பறிக்க முயற்சி செய்யப்படலாம் என்பதை அறிந்திருந்தார். பல முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளையும் அவர் எடுத்திருந்தார் என்று கூறப்பட்டது. அவற்றில் இரண்டு விமானங்கள் பயணத்திற்குத் தயாராக இருக்க வேண்டும் என்பதும் ஒன்று என்றும், (எந்த விமானத்தில் பயணம் செய்வார் என்பது திட்டமாகத் தெரியாமல் இருப்பதற்காக) கடைசி நேரத்தில் அவரது பாதுகாப்பு அதிகாரிகளில் ஒருவர் அவரை அந்த டிகாய் விமானத்தில் ஏற வற்புறுத்தி ஒப்புக்கொள்ளச் செய்தார் என்றும் நேரில் கண்ட சாட்சிகள் கூறினர். அதுதான் வெடித்துச் சிதறியது.

உலகம் முழுவதும் இச்செய்தி பெரும் பாதிப்புகளை ஏற்படுத்திய போதிலும், அமெரிக்க ஏடுகள் பெரும்பாலும் இது குறித்து மௌனமே சாதித்தன. இச்செய்தி பெரும்பாலான ஏடுகளில் வெளிவரவே இல்லை.

ஓஸ்வால்டோ ஹார்டேடோ ஈக்வடாரின் புதிய ஜனாதிபதியாகப் பதவியேற்றார். அவர் சம்மர் இன்ஸ்டிடியூட் ஆப் லிங்குஸ்டிக்ஸ் மிஷனரிகளையும், அதன் புரவலர்களான எண்ணெய் நிறுவனங்களையும் திரும்பவும் அழைத்துக் கொண்டார். அதே ஆண்டின் இறுதியில் காயாகுல் வளைகுடா மற்றும் அமேசான் வடிநிலத்தில் எண்ணெய் எடுப்பதை அதிகரிக்க டெக்ஸகோ மற்றும் பல பன்னாட்டு எண்ணெய் நிறுவனங்களுக்கு அனுமதி அளிக்கும் திட்டத்தைச் செயல்படுத்தினார். இத்திட்டம் பன்னாட்டு எண்ணெய் நிறுவனங்களுக்குக் கொள்ளை லாபத்தை ஈட்டித் தரும் என்று எதிர்பார்க்கப்பட்டது.[4]

ரோல்டோஸுக்கு இறுதி அஞ்சலி செலுத்தும்போது ஓமர் டோரேி-ஜாஸ் அவரைத் தமது “சகோதரர்” என்று குறிப்பிட்டார். தான் கொல்லப்படுவது போன்று பயங்கரமான கனவுகள் காண்பதாகவும் ஒப்புக்கொண்டார். தான் ஒரு பிரம்மாண்டமான தீப்பிழம்போடு வானிலிருந்து விழுவது போல் கனவுகள் தோன்றுவதாகக் கூறினார். அது தீர்க்கதரிசனமாய் அமைந்தது.

[1] John D. Martz, Politics and Petroleum in Ecuador (New Brunswick and Oxford: Transaction Books, 1987), p 272.

[2] Gerard Colby and Charlotte Dennet; Thy Will Be Done, The Conquest of the Amazon: Nelson Rockefeller and Evangelism in the Age of Oil (New York, HarperCollins, 1995), p 813.

[3] John D. Martz, Politics and Petroleum in Ecuador (New Brunswick and Oxford: Transaction Books, 1987), p 303.

[4] John D. Martz, Politics and Petroleum in Ecuador (New Brunswick and Oxford: Transaction Books, 1987), pp 381, 400.

# 27

# பனாமா: இன்னொரு குடியரசுத் தலைவரின் மரணம்

ரோல்டோஸின் மரணம் எனக்கு அதிர்ச்சியளித்தது. ஆனால், நான் அதிர்ச்சியடைந்திருக்கக் கூடாது. ஏனென்றால், நான் அப்பாவி அல்லன். அர்பென்ஸ், மொஸாடெக், அலெண்டே போன்றவர்களையும், இன்னும் வெளியுலகுக்குத் தெரியாத, ஆனால் நிறுவன - அதிகார வர்க்கத்தை எதிர்த்து நிற்கத் துணிந்ததற்காகக் கொல்லப்பட்டவர்கள், நடைப்பிணமாக்கப்பட்டவர்கள் பலரையும் நான் அறிந்து தானிருந்தேன். இருந்தாலும் அவரது மரணத்தால் நான் அதிர்ச்சியடைந்தேன் என்பதுதான் உண்மை. இந்தப் படுகொலை மிக மிக வெளிப்படையாக நடத்தப்பட்டிருந்தது.

சவூதி அரேபியாவில் நாங்கள் - அதாவது பொருளாதார அடியாட்கள் - மகத்தான வெற்றிகளை ஈட்டிய பிறகு இது போன்ற அப்பட்டமான படுகொலைகள் இனி தேவைப்படாது என்றுதான் நினைத்திருந்தேன். ரோல்டோஸின் மரணம் ஒரு விபத்து அல்ல என்பதில் எனக்கு எந்தச் சந்தேகமும் இல்லை. அது சி.ஐ.ஏ நடத்திய படுகொலை என்பதைக் காட்டக்கூடிய அத்தனை அம்சங்களும் அதிலிருந்தன. மற்றவர்களை எச்சரிப்பதற்காகவே இந்தப் படுகொலை இவ்வளவு வெளிப்படையாக அரங்கேற்றப்பட்டுள்ளது. புதிதாகப் பதவியேற்றுள்ள ரீகன் நிர்வாகமும் எதற்கெடுத்தாலும் துப்பாக்கியை தூக்கும் கௌபாயைப் போல்தான் இருந்தது. குள்ளநரிகள் செயலில் இறங்கிவிட்டன. ஓமர் டோரிஜோஸுக்கும் அவரைப் பின்பற்றி நிறுவன - அதிகார வர்க்கத்திற்கு எதிரான புனிதப் போரில் இணைந்து கொள்ள விரும்பிய ஒவ்வொருவருக்கும் விடுக்கப்பட்ட எச்சரிக்கைதான் இந்தப் படுகொலை.

ஆனால் டோரிஜோஸ் பின்வாங்கவுமில்லை, மிரட்டலுக்கு அஞ்சவுமில்லை, அவரும் சம்மர் இன்ஸ்டிடியூட் ஆப் லிங்குஸ்டிக்ஸை தன் நாட்டை விட்டு வெளியேற்றினார். பனாமா கால்வாய் ஒப்பந்தம் குறித்துத் திரும்பவும் பேச்சுவார்த்தை நடத்த வேண்டுமென்று ரீகன் அரசு கொடுத்த நிர்பந்தத்திற்கு அடிபணிய மறுத்தார்-.

ரோல்டோஸின் மரணத்திற்கு இரண்டு மாதங்களுக்குப் பின்னர் ஓமர் டோரிஜோஸின் பயங்கரக் கனவு உண்மையானது. 1981- ஜூலை 31-ஆம் தேதியன்று அவரும் ஒரு விமான விபத்தில் மரணமடைந்தார்.

லத்தீன் அமெரிக்காவும், உலகமும் மீண்டும் ஒருமுறை

பேரதிர்ச்சியடைந்தன. டோரிஜோஸ் உலகம் முழுவதும் அறியப்பட்டவர். பனாமா கால்வாயை மீட்டெடுப்பதில் அவர் காட்டிய உறுதியும், ரீகன் அரசை எதிர்த்து நிற்பதில் அவர் வெளிப்படுத்திய துணிவும் அவருக்குப் பெருமதிப்பை ஈட்டித் தந்திருந்தன. அவர் மனித உரிமைகளின் காவலர். ஈரான் ஷா உள்ளிட்ட அனைத்து அரசியல் அகதிகளையும் அன்போடு அரவணைத்தவர். நியாயத்திற்கும், சமூக நீதிக்கும் குரல் கொடுத்தவர். அமைதிக்கான நோபல் பரிசுக்கு அவர் பெயர் பரிந்துரைக்கப்படும் என்றே பலரும் எண்ணியிருந்தனர். இப்போது அவர் இறந்துவிட்டார். ‘சி.ஐ.ஏ. நடத்திய படுகொலை!’ திரும்பவும் தலைப்புச் செய்திகள்… தலையங்கங்கள்… கட்டுரைகள்…

கிரஹாம் சிரீன் ‘ஜெனரலை அறிந்து கொள்வதற்காக’ என்ற தனது நூலை இவ்வாறு தொடங்கியிருந்தார்

“ஆகஸ்ட் 1981-இல் பனாமாவிற்கு ஐந்தாவது முறையாகச் செல்வதற்காகப் புறப்பட்டுக் கொண்டிருந்தபோது என் நண்பரான ஜெனரல் டோரிஜோஸ் மரணமடைந்த செய்தி கிடைத்தது. பனாமாவின் மலைகளில் அமைந்திருந்த கேக்லெசிமோ என்ற இடத்திலிருந்த அவருக்குச் சொந்தமான வீட்டிற்கு ஒரு சிறிய விமானத்தில் சென்று கொண்டிருந்தபோது அது விழுந்து நொறுங்கியது. விமானத்தில் இருந்த ஒருவரும் உயிர் பிழைக்கவில்லை. சில நாட்கள் கழித்து அவரது மெய்க்காவலரும், கவிஞரும், பனாமா பல்கலைக்கழகத்தில் மார்க்சிய தத்துவமும், கணிதமும் போதித்து வந்த முன்னாள் பேராசிரியருமான சார்ஜென்ட் சூச்சு என்றழைக்கப்பட்ட ஜோஸ் டி ஜீஸஸ் மார்ட்டினெஸ் என்னிடம் பேசினார், “விமானத்தில் வெடிகுண்டு இருந்தது. அது இருந்தது என்பதும் எனக்குத் தெரியும். ஏன் இருந்தது என்பதைத் தொலைபேசியில் கூற முடியாது.”[1]

ஏழைகளின், ஆதரவற்ற மக்களின் நண்பன், பாதுகாவலன் என்று பெயர் பெற்ற இந்த மனிதரின் மரணத்திற்காக மக்கள் துக்கம் அனுசரித்தார்கள் சி.ஐ.ஏ.வின் நடவடிக்கைகள் குறித்துப் புலன் விசாரணை நடத்தப்பட வேண்டுமென்று வற்புறுத்தினார்கள். இந்தக் கோரிக்கை ஏற்றுக்கொள்ளப்படுவதற்குத் துளிகூடச் சாத்தியம் இல்லை. டோரிஜோஸின் எதிரிகளின் பட்டியலில் மிகவும் பலம் வாய்ந்த மனிதர்களும் இடம் பெற்றிருந்தனர். ரீகன், அவரது உதவி ஜனாதிபதி புஷ், ராணுவ அமைச்சர் வெய்ன்பெர்கர், ஏனைய இராணுவத் தளபதிகள் மற்றும் பலம் வாய்ந்த நிறுவனங்களின் தலைவர்கள் அவர் மீது கொண்டிருந்த தீராத பகைமை உலகம் அறிந்ததுதான்.

பனாமாவில் அமைந்திருந்த ஸ்கூல் ஆஃப் அமெரிக்காஸ் மற்றும் அமெரிக்க தென் பிராந்தியத் தலைமையகத்தின் வெப்ப மண்டலப் போர்முறை மையம் ஆகிய ராணுவப் பள்ளிகளை மூட வேண்டிய சூழலை உருவாக்கிய டோரிஜோஸ் - கார்ட்டர் ஒப்பந்தத்தால் ராணுவத் தளபதிகள் கடுஞ்சீற்றம் கொண்டிருந்தனர். அந்த ஒப்பந்தத்தால் மிகவும்

பாதிக்கப்பட்டவர்கள் அவர்கள்தான். ஒன்று இந்தப் புதிய ஒப்பந்தத்தோடு ஒத்துப் போவதற்கு அவர்கள் ஏதாவது புது வழி கண்டுபிடிக்க வேண்டும். அல்லது இந்த இராணுவப் பள்ளிகளுக்கு இடமளிக்கக் கூடிய இன்னொரு நாட்டைக் கண்டுபிடிக்க வேண்டும். இருபதாம் நூற்றாண்டின் இறுதிக் காலங்களில் இந்த இரண்டு வழிகளுமே சாத்தியமாகக் கூடியவையாகத் தோன்றவில்லை. எனவே அவர்களுக்கு இருந்தது ஒரே ஒரு வழிதான். டோரிஜோஸை ஒழித்துக் கட்டிவிட்டுப் பின்பு புதிய தலைவருடன் திரும்பவும் பேச்சு வார்த்தை நடத்துவது!

டோரிஜோஸைப் பல பிரம்மாண்டமான பன்னாட்டு நிறுவனங்கள் எதிரியாகக் கருதி வந்தன. அவற்றில் பல அமெரிக்க அரசியல்வாதிகளுடன் நெருக்கமான தொடர்புகள் கொண்டிருந்தன. இந்த நிறுவனங்கள் லத்தீன் அமெரிக்காவின் எண்ணெய், மரம்,. தகரம், தாமிரம், பாக்ஸைட் போன்ற இயற்கை வளங்களையும் மனித வளத்தையும் சுரண்டி வந்தன. இந்த மாபெரும் நிறுவனங்களின் பட்டியலில் தொலைத்தொடர்பு நிறுவனங்களும், கட்டுமான நிறுவனங்களும், கப்பல் கட்டுதல் போன்றவற்றில் ஈடுபட்டிருந்த நிறுவனங்களும் இடம் பெற்றிருந்தன.

அமெரிக்க அரசுக்கும், தனியார் நிறுவனங்களுக்கும் இடையே நிலவி வந்த நெருக்கமான உறவுக்கு ஓர் உதாரணம் பெக்டெல் குழுமம். எனக்கு பெக்டெலோடு நல்ல அறிமுகம் இருந்தது. நான் மெய்ன்-னில் இருந்தபோது பெக்டெலுடன் அடிக்கடி இணைந்து பணியாற்றியிருக்கிறோம். அதன் தலைமைக் கட்டடக் கலை நிபுணர் எனக்குத் தனிப்பட்ட முறையில் நெருக்கமான நண்பராவார். பெக்டெல் அமெரிக்காவில் மிகவும் செல்வாக்குள்ள ஒரு பொறியியல் மற்றும் கட்டுமான நிறுவனமாகும். அமெரிக்க அரசின் உயர் பதவிகளை வகித்து வந்த ஜார்ஜ் ஷுல்ட்ஸும், காஸ்பர் வெய்ன் பெர்கரும் பெக்டெல் நிறுவனத்தில் முக்கியப் பொறுப்புகளில் இருந்தவர்கள். ஜப்பானிய உதவியோடு ஒரு புதிய கால்வாய் கட்டும் டோரிஜோஸின் திட்டத்தை இவர்கள் அடியோடு வெறுத்தார்கள்.[2] இந்தத் திட்டம் கால்வாய் மீதான அமெரிக்க மேலாதிக்கத்தைத் தகர்த்துவிடும் என்பதோடு அது நிறைவேற்றப்பட்டால், இருபதாம் நூற்றாண்டிலேயே மிகவும் கவர்ச்சிகரமான பணம் கொழிக்கும் ஒரு திட்டம் ஜப்பானியர் கைக்குப் போவதை பெக்டெல் வெறுமனே வேடிக்கை பார்க்க வேண்டிய நிலை ஏற்பட்டுவிடும்.

டோரிஜோஸ் இந்த நபர்களை உறுதியுடன் எதிர்கொண்டார். அதை அவர் கம்பீரமாக, வசீகரமாக, அற்புதமான நகைச்சுவையுணர்வுடன் செய்து வந்தார். அவரது மரணத்திற்குப் பிறகு அவரால் முன்னுக்குக் கொண்டு வரப்பட்டவரான மனுவேல் நொரீகா தலைமைப் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். அறிவுக்கூர்மையும், அற்புதமான

நகைச்சுவையுணர்வும் கொண்ட வசீகரம் மிக்க தலைவரான டோரிஜோஸுக்கு நொரீகா சரியான வாரிசே அல்ல. அவரால் பெக்டெல்களையும், ரீகன்களையும், புஷ்களையும் எதிர்த்து நிற்கவே முடியாது என்று தான் பலரும் நினைத்தார்கள்.

டோரிஜோஸின் மரணம் தனிப்பட்ட முறையில் எனக்குள் மிகப் பெரிய பாதிப்பை ஏற்படுத்தியது. அந்த நாட்களில் அவருடனான எனது உரையாடல்களை அசை போட்டபடி பல மணி நேரங்கள் உட்கார்ந்திருப்பேன். அப்படியொரு நாளில் ஒரு செய்திப் பத்திரிகையில் வெளி வந்திருந்த டோரிஜோஸின் படம் என் கண்களில் பட்டது. அதிலிருந்து என் விழிகளை அகற்றவே முடியவில்லை. அந்தப் படம் முதன்முதலாக நான் பனாமா சென்றபோது வாடகைக் காரிலிருந்து மழையினூடாகப் பார்த்த அவரது கட் அவுட்டை நினைவுபடுத்தியது. “ஓமரின் லட்சியம் விடுதலை. லட்சியத்தைக் கொல்லும் ஏவுகணை இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை.'' அந்தப் புயல் வீசிய இரவில் இந்தச் சொற்களை முதன்முதலாகப் படித்தபோது என்னுள் ஓடிய நடுக்கத்தை திரும்பவும் ஒருமுறை உணர்ந்தேன்.

பனாமாவிற்கு நான் முதன்முதலாக வந்தபோது டோரிஜோஸ் பனாமா கால்வாயை அதன் உண்மையான உரிமையாளர்களான பனாமாவிற்கு மீட்டுத் தருவார் என்றோ, லத்தீன் அமெரிக்க சோஷலிஸ்டுகளுக்கும், சர்வாதிகாரிகளுக்கும் இடையே நிலவி வந்த முரண்பாடுகளைக் களைய அவர் மேற்கொண்ட முயற்சிகள் அவரது உயிருக்கே உலை வைக்கக்கூடும் என்றோ கற்பனையில் கூட நினைத்துப் பார்த்திருக்கவில்லை.[3] சி.ஐ.ஏ. தொடர்ச்சியாக அரங்கேற்றி வரும் படுகொலைகளின் பட்டியலில் 42 வயதேயான டோரிஜோஸின் பெயரும் இணைந்துவிடும் என்பதையும்,. அமெரிக்கர்களைத் தவிர உலகம் முழுவதுமுள்ள மக்கள் இப்படுகொலையின் பின்னுள்ள உண்மைகளை அறிந்து கொள்வார்கள் என்பதையும் அப்போது நான் நினைத்தே பார்த்திருக்கவில்லை.

டோரிஜோஸ் வாழ்ந்திருந்தால் மத்திய, தென் அமெரிக்காவைத் தற்போது பீடித்துள்ள வன்முறைக்கு முடிவு கட்டக் கட்டாயம் முயன்றிருப்பார். ஈக்வடார், பெரு, கொலம்பியாவின் அமேசான் பகுதிகளைப் பன்னாட்டு எண்ணெய் நிறுவனங்கள் அழிப்பதைக் கட்டுப்படுத்த ஏதாவது ஏற்பாட்டை உருவாக்க முயன்றிருப்பார் என்றே தோன்றுகிறது. வாஷிங்டனால் பயங்கரவாதம் என்றும், போதை மருந்துப் போர்கள் என்றும் முத்திரை குத்தப்பட்ட உக்கிரமான மோதல்களை அவரது முயற்சி தவிர்த்திருக்கலாம். டோரிஜோஸ் உயிர் வாழ்ந்திருப்பதையும், உலக நாடுகளின் தலைவர்களுக்கு முன்மாதிரியாக உருவெடுப்பதையும் ஒருபோதும் சி.ஐ.ஏ. வாலும், தேசியப் பாதுகாப்பு நிறுவனத்தாலும், பொருளாதார அடியாட்களாலும் அனுமதிக்கவே முடியாது.

[1] Graham Greene, Getting to know the General (New York: Pocket Books, 1984), p.11.

[2] ஜார்ஜ் ஷுல்ஸ் கருவூலத்துறைச் செயலராகவும், பொருளாதாரக் கொள்கைக் குழுவின் தலைவராகவும் நிக்ஸன் மற்றும் ஃபோர்டு ஆட்சிக் காலத்தில் 1972—74 வரை பணியாற்றினார். 1974—1982 வரை பெக்டல் நிறுவனத்தின் நிர்வாகத் தலைவராக அல்லது தலைவராகச் செயலாற்றினார். 1982—89 வரை ரீகன் மற்றும் புஷ் ஆட்சிகளின் போது உள்துறைச் செயலராகப் (அமைச்சராக) பணியாற்றினார். காஸ்பர் வெயின்பெர்கர், நிக்ஸன் - -ஃபோர்டு ஆட்சிக் காலத்தில் நிர்வாக மற்றும் பட்ஜெட் துறையின் இயக்குநராகவும், சமூக நலம் கல்வி, உடல் நலம் சார்ந்த துறைகளின் அமைச்சராகவும் 1973—75 வரை செயலாற்றினார். 1975—80 வரை பெக்டல் நிறுவனத்தின் துணைத் தலைவராகப் பணியாற்றினார். 1980—87 காலத்தில் ரீகன் - -புஷ் ஆட்சியில் பாதுகாப்பு அமைச்சராகப் பணியாற்றினார்.

[3] 1973—இல் நடந்த வாட்டர்கேட் ஊழல் விசாரணைகளின்போது சாட்சியமளித்த ஜான்டீன் முதன்முதலாக டோரிஜோஸைக் கொலை செய்ய அமெரிக்கா தீட்டிய திட்டங்கள் குறித்து வாக்குமூலம் அளித்தார். 1975-ல் சி.ஐ.ஏ.வின் நடவடிக்கைகள் குறித்து பாராளுமன்ற உறுப்பினர் ஃப்ராங்க் சர்ச்சின் தலைமையில் பாராளுமன்றம் விசாரணை நடத்திய போது டோரிஜோஸ் மற்றும் நொரீகாவைக் கொல்லும் திட்டம் குறித்து மேலும் ஆவணங்களும் வாக்குமூலங்களும் அளிக்கப்பட்டன. உதாரணத்திற்குப் பார்க்க: Eisner, The Memories of Manuel Noriega, America’s Prisoner (New York: Random House, 1997), p.107.

# 28

# எனது நிறுவனமும், என்ராணும் ஜார்ஜ். டபிள்யூ. புஷ்ஷும்

டோரிஜோஸ் மரணமடைந்த காலகட்டத்தில் பல மாதங்களாக நான் பவுலாவுடன் தொடர்பு கொள்ளவேயில்லை. அந்த நேரத்தில் நான் நட்புக் கொண்டிருந்த பல பெண்களில் லின்பிரட் கிரேன்ட்டும் ஒருத்தி. அவள் மெய்ன்-னில் சுற்றுச்சூழல் குறித்த விஷயங்களைத் திட்டமிடுபவளாகப் பணியாற்றி வந்தாள். அவளது தந்தை பெக்டெலின் தலைமைக் கட்டடக்கலை நிபுணர். பவுலா ஒரு கொலம்பியப் பத்திரிகையாளருடன் நெருங்கிப் பழகி வந்தாள். எங்களுக்கிடையே இருந்து வந்த காதலைத் துண்டித்துக் கொள்வது என்று நாங்கள் முடிவு செய்திருந்தாலும்கூட எங்கள் நட்பு தொடர்ந்தே வந்தது.

நான் செய்து வந்த நிபு-ணர் சாட்சியம் அளிக்கும் வேலையும் எனக்குத் தடுமாற்றத்தையே கொடுத்து வந்தது. அதிலும் சீ புரூக் அணுமின் நிலையம் அமைக்கப்படுவதை நியாயப்படுத்த வேண்டி வந்தபோது மிகுந்த மனப்போராட்டத்திற்குப் பிறகு வென்றெடுத்த விடுதலையைத் திரும்பவும் இழந்துவிட்டது போல எனக்கு அடிக்கடி தோன்றியது. இந்தக் காலகட்டத்தில்தான் என் உதவிக்கு லின்பிரட் வந்து சேர்ந்தாள். அவள் ஓர் உறுதி வாய்ந்த சுற்றுச்சூழல்வாதி; அதே நேரம் தொடர்ந்து அதிகரித்து வரும் மின்தேவை பூர்த்தி செய்யப்பட வேண்டும் என்பதையும் புரிந்து கொண்டவள். லின்பிரட், சான்பிரான்ஸிஸ்கோவின் கிழக்கே உள்ள பெர்க்கலே பகுதியில் வளர்ந்தவள், அங்கேயே படித்துப் பட்டம் பெற்றவள். சுதந்திரமான சிந்தனையுடைய லின் பிரட்டின் பார்வை என் பெற்றோர் மற்றும் ஆன்-னின் தூய்மைவாத எண்ணங்களிலிருந்து மிகவும் வேறுபட்டிருந்தது.

நாங்கள் இருவரும் மென்மேலும் நெருங்கி வந்தோம். நாங்கள் இருவரும் ஒருமுறை என் படகில் அட்லாண்டிக் கடற்கரை ஓரமாக ப்ளோரிடாவை நோக்கிப் பயணம் மேற்கொண்டோம். இடையிடையே துறைமுகங்களில் படகை நிறுத்திவிட்டு நிபுணர் சாட்சி என்ற முறையில் வாக்குமூலம் அளிப்பதற்காக நான் விமானத்தில் சென்று வந்தேன். பயணத்தின் முடிவில் ஃப்ளோரிடாவின் மேற்கு பாம் கடற்கரைக்குச் சென்று ஓர் அடுக்குமாடிக் கட்டடத்தில் இருந்த ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டோம். பின்பு மணம் புரிந்து கொண்டோம். 1982, மே 17-இல் எங்கள் மகள் ஜெஸ்ஸிகா பிறந்தாள். அப்போது எனக்கு வயது 36. பிரசவ விடுதிக்கு வெளியே என்னைப் போல் பதற்றத்துடன்

நடமாடிக் கொண்டிருந்தவர்களில் பலர் என்னை விட வயதில் மிகவும் சிறியவர்கள்.

சீ புரூக் அணு மின் நிலைய விஷயத்தில் என் வேலை அணுசக்தி மின் உற்பத்திக்கு மிகவும் ஏற்றதும் சிக்கனமானதுமாகும் என்ற நியூ ஹாம்ஷயர் பொதுச் சேவை ஆணையத்தை நம்பச் செய்வதாகும். அணு மின் நிலையம் அமைப்பதற்கு இந்த ஆணையத்தின் அனுமதி அவசியமானதாக இருந்தது. துரதிருஷ்டவசமாக இந்த விஷயத்தை ஆய்வு செய்யச் செய்ய என் வாதங்கள் சரியானவைதானா என்று எனக்கே சந்தேகம் வரத் தொடங்கிவிட்டது. அணு சக்தி தொடர்பான கருத்துகள் அக்காலத்தில் தொடர்ந்து மாறி வந்தன. அணுசக்தி தொடர்பான ஆய்வுகளின் வளர்ச்சி அது பற்றிய ஆய்வுகளிலும் பிரதிபலித்தது. அணு சக்தியைவிட மற்ற ஆற்றல்கள் (energy) தொழில்நுட்ப ரீதியில் உயர்ந்தவையாகவும் சிக்கனமானவையாகவும் இருப்பது மேலும் மேலும் துலக்கமாகி வந்தது.

அணுசக்தி பாதுகாப்பானது என்ற பழைய கோட்பாட்டுக்கு எதிராகத் தராசு சாயத் தொடங்கியது. அணு மின் நிலையங்களில் உள்ள பாதுகாப்பு வசதிகள், தவறுகள் செய்யக்கூடிய மனித இயல்பு, கருவிகள் தேய்வடையும் வாய்ப்பு, அணு மின் நிலையங்களில் தேங்கும் கழிவுகளை அகற்றுவதற்கு முறையான வசதிகள் இன்மை போன்றவை குறித்து ஆழமான கேள்விகள் எழுப்பப்பட்டன. தனிப்பட்ட முறையில் நான் மிகுந்த சங்கடமடைந்தேன். அதே நேரத்தில் புதிதாக உருவாகி வந்த சிற்சிலத் தொழில்நுட்பங்கள் உண்மையிலேயே சுற்றுச்சூழலுக்கு ஊறு விளைவிக்காத வகையில் மின் உற்பத்தி செய்வதற்கு வாய்ப்புகளை அளிக்கக் கூடியவையாக உள்ளன என்பதில் நம்பிக்கை கொள்ளத் தொடங்கினேன். குறிப்பாகக் கழிவுப் பொருட்களிலிருந்து மின்சாரம் உற்பத்தி செய்யும் முறை நம்பிக்கையளிக்கக் கூடியதாக இருந்தது.

ஒரு நாள் நியூ ஹேம்ஷயர் யுடிலிடி நிறுவனத்தின் மேலதிகாரிகளிடம் இனிமேல் அவர்கள் சார்பாகச் சாட்சியம் அளிக்க என்னால் முடியாது என்று தெரிவித்து விட்டேன். வெறும் பேச்சளவில் இருந்து வந்த சில புதிய தொழில்நுட்பங்களை நடைமுறைப்படுத்துவதற்கு ஒரு நிறுவனம் தொடங்குவதென்று முடிவு செய்தேன். எங்கள் குடும்பத்தின் எதிர்காலம், இப்படிப்பட்ட புது முயற்சிகளுக்கே உரிய நிச்சயமற்ற தன்மை போன்றவை குறித்த கவலைகள் இருந்தபோதிலும் லின்பிரட் என்னை முழுமையாக ஆதரித்தாள்.

ஜெஸ்ஸிகா பிறந்து பல மாதங்கள் கழித்து, சுற்றுக்சூழலுக்குக் கேடு விளைவிக்காத வகையில் ஆற்றல் (energy) உற்பத்தி நிலையங்களை

உருவாக்குவதையும், பரப்புவதையும் முதன்மை நோக்கங்களாகக் கொண்ட இன்டிபென்டென்ட் பவர் சிஸ்டம்ஸ்[1] (Independant Power Systms - IPS) என்ற நிறுவனத்தைக் தொடங்கினேன். இது போன்ற முயற்சிகள் தோல்வியடைவதற்கான வாய்ப்புகளே அதிகமாக இருந்தன. இதே துறையில் ஈடுபட்டிருந்த எங்கள் போட்டியாளர்கள் பலர் பெரும்பாலும் தோல்வியையே தழுவியிருந்தனர். 'தற்செயலாக' கிடைத்த சில உதவிகளால் எங்களுக்கு அந்த நிலை ஏற்படவில்லை. எப்போழுதெல்லாம் நெருக்கடிகள் தோன்றினவோ அப்போதெல்லாம் 'தற்செயலாக' யாராவது தோன்றி எங்களை அதிலிருந்து மீட்டனர். பொருளாதார அடியாளாக நான் புரிந்த சேவைகளுக்காகவும், வாயைத் திறப்பதில்லை என்று நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றி வருவதற்காகவும் அளிக்கப்பட்ட சன்மானங்கள்தான் இந்தத் 'தற்செயல்' நிகழ்ச்சிகள் என்பதில் எனக்குச் சந்தேகமேயில்லை.

புரூனோ ஜம்பாட்டி, இண்டர் - அமெரிக்கன் வளர்ச்சி வங்கியில் ஓர் உயர்ந்த பொறுப்பை ஏற்றுக்கொண்டிருந்தார். என்னுடைய ஐ.பி.எஸ். நிறுவனத்தின் இயக்குநர் குழுவில் பணியாற்றவும், அதை வீழ்ச்சியிலிருந்து மீட்க நிதியுதவி ஏற்பாடு செய்யவும் அவர் முன்வந்தார். பேங்கர்ஸ் டிரஸ்ட், ஈ.எஸ்.ஐ. எனெர்ஜி, புர்டென்லுயல் இன்ஷூரன்ஸ் கம்பெனி, சாட்பர்ன் - பார்கே, ரிலே ஸ்டோகர் கார்ப்பரேஷன் போன்ற நிறுவனங்களிடமிருந்து எங்களுக்கு உதவி கிடைத்தது. இதில் சார்ட் - பர்ன் பார்க்கே என்பது ஒரு சட்ட நிறுவனம் ஆகும். அதில் முன்னாள் அமெரிக்க செனட்டரும், ஜனாதிபதி வேட்பாளருமான எட் முஷ்கி ஒரு பங்குதாரர். ரிலே ஸ்டோகர் கார்ப்பரேஷன் ஆஷ்லாண்ட் எண்ணெய் நிறுவனத்திற்குச் சொந்தமான ஒரு பொறியியல் நிறுவனமாகும். இது மிகவும் நேர்த்தியான, புதுமையான கொதிகலன்களை உருவாக்கியது. அமெரிக்க நாடாளுமன்றத்திலிருந்து எங்களுக்கு ஆதரவு கிடைத்தது. ஐ.பி.எஸ்-க்கு ஓர் குறிப்பிட்ட வரியிலிருந்து விலக்களிக்கப்பட்டது. இந்த வரிவிலக்கு எங்கள் போட்டியாளர்களுக்குக் கிடைக்காத ஒரு சாதகமான அம்சமாகும்.

1986 - இல் ஐ.பி.எஸ்.ஸும், பெக்டெலும் ஒரே நேரத்தில் ஆனால் தனித்தனியாக, அமில மழையை உருவாக்காமல் கழிவு நிலக்கரியை எரிக்க வல்ல, மிகவும் புதுமையான, கலைநுட்பம் வாய்ந்த தொழில் நுட்பங்களைப் பயன்படுத்தி மின் நிலையங்களை அமைக்கத் தொடங்கின. அடுத்து வந்த நான்காண்டுகளில் இந்த இரு நிறுவனங்களும் இத்துறையையே அடியோடு மாற்றியமைத்துவிட்டன. கழிவுப் பொருட்கள் என்று ஒதுக்கப்பட்டவற்றிலிருந்து மின்சாரம் உற்பத்தி செய்யலாம் என்பதும், அமில மழையை ஏற்படுத்தாமல் நிலக்கரியை எரிக்கலாம் என்பதும் நிரூபிக்கப்பட்டன. நீண்ட காலமாக சேவைத் துறைகளில் ஈடுபட்டு வந்த நிறுவனங்கள் இதெல்லாம் சாத்தியமே இல்லை என்று கூறிவந்தது பொய்யாக்கப்பட்டதன்

காரணமாக புதிய மாசுக் கட்டுப்பாட்டுச் சட்டங்களுக்கு வித்திடப்பட்டது. இதுபோன்ற நிரூபிக்கப்படாத தொழில்நுட்பங்களின் அடிப்படையில் செயல்பட்டு வரும் சிறிய நிறுவனங்கள் வால் ஸ்ட்ரீட்டிலிருந்தும், மற்ற மரபு ரீதியான நிதி நிறுவனங்களிலிருந்தும் உதவி பெற முடியும் என்பது நிரூபிக்கப்பட்டது. ஐ.பி.எஸ். நிகழ்த்திக் காட்டிய இன்னொரு சாதனை மின் உலையிலிருந்து வெளியேறும் வெப்பத்தை ,குளிர்விக்கும் குளங்களுக்குள்ளும், கோபுரங்களுக்குள்ளும் செலுத்துவதற்குப் பதிலாக மூன்றரை ஏக்கர் ஹைட்ரோபோனிக் கிரீன் ஹவுஸுக்குள் செலுத்தும் முறையைச் சாத்தியமாக்கியதாகும்.

இந்த நிறுவனத்தின் தலைவராகப் பணியாற்றிய காலகட்டத்தில் ஆற்றல் வளத்துறையை உள்ளும் புறமும் நன்றாக அறிந்து கொண்டேன். இந்தத் துறையிலிருந்த செல்வாக்கு மிக்க பெரு நிறுவனங்களின் நிர்வாகிகள், வங்கியாளர்கள், வழக்குரைஞர்கள் போன்றவர்களின் அறிமுகம் எனக்குக் கிடைத்தது. எனக்கு இன்னாரு சாதகமான அம்சமும் இருந்தது. என் மாமனார் பெக்டெலில் தலைமைக் கட்டடக் கலை நிபுணராக இருந்து வருபவர். சவூதி அரேபியாவில் ஒரு நகரத்தைக் கட்டி வருபவர் என்பதுதான் அது. லின்பிரட் சான் பிரான்ஸிஸ்கோவில் இருந்த பெக்டெலின் உலகத் தலைமையகத்திற்கு அருகே பிறந்து கார்ப்பொரேட் குடும்பத்தில் ஒருத்தியாகவே வளர்ந்தவள். பட்டம் பெற்ற பிறகு அவள் ஏற்றுக்கொண்ட முதல் வேலையும் பெக்டெலில்தான்.

மின்சாரம் உள்ளிட்ட ஆற்றல் வளத்துறை மிகப்பெரிய மாற்றங்களுக்கு உள்ளாகி வந்தது. உள்ளூர் மட்டத்தில் முன்பு ஆதிக்கம் செலுத்தி வந்த சிறிய நிறுவனங்களை விழுங்கப் பெரிய பொறியியல் நிறவனங்கள் முயன்றன. விதிமுறைகளைத் தளர்த்துவது என்பது சர்வசாதாரண விஷயமாக மாறிப் போனது. விதிகள் ஓரிரவில் தளர்த்தப்பட்டன. நீதிமன்றங்களையும், நாடாளுமன்றத்தையும் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்வதற்கான வாய்ப்புகளை இந்தச் சூழல் பன்னாட்டு நிறுவனங்களுக்கு அள்ளிக் கொடுத்தது. ஆற்றல் வளத் துறையில் அக்காலத்தில் நிலவிய அராஜகத்தைத் தொழில்துறைப் பண்டிதர்கள் மேற்கு அமெரிக்காவில் முன்பு நிலவிய காட்டுமிராண்டித்தனமான சூழலோடு ஒப்பிட்டனர்.

மெய்ன்-னும் இதற்குப் பலியானது. புரூனோ முன்பே கூறியது போல மெக்ஹால் உண்மை நிலையை உணர்ந்து கொள்ளவேயில்லை. அதை அவரிடம் கூறும் துணிவும் யாருக்கும் இல்லை. பால் பிரிட்டியால் ஒருபோதும் தன் கட்டுப்பாட்டை நிலைநாட்ட முடியவில்லை. மாறி வரும் சூழலைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள மெய்ன் தவறியேதாடு வேறு சில மிகப்பெரிய தவறுகளும் இழைத்தது. புரூனோவின் காலத்தில் உச்சக்கட்ட லாபத்தை

எட்டிய மெய்ன், அடுத்து வந்த சில ஆணடுகளில் தனது பொருளாதார அடியாள் பாத்திரத்தைக் கைகழுவியது. கடும் நிதி நெருக்கடியில் சிக்கிக் கொண்ட மெய்ன் - ஐ அதன் பங்குதாரர்கள் இன்னொரு பெரிய நிறுவனத்திற்கு விற்றுவிட்டனர். அந்த நிறுவனம் சூழலைச் சரியாகக் கையாளத் தொடங்கியது.

1980 - இல் ஒரு பங்கிற்கு முப்பது டாலர்கள் எனக்குக் கிடைத்தன. ஆனால் நான்காண்டுகள் கழித்து மற்ற பங்குதாரர்கள் தங்கள் பங்குகளை இதில் பாதி விலைக்கு விற்க நேர்ந்தது. நூற்றாண்டு கால பெருமை மிகுந்த வரலாறு அவமானகரமான முடிவுக்கு வந்தது. மெய்ன் மூடப்படுவது எனக்கு வருத்தமளித்தாலும் என் முடிவு சரியானது என்ற எண்ணமே மேலோங்கியது. புதிய நிர்வாகம் மெய்னின் பெயரைச் சில காலம் பயன்படுத்தி விட்டுப் பின்பு மாற்றிவிட்டது. உலகம் முழுவதும் புகழ் பெற்றிருந்த சின்னம் நாளாவட்டத்தில் மறக்கப்பட்டு விட்டது.

மாற்றங்களைச் சரியாகக் கையாளத் தெரியாத ஒரு நிறுவனத்திற்குச் சரியான எடுத்துக்காட்டு மெய்ன். ஆனால் எல்லா மாற்றங்களையும் மிகச் சரியாகக் கையாண்டு அசுர வளர்ச்சியை ஒரு நிறுவனம் எட்டியது. அதுதான் என்ரான்! திடீரென்று முளைத்ததைப் போல் தோன்றிய என்ரான் ஒரு புயலைப் போல மாபெரும் ஒப்பந்தங்களை விழுங்கத் தொடங்கியது. பெரும்பாலும் தொழில் நிறுவனங்களின் நிர்வாகிகள் கூட்டங்களில் தொடக்கத்தில் சிறிது நேரம் பொதுவான விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பார்கள். அந்த நாட்களில் இந்த அரட்டைகள் அனைத்தையும் என்ரானே முழுமையாக ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது. இந்த மாபெரும் வெற்றியின் ரகசியங்களை நிறுவனத்திற்கு வெளியே இருந்தவர்கள் யாராலும் புரிந்து கொள்ள முடியவில்லை. உள்ளே இருந்தவர்களோ பொருள் பொதிந்த புன்னகையோடு நிறுத்திக் கொண்டனர். வாயைத் திறக்கவேயில்லை. எப்போதாவது வற்புறுத்தப்பட்டால், நிர்வாகத்தில் புதிய அணுகுமுறைகளைப் பின்பற்றுவது குறித்தும், உலகம் முழுவதும் உள்ள நாடுகளின் அதிகார மையங்களில் ஊடுருவக்கூடிய நிர்வாகிகளைப் பணியில் அமர்த்துவது குறித்தும் அவர்கள் பேசினார்கள்.

எனக்கு இதெல்லாம் பழைய பொருளாதார அடியாட்களின் தந்திரங்களுக்குப் புதிய வடிவம் அளிப்பது போல்தான் தோன்றியது. உலகப் பேரரசு பாய்ச்சலில் முன்னேறி வந்தது.

துணை ஜனாதிபதியின் மகனான ஜார்ஜ். டபிள்யூ. புஷ் சம்பந்தப்பட்ட விவகாரங்கள் எண்ணெய் மற்றும் சர்வதேசச் சூழலில் அக்கறை கொண்டிருந்த என்னைப் போன்றவர்களின் கவனத்தைக் கவர்ந்தன. அவர் தோற்றுவித்த முதல் ஆற்றல் வள நிறுவனமான அர்புஷ்டோ (புஷ் என்பதின் ஸ்பானிஷ் வடிவம்) தோல்வியடைந்தது.

ஆனால் 1984-இல் ஸ்பெக்ட்ரம் உடன் இணைந்ததன் காரணமாகக் காப்பாற்றப்பட்டது. 1986-இல் அடியோடு மூழ்கிப் போகும் நிலையை எட்டியிருந்த ஸ்பெக்ட்ரம், ஹார்கேன் எனர்ஜி கார்ப்பொரேஷனால் வாங்கப்பட்டது. ஜார்ஜ். டபிள்யூ. புஷ் அதன் போர்டு உறுப்பினராகவும், ஆலோசகராகவும் தொடர்ந்து செயல்பட அனுமதிக்கப்பட்டார். அதற்கு அவருக்கு ஆண்டு ஒன்றிற்கு 1,20,000 டாலர் சம்பளம் வழங்கப்பட்டது.[2]

இளைய புஷ்ஷின் சாதனைகளுக்கும் அவருக்கு வழங்கப்பட்ட பதவிகளுக்கும் சம்பந்தமே இல்லை என்றாலும் அவரது தந்தை உதவி ஜனாதிபதியாக இருந்ததற்கும் இந்தப் பதவிகளுக்கும் கட்டாயம் சம்பந்தம் இருந்திருக்கும் என்று நாங்கள் ஊகித்தோம். ஜார்ஜ் புஷ் ஹர்கேன் எனர்ஜி நிறுவனத்தின் ஆலோசகர் ஆனதுமே அந்நிறுவனம் முதன்முதலாகச் சர்வதேச அளவில் கிளைத்துப் பரவத் தொடங்கியது. மத்தியக் கிழக்கில் எண்ணெயில் பெரும் முதலீடுகள் செய்யவும் தொடங்கியது. இது தற்செயலானது அல்ல என்பது தெளிவாகத் தெரிந்தது. “நிறுவனத்தில் புஷ் பதவி ஏற்றுக்கொண்டதும் ஹர்கேனுக்கு அற்புதமான விஷயங்கள் நடக்கத் தொடங்கின. புதிய முதலீடுகள்... எதிர்பாராத இடங்களிலிருந்து நிதியுதவி... எண்ணெய்க்காகத் துளையிடும் உரிமைகள்...’’ என்று ‘வேர்னிடி பேர்’ ஏடு எழுதியது.[3]

“1989-இல் அமோகோ நிறுவனம் கடலில் எண்ணெய் தேடும் உரிமைகளுக்காகப் பஹ்ரைய்ன் அரசுடன் பேச்சுவார்த்தை நடத்தி வந்தது. மூத்த புஷ் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். புதிய அமெரிக்கத் தூதரான சார்லஸ் ஹோஸ்ட்லருக்கு அரசுத்துறை ஆலோசகராக நியமிக்கப்பட்ட மைக்கேல் அமீன், பஹ்ரைய்ன் அரசு மற்றும் ஹர்கேன் எனர்ஜி நிறுவனத்திற்கு இடையேயான சந்திப்புகளை ஏற்பாடு செய்தார். திடீரென்று அமோகோ வெளியேற்றப்பட்டு ஹர்கேன் அந்த இடத்தைப் பிடித்துக்கொண்டது. அதற்கு முன்பு ஹர்கேன் அமெரிக்காவுக்கு வெளியே எண்ணெய்க்காகத் துளையிடும் வேலையில் ஈடுபட்டதேயில்லை. தவிர கடலில் எண்ணெய் தேடும் வேலையிலும் ஒருபோதும் ஈடுபட்டதே கிடையாது. இருந்தபோதிலும் அரபு உலகில் யாருக்கும் கிடைக்காத சிறப்பு உரிமைகளை அது பஹ்ரைனில் பெற்றது. அடுத்த சில வாரங்களில் ஹர்கேன் எனர்ஜியின் பங்குகளின் விலை இருபது சதவீதம் அதிகரித்தது. 4.50 டாலராக இருந்த ஒரு பங்கின் விலை 5.50 டாலராக உயர்ந்தது.[4]

ஆற்றல் வளத்துறையில் பழம் தின்று கொட்டை போட்ட ஆட்களுக்குக்கூட பஹ்ரைனில் நடந்தது அதிர்ச்சியளித்தது. “அவர் அப்பா பதவிக்கு ஆபத்து ஏற்படுத்தி விடக்கூடிய எதையும் இளைய புஷ் செய்து விடக்கூடாது என்று நினைக்கிறேன்’’ என்றார் குடியரசுக் கட்சியின் முக்கியமான ஆதரவாளரும், இத்துறையில் அனுபவம்மிக்க வழக்குரைஞருமான என் நண்பர் ஒருவர். அப்போது நாங்கள் வால்

ஸ்ட்ரீட்டின் ஒரு மூலையிலிருந்த மது விடுதியில் உட்கார்ந்து மது அருந்திக் கொண்டிருந்தோம். அவர் வருத்தத்துடன் தன் அச்சத்தை என்னிடம் பகிர்ந்து கொண்டார். “மகனது தொழில் ஜனாதிபதி பதவியை ஆபத்திற்குள்ளாக்கிக் கொள்ளக்கூடிய அளவிற்கு முக்கியமானதா என்ன?’’

இந்த விஷயத்தில் என் நண்பர் அளவிற்கு நான் அதிர்ச்சியடையவில்லை. என் பார்வை வேறுவிதமாக இருந்தது. குவைத், சவூதி அரேபியா, எகிப்து, ஈரான் நாடுகளின் அரசுகளுக்காக நான் வேலை செய்திருக்கிறேன். மத்தியக் கிழக்கு அரசியல் எனக்குப் பழக்கமானதுதான். என்ரான் நிர்வாகிகளைப் போலவே புஷ்ஷும் பொருளாதார அடியாட்களின் வலைப்பின்னலில் அங்கம் வகிப்பவர்தான் என்பதை நான் அறிந்திருந்தேன். அவர்கள் அனைவருமே பழமைவாத நிலப்பிரபுக்களும், பண்ணை எஜமானர்களும்தான்.[5]

[1] ஐ.பி.எஸ். ஆர்ச்பால்டு பவர் கார்ப்பரேஷன் மற்றும் அதன் தலைமை நிர்வாகி ஜான் பெர்க்கின்ஸ் பற்றிய மேல் விவரங்களுக்குப் பார்க்க: Jack M. Daly and Thomas J. Duffy, “”Burning Coal’s Waste at Archbald,’’ Civil Engineering, July 1988; Vince Coveleskie, “”Co-Generation Plant Attributes Cited,’’ The Scranton Times, October 17, 1987; Robert Curran, “”Archbald Facility Dedicated,’’ Scranton Tribune, October 17, 1987; “”Archibald Plant will Turn Coal Waste into Power’’, Citizen’s Voice, Wilkes-Barre, PA, June 6, 1988; “”Liabilities to Assets: Culm to Light, Food,’’ editorial, Citizen’s Voice, Wilkes-Barre, PA, June 7, 1988.

[2] Joe Conason, “”The George W. Bush Success Story’’, Harpers Magazine, February 2000; Craig Unger, “”Saving the Saudis,’’ Vanity Fair, October 2003, p. 165.

[3] Craig Unger, “”Saving the Saudis’’, Vanity Fair, October 2003, p 178.

[4] See George Lardner Jr. and Lois Romano, “”The Turning Point After Coming Up Dry,’’ Washington Post, July 30, 1999; Joe Conason, “”The George W.Bush Success Story,’’ Harpers Magazine, February 2000; and Sam Parry, “”The Bush Family Oiligarchy - Part Two: The Third Generation,’’ http://www.new netizen.com/presidential bushoiligarchy.htm (accessed April 19, 2002).

# 29

# நான் லஞ்சம் வாங்குகிறேன்

இந்தக் காலகட்டத்தில் உலகப் பொருளாதாரத்தில் ஒரு புது யுகத்திற்குள் நாம் நுழைந்து விட்டதை நான் உணர்ந்தேன். எனது கதாநாயகர்களில் ஒருவரான ராபர்ட் மெக்னமாரா பாதுகாப்பு அமைச்சர் பொறுப்பையும், உலக வங்கித் தலைவர் பதவியையும் ராஜினாமா செய்தபோது கட்டவிழ்த்து விடப்பட்ட நிகழ்வுகள் பெரும் பீதியை ஏற்படுத்துவனவாக அமைந்தன. மெக்னமாராவின் கெனீசியன் பாணி பொருளாதார அணுகுமுறையும் உக்கிரமான தலைமைக்கு அவர் கொடுத்த ஆதரவும் பெரிய அளவில் ஏற்றுக் கொள்ளப்பட்டன. பல்வேறு வகைப்பட்ட தொழில் துறைகளைச் சேர்ந்த பல்வேறு வகைப்பட்ட நிர்வாகிகளையும் தன்னுள் அடக்கிக் கொள்ளும் விதத்தில் பொருளாதார அடியாட்கள் கோட்பாடு விரிவடைந்தது. இந்தப் புதிய வகைப் பொருளாதார அடியாட்களான நிர்வாகிகள் ஒருவேளை தேசியப் பாதுகாப்பு நிறுவனத்தில் பயிற்சி பெறாமலிருக்கலாம். ஆனால் அவர்கள் செய்து வந்த பணியில் எந்த வேறுபாடும் இல்லை.

பழைய தலைமுறை பொருளாதார அடியாட்களுக்கும் தொழில் துறை நிர்வாகிகளாக உள்ள புதிய தலைமுறை பொருளாதார அடியாட்களுக்கும் உள்ள ஒரே வேறுபாடு சர்வதேச வங்கித் துறையிடமிருந்து வரும் பணத்தோடு தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டிய அவசியம் இவர்களுக்கு இல்லை என்பதுதான். பழைய தலைமுறை இன்னும் மோசமான, வஞ்சகமான விஷயங்களை செயல்படுத்தத் தொடங்கியது. 1980-களில் இடைநிலை அதிகாரிகளாக இருந்து படிப்படியாக உயர்ந்த இளம் ஆண்களும் பெண்களும், வெற்றி அனைத்து வழிமுறைகளையும் நியாயப்படுத்திவிடும் என்பதில் நம்பிக்கை கொண்டிருந்தார்கள். லாபத்தை அதிகரித்துக் கொள்வதற்கான ஒரு வழிதான் உலகப் பேரரசு.

நான் தொடர்பு கொண்டிருந்த ஆற்றல் வளத் துறையிலும் இந்தப் புதிய போக்குகள் பாதிப்பை ஏற்படுத்தத் தொடங்கின. 1978-இல் நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட பொதுச் சேவைக் கட்டுப்பாட்டுச் சட்டம் பல சட்டச் சிக்கல்களைச் சந்தித்து இறுதியாக 1982-இல் சட்டமானது. என்னுடையதைப் போன்ற சிறிய, சுதந்திரமான நிறுவனங்களை ஊக்குவிப்பதற்காகவும், எரிசக்திக்கான மாற்று முறைகளை வளர்த்தெடுப்பதற்காகவுமே இந்தச் சட்டம் கொண்டு வரப்பட்டது. இச்சட்டப்படி சிறிய நிறுவனங்கள் உற்பத்தி செய்யும் மின் ஆற்றலைப் பெரிய நிறுவனங்கள் நல்ல நியாயமான விலைக்கு வாங்க

வேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டது. முழுவதும் பெட்ரோலியத்தையே சார்ந்து இருப்பதைக் குறைக்க எடுக்கப்பட்ட ஒரு நடவடிக்கையே இப்புதிய சட்டம். பெட்ரோலியத்திற்கு மாற்றாக அமையக்கூடிய வேறு ஆற்றல்களைப் பயன்பாட்டுக்குக் கொண்டு வருவதற்காகவும் அமெரிக்கர்களின் தொழில்முனையும் திறனுக்கு அடிப்படையான சுதந்திரமான நிறுவனங்களின் (பன்னாட்டு நிறுவனங்கள் அல்லாத) வளர்ச்சியை ஊக்குவிப்பதற்காகவுமே இச்சட்டம் கொண்டு வரப்பட்டது. ஆனால் உண்மையில் நடந்ததென்னவோ முற்றிலும் வேறான ஒன்று.

1980-களிலும் 90-களிலும் தொழில்முனைவை ஊக்குவிப்பதைவிட, நிறுவனங்களுக்கு விதிக்கப்பட்டிருந்த கட்டுப்பாடுகளை நீக்குவதற்கே முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. தனித்து இயங்கி வந்த பல சிறிய நிறுவனங்கள் பெரும் பொறியியல், கட்டுமான நிறுவனங்களால் விழுங்கப்படுவதை நான் கண்கூடாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். பொதுச்சேவை நிறுவனங்களும் இதற்கு விதிவிலக்கு அல்ல. சேவை நிறுவனங்கள் இச்சட்டத்தில் பல ஓட்டைகளைக் கண்டு பிடித்தன. அவற்றைப் பயன்படுத்திச் சிறிய, சுதந்திரமான நிறுவனங்களை முதலில் காலாவதியாக்கி பின்பு அவற்றை அடியோடு விழுங்கி ஜீரணித்து விடுவதற்கான முயற்சிகள் முழு வீச்சில் செயல்படத் தொடங்கின. வேறு சில பெரு நிறுவனங்கள் சிறிய நிறுவனங்களைப் போன்றே தாங்களும் அத்துறையில் கால் வைப்பதற்கு ஏற்ற வகையில் கிளை அமைப்புகளை உருவாக்கிக் கொண்டன.

எண்ணெயைச் சார்ந்திருப்பதைக் குறைப்பது என்ற கருத்து ரீகனால் அடியோடு புறக்கணிக்கப்பட்டது. எண்ணெய் நிறுவனங்களுக்கு அவர் கடன்பட்டிருந்தார். புஷ் குவித்து வைத்திருக்கும் பெருஞ்செல்வம் முழுவதும் எண்ணெயிலிருந்தே பெறப்பட்டதாகும். ரீகன் நிர்வாகத்தில் முக்கியமான பங்கு வகித்தவர்கள் அத்தனை பேருமே எண்ணெய் நிறுவனங்களுடனோ, அவற்றோடு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள கட்டுமான நிறுவனங்களுடனோ உறவு கொண்டவர்கள்தான். இந்தப் பெருமை ரீகன் தலைமை வகித்த குடியரசுக் கட்சிக்கு மட்டுமே உரியது அல்ல. ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்தவர்கள் பலரும்கூட இந்த நிறுவனங்களில் அங்கம் வகித்து வந்தார்கள். அதற்கு நன்றிக்கடனும் பட்டிருந்தார்கள். இந்த நிறுவனங்களால் லாபமடைந்து வந்தார்கள்.

என்னுடைய ஐ.பி.எஸ் நிறுவனம் சுற்றுச்சூழல் பாதுகாப்பு என்ற தனது லட்சியத்தைத் தொடர்ந்து கடைப்பிடித்து வந்தது. இந்தச் சட்டத்தின் அடிப்படை நோக்கங்களுக்கு நாங்கள் நேர்மையாக நடந்து வந்தோம். அதே நேரத்தில் ஏதோ மாயாஜாலம் போல எல்லாப் பிரச்சனைகளில் இருந்தும் தப்பிப் பிழைத்தும் வந்தோம். வேறு சில நிறுவனங்களும் போராட்டத்துடன் செயல்பட்டு வந்தன என்றாலும் நாங்கள் வளர்ச்சியும் கண்டோம். நிறுவன - அதிகார வர்க்கத்துக்கு நான்

முன்பு புரிந்த சேவைகளே எங்களுக்கு மட்டும் கிடைத்து வந்த சலுகைகளுக்குக் காரணம் என்பதில் எனக்கு எந்தச் சந்தேகமும் இல்லை.

உலகம் முழுவம் ஏற்பட்டு வந்த மாற்றங்களுக்கு ஆற்றல் வளத்துறை ஒரு சிறிய உதாரணம்தான். இந்தப் புதிய உலகில் சமூக நலனும், சுற்றுச்சூழல் வாழ்க்கைத் தரம் குறித்த விஷயங்களும் பின்னுக்குத் தள்ளப்பட்டன. தனியார் துறைகளை ஊக்குவிப்பதற்கும், வணிக வளர்ச்சிக்குமே முக்கியத்துவம் வழங்கப்பட்டது. இந்தக் கருத்து முதலில் மக்கள் மனங்களில் திட்டமிட்டு விதைக்கப்பட்டது. முதலாளித்துவமே உயர்ந்தது, கம்யூனிஸத்தைத் தோற்கடிக்கும் வல்லமை அதற்கே உண்டு என்ற கருத்தும் திட்டமிட்டுப் பரப்பப்பட்டது. ஆனால் முதலாளித்துவத்தை நியாயப்படுத்தப் பெரிய சிரமங்கள் எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியமே ஏற்படவில்லை. பணக்கார முதலீட்டாளர்கள் செயல்படுத்தும் திட்டங்கள் அரசுத் திட்டங்களை விட ஏதோ ஒரு விதத்தில் மேலானவை என்பதை மக்கள் எளிதில் ஏற்றுக்கொண்டனர். உலக வங்கி போன்ற சர்வதேச நிறுவனங்களும் இதே கருத்தை வலியுறுத்தித் தனியார்மயத்திற்கு விதிக்கப்பட்டிருந்த கட்டுப்பாடுகளைத் தளர்த்துவதை, தண்ணீர், சுகாதாரம் போன்ற அத்தியாவசியத் தேவைகளை, இன்றுவரை அரசால் நிர்வகிக்கப்பட்டவற்றைத் தனியார்மயப்படுத்துவதை ஆதரித்தன.

இதன் விளைவாகப் பொருளாதார அடியாட்களின் தளம் விரிவுபடுத்தப்பட்டு, நாங்கள் மட்டுமே செய்து வந்த வேலைகளைத் தனியார் நிறுவனங்களின் நிர்வாகிகளைக் கொண்டு நிறைவேற்றிக் கொள்வதும் எளிதானதாக மாறியது. குறைந்த கூலிக்குக் கிடைக்கக்கூடிய தொழிலாளர்களையும், பெரிதிலும் பெரிதான சந்தைகளையும் தேடித் தேடி இந்த நிர்வாகிகள் உலகம் முழுவதும் விரிந்து பரவினர். பொருளாதார அடியாட்களைப் போலவே இந்த நிர்வாகிகளும் ஈவிரக்கமற்றவர்கள். அவர்களுக்கென்று தனிப்பட்ட நியாயங்கள் இருந்தன. அவர்கள் நாடுகளையும் மக்களையும் கடன் சுமையில் மூழ்கடித்தனர். தாங்கள் படுகுழியில் தள்ளிய நாடுகளுக்கு மருந்தாகத் தனியார்துறையை முன் வைத்தனர். தங்கள் நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ள அவர்கள் பள்ளிகள் கட்டினர், சாலைகள் அமைத்தனர். தொலைபேசிகளையும், தொலைக்காட்சிகளையும், மருத்துவச் சேவையையும் தானமாக அளித்தனர். ஆனால் இன்னும் மலிவாகத் தொழிலாளர்களும், மூல வளங்களும் வெறெங்காவது கிடைக்கப் பெற்றால் அதுவரை தாங்கள் செயல்பட்டு வந்த நாடுகளைக் குப்பையைப் போல ஒதுக்கிவிட்டு அவர்கள் கிளம்பிவிடுவார்கள். தங்களை முழுமையாக நம்பிய மக்களை இந்தப் புதிய வகை அடியாட்கள் அடியோடு கைவிடும்போது ஏற்படும் பின்விளைவுகள் பேரழிவு விளைவிப்பவையாக இருந்தன. ஆனால் அவர்கள் ஒரு வினாடிகூட தங்கள் மனசாட்சிக்குச் செவி சாய்க்காமல், தயங்காமல்

தங்கள் செயலைத் தொடர்ந்து நடத்தத்தான் செய்தனர்.

இந்தப் பேரழிவுகள் அவர்கள் உளவியலுக்கு எந்த பாதிப்பையுமே ஏற்படுத்தவில்லையா? எனக்குத் தோன்றிய சந்தேகங்கள் அவர்களுக்குள் தலை காட்டவேயில்லையா? ஒரு நாற்றமடிக்கும் கால்வாயில் ஒரு கிழவன் மல ஜலம் கழிப்பதையும் அதே கால்வாயில் ஒரு இளம்பெண் குளிப்பதையும் அவர்கள் ஒருபோதும் பார்த்ததேயில்லையா? பதிலளிக்க முடியாத கடுமையான கேள்விகளைக் கேட்கும் ஹோவார்டு பார்க்கர்களே இவர்கள் வாழ்க்கையில் இல்லையா?

எனது நிறுவனத்தின் வெற்றிகளையும், குடும்ப வாழ்க்கையின் நிறைவையும் மீறி வெறுமை ஏற்படுத்திய தருணங்களும் இருக்கத்தான் செய்தன. என் மகளின் எதிர்காலம் எப்படியிருக்கும்? இதை நினைக்கும்போது குற்ற உணர்ச்சி என்னைப் பாறை போல அழுத்தும்.

உலகப் போரின் இறுதியில் பல நாடுகளின் தலைவர்கள் கலந்து கொண்ட ஒரு கூட்டத்தில் நவீன சர்வதேச நாணய முறை உருவாக்கப்பட்டது. இந்தக் கூட்டம் என் மாநிலமான நியூ ஹாம்ஷயரில் உள்ள பிரட்ன்ளட்ஸில் தான் நடந்தது. யுத்தத்தால் சர்வ நாசம் அடைந்திருந்த ஐரோப்பாவைப் புனர் நிர்மாணம் செய்ய உலக வங்கியும், பன்னாட்டு நிதி நிறுவனமும் உருவாக்கப்பட்டன. அதில் குறிப்பிடத்தக்க வெற்றியும் ஈட்டப்பட்டது. இந்த அமைப்புகள் தீவிரமாக வளர்ச்சியடைந்தன. அடக்குமுறைக்கு இவை சஞ்சீவி மருந்து என்று புகழப்பட்டன. ஒவ்வொரு நட்பு நாட்டாலும் இந்த அமைப்புகள் முழுமையாக ஏற்றுக்கொள்ளப்பட்டன. கம்யூனிஸத்தின் கோரப் பிடியில் இருந்து நம்மையெல்லாம் காப்பாற்றக் கூடியவை இந்த அமைப்புகள் தான் என்று உலகம் முழுவதுமுள்ள மக்களுக்கு உறுதியளிக்கப்பட்டது.

இதெல்லாம் நம்மை எங்கே கொண்டுபோய் விடும் என்று நினைத்துப் பார்க்கும்போது ஆச்சரியம்தான் ஏற்படுகிறது. 1980-களின் இறுதியில் சோவியத் யூனியன் மற்றும் உலகக் கம்யூனிஸ இயக்கத்தின் வீழ்ச்சிக்குப் பின்பு கம்யூனிஸத்தைத் தோற்கடிப்பது என்பது இவற்றின் லட்சியமல்ல என்பது வெட்ட வெளிச்சமானது. முதலாளித்துவத்தைத் தனது ஆணிவேராகக் கொண்டுள்ள உலகப் பேரரசு தங்கு தடையற்ற ஆதிக்கத்தையே விழைகிறது என்பதும் தெளிவானது. உலக மாமன்றம் (world forum) என்ற அமைப்பின் தலைவரான ஜிம் கேரிஸன் பின்வருமாறு கருத்துரைக்கிறார்:

உலகம் முழுமையையும் ஒன்றிணைப்பது என்பதும், குறிப்பாகப் பொருளாதார அடிப்படையில் உலக மயமாக்கல் என்பதும், ‘தடையற்ற சந்தை’ மூலதனம் நடத்திக் காட்டும் மாயாஜாலங்களும் அடிப்படையில் ‘பேரரசையே’ குறிக்கின்றன… உலக மயமாக்கல் என்ற காந்த சக்தியை எந்த நாடும் எதிர்த்து நிற்க முடியவில்லை. உலக

வங்கியும், பன்னாட்டு நிதி நிறுவனமும் தாங்கள் கோரும் விதத்தில் நாடுகளின் நிர்வாகத்தை ‘மறு சீரமைப்பு’ செய்ய வேண்டும் என்று விதிக்கும் ‘நிபந்தனைகளுக்கும்’ உலக வர்த்தக நிறுவனத்தின் தலையீடுகளுக்கும் சில நாடுகள் மட்டுமே தப்ப முடிந்துள்ளது. இந்தப் பன்னாட்டு நிதி நிறுவனங்கள் முழுமை பெற்றவையாக இல்லாவிட்டாலும் கூட உலக மயமாக்கல் என்பதன் மொத்த உருவம் அவைதான். இவற்றின் விதிகள்தான் சரணடைபவர்களுக்கான பரிசகளையும், எதிர்த்து நிற்பவர்களுக்கான தண்டனைகளையும் தீர்மானிக்கின்றன. நமது வாழ்நாளில் உலகப் பொருளாதாரம் முழுவதும் தடையற்ற ஒரே சந்தை என்ற அடிப்படையில் ஒன்றிணைவதைக் காணும் வாய்ப்பு நமக்குக் கிடைக்கும் என்பதுதான் இந்த உலகமயமாக்கலின் பலன்.[1]

என் குழப்பங்களையும் அச்சங்களையும் உலகுக்கு அறிவிக்கும் விதத்தில் ஒரு பொருளாதார அடியாளின் மனசாட்சி என்ற புத்தகத்தை எழுத இதுதான் சரியான நேரம் என்று முடிவு செய்தேன். ஆனால் அந்த வேலையை ரகசியமாக வைத்திருக்க எந்த முயற்சியும் செய்யவில்லை. இன்றும்கூடத் தனிமையில் எழுதும் எழுத்தாளன் அல்ல நான். செய்து வரும் வேலையைப் பற்றிய கலந்துரையாடல்கள் அவசியம் என்று அனுபவத்தில் உணர்ந்திருக்கிறேன். தேவையான ஊக்கமும் உத்வேகமும் மற்றவர்களிடமிருந்து கிடைக்கப் பெற்றிருக்கிறேன். இறந்த காலத்தை நினைவுகூர வேண்டிய அவசியமேற்படும்போது நண்பர்களை உதவிக்கு அழைக்கிறேன். எழுதியவற்றை அவர்களுக்குப் படித்துக் காட்டுகிறேன். இது ஒருவேளை ஆபத்தானதாக இருக்கலாம். ஆனால் எழுதுவதற்கு எனக்கு வேறெந்த வழியும் தெரியவில்லை. எனவே மெய்னில் வேலை செய்து வந்த நாட்களைப் பற்றி நான் ஒரு நூல் எழுதி வருகிறேன் என்பதில் எந்த ரகசியமும் இருக்கவில்லை.

1987-இல் ஒரு மதியவேளையில் மெய்னின் முன்னாள் பங்குதாரர் ஒருவர் என்னுடன் தொடர்பு கொண்டு பணத்தைக் கொட்டிக் கொடுக்கக் கூடிய ஒரு ஒப்பந்ததத்தை வழங்கினார். அப்போது உலகில் முக்கியமான பொறியியல் மற்றும் கட்டுமான நிறுவனங்களில் ஒன்றாக இருந்த ஸ்டோன் & வெப்ஸ்டர் என்ஜினியரிங் கார்ப்பரேசன் (எஸ்.டபிள்யூ.ஈ.சி) என்ற நிறுவனத்திற்கு நான் ஆலோசனை வழங்க வேண்டும். இந்த நிறுவனம் ஆற்றல் வளத்துறையில் தனக்கென ஒரு தனி இடத்தைப் பிடிக்க முயன்று வருகிறது என்று என் தொடர்பாளர் கூறினார். அவர்களது துணை அமைப்பு ஒன்று எனது நிறுவனத்தை மாதிரியாகக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. அதற்கு நான் அறிக்கை செய்ய வேண்டும், இதைத் தவிர வேறு எந்தப் பன்னாட்டுத் திட்டத்திலும் நான் கலந்து கொள்ள வேண்டியிருக்காது. பொருளாதார அடியாட்களின் வேலையைத் திரும்பவும் மேற்கொள்ள வேண்டியிருக்காது என்பது எனக்கு நிம்மதியளித்தது

உண்மையில் ஒப்பந்தப்படி எனக்கு அப்படியொன்றும் நிறைய வேலைகள் இல்லை. ஒரு சுதந்திரமான நிறுவனத்தை உருவாக்கி வெற்றிகரமாக நடத்தி வந்தவன் என்ற முறையில் இத்துறையில் எனக்கு நல்ல மரியாதை இருந்து வந்தது. என் தகுதிக் குறிப்பைப் பயன்படுத்திக் கொள்ளவும், என்னைத் தன் ஆலோசகர் பட்டியலில் இணைத்துக் கொள்ளவுமே அந்த நிறுவனம் விரும்பியது. இது சட்டப்பூர்வமானதும், நடைமுறையில் இருந்து வருவதுமாகும். இந்த வாய்ப்பு எனக்குக் கவர்ச்சிகரமானதாகத் தோன்றியது. ஏற்கனவே பல காரணங்களுக்காக எனது நிறுவனத்தை விற்பது குறித்துச் சிந்தித்து வந்தேன். அதை விற்றுவிட்டு வலுவான நிலையில் இருந்த எஸ்.டபிள்யூ.ஈ.சி - நிறுவனத்தில் சேர்ந்து கொள்ளவும், கணிசமான ஊதியம் பெறவும் எனக்கு விருப்பம் தோன்றியது.

பணியில் சேர்ந்த முதல் நாளில் அந்த நிறுவனத்தின் தலைவர் என்னை மதிய உணவுக்கு வெளியே அழைத்துச் சென்றார். ஒரு நிறுவனத்தை நடத்தும் சிக்கலான பொறுப்புகளான கட்டடம் கட்டுதல், உலைகளை இயக்குதல், நூறு பேரை நிர்வகித்து வருதல் போன்றவற்றை விட்டு விட்டுத் திரும்பவும் ஆலோசனைத் துறைக்குள் நுழைந்துவிட என்னுள் ஒரு பகுதி ஆர்வம் கொண்டு துடித்துக் கொண்டிருப்பதை என்னால் தெளிவாக உணர முடிந்தது. எனக்கு அவர் தரவிருந்தச் சம்பளத்தை எப்படிச் செலவழிப்பது என்றுகூடக் கற்பனை செய்யத் தொடங்கி விட்டேன். லாப நோக்கமில்லாத ஓர் அமைப்பை உருவாக்க வேண்டுமென்று முடிவு செய்தேன்.

‘இறுக்கமற்ற பழக்கம்’ (The Stress - Free Habit) என்ற எனது முதல் புத்தகத்தைப் பற்றிய பேச்சை அவர் தொடங்கினார். அது குறித்து அற்புதமான விஷயங்களைத் தான் கேள்விப்பட்டதாகவும் கூறினார். பின்பு அவர் கண்கள் என்னை நேரடியாகச் சந்தித்தன. “மேலும் புத்தகங்கள் ஏதும் எழுதப் போகிறீர்களா?’

“இந்த நேரத்தில் வேறெந்தப் புத்தகத்தையும் வெளியிடும் நோக்கம் எதுவும் இல்லை’’ என்றேன். “மிகவும் மகிழ்ச்சி. மெய்ன்-ஐப் போலவே நாங்களும் ரகசியத்தைப் பெரிதாக மதிக்கிறோம்.’’ என்றார் அவர்.

“எனக்குப் புரிகிறது’’

அவர் நன்றாகப் பின்னால் சாய்ந்து கொண்டு முறுவலித்தார். அந்தப் பதிலால் அவர் திருப்தி அடைந்து விட்டது போல் தோன்றியது. “மன இறுக்கம் குறித்தும், அது தொடர்பான விஷயங்கள் குறித்தும் நீங்கள் எழுதியுள்ள இறுக்கத்தைக் குறைப்பது போன்ற நூல்கள் முழுமையாக ஏற்றுக் கொள்ளக்கூடியவை: சில நேரங்களில் இது போன்ற நூல்கள் மனிதனின் முன்னேற்றத்திற்கு மிகவும் உதவியாகக் கூட இருக்கும். எஸ்.டபிள்யூ.ஈ.சி. யின் ஆலோசகராக இருந்து கொண்டு இது போன்ற புத்தகங்களைப் பதிப்பிக்க உங்களுக்கு எல்லா உரிமையும் உள்ளது.’’ அவர் என்னைப் பார்த்த விதம் என் பதிலுக்குக் காத்திருப்பது போலத்

தோன்றியது.

“அது மிகவும் நல்ல விஷயம்’’

‘ஆமாம். ஆனால் நீங்கள் நிறுவனத்தின் பெயரை உங்கள் நூல்களில் ஒருபோதும் குறிப்பிட மாட்டீர்கள் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். நமது வணிகம் தொடர்பான எதையும், மெய்னில் உங்கள் கடந்த காலம் பற்றிய விஷயங்களை வெளிப்படுத்தக் கூடிய தன்மை கொண்ட எதையும் எழுத மாட்டீர்கள் என்பதும் எனக்குத் தெரியும். அரசியல் கருத்துகள் அல்லது பன்னாட்டு வங்கிகளின் செயல்பாடுகள் பற்றி எதையும் நீங்கள் எழுதப் போவதில்லை இல்லையா?’’. அவர் என்னை ஊடுருவிப் பார்த்தார். “ரகசியமும் முக்கியமானதல்லவா?’’

“இதை நீங்கள் சொல்ல வேண்டியதே இல்லை.’’ நான் அடித்துக் கூறினேன். அந்த நொடியில் என் இதயம் நின்று விட்டது போலிருந்தது. பழைய குற்றவுணர்வு முழு வேகத்துடன் இப்போது என்னைத் தாக்கியது. இந்தோனேஷியாவில் ஹோவார்டு பார்க்கருடன் இருந்தபோது, பனாமாவில் ஃபிடலுடன் காரில் சுற்றியபோது, பவுலாவுடன் கொலம்பிய காபி கடையில் உட்கார்ந்திருந்தபோது ஏற்பட்ட குற்றவுணர்வு திரும்பவும் என்னை ஆக்கிரமித்துக் கொண்டது. திரும்பவும் என்னை நானே விற்றுக் கொள்கிறேன். சட்டப்படி பார்த்தால் இது லஞ்சம் அல்ல. வெளிப்படையாக நடந்த சட்டப்பூர்வ பேரமே. சும்மா அவர்கள் பட்டியலில் என் பெயரைச் சேர்த்துக் கொள்ளத்தான் விரும்புகிறார்கள் என்று சொல்லப்பட்டது. ஆனால் என்னை அவர்கள் வேலைக்கு வைத்துக் கொண்டதற்கான உண்மையான காரணம் இப்போது எனக்குத் தெளிவாகப் புரிந்தது.

ஒரு நிர்வாகியின் சம்பளத்திற்கு இணையான சம்பளத்தை அவர் எனக்கு வாக்களித்தார்.

கொஞ்ச நேரத்தில் நான் அதிர்ந்து போய் விமான நிலையத்தில் உட்கார்ந்திருந்தேன். விபசாரம் செய்வதைப் போன்ற உணர்வு. என் மகளுக்கும், குடும்பத்துக்கும் நாட்டுக்கும் துரோகமிழைத்து விட்டதைப் போலத் தோன்றியது. ஆனால் வேறு வழியில்லை. இந்த ஆசைகாட்டலுக்கு நான் பணிந்திராவிட்டால் மிரட்டல்கள் வந்திருக்கும். இதை நினைவுபடுத்திக் கொண்டு என்னை நானே சமாதானப்படுத்திக் கொண்டு ஃபுளோரிடா செல்லும் விமானத்திற்குக் காத்திருந்தேன்.

[1] Jim Garrison, American Empire: Global Leader or Rogue Power? (San Francisco: Berrett-Koehler Publishers, Inc., 2004), p.38.

# 30

# பனாமாவைத் தாக்குகிறது அமெரிக்கா

டோரிஜோஸ் இறந்துவிட்டாலும் என் இதயத்தில் பனாமா பெற்றிருந்த இடம் அப்படியே இருந்து வந்தது. தெற்கு ஃபுளோரிடாவில் வாழ்ந்ததால் மத்திய அமெரிக்கா பற்றிய முக்கியத் தகவல்களை உடனுக்குடன் என்னால் தெரிந்துகொள்ள முடிந்தது. டோரிஜோஸுக்குப் பின் வந்த தலைவர்களிடம் அவரிடமிருந்த சிறப்பம்சங்கள் இல்லாவிட்டாலும்கூட அவரது பாரம்பரியம் தொடர்ந்து நீடித்தது. உள் முரண்பாடுகளைத் தீர்த்துக்கொள்ள அவர் தொடங்கி வைத்த முயற்சிகள் இப்பிரதேசம் முழுவதும் தொடர்ந்து வந்தன. அதே போல கால்வாய் ஒப்பந்தத்தை அமெரிக்கா கடைப்பிடிக்க வேண்டும் என்பதில் பனாமா கொண்டிருந்த தீர்மானகரமான உறுதியும் மாறவேயில்லை.

டோரிஜோஸின் வாரிசான மனுவேல் நொரீகா இறந்து போன தலைவரின் பாதையையே தொடர்ந்து பின்பற்றுவது போலத்தான் முதலில் தோன்றியது. தனிப்பட்ட முறையில் அவரை நான் சந்தித்ததில்லை என்றாலும் அவர் எல்லாவிதத்திலும் லத்தீன் அமெரிக்காவின் ஒடுக்கப்பட்ட, ஏழை மக்களின் நலனுக்காகச் செயல்பட்டு வந்ததைத் தொடக்கத்தில் காண முடிந்தது. அவரது முக்கியமான திட்டங்களில் ஒன்று ஜப்பானிய நிதியுதவியுடன் புதிய கால்வாய் கட்டுவதற்கான முயற்சிகளில் ஈடுபடுவது ஆகும். எதிர்பார்த்தபடியே அவர் அமெரிக்க அரசிடமிருந்தும், தனியார் நிறுவனங்களிடமிருந்தும் பெரும் எதிர்ப்பைச் சந்தித்தார். நொரீகாவே எழுதுகிறார்:

(அமெரிக்க அரசின்) உள்துறைச் செயலாளரான ஜார்ஜ் சூல்ட்ஸ் பன்னாட்டுக் கட்டுமான நிறுவனமான பெக்டெலின் முன்னாள் தலைவராவார். பாதுகாப்பமைச்சரான காஸ்பர் வெய்ன்பெர்கர் பெக்டெலின் துணைத்தலைவர். புதிய கால்வாய் அமைப்பதில் கிடைக்கவிருக்கும் பல்லாயிரம் கோடி டாலர் வருமானத்தைக் கைப்பற்றுவதைத் தவிர பெக்டெலுக்கு வேறு என்ன விருப்பம் இருந்திருக்க முடியும்…

ஜப்பானிய நிதியுதவியுடன் புதிய கால்வாய் அமைக்கப்படுவதற்குள்ள சாத்தியக்கூறு ரீகன், புஷ் அரசுகளை அச்சமடையச் செய்தது. (அவர்கள் கூறுவது போல்) பாதுகாப்பு குறித்த ‘கவலை’ மட்டுமே இதற்குக் காரணமல்ல. வணிகப் போட்டி பற்றிய கவலையும் முக்கிய இடத்தைப் பெற்றிருந்தது. ஜப்பானிய நிதியுதவியுடன் கால்வாய் கட்டப்பட்டால் அமெரிக்க நிறுவனங்கள்

பல்லாயிரம் கோடி டாலர் லாபத்தை இழக்க வேண்டி வரும்.

ஆனால் நொரீகா டோரிஜோஸ் அல்ல. டோரிஜோஸிடமிருந்த நேர்மையோ ஆளுமையோ நொரீகாவிடம் இல்லை. அவர் நாளா வட்டத்தில் ஊழலிலும், போதை மருந்து விவகாரங்களிலும் சிக்கிக் கொண்டு அவப்பெயர் அடைந்தார். அவரது போட்டியாளரான ஹியூகோ ஸ்போடபோராவின் படுகொலைக்குக் கூட நொரீகாதான் காரணம் என்று சந்தேகப்பட்டது.

நொரீகா பனாமா பாதுகாப்புப் படையிலுள்ள உளவுப் பிரிவான ஜி - 2 யூனிட்டில் கர்னலாகப் பணியாற்றிப் புகழ் பெற்றிருந்தார். ஜி - 2 வின் தலைமை சி.ஐ.ஏ.வுடன் தொடர்பு கொண்டிருந்தது. நொரீகாவும் சி.ஐ.ஏ.வின் தலைவர் வில்லியம் ஜே.கேஸியுடன் நெருக்கமான உறவை வளர்த்துக் கொண்டிருந்தார். [1] சி.ஐ.ஏ. இந்த உறவை மத்திய, தென் அமெரிக்கா மற்றும் கரீபியன் பகுதியில் தன் செயல்பாடுகளை விரிவு படுத்திக் கொள்ளப் பயன்படுத்திக்கொண்டது. உதாரணமாக 1983-இல் அமெரிக்கா கிரேனாடா மீது படையெடுக்கவிருப்பது குறித்து ரீகன் நிர்வாகம் காஸ்ட்ரோவுக்கு முன்னெச்சரிக்கை தர விரும்பிய போது கேஸி, நொரீகாவைச் செய்தித் தொடர்பாளராகப் பணியாற்றும்படி கேட்டுக் கொண்டார். கொலம்பியாவிலும் மற்ற இடங்களிலும் செயல்பட்டு வந்த பெரும் போதை மருந்துக் கடத்தல் கும்பல்களில் ஊடுருவுவதற்கும் கர்னல் நொரீகா சி.ஐ.ஏ.வுக்கு உதவி புரிந்தார்.

1984-இல் நொரீகா, பனாமா பாதுகாப்புப் படைகளின் தலைமைத் தளபதியாகப் பதவி உயர்த்தப்பட்டார். அதே ஆண்டில் பனாமா சிட்டிக்கு வந்த கேஸி “எங்கே நம்ம பையன் நொரீகா?” என்று உள்ளூர் சி.ஐ.ஏ.வின் அதிகாரியிடம் கேட்டதாகக் கூறப்பட்டது. ஜெனரல் நொரீகா வாஷிங்டனுக்கு விஜயம் செய்தபோது கேஸியை அவர் வீட்டில் தனியாகச் சந்தித்தார். கேஸியுடனான உறவு தனக்கு மிகப் பெரிய பாதுகாப்புணர்வை அளித்ததாக நொரீகாவே பல ஆண்டுகள் கழித்து ஒப்புக் கொண்டார். தனது அரசில் ஜி-2 ஒரு பலம் வாய்ந்த அங்கமாக இருப்பதைப் போலவே சி.ஐ.ஏ.வும் அமெரிக்காவில் செல்வாக்குப் பெற்றிருக்கும் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்து வந்தது. பனாமாக் கால்வாய் ஒப்பந்தம் மற்றும் பனாமாவிலுள்ள அமெரிக்க ராணுவத் தளங்கள் குறித்த தனது நிலைப்பாடு அமெரிக்க அரசின் நிலைக்கு எதிராக இருந்தபோதிலும் கேஸி தன்னைப் பாதுகாப்பார் என்று நொரீகா நம்பிக்கை கொண்டிருந்தார்.[2]

இவ்வாறு உலகம் முழுவதற்கும் நீதி மற்றும் சமத்துவத்தின் மொத்த உருவமாகத் திகழ்ந்த டோரிஜோஸின் இடத்தில் அமர்ந்திருந்த நொரீகா ஊழலுக்கும் சீரழிவுக்கும் பெயர் பெற்றவராக மாறிப் போனார். “பனாமாத் தலைவர் போதை மருந்துக் கடத்தல் கும்பல்களுடனும், கள்ளப் பணத்துடனும் தொடர்பு கொண்டுள்ளார்” என்ற தலைப்பில்

ஒரு கட்டுரை ஜூன் 12 அன்று நியூயார்க் டைம்ஸில் வெளியானது. இந்தக் கட்டுரையை எழுதிய நிருபர் புலிட்சர் பரிசு பெற்றவர். நொரீகா பல லத்தீன் அமெரிக்கா நிறுவனங்களில் ரகசியமாகவும், சட்ட விரோதமாகவும் பங்குதாரராக இருந்து வந்தார் என்பதை அந்தக் கட்டுரை அம்பலப்படுத்தியது. அவர் அமெரிக்கா, கியூபா இரண்டையுமே உளவு பார்த்தார். இரண்டிற்கும் உளவு பார்த்தார். மொத்தத்தில் ஒருவிதமான இரட்டை உளவாளியாகச் செயல்பட்டு வந்தார். அவரது உத்தரவின்படிதான் ஜி - 2, ஹுயூகோ ஸ்பாடபோராவின் தலையைத் துண்டித்தது. நொரீகாவே தனிப்பட்ட முறையில் பனாமாவில் போதை மருந்துக் கடத்தலை நடத்தி வந்தார் என்றெல்லாம் அம்பலப்படுத்தியது. இந்தக் கட்டுரை அதனுடன் ஜெனரலின் ஒரு சாதாரணமான படமும் வெளியிடப்பட்டிருந்தது. இன்னும் அதிக விவரங்களைக் கொண்டிருந்த இந்தக் கட்டுரையின் அடுத்த பாகம் மறுநாள் வெளியிடப்பட்டது.[3]

நொரீகாவுக்கு இருந்து வந்த தொல்லைகளில் அமெரிக்க ஜனாதிபதியின் இமேஜ் பிரச்சனையும் சேர்ந்து கொண்டது.[4] பத்திரிகையாளர்கள் ஜார்ஜ். எச்.டபிள்யூ. புஷ்ஷை பலவீனமான கண்ணி என்றே அழைத்து வந்தனர். அமெரிக்க ராணுவப் பள்ளிக்கு மேலும் 15 ஆண்டுகள் நீட்டிப்புத் தர வேண்டும் என்ற கோரிக்கையை நொரீகா பிடிவாதமாக மறுத்தபோது இந்த இமேஜ் பிரச்சனை மேலும் முக்கியத்துவம் பெற்றது. நொரீகாவின் நினைவுக்குறிப்புகள் அவரது நிலைப்பாட்டைப் பற்றிய சுவாரசியமான புரிதலைத் தருகின்றன:

டோரிஜோஸின் பாரம்பரியத்தை நாம் கர்வத்துடனும், உறுதியுடனும் பின்பற்றுவதை அமெரிக்கா விரும்பவில்லை. மத்திய அமெரிக்காவில் போர் ஆயத்தங்கள் நடந்து வருவதைக் குறிப்பிட்டுக் காட்டி அவர்கள் இந்த ராணுவ நிலையங்கள் இன்னமும் தேவை என்று கூறுகிறார்கள். ஆனால் இந்த ராணுவப் பள்ளி நமக்கு ஒரு சங்கடமாக இருந்து வருகிறது. கொலைவெறிக் குழுக்களுக்கும் அடக்குமுறை செலுத்திவரும் வலதுசாரி ராணுவங்களுக்கும் பயிற்சியளிக்கும் இந்த ராணுவ நிலையங்கள் எமது மண்ணில் இருப்பதை நாம் விரும்பவில்லை.[5]

1989, டிசம்பர் 20-ல் நடந்தது எற்கனவே எல்லோராலும் எதிர்பார்க்கப்பட்டதுதான். ஆனால் பனாமா மீது அமெரிக்கா நடத்திய தாக்குதலின் உக்கிரம் உலகை அதிர்ச்சியுற வைத்தது.[6] இரண்டாம் உலகப் போருக்குப் பின்பு- ஒரு நகரத்தின் மீது தொடுக்கப்பட்ட மிகப் பெரிய தாக்குதல் அதுதான். பனாமாவும், அதன் மக்களும் அமெரிக்காவிற்கு எந்தத் தீமையும் விளைவிக்கவில்லை. ஒரு பாவமும் அறியாத அப்பாவி மக்கள் மீது எந்தத் தூண்டுதலும் இல்லாமல் இந்தத் தாக்குதல் நடத்தப்பட்டது. அமெரிக்காவின் இந்த ஒருதலைப்பட்சமான நடவடிக்கையை சர்வதேசச் சட்டத்தை மீறிய செயல் என்று உலகம்

முழுவதும் உள்ள அரசியல்வாதிகளும் பத்திரிகையாளர்களும் கண்டனம் செய்தனர்.

படுகொலைகளும், மனித உரிமை மீறல்களும் புரிந்துவரும் பினோசெட்டின் சிலி, ஸ்ட்ரேஸ்னின் பராகுவே, சோமோஸாவின் நிகரகுவா, டி ஔபூஸ்ஸனின் எல்சால்வடார் அல்லது சதாமின் ஈராக் போன்ற நாடுகளுக்கு எதிராக இப்படிப்பட்ட ஒரு தாக்குதல் நிகழ்த்தப்பட்டிருந்தால் ஒருவேளை உலகம் புரிந்து கொண்டிருக்கும். ஆனால் பனாமா அப்படி எந்த மோசமான செயலையும் செய்திருக்கவில்லை. அது செய்ததெல்லாம் விரல்விட்டு எண்ணக்கூடிய ஒரு சில அரசியல்வாதிகள் மற்றும் நிறுவன அதிபர்களின் விருப்பங்களை மறுக்கத் துணிந்ததுதான். அது செய்ததெல்லாம் கால்வாய் ஒப்பந்தம் மதிக்கப்பட வேண்டும் என்று வலியுறுத்தியதும், சமூகச் சீர்திருத்தவாதிகளுடன் கலந்துரையாடல்கள் நடத்தியதும், ஜப்பானிய நிதியுதவியுடன் ஒரு புதிய கால்வாய் அமைக்க வாய்ப்புகள் உள்ளனவா என்று தேடியதும்தான். “இந்தத் தவறுகளுக்காகத்’’ தான் பனாமா பேரழிவைச் சந்தித்தது. இதோ நொரீகா கூறுகிறார்:

ஒன்றை நான் தெளிவுபடுத்த விரும்புகிறேன். எதிர்காலத்தில் பனாமாக் கால்வாயின் கட்டுப்பாடு ஜப்பானியரின் ஆதரவுடன் சுதந்திரமான பனாமாவினரின் கரங்களுக்கு மாறுவதை அமெரிக்கா விரும்பாததன் விளைவாகவே 1986-இல் பனாமாவிற்கு எதிரான அவதூறுப் பிரச்சாரம் தொடங்கப்பட்டது. இந்தப் பிரச்சாரம் 1989-இல் நடைபெற்ற தாக்குதலோடு முடிவடைந்தது. ஷூல்ட்ஸும், வெய்ன் பெர்கரும் மக்கள் நலம் என்ற போர்வையில், மக்களின் அறியாமையைப் பயன்படுத்திக் கொண்டு என்னை ஒழித்துக்கட்டுவதற்கான இயக்கத்தை முடுக்கி விட்டுக் கொண்டிருந்தார்கள்.[7]

இந்தத் தாக்குதலுக்குக் காரணம் ஒரேயொரு மனிதர்தான் என்று வாஷிங்டன் கூறியது. ஏராளமான ஆண்களையும், பெண்களையும் கொன்று குவிக்கவும், சூறையாடவும் தன் நாட்டைச் சேர்ந்த இளைஞர்களை ஏவி விட அமெரிக்கா கூறிய ஒரே காரணம், நொரீகா. தனது வீரர்களை உயிரபாயம் மிகுந்த ஒரு செயலைச் செய்வதற்கு அனுப்பக் கூறப்பட்ட ஒரே காரணம் நொரீகா. அவர் கெட்டவராக, மக்களின் எதிரியாக போதை மருந்து கடத்தும் அரக்கனாகச் சித்திரிக்கப்பட்டார். அவருக்காக இருபது லட்சம் மக்கள் வாழும் நாட்டின் மீது ஒரு பெரும் தாக்குதல் நடத்துவது நியாயமானது என்று கூறப்பட்டது. அந்த நாடு உலகின் மிகவும் முக்கியமான ஒரு கால்வாயின் கரைகளில் அமைந்திருந்தது தற்செயலானதுதான்

இந்தத் தாக்குதலால் எனக்கு ஏற்பட்ட விரக்தி பல நாட்களுக்கு நீடித்தது. நொரீகா - வுக்கு மெய்க்காவலர்கள் இருந்தார்கள் என்பதை

நா ன் அறிந்துதானிருந்தேன். ஆனால் ரோல்டோஸையும், டோரி ஜோஸையும் போல அவரை மட்டும் தனிகாப் பிரித்துக் கொலை ச்யெ குள்ளநரிகளால் முடியவில்லை என்பதை நான் நம்பவில்லை. சொல்லப் போனால் அவரது மெய்க்காவலர்களில் பலர் அமெரிக்க ராணுவ அதிகாரிகளால் பயிற்சியளிக்கப்பட்டவர்கள் என்ற சந்தேகம் எனக்கு இருந்து வந்தது. அவர்களைக் கொண்டே நொரீகாவைக் கொன்று இருக்க முடியும். அல்லது மெய்க்காப்பாளர்களுக்குப் பணம் கொடுத்து விட்டுப் படுகொலையைக் குள்ளநரிகள் நடத்தியிருக்க முடியும்.

பேரரசை உருவாக்குவதற்காக அமெரிக்கா பழைய நடைமுறைக்குத் திரும்புகிறது என்பதையே இந்தத் தாக்குதல் காட்டுகிறது என்பது இதைப் பற்றி மேன்மேலும் படிக்கும்போதும் சிந்திக்கும் போதும் எனக்குத் தெளிவாகப் புரிகிறது. புஷ் அரசு, ரீகனை விட ஒரு படி மேலே சென்று நோக்கங்களை அடைவதற்காக பலத்தைப் பிரயோகிக்கத் தயங்கமாட்டோம் என்பதை இந்தத் தாக்குதலின் மூலம் உலகுக்கு நடைமுறையில் நிரூபித்துக் காட்டியது. பனாமா தாக்குதலின் உண்மையான நோக்கம் ஒரு பொம்மை அரசை உருவாக்குவதும், அதைக் கொண்டு டோரிஜோஸின் பாரம்பரியத்தைத் துடைத்து அழிப்பதும்,. ஈராக்கைப் போன்ற நாடுகளை மிரட்டிப் பணியச் செய்வதுமாகும் என்று தோன்றியது.

டேவிட் ஹாரிஸ், ‘நியூயார்க் டைம்ஸ்’ ஏட்டில் எழுதி வருபவர். பல நூல்களை எழுதியவர் ‘நிலவைச் சுடுதல்’ (shooting the moon) என்ற தலைப்பில் 2001-இல் தான் எழுதிய நூலில் இவ்வாறு கூறுகிறார்:

உலகின் நான்கு மூலைகளிலும் அமெரிக்கா ஆயிரக்கணக்கான அரசுத் தலைவர்கள், பலம் வாய்ந்த சக்கரவர்த்திகள், சர்வாதிகாரிகள், யுத்தப் பிரபுக்கள், ராணுவத் தளபதிகள் போன்றவர்களை எதிர்கொண்டிருந்த போதிலும் ஜெனரல் மனுவேல் அன்டோனியோ நொரீகா ஒரே ஒருவர்தான் இந்த முறையில் பிடித்து வரப்பட்டவர். ஒரு நாட்டின் ஆட்சியாளர் தன் சொந்த நாட்டில் அமெரிக்கச் சட்டங்களை மீறியதற்காக அந்த நாட்டின் மீது தாக்குதல் தொடுத்து, அவரை விசாரணைக்கும் சிறைத்தண்டனைக்கும் உட்படுத்துவதற்காக அமெரிக்காவுக்குத் தூக்கி வந்தது இந்த நாட்டின் 225 ஆண்டு கால சரித்திரத்தில் இந்த ஒரே ஒரு முறைதான் நடந்துள்ளது.[8]

குண்டு வீச்சுக்குப் பின்பு தானும் நெருக்கடியில் சிக்கிக் கொண்டதை அமெரிக்கா கண்டு கொண்டது. கொஞ்ச நாட்களுக்கு நிலைமையே தலைகீழாக மாறிவிடும் போலவும் அமெரிக்காவுக்கு எதிராகத் திரும்பிவிடும் போலவும் தோன்றியது. புஷ் அரசு இத்தாக்குதலின் மூலம் தனது பலவீனம் குறித்த வதந்திகளுக்கு ஒருவேளை முடிவு கட்டியிருக்கலாம். ஆனால் அது இப்போது தான் எடுத்த ராணுவ நடவடிக்கை சரியானதா, இல்லையா என்ற சட்டச் சிக்கலில் மாட்டிக்

கொண்டது. அராஜகத்தில் ஈடுபடும்போது சிக்கிக் கொண்ட அடியாள் போல புஷ் அரசு தோன்றியது. குண்டு வீச்சுக்கு ஆளான பகுதிகளில் செஞ்சிலுவைச் சங்கமும், பத்திரிகையாளர்களும் மற்றவர்களும் நுழைய அமெரிக்க ராணுவம் மூன்று நாட்கள் வரை அனுமதிக்கவேயில்லை என்பது வெட்ட வெளிச்சமானது. அந்த நாட்களில் அமெரிக்க ராணுவத்தினர் குண்டுவீச்சில் பலியானவர்களின் உடல்களைப் புதைக்கும் வேலையிலும் எரிக்கும் வேலையிலும் ஈடுபட்டிருந்தனர். இழைக்கப்பட்ட குற்றங்கள் மற்றும் முறையற்ற செயல்கள் பற்றிய செய்திகள் பத்திரிகைகளில் ஆதாரபூர்வமாக வெளியிடப்பட்டன. உரிய நேரத்தில் சிகிச்சை அளிக்கப்படாததால் எத்தனை பேர் இறந்தனர் என்பதைப் பற்றியெல்லாம் கேள்விகள் எழுப்பப்பட்டன. ஆனால் இத்தகைய கேள்விகளுக்குப் பதிலளிக்கப்படவேயில்லை.

உண்மையில் இந்தத் தாக்குதல் எவ்வளவு நாசத்தை ஏற்படுத்தியது என்பதையும், எத்தனை பேர் படுகொலை செய்யப்பட்டனர் என்பதையும், புதைக்கப்பட்ட மற்ற உண்மைகளையும் ஒரு போதும் நம்மால் முழுமையாகத் தெரிந்து கொள்ள முடியாது. ராணுவச் செயலாளரான ரிச்சர்ட் செனி, இறந்தவர்களின் எண்ணிக்கை 500 லிருந்து 600 வரை இருக்கலாம் என்றார். ஆனால் மனித உரிமைக் குழுக்கள் மூவாயிரத்திலிருந்து ஐயாயிரம் பேர் வரை கொல்லப்பட்டிருக்கலாம் என்று மதிப்பிட்டன. இருபத்து ஐந்தாயிரம் பேர் தங்கள் வீடு, வாசல்களை இழந்தனர்.[9] நொரீகா கைது செய்யப்பட்டு மியாமிக்குக் கொண்டு செல்லப்பட்டார். அவருக்கு நாற்பதாண்டு காலச் சிறைத் தண்டனை வழங்கப்பட்டது. அந்த நேரத்தில் அமெரிக்காவால் அதிகாரப்பூர்வமாகப் போர்க்கைதி என்று வகைப்படுத்தப்பட்டவர் அவர் ஒரே ஒருவர்தான்.[10]

சர்வதேசச் சட்டம் அப்பட்டமாக மீறப்பட்டது பற்றியும், உலகிலேயே பலம் வாய்ந்த ஒரு ராணுவத்தால் எந்தவிதமான பாதுகாப்புமற்ற அப்பாவிப் பொதுமக்கள் படுகொலை செய்யப்பட்டது குறித்தும் உலகம் முழுவதும் மக்கள் கடுங்கோபம் அடைந்தனர். ஆனால் அமெரிக்கர்களில் ஒரு சிலரே தங்கள் நாட்டின் மீது உலகம் கொண்டுள்ள சீற்றத்தையும், தங்கள் நாடு புரிந்த குற்றங்களையும் பற்றி அறிந்திருந்தனர். மிகவும் வடிகட்டப்பட்ட செய்திகளே பத்திரிகைகளில் வெளிவந்தன.[11] இதற்குப் பல காரணங்கள் இருந்தன. அரசின் கொள்கை, பதிப்பாளர்களுக்கும், தொலைக்காட்சி நிர்வாகிகளுக்கும் வெள்ளை மாளிகையிலிருந்து வந்த தொலைபேசி அழைப்புகள், ஒத்து ஊதிய நாடாளுமன்றம், மக்களுக்கு உண்மையை விடக் கதாநாயகர்களே தேவை என்று பத்திரிகையாளர்களிடம் நிலவிய கருத்து போன்ற பல காரணங்கள் மக்களிடம் உண்மை சென்று சேராமல் தடுக்கப்பட்டதற்குக் காரணமாக இருந்தன.

இந்தப் பொது விதிக்கு ‘நியூஸ்டே’வின் ஆசிரியரும் அசோசியேட்டட் பிரஸ் நிருபருமான பீட்டர் எய்ஸ்னர் மட்டுமே விதிவிலக்காக இருந்தார். அவர் பனாமாத் தாக்குதலைப் பற்றி ஆய்வு செய்தவர். 1997-இல் வெளிவந்த ‘அமெரிக்காவின் கைதி மனுவேல் நொரீகாவின் நினைவுக் குறிப்புகள் (The Memoirs of Manual Noriega America’s Prisoner) என்ற தன்னுடைய நூலில் அவர் எழுதுகிறார்:

நொரீகாவின் மீதான தாக்குதல் என்ற பெயரில் நடத்தப்பட்ட படுகொலைகள், அழிவுகள், அநியாயங்கள், கட்டவிழ்த்து விடப்பட்ட பொய்கள் எல்லாமே அமெரிக்க ஜனநாயகத்தின் அடிப்படைக் கொள்கைகளுக்கு பேரபாயம் விளைவிக்கக் கூடியவை. பனாமாவில் கொன்று குவிக்கும்படி ராணுவ வீரர்களுக்கு உத்தரவிடப்பட்டது. அந்த நாட்டை ஒரு கொடூரமான சர்வாதிகாரியிடமிருந்து விடுவிக்க வேண்டியுள்ளது என்று கூறப்பட்ட பின்பு அவர்கள் உத்தரவுக்குக் கீழ்ப்படிந்தார்கள். ராணுவ வீரர்கள் செயல்படத் தொடங்கியதுமே அமெரிக்க மக்களும் அவர்களைப் பின்பற்றத் தொடங்கினர்.

நீண்ட ஆய்வுக்குப் பின்பு, மியாமி சிறையில் அடைக்கப்பட்டிருந்த நொரீகாவுடனான பேட்டிகளுக்குப் பிறகு எய்ஸ்னர் கூறுகிறார்: நொரீகாவின் மீது சுமத்தப்பட்டுள்ள பெரும்பாலான குற்றச்சாட்டுகளுக்கு ஆதாரங்கள் உள்ளதாக நான் நினைக்கவில்லை. ஒரு வெளிநாட்டு ராணுவத்தின் தளபதி என்ற முறையிலோ சுதந்திரமான ஒரு நாட்டின் அதிபர் என்ற முறையிலோ நொரீகா அமெரிக்காவின் பாதுகாப்புக்கு அச்சுறுத்தலாக விளங்கினார் என்று நான் நினைக்கவில்லை. அமெரிக்காவின் தாக்குதலை நியாயப்படுத்தக் கூடிய செயல்கள் எதையும் அவர் புரிந்ததாகக் கூற முடியாது.[12]

எய்ஸ்னர் இவ்வாறு தனது ஆய்வை முடித்திருந்தார்.

அரசியல் சூழல் குறித்த எனது ஆய்வும், பனாமாத் தாக்குதலுக்கு முன்பும், தாக்குதலின் போதும், அதற்குப் பின்பும் பனாமாவில் நான் சேகரித்த செய்திகளும் இந்தத் தாக்குதல் ஒரு வெறுக்கத்தக்க அதிகாரத் துஷ்பிரயோகமாகும் என்ற முடிவுக்கே என்னைக் கொண்டு வந்துள்ளன. ஆணவம் மிக்க அமெரிக்க அரசியல்வாதிகள் மற்றும் அவர்களது பனாமாக் கூட்டாளிகள் ஆகியோரது நோக்கங்களை எட்டுவதற்காகவே அப்பாவி மக்களை ரத்த வெள்ளத்தில் மூழ்கடித்த இந்தத் தாக்குதல் நடத்தப்பட்டது.[13]

கொலம்பியாவிலிருந்து பனாமா பிய்த்தெடுக்கப்பட்ட காலத்திலிருந்து டோரிஜோஸ் காலம் வரை அமெரிக்காவின் கைப்பொம்மைகளாக பனாமாவை ஆண்டு வந்த அரியாஸ் குடும்பமும் அதைச் சார்ந்த குழுவும் திரும்பவும் ஆட்சியிலமர்த்தப்பட்டது. கால்வாய் ஒப்பந்தம் மறு ஆய்வுக்கு

உட்படுத்தப்பட்டது. அதிகாரப்பூர்வ ஆவணங்களில் என்ன சொல்லப்பட்டிருந்தாலும் வாஷிங்டன் அந்த நீர்வழியைத் திரும்பவும் தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து விட்டது என்பதே உண்மையாகும்.

இந்த நிகழ்வுகளும், மெய்னில் எனக்குக் கிடைத்த அனுபவங்களும் என்னுள் ஒரு கேள்வியை விடாது எழுப்பிக் கொண்டே இருந்தன. லட்சக்கணக்கான மக்களைப் பாதிக்கக் கூடிய வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த முடிவுகளை எடுக்கக்கூடிய அரசுப் பொறுப்புகளில் உள்ளவர்கள் எத்தனை பேர் தனிப்பட்ட சுய லாபங்களுக்காகத் தங்கள் அதிகாரத்தைப் பயன்படுத்துகிறார்கள்? இவர்களில் எத்தனை பேர் நாட்டின் மீதான அர்ப்பணிப்பைவிட பேராசையால் தூண்டப்பட்டுள்ளார்கள்? ஒரு ஜனாதிபதி தான் பலவீனமானவன் அல்லன் என்று காட்டுவதற்காக எத்தனை போர்கள் நடத்தப்பட்டன?

புத்தகம் எழுதும் வேலையை மூட்டை கட்டி வைப்பதாக எஸ்.டபிள்யூ.ஈ.சி. நிறுவனத் தலைவருக்கு நான் வாக்களித்திருந்தாலும் கூட, பனாமாத் தாக்குதல் தந்த விரக்தியும், கையாலாகாத்தனமும் புத்தகம் எழுதும் வேலையைத் திரும்பவும் தொடங்கத் தூண்டின. இப்போது எனது நூலை டோரிஜாஸை மையப்படுத்திப் பின்னுவது என்ற முடிவு செய்தேன். அவரது கதையைச் சொல்வதன் மூலம் நம் உலகம் முழுவதும் வியாபித்துள்ள அநீதிகளை அம்பலப்படுத்தவும், அதன் மூலம் என் குற்றவுணர்ச்சியிலிருந்து விடுதலை பெறவும் விரும்பினேன். அதோடு இந்த முறை வாயைத் திறப்பதில்லை என்று உறுதி பூண்டிருந்தேன்.

அந்தப் புத்தகத்தை எழுதிக் கொண்டிருந்தபோது பல இடங்களில் நாங்கள் புரிந்த செயல்களின் முழுப் பரிணாமமும் கண் முன் தோன்றி அதிர வைத்தது. நான் வேலை செய்த நாடுகளின் பட்டியலும் அதன் பிறகு அந்த நாடுகள் அடைந்த கதியும் தனிப்பட்ட முறையில் நான் செய்த படுமோசமான செயல்களின் விளைவுகளும் என் இதயத்தையே பிளப்பது போலிருந்தன. எனது செயல்கள் குறித்த ஆன்மப் பரிசோதனையை நான் முன்பே செய்தது உண்டுதான். ஆனால் பெரும்பாலும் அன்றாட நடவடிக்கைகளில் என் கவனம் குவிக்கப்பட்டிருந்ததால் பொருளாதார அடியாட்களின் செயல்களின் விளைவுகளை விரிவான தளத்தில் புரிந்து கொள்ளத் தவறியிருந்தேன். அப்போது ஹோவார்டு பார்க்கருடனான உரையாடல்கள் எனக்கு எரிச்சலளித்தன. ராஸியும், இளம் இந்தோனேஷிய நண்பர்களும் எழுப்பிய கேள்விகளும், பனாமாவில் ஃபிடல் அறிமுகப்படுத்திய சேரிகளும், டிஸ்கொதேயும் கால்வாய்ப் பகுதியும், ஈரானில் யாமின் மற்றும் டாக் உடனான சந்திப்பும் என்னை ஆழமாகப் பாதித்திருந்தன என்பது உண்மைதான். ஆனால் இந்நூலை எழுதும் வேலையில் ஈடுபட்டிருக்கும் போதுதான் பொருளாதார அடியாட்களின் செயல்கள்

குறித்து முழுமையான பார்வையைப் பெற்றேன்.

நான் போர்வீரர்களை நினைத்துப் பார்க்கிறேன். தொடக்கத்தில் ஒரு போர்வீரன் அப்பாவியாகத்தான் இருக்கிறான். மற்றவர்களைக் கொல்வது எந்தளவிற்கு நியாயமென்று அவன் கேள்வி எழுப்பக்கூடும். ஆனால் தனது சொந்த அச்சம் குறித்தே, தன்னுடைய உயிர்வாழ்வு குறித்தே அவன் கவனம் செலுத்த நேரிடுகிறது. முதன்முதலாக எதிரியை அவன் கொல்லும்போது உணர்ச்சிகளால் திக்குமுக்காடிப் போகிறான். இறந்து போனவனின் குடும்பத்தை நினைத்துப் பார்க்கிறான்; வருத்தப்படுகிறான். ஆனால் காலம் செல்லச் செல்ல அதிகப் போர்களில் பங்கு கொள்கிறான். அதிக மக்களைக் கொல்கிறான். பின்னர் இறுகிப் போகிறான். தொழில்முறைப் போர்வீரனாக மாறி விடுகிறான்.

நானும் ஒரு தொழில் முறைப் போர்வீரனாகத்தான் இருந்திருக்கிறேன். இந்த உண்மையை நான் ஒப்புக் கொண்டதுமே உலகப் பேரரசு உருவாகக் காரணமாக உள்ள நடைமுறைகளைப் பற்றிப் புரிந்து கொள்ளும் போக்கில் பல படிகள் முன்னேறிவிட்டேன். மனிதர்களால் எப்படி இவ்வளவு கொடூரமான செயல்களைப் புரிய முடிகிறது என்பதைப் புரிந்துகொள்ள எனக்கு ஏதுவானது. உதாரணமாக தன் குடும்பத்தின் மீது அன்பு செலுத்தும் ஒரு ஈரானியனால் எப்படி ஷாவின் ரகசியப் போலீசுக்கு வேலை செய்ய முடிந்தது என்பதையும் நல்ல குணமுள்ள ஜெர்மானியர்களால் எப்படி ஹிட்லரின் ஆணைகளை நிறைவேற்ற முடிந்தது என்பதையும், எந்தக் குற்றப் பின்னணியும் இல்லாத அமெரிக்க ஆண்களும், பெண்களும் எப்படி பனாமா நகரின் மீது குண்டு வீசினார்கள் என்பதையும் என்னால் நன்றாகப் புரிந்து கொள்ள முடிந்தது.

பொருளாதார அடியாள் என்ற முறையில் நான் ஒருநாளும் எந்த அரசு நிறுவனத்திடமிருந்தும் ஒரு பைசா கூடப் பெற்றதில்லை. எனக்குச் சம்பளம் கொடுத்தது மெய்ன் நிறுவனம்தான். ஒரு தனியார் நிறுவனத்தில் வேலை செய்து வந்த என்னால் எப்படிப் பொருளாதார அடியாளாகச் செயல்பட முடிந்தது என்தைப் புரிந்து கொள்ள ஒரு விரிவான பார்வையைப் பெற வேண்டியிருந்தது. இப்படிப்பட்ட ஒரு விரிவான தளத்தில் பார்க்கும்போதுதான் நிறுவன நிர்வாகிகள் எப்படிப் பொருளாதார அடியாட்களாக மாறி வருகிறார்கள் என்பதைப் புரிந்து கொள்ள முடியும். உலக அரங்குகளில் தோன்றியுள்ள இந்தப் புதிய வகையான போர்வீரர்கள் முழுவதும் உணர்வுகள் மரத்துப் போனவர்கள். நான் இவ்வாறு எழுதினேன்:

இன்று (நமது நாட்டு) ஆண்களும், பெண்களும் வேலைக்கு ஏங்கி நிற்கும் மக்களைத் தேடி தாய்லாந்துக்கும், பிலிப்பைன்ஸுக்கும், போஸ்ட்லானாவிற்கும், பொலிவியாவிற்கும் மற்ற நாடுகளுக்கும் செல்கிறார்கள். பட்டினியால் வதைபடுகின்ற எந்த அடிப்படை

வசதிகளுமற்ற சேரிகளில் வாழ்ந்து வருகின்ற, அடுத்த நாளைக் குறித்து கனவு காண்பதையே மறந்துவிட்ட, பசியாலும், நோயாலும் பீடிக்கப்பட்ட குழந்தைகள் திரிந்து கொண்டிருக்கும் குடிசைகளில் வாழ்ந்து வருகின்ற ஏழை மக்களைத் தேடி இவர்கள் செல்லுகிறார்கள். ஏற்கனவே வறுமையில் வாடி நிற்கும் இந்த மக்களை மேலும் ஒட்டச் சுரண்டுவதுதான் இவர்களின் நோக்கம். மன்ஹாட்டன் அல்லது சான்பிரான்ஸிஸ்கோ அல்லது சிகாகோ போன்ற நகரங்களிலுள்ள அதி ஆடம்பர அலுவலகங்களில் வேலை செய்து வரும் இவர்கள், ஆடம்பரமான ஜெட் விமானங்களில் கண்டங்களையும், கடல்களையு-ம் கடந்து பயணம் செய்கிறார்கள். உயர்தரமான உணவு விடுதிகளில் தங்குகிறார்கள். பின்பு வேலைக்கு ஆட்களைத் தேடிச் செல்கிறார்கள்.

இன்னும் நம்மிடையே அடிமை வியாபாரிகள் வாழ்ந்து கொண்டு தானிருக்கிறார்கள். அவர்கள் ஆப்பிரிக்கக் காடுகளுக்குள் அணிவகுத்துச் சென்று மனிதர்களைப் பிடித்து வர வேண்டியதில்லை. ஹவானாவிலும், கார்டேஜுனாவிலும், சாரிலெஸ்டனிலும் அடிமைகளை ஏலம் போட்டு விற்கும் மேடைகளில் சிறந்த உடலமைப்புள்ள, உயிருள்ள மனித உடல்களைத் தேடிப் பிடிக்க வேண்டிய அவசியம் அவர்களுக்கு இல்லை. நீலநிற ஜீன்ஸ்களும், டென்னிஸ் ஷூக்களும், வாகன பாகங்களும் மேலும் ஏராளமான பொருட்களும் உற்பத்தி செய்யக்கூடிய தொழிற்சாலைகளில் இந்த நவீன அடிமை வியாபாரிகள் பாவப்பட்ட மக்களை வேலைக்குச் சேர்க்கிறார்கள். சில நேரங்களில் அவர்கள் இந்தத் தொழிற்சாலைகளைக் கூடத் தாங்களே கட்டுவதில்லை. அதற்குப் பதிலாக உள்ளூர் வியாபாரிகளை வாடகைக்கு அமர்த்தித் தங்கள் தீய நோக்கங்களை அவர்கள் மூலம் நிறைவேற்றிக் கொள்கிறார்கள்.

இந்தக் காரியங்களில் ஈடுபட்டுள்ள ஆண்களும் பெண்களும் தாங்கள் செய்வது சரி என்றே எண்ணிக் கொண்டுள்ளார்கள். அவர்கள் தாங்கள் சென்ற நாடுகளில் உள்ள வரலாற்றுச் சின்னங்களின் புகைப்படங்களைத் தங்கள் குழந்தைகளுக்குக் காட்ட விரும்புகிறார்கள். கருத்தரங்கங்களுக்குச் சென்று ஒருவரையொருவர் முதுகில் தட்டிக்கொண்டு தொலைதூர நாடுகளில் உள்ள மக்கள் பைத்தியக்காரத்தனமான பழக்க வழக்கங்களைக் கையாளும் முறைகளைப் பற்றிப் பேசுகிறார்கள். அவர்களது மேலதிகாரிகள் அமர்த்தியுள்ள வழக்குரைஞர்கள் அவர்கள் செய்து வரும் செயல்கள் முழுவதும் சட்டப் பூர்வமானவைதான் என்று திட்டவட்டமாகக் கூறுகிறார்கள். இந்த ஆண்களும் பெண்களும் பாவப்பட்ட மக்களுக்கு உண்மையில் உதவிதான் செய்கிறார்கள் என்று அவர்களை (அதாவது அடிமை வியாபாரத்தில் ஈடுபட்டிருப்பவர்களை) நம்பச் செய்வதற்காக, உளவியல் மருத்துவர்களையும், பல்வேறு வகையான மனித வள நிபுணர்களையும் கொண்ட ஒரு பெரும்படை எப்போதும் காத்திருக்கும்.

பழங்காலத்தைச் சேர்ந்த அடிமை வியாபாரி தான் கையாண்டு கொண்டிருக்கும் உயிரினங்கள் முழுவதும் மனிதத்தன்மை கொண்டவையல்ல என்றும், கிறித்துவத்தைத் தழுவத் தன்னுடைய அடிமைகளுக்குத் தான் ஒரு வாய்ப்பு ஏற்படுத்தித் தருவதாகவும் தன்னைத்தானே நம்ப வைத்துக் கொண்டான். தனது பொருளாதாரம் செழித்திருக்கவும், தன் நாடும், சமூகமும் வளம் பெறவும் அடிமைகள் கட்டாயம் தேவை என்பதை அவன் புரிந்து வைத்திருந்தான். நவீன அடிமை வியாபாரிகளோ, ஒன்றுமில்லாமலிருக்கும் மக்களுக்கு தினமும் ஒரு டாலர் ஈட்ட தாங்கள் கூறிக் கொள்கிறார்கள். இந்தப் பாவப்பட்ட மக்கள் தான் தாங்கள் உயிர் வாழ்வதற்கு ஜீவநாடியானவர்கள் என்பதை இந்த நவீன அடிமை வியாபாரிகளும் புரிந்து வைத்திருக்கிறார்கள். தங்களது வாழ்க்கை முறை பற்றியும், தங்களை உந்தித் தள்ளும் பொருளாதார அமைப்பு உலகிற்கு எப்படிப் பட்ட கேடு விளைவித்து வருகிறது என்பது பற்றியும், அது எப்படி தங்கள் குழந்தைகளையும் நிச்சயம் ஒருநாள் பாதிக்கும் என்பதைப் பற்றியும் இந்த நவீன அடிமை வியாபாரிகள் நினைத்தே பார்ப்பதில்லை.

[1] Manuel Noriega with Peter Eisner, The Memories of Manuel Noriega, America’s Prisoner (New York: Random House, 1997), p.56.

[2] David Harris, Shooting the Moon: The True Story of an American Manhunt Unlike Any Other, Ever (Boston: Little, Brown and Company, 2001), p 31-34.

[3] David Harris, Shooting the Moon: The True Story of an American Manhunt Unlike Any Other, Ever (Boston: Little, Brown and Company, 2001), p 43.

[4] Manuel Noriega with Peter Eisner, The Memories of Manuel Noriega, America’s Prisoner (New York: Random House, 1997), p 212; see also Craig Unger, “”Saving the Saudis’’, Vanity Fair, October 2003, p 165.

[5] Manuel Noriega with Peter Eisner, The Memories of Manuel Noriega, America’s Prisoner (New York: Random House, 1997), p 114.

[6] See www.famoustexzns.com/georgebush.htm, p 2.

[7] Manuel Noriega with Peter Eisner, The Memories of Manuel Noriega, America’s Prisoner (New York: Random House, 1997), p 56-57.

[8] David Harris, Shooting the Moon: The True Story of an American Manhunt Unlike Any Other, Ever (Boston: Little, Brown and Company, 2001), p.6.

[9] See www.famoustexzns.com/georgebush.htm, p 3.

[10] David Harris, Shooting the Moon: The True Story of an American Manhunt Unlike Any Other, Ever (Boston: Little, Brown and Company, 2001), p 4.

[11] Manuel Noriega with Peter Eisner, The Memories of Manuel Noriega, America's Prisoner (New York: Random House, 1997), p 248.

[12] Manuel Noriega with Peter Eisner, The Memories of Manuel Noriega, America's Prisoner (New York: Random House, 1997), p 211.

[13] Manuel Noriega with Peter Eisner, The Memories of Manuel Noriega, America's Prisoner (New York: Random House, 1997), p xxi.

# 31

# ஈராக்கில் பொருளாதார அடியாட்களின் தோல்வி

1980-களில் ஐ.பி.எஸ். நிறுவனத்தின் தலைவராக இருந்ததன் காரணமாகவும் பின்பு எஸ்.டபிள்யூ.ஈ.சி. நிறுவனத்தில் ஆலோசகராக இருந்ததன் காரணமாகவும் ஈராக்கைப் பற்றி பெரும்பாலோருக்குக் கிடைக்காத தகவல்கள் எனக்குக் கிடைத்தன. 1980-களில் அமெரிக்கர்கள் அந்த நாட்டைப் பற்றிக் குறைவாகவே அறிந்திருந்தனர். அவர்களது ரேடார் திரையில் அந்த நாடு இல்லவேயில்லை. ஆனால் அங்கு நடந்துவரும் விஷயங்கள் என் கவனத்தைக் கவர்ந்திருந்தன.

உலக வங்கி, சர்வதேச நிதி நிறுவனம் மற்றும் ஏனைய பன்னாட்டு நிதி நிறுவனங்களிலும், பெக்டெல், ஹாலிபர்ட்டன் போன்ற பெரிய நிறுவனங்களிலும் இருந்த பழைய நண்பர்களுடனான எனது நட்பு-தொடர்ந்தே வந்தது. என் மாமனாரும் இந்த நிறுவனங்களில் பணி புரிபவர்தானே. ஐ.பி.எஸ்.ஸிலும் மற்ற சுதந்திரமான எரிசக்தி நிறுவனங்களிலும் பணிபுரிந்து வந்த பொறியியலாளர்கள் பலர் மத்தியக் கிழக்கை மையப்படுத்தி உருவாக்கப்பட்ட திட்டங்களுடன் சம்பந்தப்பட்டிருந்தனர். எனவே பொருளாதார அடியாட்கள் ஈராக்கில் தீவிரமாகப் பணியாற்றி வருகிறார்கள் என்பது எனக்கு நன்கு தெரிந்திருந்தது.

ரீகன், புஷ் அரசுகள், ஈராக்கை இன்னொரு சவூதி அரேபியாவாக மாற்ற உறுதி பூண்டிருந்தன. சவூதி அரச குடும்பத்தைப் பின்பற்றியே ஆகவேண்டிய அளவிற்கு சதாம் ஹுஸேனுக்கு நெருக்கடிகள் இருந்தன. சதாம் செய்ய வேண்டியிருந்ததெல்லாம் சவூதி கருப்புப் பண விவகாரத்தில் அரச குடும்பம் அறுவடை செய்த லாபங்களைக் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டியதுதான். அமெரிக்காவுடனான ஒப்பந்தத்திற்குப் பின்பு சவூதிப் பாலைவனத்தில் நவீன நகரங்கள் முளைத்தெழுந்துள்ளன. ஆடுகளுக்குப் பதிலாக அழகான டிரக்குகள் ரியாத்தின் குப்பைகளை அகற்றி வருகின்றன. உலகின் அதிநவீனத் தொழில் நுட்பங்களால் கிடைக்கக்கூடிய அத்தனை பலன்களும் லாபங்களும் சவூதிக்குக் கிடைத்து வருகின்றன. கடல்நீரைக் குடிநீராக்கும் நிலையங்கள்... சாக்கடைகளைச் சுத்திகரிக்கும் நிலையங்கள்... தொலைத்தொடர்புச் சாதனங்கள்... மின் உற்பத்தி நிலையங்கள்...

சர்வதேசச் சட்டம் தொடர்பான விவகாரங்களிலும் சவூதிகளுக்குத்

தனிச்சிறப்பான அந்தஸ்து கிடைத்து வருகிறது என்பதை சதாம் அறிந்துதானிருந்தார். தீவிரவாதிகள் என்றும், புரட்சியாளர்கள் என்றும் உலகின் மற்ற பகுதிகளில் கருதப்பட்டு வந்த பல மதவெறி அமைப்புகளுக்கு சவூதிகள் நிதியுதவி அளித்து வந்தனர். பல நாடுகளிலிருந்து தப்பி ஓடி வந்தவர்களுக்கு சவூதியில் புகலிடம் அளிக்கப்பட்டு வந்தது. இவற்றையெல்லாம் வாஷிங்டனிலுள்ள சவூதிகளின் நண்பர்கள் கண்டு கொள்ளவேயில்லை. உண்மையில் சோவியத் யூனியனுக்கு எதிராக ஒஸாமா பின்லாடன் நடத்தி வந்த போருக்கு அமெரிக்காதான் சவூதிகளின் நிதியுதவியைக் கோரிப் பெற்றுத் தந்தது. ரீகன், புஷ் அரசுகள் ஒஸாமாவுக்கு நிதியுதவி அளிக்கும்படி சவூதிகளை ஊக்குவித்ததோடல்லாமல் மற்ற நாடுகளையும் ஒஸாமா பின் லாடனுக்கு உதவும்படி வற்புறுத்தின. குறைந்தபட்சம் சவூதிகளின் நடவடிக்கைகளைக் கண்டு கொள்ளாமல் விட்டு விடும்படி மற்ற நாடுகளுக்கு ரீகன், புஷ் அரசுகள் அழுத்தம் கொடுத்தன.

1980-களில் பாக்தாத்தில் பொருளாதார அடியாட்கள் தீவிரமாக இயங்கி வந்தனர். சதாம் வழிக்கு வந்துவிடுவார் என்று அவர்கள் நம்பினார்கள். எனக்கும் இந்த ஊகம்தான் சரியானதாகத் தோன்றியது. சவூதிகளைப் போல சதாமும் வாஷிங்டனுடன் ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டிருந்தால் தன் நாட்டை ஆள்வதற்கு மொத்தக் குத்தகை பெற்றுவிட முடியும். அதோடு இந்தப் பகுதி முழுவதும் தன் செல்வாக்கை விரிவுபடுத்திக் கொள்ளவும் முடியும்.

அவர் கொடுங்கோலாட்சி செய்து வரும் சர்வாதிகாரி என்பதோ, அவரது செயல்கள் ஹிட்லரது நடவடிக்கைகளை ஒத்திருந்தன என்பதோ அப்போது முக்கியமானதாகக் கருதப்பட்டிருக்காது. அமெரிக்கா சதாமைப் போன்ற சர்வாதிகாரிகளோடு முன்பும் பலமுறை அனுசரித்துப் போனதோடு ஆதரவும் அளித்துள்ளது. நாம் அவருக்கு பெட்ரோ - டாலர்களுக்குப் பதிலாக அமெரிக்க அரசின் பங்குப் பத்திரங்களை வழங்கியிருக்கலாம். அமெரிக்காவுக்குத் தொடர்ந்து எண்ணெய் ஏற்றுமதி செய்யப்படும் என்ற உறுதிமொழியோடு அதிலிருந்து கிடைக்கும் பணத்தைக் கொண்டு ஈராக் முழுவதிலும் உள்கட்டுமானத்தை மேம்படுத்த அமெரிக்க நிறுவனங்கள் அமர்த்தப்படும் என்ற உறுதிமொழியும் வழங்கப்பட்டிருந்தால் நாம் சதாமை ஆதரித்திருப்போம். அவருக்கு டாங்கிகளும், போர்விமானங்களும் விற்றிருப்போம். ரசாயன ஆயுதங்களை உற்பத்தி செய்யும் ஆலைகளையும், அணு மின் நிலையங்களையும் கட்ட உதவியிருப்போம். நாம் அளிக்கும் தொழில்நுட்பங்கள் நவீன ஆயுதங்களை உற்பத்தி செய்யப் பயன்படுத்தப்பட்டாலும் நாம் கண்டு கொண்டிருக்க மாட்டோம். இது ஒன்றும் புதிதல்ல. ஏற்கனவே பல நாடுகளில் நாம் செய்து வந்திருப்பதுதான்.

மேற்பார்வைக்குத் தெரியக்கூடிய விஷயங்களை விட வேறு காரணங்களுக்காக ஈராக் நமக்கு மிகவும் முக்கியமானது. ஈராக்கில் உள்ள எண்ணெய்க்காகவே அது முக்கியமானதாகக் கருதப்படுகிறது என்ற கருத்து பொதுமக்களிடையே நிலவி வந்தாலும் அது மட்டுமே காரணமல்ல. ஈராக்கிற்கு அளிக்கப்படும் முக்கியத்துவத்திற்குக் காரணம் அதிலுள்ள நீர்வளமும், அதன் புவியியல் அமைப்புமேயாகும். யூப்ரடீஸ், டைக்ரீஸ் ஆறுகள் இரண்டும் ஈராக் வழியாகப் பாய்கின்றன. எனவே இப்பகுதியில் உள்ள வேறெந்த நாட்டையும் விட ஈராக்கே மிக அதிகமான நீர்வளத்தைத் தன் கட்டுப்பாட்டில் கொண்டுள்ளது. 1980- களில் அரசியலிலும், பொருளாதாரத்திலும் தண்ணீருக்கு உள்ள முக்கியத்துவம், ஆற்றல்வளம் மற்றும் பொறியியல் துறைகளில் இருந்த எங்களுக்குத் தெளிவாகத் தெரிய வந்தது. தனியார்மயமாக்கலை நோக்கிய பாய்ச்சலில் பெரும் நிறுவனங்கள் சிறிய நிறுவனங்களை விழுங்குவதோடு நிறுத்திக் கொள்ளவில்லை. அவை ஆப்பிரிக்கா,. லத்தீன் அமெரிக்கா மற்றும் மத்தியக்கிழக்கிலுள்ள நீராதாரங்களைத் தனியார்மயமாக்குவதற்காகவும் முனைந்து நிற்கின்றன.

ஈராக்கிலுள்ள எண்ணெயையும், நீரையும் தவிர அது அமைந்துள்ள பகுதியும் மிகவும் கேந்திர முக்கியத்துவமுடையதாகும். அது ஈரான், குவைத், சவூதி அரேபியா, ஜோர்டான், சிரியா மற்றும் துருக்கியைத் தனது எல்லைப்புற நாடுகளாகக் கொண்டுள்ளது. இஸ்ரேல் மற்றும் பழைய சோவியத் யூனியனிலிருந்து ஏவுகணைகளால் தாக்கப்படக்கூடிய தூரத்திலுமுள்ளது. ராணுவ நிபுணர்கள் ஈராக்கை, பிரெஞ்சுப் போர் (அமெரிக்க) இந்தியப் போர் மற்றும் அமெரிக்கப் புரட்சியின் அப்போதைய ஹட்ஸன் ஆற்றுப் பள்ளத்தாக்கோடு ஒப்பிடுகிறார்கள். பதினெட்டாம் நூற்றாண்டில் ஹட்ஸன் ஆற்றுப் பள்ளத்தாக்கை யார் கட்டுப்படுத்துகிறார்களோ அவர்களால்தான் அமெரிக்கக் கண்டம் முழுவதையும் கட்டுப்படுத்த முடியும் என்பதைப் போர்களில் ஈடுபட்டு வந்த அமெரிக்கர்களும், பிரிட்டிஷாரும், பிரெஞ்சுக்காரர்களும் நன்கறிந்திந்தனர். இன்று ஈராக்கை யார் கட்டுப்படுத்துகிறார்களோ அவர்களிடம்தான் மத்தியக் கிழக்கைக் கட்டுப்படுத்துவதற்கான சாவி இருக்கும் என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதான்.

எல்லாவற்றுக்கும் மேலாக ஈராக் அமெரிக்கத் தொழில்நுட்பத்திற்கு ஒரு பரந்த சந்தையை வழங்கவிருந்தது. சில மதிப்பீடுகளின் அடிப்படையில் பார்த்தால் சவூதி அரேபியாவை விடப் பெரிய எண்ணெய் வயல்கள் அந்த நாட்டில் உள்ளன. எனவே தொழில் மயமாக்கும் திட்டங்களுக்கு நிதியளிக்கும் நிலையில் அந்நாடு உள்ளது என்பதில் சந்தேகமேயில்லை. இந்த விளையாட்டில் ஈடுபட்டிருந்தவர்கள் எல்லோரும் (குறிப்பாகப் பொறியியல் - கட்டுமான நிறுவனங்கள்) ஈராக்கின் மீது தங்கள் முழுக் கவனத்தையும்

குவித்தனர்.

ஆனால் சதாம் பொருளாதார அடியாட்களின் ஆசை காட்டலுக்கு வளைந்து கொடுக்கவில்லை என்பது எண்பதுகளின் இறுதியில் வெட்ட வெளிச்சமானது. இது மிகப் பெரிய ஏமாற்றமளித்ததோடு புஷ் அரசுக்குப் பெரிய சங்கடத்தையும் ஏற்படுத்தியது. பனாமாவைப் போலவே ஈராக்கும் புஷ்ஷுக்கு இருந்து வந்த பலவீனமானவர் என்ற தோற்றத்தை அதிகரிக்கவே செய்தது. புஷ் தனது நெருக்கடியிலிருந்து வெளிவர வழி தேடிக் கொண்டிருந்தபோது சதாம் தானாகவே வந்து பொறியில் மாட்டினார். 1990, ஆகஸ்ட்டில் எண்ணெய் வளம் மிகுந்த குவைத் முடியரசை அவர் ஊடுருவினார். சர்வதேசச் சட்டத்தைச் சதாம் மீறி விட்டதாகக் குற்றம் சாட்டி புஷ் பதிலடி கொடுத்தார். ஆனால் இதே புஷ் சில மாதங்களுக்கு முன்புதான் தன்னிச்சையாகவும், சட்ட விரோதமாகவும் பனாமாவை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தார்.

அமெரிக்க ஜனாதிபதி முழுமையான தாக்குதல் தொடுக்க ராணுவத்திற்கு உத்தரவிட்டதில் எந்த ஆச்சரியமும் எழவில்லை. ஐந்து லட்சம் அமெரிக்கப் படைவீரர்கள், பன்னாட்டுப் படையின் ஒரு பகுதியாக ஈராக்குக்கும் அனுப்பப்பட்டனர். ஈராக்கிய ராணுவ இலக்குகள் மீதும் பொதுமக்கள் மீதும் வான்வழித் தாக்குதல் நடத்தப்பட்டது. அதைத் தொடர்ந்து பல நூறு மணி நேரம் நீடித்த தரைவழித் தாக்குதலில் ஏற்கனவே பலவீனமான ஈராக்கிய ராணுவம் ஒழித்துக் கட்டப்பட்டது. குவைத்தின் பாதுகாப்பு உறுதிப்படுத்தப்பட்டது. ஒரு சர்வாதிகாரி நீதியின் முன் நிறுத்தப்படாவிட்டாலும் கூட தண்டிக்கப்பட்டுவிட்டார். அமெரிக்க மக்களிடையே புஷ்ஷின் புகழும், செல்வாக்கும் தொண்ணூறு சதவீதத்தை எட்டின.

ஈராக் தாக்குதலின் போது நான் பாஸ்டனில் கருத்தரங்கங்களில் கலந்து கொண்டிருந்தேன். எஸ்.டபுள்யூ.ஈ.சி. நிறுவனத்திற்காக நான் ஏதாவது செய்ய வேண்டுமென்று கோரப்பட்ட மிகச் சில சந்தர்ப்பங்களில் அதுவும் ஒன்று. இந்தக் கூட்டங்களில் புஷ்ஷின் முடிவு எவ்வளவு உற்சாகத்துடன் வரவேற்கப்பட்டது என்பது என் நினைவில் இன்னும் பசுமையாகப் பதிந்திருக்கிறது. ஸ்டோன் & வெப்ஸ்டர் நிறுவனத்தைச் சேர்ந்தவர்கள் எல்லோருமே மிகவும் உணர்ச்சிவசப்பட்ட நிலையிலிருந்தனர். ஒரு கொலைகாரச் சர்வாதிகாரிக்கு எதிராக எடுக்கப்பட்ட நடவடிக்கை இது என்ற எண்ணம் மட்டுமே இதற்குக் காரணமல்ல. ஈராக்கில் அமெரிக்கா அடைந்துள்ள வெற்றி கொள்ளை லாபத்தையும், பதவி மற்றும் சம்பள உயர்வுகளையும் அவர்களுக்கு அள்ளித் தர இருந்தது.

இந்த உணர்ச்சி வேகம் போரால் நேரடியாக லாபமடையக் கூடிய துறைகளிலுள்ள எங்களைப் போன்றவர்களோடு நின்றுவிடவில்லை. பொதுமக்களும்கூட ராணுவ ரீதியில் நாடு தன் மேலாதிக்கத்தை

நிறுவுவதைக் காண பேராவலுடன் இருந்தார்கள். கார்ட்டர், ரீகனால் தோற்கடிக்கப்பட்டதற்குப் பிறகு தத்துவார்த்த ரீதியாக ஏற்பட்ட மாற்றமும், ஈரானில் அமெரிக்கர்கள் பணயக் கைதிகளாகப் பிடித்து வைக்கப்பட்டிருந்து பின்பு விடுவிக்கப்பட்டதும், பனாமாக் கால்வாயைத் திரும்பவும் பனாமாவிடம் ஒப்படைத்த ஒப்பந்தத்தை மறுபரிசீலனைக்கு உட்படுத்த வேண்டுமென்று ரீகன் அறிவித்ததும் அமெரிக்கா தனது ராணுவ மேலாதிக்கத்தை நிறுவுவதற்கு ஆதரவான போக்கை மக்களிடையே ஏற்படுத்தியிருந்தது. புஷ் நடத்திய பனாமா ஆக்கிரமிப்பு ஏற்கனவே புகைந்து கொண்டிருந்த நெருப்பைக் கிளறிவிட்டது.

வெற்று தேசபக்தக் கூச்சல்களுக்கும், நாடு உறுதியுடன் செயல் பட வேண்டுமென்ற அறைகூவல்களுக்கும் அடியில் அமெரிக்காவின் பெரு நிறுவனங்களும், அதில் பணிபுரிபவர்களும் உலகைப் பார்க்கும் விதத்தில் ஒரு நுணுக்கமான மாற்றம் வந்து கொண்டிருக்கிறது என்று நான் நம்பினேன். உலகப் பேரரசை நோக்கிய பாய்ச்சல் யதார்த்தமாகிவிட்டது. நாட்டின் பெரும்பகுதி அதில் பங்கெடுத்துக் கொண்டிருந்தது. உலக மயமாக்கல், தனியார் மயமாக்கல் என்ற இரட்டைக் கருத்துகள் நம் உளவியலின் மிது மிகப்பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன.

இந்த மாற்றங்கள் அமெரிக்காவோடு மட்டுமே நின்று விடவில்லை. உலகப் பேரரசு எல்லா எல்லைகளையும் தொட்டுவிட்டது. முன்பு நாம் அமெரிக்க நிறுவனங்கள் என்று கருதி வந்தவையெல்லாம் உண்மையில் சர்வதேச நிறுவனங்களாகிவிட்டன. பல நாடுகளில் அவை சட்டப்படி வேரூன்றியிருந்தன. பல்வேறு நாடுகளில் உள்ள பல்வேறு சட்டங்களில் தங்களுக்கு ஏற்ற அம்சங்களைப் பயன்படுத்திக் கொண்டு இந்த நிறுவனங்களால் அந்தந்த நாடுகளின் சட்ட வரம்புகளுக்குட்பட்டு இயங்க முடியும். உலக மயமாக்கலை அடிப்படையாகக் கொண்ட வணிக ஒப்பந்தங்களும், உலக மயமாக்கலுக்காக உருவாக்கப்பட்ட அமைப்புகளும் இந்தச் சட்டத்தை வளைக்கும் வேலையை மிகவும் எளிதாக்கிவிட்டிருந்தன. ஜனநாயகம், சோஷலிசம், முதலாளித்துவம் போன்ற சொற்கள் ஏறக்குறைய வழக்கொழிந்து போயின. நிறுவன - அதிகார வர்க்கம் சர்வ வல்லமை கொண்டதாக உருவெடுத்தது. உலகின் பொருளாதாரத்திலும் அரசியலிலும் தனிப்பெரும் சக்தியாகத் தன்னை நிலைநிறுத்திக் கொண்டது.

1990, நவம்பரில் நான் நிறுவன - அதிகார வர்க்கத்திற்குப் பலியானேன். எங்களுடைய ஐ.பி.எஸ் நிறுவனத்தை நாங்கள் விற்றேயாக வேண்டிய நிலை வந்தது. எனக்கும் என் பங்குதாரர்களுக்கும் பெரும் பணம் கிடைக்கத்தான் செய்தது என்றாலும் ஆக்லாண்ட் எண்ணெய் நிறுவனம் எங்களுக்குக் கொடுத்த

கடுமையான நெருக்கடிகளின் காரணமாகத்தான் நாங்கள் இந்த முடிவெடுக்க வேண்டி வந்தது. அவர்களை எதிர்த்துப் போராடுவதென்பது எவ்வளவு கடினமாவது என்பதையும் அதற்கு என்ன விலை கொடுக்க வேண்டி வரும் என்பதையும் அனுபவத்தில் தெரிந்து கொண்டிருந்தேன். இருந்தபோதிலும் எண்ணெய்க்கு மாற்று காண்பதற்காகத் துவங்கப்பட்ட நிறுவனத்திற்கு ஓர் எண்ணெய் நிறுவனமே உரிமையாளராவது என்பது விதியின் விளையாட்டுத்தான். நான் துரோகம் செய்துவிட்டதாக உணர்ந்தேன்.

எஸ். டபுள்யூ.ஈ.சி. நிறுவனத்திற்கு நான் செய்து வந்த ஆலோசகர் பணிக்கு மிகக் குறைவான நேரம்தான் செலவழிக்க வேண்டியிருந்தது. எப்போதாவது பாஸ்டனுக்குப் பறக்கும்படியோ, திட்டங்களைத் தயாரிப்பதில் உதவும்படியோ கேட்டுக் கொள்ளப்பட்டது. சில நேரங்களில் ரியோ டி ஜெனீரோ போன்ற இடங்களுக்கு முக்கிய புள்ளிகளுடன் பேச்சுவார்த்தை நடத்த அனுப்பப்பட்டேன். ஒரு முறை ஒரு தனி விமானத்தில் குவாதமாலாவிற்குப் பறந்தேன். அடிக்கடி நான் நிறுவனத்தின் சம்பளப் பட்டியலில் உள்ளவன் என்பதையும் உதவக் காத்திருக்கிறேன் என்பதையும் நினைவுபடுத்தத் திட்ட மேலாளர்களுடன் தொலைபேசியில் தொடர்பு கொண்டேன். நான் செய்ய வேண்டியிருந்தது இவ்வளவு தான். இவ்வளவு குறைவாக வேலை செய்வதற்கு இவ்வளவு பணம் பெறுவது என் மனசாட்சியைக் குத்தத்தான் செய்தது. எனக்கு நன்கு பழக்கமான இந்தத் துறையில் பயனுள்ள வகையில் ஏதாவது காரியம் செய்ய எனக்கு விருப்பமிருந்தாலும் கூட அது நிகழ்ச்சி நிரலிலேயே இல்லை.

இரண்டு உலகங்களுக்கு நடுவிலிருக்கும் மனிதன் என்று என்னைப் பற்றி நான் கொண்டிருந்த எண்ணம் என்னை வாட்டி வதைத்தது. என் வாழ்க்கையைப் பயனுள்ளதாக்கும் வகையில், கடந்த காலங்களில் புரிந்த மோசமான செயல்களுக்கு மாற்றாக இருக்கும் விதத்தில் ஏதாவது செய்ய வேண்டுமென்று விரும்பினேன். ‘ஒரு பொருளாதார அடியாளின் மனசாட்சி’ என்ற புத்தகத்தை அவ்வப்போது ரகசியமாக எழுதி வந்தேன் என்றாலும் அது வெளியிடப்படுவதற்கான வாய்ப்பே இல்லை என்றுதான் தோன்றியது.

1991-இல் சுற்றுச்சூழலைக் காப்பதிலும், சுதேசி மருத்துவ முறைகளிலும் ஆர்வமுடைய ஷூவார் என்ற பழங்குடியின மக்களிடம் கற்றுக் கொள்வதற்கும் அவர்களோடு பழகுவதற்கும் விருப்பம் கொண்டிருந்த சிறு குழுக்களுக்கு வழிகாட்டியாகச் செயல்படத் தொடங்கினேன். ஷூவார்கள் வாழ்ந்து வந்த அமேசான் பகுதிக்கு இக்குழுக்களை அடிக்கடி அழைத்துச் சென்று வந்தேன். அடுத்த சில ஆண்டுகளில் இப்பயணங்களின் விளைவாக ‘கனவை மாற்றும் கூட்டணி’ என்ற லாப நோக்கமில்லாத அமைப்புத் தோன்றியது. தொழில்மயமான நாடுகளைச் சேர்ந்த மக்கள் உலகையும்

இயற்கையையும் பற்றிக் கொண்டிருந்த கண்ணோட்டத்தை மாற்றுவதையே இந்த அமைப்பு தனது அடிப்படை லட்சியமாகக் கொண்டிருந்தது. இதற்கு உலகம் முழுவதும் ஆதரவாளர்கள் உருவாயினர். கனவை மாற்றும் கூட்டணியின் இணையதளம் இது போன்ற லட்சியங்களைப் பிரதிபலிக்கக்கூடிய 15 இணைய தளங்களில் ஒன்றாக ‘டைம்’ இதழால் தேர்ந்தெடுக்கப்பட்டது.

1990-களில் லாப நோக்கமற்ற (தன்னார்வ) அமைப்புகளில் மென்மேலும் அதிகமாக என்னை இணைத்துக் கொண்டேன். புதிய அமைப்புகள் உருவாக உதவினேன். ஏற்கனவே செயல்பட்டு வந்த அமைப்புகள் சிலவற்றின் இயக்குனர் குழுக்களில் பணிபுரிந்தேன். அர்ப்பணிப்பு மிக்க ஊழியர்களின் பணியின் காரணமாக இந்த அமைப்புகளில் பல விரைவாக வளர்ந்து வந்தன. லத்தீன் அமெரிக்கப் பழங்குடி மக்களான ஷுவார், அச்சுவார், அமேசானின் ஆண்டிஸின் க்யூசுவர், குவாதமாலாவின் மாயா போன்றவர்களின் பண்பாடுகளை அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும் உள்ள மக்களுக்-கு அறிமுகப்படுத்தும் வேலையில் இந்த அமைப்புகள் ஈடுபட்டிருந்தன. எஸ்.டபுள்யூ.ஈ.சி. நிறுவனம் இத்தகைய தொண்டு நடவடிக்கைகளை அங்கீகரித்தது. ஒருங்கிணைந்த செயல்பாடு என்ற அதன் கோட்பாட்டுக்கும் இது ஏற்றதாக இருந்தது. இந்தக் கால கட்டத்தில் நான் பல புத்தகங்கள் எழுதினேன். அவை பெரும்பாலும் பழங்குடி மக்களின் சிறப்பம்சங்களையே மையமாகக் கொண்டிருக்கும்படியும் பொருளாதார அடியாட்களின் நடவடிக்கைகள் பற்றிய விஷயங்கள் அவற்றில் எந்த இடத்திலும் தலைகாட்டி விடாமலிருக்கும்படியும் பார்த்துக்கொண்டேன். இந்த அமைப்புகளோடு நான் கொண்டிருந்த உறவு எனது சலிப்பைப் போக்கிக்கொள்ள உதவியதோடு, லத்தீன் அமெரிக்காவுடனும், எனக்குப் பிடித்தமான அரசியல் விவகாரங்களுடனும் தொடர்பு கொண்டிருக்க உதவியது.

ஆனால் இந்த நடவடிக்கைகளும், எழுத்துகளும் எனக்கு ஒரு சமநிலையைத் தருகின்றன என்றும், முதலில் பொருளாதார அடியாளாக நான் புரிந்த மோசமான செயல்களுக்கு இவற்றின் மூலம் பரிகாரம் தேடி வருகிறேன் என்றும் என்னை நானே நம்ப வைத்துக் கொள்ளச் செய்த முயற்சிகள் மட்டும் பயனளிக்கவேயில்லை. என் மகளைப் பற்றி மட்டும்தான் நான் கவலை கொள்கிறேன் என்பதும் எனக்குத் தெரிந்துதானிருந்தது. கடன் சுமையால் முதுகு வளைந்துபோன லட்சோப லட்சம் குழந்தைகளைக் கொண்ட ஓர் உலகத்தைத்தான் ஜெஸிகா பெறப் போகிறாள். அதற்கும் நான் பொறுப்பேற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

எனது நூல்கள் தொடர்ந்து பிரபலமடைந்து வந்தன. முக்கியமாக ‘நீ கனவு காண்பது போலத்தான் உலகம்’ என்ற நூல் பரவலாக அறியப்பட்டது. இதன் காரணமாக எனக்கு நிறைய அழைப்புகள் வரத்

தொடங்கின. சில நேரங்களில் பாஸ்டன், நியூயார்க் அல்லது மிலன் நகர வாசகர்கள் முன் நிற்கும் போது ஒரு முரண்பாடு என்னைத் தாக்கும். இந்த உலகம் நீ கனவு காண்பது போலத்தான் என்றால் ஏன் நான் இப்படியொரு உலகைக் கனவு கண்டேன்? இதுபோன்ற ஒரு பயங்கரமான கனவை உருவாக்குவதில் எப்படி நானும் இணைந்து பணியாற்றினேன்?

1997-ஆம் ஆண்டு கரீபியன் பகுதியில் செயின்ட் ஜான் தீவிலுள்ள ஒமேகா இன்ஸ்டிடியூட்டின் பயிற்சிப் பட்டறையில் ஒரு வாரம் வகுப்பெடுக்கும்படி என்னிடம் கேட்டுக் கொள்ளப்பட்டது. முதல் நாள் இரவு மிகவும் நேரம் கழித்தே அறைக்கு வந்து சேர்ந்தேன். அடுத்த நாள் காலையில் பால்கனிக்குச் சென்று கண் முன் பரந்து விரிந்திருந்த கடற்பரப்பைப் பார்த்துக்கொண்டிருந்தேன். 17 ஆண்டுகளுக்கு முன்பு இந்த வளைகுடாவில்தான் மெய்ன்-ஐ விட்டு விலகும் முடிவை எடுத்தேன். ஏதோ இனம் புரியாத உணர்ச்சி என் கால்களைத் துவண்டு போகச் செய்தது. நிற்க முடியாமல் ஒரு நாற்காலியில் விழுந்தேன்.

அடுத்த வாரம் ஓய்வு நேரம் முழுவதும் பால்கனியில் இருந்து வீசெஸ்டர் குடாவைப் பார்த்துக் கொண்டிருப்பதிலும், மனதில் அலை மோதிய பல்வேறு வகையான உணர்ச்சிகளைப் புரிந்துகொள்ள முயல்வதிலுமே கழிந்தது. மெய்னில் இருந்து வெளியேறிவிட்ட தென்னவோ உண்மைதான். ஆனால் அடுத்த அடியை இன்னும் எடுத்து வைக்கவேயில்லை. இரண்டு உலகங்களுக்கு நடுவில்தான் நான் இன்னமும் நின்று கொண்டிருக்கிறேன். இந்த நிலைதான் என்னை மிகப் பெரிய அளவிற்குப் பாதித்து உள்ளது. இறுதியில் இப்போது என்னைச் சுற்றியுள்ள உலகம் நான் கனவு காண விரும்புவதல்ல என்றும், என் மாணவர்களுக்கு என்ன செய்ய வேண்டுமென்று அறிவுறுத்த நான் விரும்புகிறேனோ அதையே நானும் செய்ய வேண்டுமென்று முடிவு செய்தேன். உண்மையில் வாழ்க்கை எப்படியிருக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேனோ அதைப் பிரதிபலிக்கும் வகையில் என் கனவுகளை மாற்றியமைத்துக் கொள்ள வேண்டும்.

பின்பு வீடு திரும்பியதும் எனது நிறுவன ஆலோசகர் வேலையை விட்டுவிட்டேன். எஸ்.டபிள்யூ.ஈ.சி - யின் பழைய தலைவர், அவர்தான் என்னை வேலைக்கு அமர்த்தியவர், ஓய்வு பெற்றுவிட்டார். அவரிடத்திற்கு வந்தவர் என்னைவிட வயதில் இளையவர். என் கதை புத்தகமாவது பற்றிய கவலை எதுவும் அவருக்கு இல்லை. அவர் ஏற்கனவே சிக்கன நடவடிக்கையைத் தொடங்கியிருந்தார். நான் வேலையை விட்டுப் போவதை அறிந்ததும் எனக்கு இனிமேல் இவ்வளவு பெரிய தொகை கொடுக்க வேண்டியதில்லை என்று அவர் மகிழ்ச்சியே அடைந்தார்.

நீண்ட காலமாக எழுதி வந்த நூலை முடித்து விடுவதென்று நான் முடிவு செய்தேன். அந்த முடிவு ஓர் அற்புதமான மனநிறைவை

அளித்தது. எனது நெருங்கிய நண்பர்களுடன் - அவர்களில் பலர் பழங்குடிப் பண்பாடுகளையும், மழைக்காடுகளையும் பாதுகாப்பதில் ஆர்வம் கொண்டிருந்த லாப நோக்கமற்ற உலகைச் சேர்ந்தவர்கள் - இது பற்றிப் பேசியபோது எனக்கு ஆச்சரியமளிக்கும் விதமாக அவர்கள் சங்கடமடைந்தனர். அவர்கள் இப்படியொரு வெளிப்படையான புத்தகம் எனது ஆசிரியப் பணியையும், நான் ஆதரித்து வந்த அமைப்புகளையும் பாதிக்கும், நெருக்கடிக்குள்ளாக்கும் என்று அஞ்சினர். அமேசான் பழங்குடிகள் தங்கள் நிலங்களை எண்ணெய் நிறுவனங்களிடமிருந்து பாதுகாத்துக் கொள்வதற்கு நாங்கள் உதவி வந்தோம். இப்படியொரு அப்பட்டமான புத்தகத்தை எழுதுவது எனது நம்பகத்தன்மையைப் பாதிப்பதோடு மொத்த இயக்கத்தையும் பின்னுக்குத் தள்ளிவிடும் என்றனர். சிலர் தங்கள் ஆதரவைத் திரும்பப் பெற்றுக்கொள்வதாகக் கூட மிரட்டினார்கள்.

எனவே புத்தகம் எழுதும் வேலை திரும்பவும் மூட்டை கட்டி வைக்கப்பட்டு விட்டது. பதிலாக நவீன உலகைச் சேர்ந்த மக்களை, அமேசானின் ஆழப் பகுதிகளுக்கு அழைத்துச் சென்று நாகரிகத்தின் கரங்கள் தீண்டாத பகுதிகளில் எப்படி மக்கள் வாழ்கிறார்கள் என்பதைக் காட்டும் வேலையில் தீவிரமாக என்னை ஈடுபடுத்திக் கொண்டேன் 2001, செப்டம்பர் 11, தாக்குதல் நடந்தபோது நான் அமேசான் பகுதியில்தான் இருந்தேன்.

# 32

# செப்டம்பர் 11-ம் அதன் பின்விளைவுகளும்

2001, செப்டம்பர் 10-ஆம் தேதி நானும் ஸ்கிய்ம் சும்பி என்பவரும் 16 பேர் கொண்ட ஒரு குழுவுடன் ஈக்வடாரிலுள்ள அமேசான் காடுகளினூடே ஒரு ஆற்றில் பயணம் செய்து கொண்டிருந்தோம். இந்த ஸ்கிய்ம் சும்பியுடன் இணைந்துதான் 'ஷூவாரின் ஆன்மா' என்ற எனது நூலை எழுதியிருந்தேன். அவர் ஷூவார் பழங்குடியினத்தைச் சேர்ந்தவர். எங்களோடு பயணம் செய்த குழுவினர் ஷூவார் பழங்குடியின மக்களை நேரில் அறிந்து கொள்ளவும், அவர்களது விலைமதிப்பற்ற காடுகளைக் காப்பதற்கான போராட்டத்தில் இணைந்து கொள்ளவும் வந்தவர்கள். இப்போது நாங்கள் அவர்களை அடர்ந்த அமேசான் மழைக்காடுகளின் அடியாழத்தில் வசிக்கும் பழங்குடி மக்களிடம் அழைத்துச் சென்று கொண்டிருந்தோம்.

சும்பி சமீபத்தில் நடைபெற்ற ஈக்வடார், பெருவுக்கு இடையிலான போரில் கலந்து கொண்டவர். எண்ணெய்க்காகவே நடைபெற்ற இந்தப் போரைப் பற்றி எண்ணெயை அதிகமாகப் பயன்படுத்தும் நாடுகளைச் சேர்ந்த மக்கள் கேள்விப்பட்டதேயில்லை. இந்த இரண்டு நாடுகளுக்கும் இடையேயான எல்லைப் பிரச்சனை பல ஆண்டுகளாக இருந்து வருவதுதான் என்றாலும் இந்தப் போர் நடைபெற்ற காலத்தில் அதற்கு முடிவு கண்டேயாக வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. எண்ணெய் வளம் மிக்க துண்டு நிலங்கள் எந்த நாட்டின் எல்லைக்குள் உள்ளன, எண்ணெய் எடுக்க எந்த நாட்டோடு பேச்சுவார்த்தை நடத்த வேண்டும் என்று திட்டவட்டமாக அறிந்து கொள்ள எண்ணெய் நிறுவனங்கள் விரும்பியதுதான் இந்தப் போருக்குக் காரணம். எல்லைகள் திட்டவட்டமாக வரையறுக்கப்பட வேண்டுமென்று எண்ணெய் நிறுவனங்கள் விரும்பின.

ஷூவார் பழங்குடியின மக்கள்தான் ஈக்வடாரின் முதல் பாதுகாப்பு அரணாக அமைந்தார்கள். ஆக்ரோஷம் மிக்க ஷூவார் வீரர்கள், தங்களைவிட அதிக எண்ணிக்கையிலிருந்த சிறந்த ஆயுதங்களைக் கொண்டிருந்த படைகளை பல இடங்களில் முறியடித்துத் தங்கள் வீரத்தை நிலைநாட்டினர். அவர்கள் இந்தப் போரின் பின்னுள்ள அரசியலைப் பற்றியோ, இந்தப் போரின் முடிவு எண்ணெய் நிறுவனங்களுக்குக் கதவைத் திறந்து விடுவதாக அமையும் என்பதைப் பற்றியோ கொஞ்சங்கூட அறிந்திருக்கவில்லை. அவர்கள் வீரம் மிகுந்தவர்கள், நீண்ட பாரம்பரியம் கொண்டவர்கள், தங்கள் மண்ணில் ஒருபோதும் அன்னியப் படைவீரர்களை அனுமதிக்கக் கூடாது என்ற

உறுதி பூண்டவர்கள் என்பதினாலேயே அவர்கள் போரிட்டனர்.

“உங்களோடு போர்புரிய நாங்கள் தயாராகி வருகிறோம் என்பதை உங்களிடமே சொல்ல வேண்டியிருக்குமென்று நான் அஞ்சுகிறேன்’’ என்றார் சும்பி. பின்பு அவர் தான் தனிப்பட்ட முறையில் என்னையோ, என்னுடன் வந்த குழுவினரையோ குறிப்பிடவில்லை என்றும், எண்ணெய் நிறுவனங்களையும் அவற்றைப் பாதுகாக்கக் காடுகளுக்கு வரவுள்ள ராணுவங்களையுமே தான் குறிப்பிடுவதாகவும் விளக்கினார். “நீங்கள் எங்கள் நண்பர்கள்’’ என்றார் அவர்.

“இந்த எண்ணெய் நிறுவனங்களால் ஷுவாரானி பழங்குடியினம் என்ன கதிக்கு ஆளாகிவிட்டது என்பதை நாங்கள் கண்கூடாகப் பார்த்திருக்கிறோம். அவர்கள் காடுகளை அழித்துவிட்டார்கள். ஆறுகளை மாசுபடுத்தி விட்டார்கள். குழந்தைகள் உள்ளிட்ட ஏராளமான பழங்குடியின மக்களைக் கொன்று குவித்துவிட்டார்கள். இன்று ஷுவாரானி பழங்குடியினம் ஏறக்குறைய அழிந்துவிட்டது. அந்த நிலை எங்களுக்கும் ஏற்பட நாங்கள் விட மாட்டோம். இறுதி வரை போராடுவதென்று நாங்கள் சபதம் செய்திருக்கிறோம்.’’ [1]

அன்றிரவு பிளந்த மூங்கில் தட்டிகளைக் கொண்டு நீளவாக்கில் அமைக்கப்பட்டிருந்த அழகான ஷுவார் பாணி வீட்டில் தீயைச் சுற்றி எங்கள் குழுவினர் உட்கார்ந்திருந்தபோது என்னிடம் சும்பி கூறியவற்றை அவர்களிடம் பகிர்ந்து கொண்டேன். உலகம் முழுவதிலுமுள்ள மக்களில் இன்னும் எத்தனை பேரின் வெறுப்புக்கு நாமும், நமது எண்ணெய் நிறுவனங்களும் ஆளாகியுள்ளோம் என்று நாங்கள் திகைப்படைந்தோம். ஷுவார்களைப் போல் இன்னும் எத்தனை பேர் நாம் அவர்களது பண்பாட்டையும், நிலங்களையும், மக்களையும் அழிக்கப் போகிறோம் என்ற பீதியில் இருக்கிறார்கள்?

மறுநாள் காலையில் எங்களது வானொலி வைக்கப்பட்டிருந்த சிறிய அலுவலகத்திற்குச் சென்றேன். அடுத்த சில நாட்களில் விமானிகளை நான் ஏற்பாடு செய்ய வேண்டியிருந்தது. வானொலியில் பேசிக் கொண்டிருக்கும்போதே திடீரென்று ஒரு கூச்சல் கேட்டது. “கடவுளே’’ மறுமுனையில் இருந்தவர் அலறினார். “நியூயார்க் தாக்கப்படுகிறது!’’ பின்பு செய்தி ஒலிபரப்பாகிக் கொண்டிருந்த வானொலியை இயக்கினார். அடுத்த அரைமணி நேரத்தில் அமெரிக்காவில் நடந்து வந்த நிகழ்ச்சிகள் அணுவணுவாக விவரிக்கப்பட்டன. எல்லோரையும் போலவே அவை எனக்கும் ஒருபோதும் மறக்க முடியாத நிமிடங்கள்.

ஃப்ளோரிடாவில் உள்ள வீட்டுக்குத் திரும்பியதுமே உலக வணிக மையக் கட்டடங்கள் இருந்த கிரவுண்ட் ஜீரோவுக்குப் போயே ஆகவேண்டும் என்ற உந்துதல் ஏற்பட்டது. நான் நியூயார்க் போய்ச் சேர்ந்தபோது மதியமாகிவிட்டிருந்தது. அது ஒரு பிரகாசமான நவம்பர் தினம். குளிர்காலத்திற்குச் சம்பந்தமேயில்லாமல் பகல் வெளிச்சமாக இருந்தது. உற்சாகமாக சென்ட்ரல் பார்க்கை நோக்கி நடக்கத்

தொடங்கியவன் ஒரு காலத்தில் நான் அதிக நேரம் கழித்து வந்த வால் ஸ்ட்ரீட்டையும், இப்போது கிரவுண்ட் ஜீரோ என்றழைக்கப்பட்ட இடத்தையும் நோக்கித் திரும்பினேன்.

அதை நெருங்க, நெருங்க பொங்கிக் கொண்டிருந்த உற்சாகம் விலகி பெரும் பீதி என்னை ஆட்கொண்டது. நம்பவே முடியாத பேரழிவு. பயங்கரமான காட்சிகள், மூக்கைத் துளைக்கும் விதம்விதமான நெடிகள். ஒரு காலத்தில் மாபெரும் கட்டடங்களாக இருந்தவற்றின் உருக்குலைந்துபோன எலும்புக்கூடுகள் மட்டுமே இப்போது நின்று கொண்டிருந்தன. கட்டடக் குவியல்களின் மீது துர்நாற்றமடிக்கும் புகை கவிந்திருந்தது. எரிந்து போன சதை, அழுகிப் போன உடல்களின் நாற்றம் காற்றில் கலந்திருந்தது. எல்லாமே தொலைக்காட்சியில் பார்த்ததுதான் என்றாலும் நேரில் பார்ப்பது முற்றிலும் வேறுவிதமாக இருந்தது.

இவற்றை நான் எதிர்பார்க்கவேயில்லை. முக்கியமாக இடிந்து போன கட்டடங்களைச் சுற்றித் திரிந்து கொண்டிருந்த மக்கள் முற்றிலும் வித்தியாசமாகத் தோன்றினார்கள். தாக்குதல் நடந்து இரண்டு மாதங்கள் ஆகிவிட்ட போதிலும் அவர்கள் இங்கேயே நடமாடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் இங்கேயே வேலை செய்து வந்தவர்கள். தாக்குதலில் தப்பிப் பிழைத்தவர்கள். ஷூக்களைப் பழுது பார்க்கும் தனது சிறிய கடைக்கு வெளியே ஓர் எகிப்தியன் இலக்கில்லாமல் நடமாடிக் கொண்டிருந்தான். தன் தலையை அடிக்கடி உதறுவது போல ஆட்டிக் கொண்டிருந்தான்.

“பழகவே மாட்டேனென்கிறது” அவன் முணுமுணுத்தான். “ஏராளமான நண்பர்களையும், வாடிக்கையாளர்களையும், இழந்து விட்டேன். என் மருமகனும் இறந்துவிட்டான்.” அவன் நீலநிறமாக ஒளிர்ந்து கொண்டிருந்த வானை நிமிர்ந்து நோக்கினான். “அவன் குதிப்பதைப் பார்த்தது போலத் தோன்றுகிறது. பலர் குதித்துக் கொண்டிருந்தார்கள். கைகளை இறக்கைகளைப் போல ஆட்டிக் கொண்டு ஏதோ பறக்க முடியும் என்பதைப் போல…

மக்கள் பேசிக்கொண்ட விதம் இன்னும் ஆச்சரியமாக இருந்தது. அது எல்லா மொழிகளையும் கடந்து சென்றது. அவர்கள் பரிவும், சோகமும் கலந்த பார்வைகளையும், ஆயிரமாயிரம் சொற்களைவிட அதிகமாகப் பேசிய அரைப் புன்முறுவல்களையும் பரிமாறிக் கொண்டார்கள்.

இந்த இடத்தில் இன்னும் வேறு ஏதோ மாற்றமிருப்பதை உணர்ந்து கொண்டாலும் அது என்னவென்று கண்டுகொள்ள கொஞ்ச நேரம் பிடித்தது. இந்தப் பகுதி முழுவதும் பிரகாசமாகப் பரவியிருந்த சூரிய ஒளி! நான் எனது நிறுவனத்திற்கு மூலதனம் திரட்ட இந்தத் தெருவுக்கு அடிக்கடி புனிதயாத்திரை மேற்கொண்ட நாட்களில் இப்பகுதி முழுவதுமே ஒரு இருண்ட பள்ளத்தாக்காக இருந்தது. நீங்கள்

வெளிச்சத்தைப் பார்க்க விரும்பினால் உலக வணிக மையத்தின் உச்சிக்குப் போக வேண்டும். இப்போது இரட்டைக் கோபுரங்களின் சிதைவுகளை ஒளிவெள்ளம் குளிப்பாட்டிக்கொண்டிருந்தது. கட்டடங்களால் மறைக்கப் படாத திறந்த வானம் மக்களின் இதயங்களைத் திறக்க உதவுமா என்ற எண்ணம் எனக்குள் தோன்றியது. இப்படி நினைப்பதற்கு ஒரு குற்ற உணர்வும் தலைகாட்டியது.

டிரினிட்டி சர்ச் மூலையில் திரும்பி வால் ஸ்ட்ரீட்டை நோக்கி நடந்தேன். பழைய நியூயார்க் இருளால் போர்த்தப்பட்டிருந்தது. வானமும் இல்லை. வெளிச்சமும் இல்லை. மக்கள் யாரையும் லட்சியம் செய்யாமல் நடைபாதைகளில் விரைந்து கொண்டிருந்தார்கள். ஒரு போலீஸ்காரர் நின்றுபோன ஒரு காரை நோக்கிக் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்.

முதலில் தென்பட்ட முதல் படிகளில் உட்கார்ந்தேன். எங்கிருந்தோ வந்த ராட்சஸ மின்விசிறிகளின் இரைச்சல் மற்றெல்லா சத்தங்களையும் கடந்து செவிப்பறைகளைத் தாக்கியது. அந்த இரைச்சல் நியூயார்க் பங்குச்சந்தைக் கட்டடங்களின் பிரம்மாண்டமான கற்சுவர்களில் இருந்து வருவது போலத் தோன்றியது. மக்கள் வீதியில் மேலும் கீழும் நகர்ந்து கொண்டிருந்தார்கள். வீடுகளுக்குத் திரும்பிக் கொண்டிருந்தார்கள் அல்லது வியாபாரப் பேச்சுவார்த்தைகள் நடத்த மது விடுதிகளுக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். சிலர் அரட்டையடித்தபடி மெதுவாக நடந்து கொண்டிருந்தாலும் பெரும்பாலானவர்கள் தனியாகவும் மௌனமாகவும் இயங்கிக் கொண்டிருந்தனர். அவர்களின் கண்களைச் சந்திக்க நான் மேற்கொண்ட முயற்சி வெற்றி பெறவேயில்லை.

திடீரென்று ஒரு காரின் அலாரம் அலறி என் கவனத்தைத் திருப்பியது. அலுவலகத்திலிருந்து ஓடிவந்த ஒருவர் காரை நோக்கிச் சாவியை நீட்டினார். அது அமைதியடைந்தது. நேரம் போவதே தெரியாமல் அங்கே உட்கார்ந்திருந்தவன் சட்டைப் பையில் கைவிட்டுச் சில காகிதங்களை எடுத்தேன். அவை புள்ளிவிவரங்களால் நிறைந்திருந்தன.

அந்த நேரத்தில்தான் அந்த மனிதர் தோன்றினார். இந்தக் கதகதப்பான பகலுக்குச் சம்பந்தமேயில்லாத கரடுமுரடான மேல் கோட்டு அணிந்திருந்த அந்தப் பெரியவர் கால்களை இழுத்து, இழுத்து நடந்து வந்து கொண்டிருந்தார். அவரது தாடி முழுவதும் வெளுத்துப் போயிருந்தது. அவர் ஆப்கானிஸ்தானைச் சேர்ந்தவர் என்பதைப் பார்த்ததுமே புரிந்து கொண்டேன்.

என்னை நோக்கியவர் ஒரு வினாடி தயக்கத்திற்குப் பின்பு படிகளில் ஏறத் தொடங்கினார். என்னருகே வந்து பணிவுடன் தலைவணங்கி விட்டு மூன்று நான்கடி தள்ளி அமர்ந்துகொண்டார். அவரது தோற்றம் பேச்சை நான் தொடங்க வேண்டுமென்று எதிர்பார்ப்பதை

வெளிப்படுத்தியது.

“அருமையான மதிய வேளை’’ என்றேன்.

“அழகாக இருக்கிறது’’ அவர் கரடுமுரடான உச்சரிப்பில் அதை ஆமோதித்தார். “இது போன்ற நேரங்களில் நமக்குச் சூரியஒளி தேவைப்படுகிறது.’’

“உலக வணிக மையக் கட்டடங்களைக் குறிப்பிடுகிறீர்களா?’’

அவர் ஆமாம் என்று தலையசைத்தார்.

“நீங்கள் ஆப்கானிஸ்தானைச் சேர்ந்தவரா?’’

“அது அவ்வளவு வெளிப்படையாகத் தெரிகிறதா?’’ அவர் என்னை உற்றுப் பார்த்தார்.

“நான் நிறையப் பயணம் செய்திருக்கிறேன். அண்மையில்கூட காஷ்மீருக்கும் இமயமலைகளுக்கும் போயிருந்தேன்.’’

“காஷ்மீர்’’ அவர் தாடியைத் தடவிக் கொண்டார். “போரிட்டுக் கொண்டிருக்கிறது.’’

“ஆமாம், இந்தியாவும் பாகிஸ்தானும், இந்துக்களும் இஸ்லாமியர்களும்… மதத்தைப் பற்றிச் சந்தேகங்கள் எழுகின்றன, இல்லையா?’’

ஆழ்ந்த பழுப்பு நிறத்தில் இருந்த அவரது விழிகள் என்னுடைய கண்களைச் சந்தித்தன. அவற்றில் தெரிந்த அறிவுக்கூர்மையும், துயரமும் என்னை நேரடியாகத் தாக்கின. அவர் நியூயார்க் பங்குச்சந்தைக் கட்டடத்தைத் தன் சுருக்கம் விழுந்த நீண்ட விரல்களால் சுட்டிக் காட்டினார்.

“ஒருவேளை அதற்குக் (போருக்கு) காரணம் பொருளாதாரமாகக் கூட இருக்கலாம்’’ நான் ஒப்புக்கொண்டேன்.

“நீங்கள் ராணுவத்தில் இருந்தவரா?’’

“இல்லை, நான் ஒரு பொருளாதார ஆலோசகன்.” பின்பு என் கையிலிருந்த புள்ளிவிவரங்களடங்கிய காகிதத்தை அவரிடம் காட்டினேன். “இந்தக் காகிதங்கள்தான் எனது ஆயுதங்கள்.’’

“உலகப் புள்ளிவிவரங்கள்’’

அவர் அதைப் பார்த்துவிட்டு “எண்கள்’’ என்றார். பின்பு தனக்குப் படிக்கத் தெரியாது என்ற அதை என்னிடமே தந்துவிட்டார்.

“ஒவ்வொரு நாளும் உலகம் முழுவதும் இருபத்து நான்காயிரம் பேர்கள் பட்டினியால் மடிகிறார்கள் என்று இந்த எண்கள் சொல்கின்றன.’’

அவர் மென்மையாக விசிலடித்தார். அது பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பது போலத் தோன்றியது.

“இந்த இருபத்து நான்காயிரம் பேர்களில் நானும் ஒருவனாக இருந்திருப்பேன்! காந்தஹாரில் எனக்கு மாதுளை மரங்கள் கொண்ட ஒரு சிறிய பண்ணை இருந்தது. ஒரு நாள் ரஷ்யர்கள் வந்தார்கள். மரங்களுக்குப் பின்னாலும், கொடிக்கால்களிலும் முஜாஹிதீன்கள்.’’

“அன்று நடந்த தாக்குதலில் என் பண்ணையிலிருந்த மரங்களும், வாய்க்கால்களும் அழிந்தே போய்விட்டன.’’

“அப்புறம்… என்ன செய்தீர்கள்?’’

அவர் என் கையிலிருந்த காகிதத்தைச் சுட்டிக்காட்டிக் கேட்டார். “அது பிச்சைக்காரர்களைப் பற்றி ஏதாவது சொல்கிறதா?’’

‘‘இந்தக் காகிதத்தில் அதைப் பற்றி எதுவும் இல்லை ஆனால் நான் கூறுவது சரியாக இருந்தால் உலகில் மொத்தம் எட்டுக் கோடி பிச்சைக்காரர்கள் இருக்கிறார்கள்’’ என்றேன்.

“அவர்களில் நானும் ஒருவன். ஆனால் நான் பிச்சையெடுக்க விரும்பவில்லை. என் குழந்தை செத்துக் கொண்டிருந்தது. எனவே பப்பி வளர்த்தேன்’’

“அபின்?’’

“மரங்கள் இல்லை. தண்ணீர் இல்லை. குடும்பத்திற்கு உணவளிக்க வேறென்ன வழி!’’ அவர் தோள்களைக் குலுக்கிக் கொண்டார்.

எனக்குத் தொண்டை அடைத்துக் கொண்டது. குற்றவுணர்ச்சியும், விரக்தியும், சோகமும் என்னை ஒரே சமயத்தில் தாக்கிப் பேச முடியாமல் செய்தன.

“நாங்கள் அபினிச் செடி வளர்ப்பதைக் கெட்ட விஷயம் என்கிறோம். ஆனால் எங்கள் பணக்காரர்களில் பலர் போதை மருந்துக் கடத்தலில் கொள்ளை லாபம் அடித்தவர்கள்தான்’’ என்றேன்.

அவரது கண்கள் என்னைத் துளைப்பது போல அமைதியாக உற்றுப் பார்த்தன. “நீங்கள் ஒரு ராணுவ வீரர்தான்’’ என்று கூறியபடி எழுந்து தடுமாறி நடக்கத் தொடங்கினார். தான் கண்டுபிடித்த இந்த எளிய உண்மையைத் தானே அங்கீகரிப்பது போல அடிக்கடி தலையசைத்துக் கொண்டிருந்தார். அவரைத் தடுக்க வேண்டுமென்று தோன்றியது. ஆனால் உடலிலிருந்த சக்தியனைத்தும் வடிந்து விட்டது போன்ற ஒரு உணர்ச்சி என்னைச் சில வினாடிகள் செயலிழந்து போகச் செய்தது. எப்படியோ சமாளித்துக் கொண்டு எழுந்து அவரைப் பின்தொடரத் தொடங்கியவன் படிக்கட்டுகளின் அடியில் ஒரு சின்னத்தைக் கண்டு அப்படியே நின்றுவிட்டேன். அதில் நான் உட்கார்ந்திருந்த கட்டடத்தின்

படம் இடம் பெற்றிருந்தது. அதன் மேல் இக்கட்டடம் நியூயார்க் பண்பாட்டு அடிச்சுவடுகள் (Heritage Trails of Newyork) அமைப்பால் கட்டப்பட்டது என்ற வாசகம் பொறிக்கப்பட்டிருந்தது. அதில் தொடர்ந்து பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:

வெனிஸ்ஸிலுள்ள புனித மார்க்கின் மணிக்கூண்டின் உச்சியில் உள்ள ஹாலிகார்நஸ்ஸூஸ் நினைவகத்தை மாதிரியாகக் கொண்டுதான் இந்தக் கட்டடம் கட்டப்பட்டுள்ளது. 539 அடி உயரம் கொண்ட, அந்த நாட்களில் உலகிலேயே உயரமான கட்டடமான இதில்தான் நாட்டின் மிகவும் பணக்கார நிதி நிறுவனமான வங்கியாளர் அறக்கட்டளையின் தலைமையகம் செயல்பட்டு வந்தது.

நான் பயத்துடன் அந்தக் கட்டடத்தையே பார்த்துக் கொண்டிருந்தேன். உலக வணிக மைய இரட்டைக் கோபுரங்கள் கட்டப்படுவதற்கு முன்பு அவற்றின் பணியைச் செய்து வந்தது இந்தக் கட்டடம்தான். அதிகாரம், பொருளாதார ஆதிக்கத்தின் மொத்த உருவமாகத் திகழ்ந்தது இந்தக் கட்டடம்தான். வங்கியாளர் அறக்கட்டளை எனது ஆற்றல் வள நிறுவனத்திற்கும் நிதியுதவி செய்து வந்தது. அது எனது பாரம்பரியத்தின் ஒரு முக்கியமான அங்கமாகும். எனது பாரம்பரியம் ஒரு படைவீரனின் பாரம்பரியம்தான். அந்த ஆப்கானியர் குறிப்பிட்டது முற்றிலும் சரியானது.

இங்கே இந்தக் கிழவரைச் சந்தித்ததும், பேசிக் கொண்டிருந்ததும் ஒரு தற்செயலான நிகழ்ச்சிதான். ஆனால் தற்செயல் நிகழ்வுகளுக்கு நாம் எப்படி எதிர்வினையாற்றுகிறோம் என்பதுதான் நம் வாழ்வின் போக்கைத் தீர்மானிக்கிறது இந்தக் குறிப்பிட்ட தற்செயல் நிகழ்வுக்கு நான் எப்படி எதிர்வினையாற்றப் போகிறேன்?

தலைகளுக்கு மேல் எம்பி அவரைக் கண்டுபிடிக்க வீணே முயன்றபடி நடக்கத் தொடங்கினேன். அடுத்த கட்டடத்தில் நீல நிற பிளாஸ்டிக் கவரால் மூடப்பட்ட ஒரு பிரம்மாண்டமான சிலை நின்று கொண்டிருந்தது. முகப்பிலிருந்த கல்வெட்டு, இது 26 பெடரல் ஹால், வால் ஸ்டிரீட் என்று அறிவித்தது. இங்கேதான் 1789, ஏப்ரல் 30 - இல் வாஷிங்டன் அமெரிக்காவின் முதல் குடியரசுத் தலைவராகப் பதவியேற்றுக் கொண்டார். எல்லா மனிதர்களுக்கும் வாழ்க்கை, விடுதலை, மகிழ்ச்சிக்கான தேடல் ஆகியவற்றுக்கு அந்த மனிதன் வாக்களித்த இடம் கிரவுண்ட் ஜீரோவுக்கு மிக அருகில்தான் இருக்கிறது.

பைன் தெருவில் நடந்து சென்றபோது சேஸ் வங்கியின் உலகத் தலைமையகத்தைக் கண்டேன். இது டேவிட் ராக்ஃபெல்லரால் கட்டப்பட்டது. எண்ணெய்ப் பணத்தால் உருவாக்கப்பட்டது. என்னைப் போன்ற பொருளாதார அடியாட்களின் வசதிக்காகவே கட்டப்பட்ட வங்கி இது. உலகப் பேரரசை முன்னெடுத்துச் செல்வதன் தனித்திறமை பெற்றிருந்த இந்த வங்கி நிறுவன - அதிகார வர்க்கத்தின் மொத்த உருவமாகும்.

உலக வணிக மையம் 1960 - ஆம் ஆண்டு டேவிட் ராக்ஃபெல்லரால் தொடங்கப்பட்டது என்று எப்போதோ படித்தது நினைவுக்கு வந்தது. கலைநயமற்ற ராட்சஸத்தனமான இந்தக் கட்டடம் சமீப காலங்களில் அல்பெட்ராஸ் என்று கருதப்பட்டது. பொருளாதார அடிப்படையில் அது தவறானது என்றும், நவீன பைபர் - ஆப்டிக் மற்றும் இண்டர்நெட் தொழில்நுட்பங்களுக்கு முற்றிலும் பொருந்தாது என்றும் கருதப்பட்டு வந்தது. போதாக்குறைக்கு அதில் போதிய திறனற்ற, செலவு வைக்கும் நகரும் படிக்கட்டுகள் வேறு பொருத்தப்பட்டிருந்தன. இந்த இரட்டைக் கோபுரங்களுக்கு ஒரு காலத்தில் டேவிட், நெல்சன் என்று பெயரிடப்பட்டிருந்தது. இந்த அரக்கன் இப்போது இல்லை.

நான் தயக்கத்துடன் தொடர்ந்து நடந்து கொண்டேயிருந்தேன். மதிய வேளையின் கதகதப்பையும் தாண்டி ஒரு சில்லிப்பு என்னுள் ஓடியது. ஒரு இனம் புரியாத கவலை, கெட்ட சகுனம் பற்றிய உணர்வு என்னைக் கவ்விக் கொண்டது. எதனால் இப்படியொரு உணர்வு தோன்றுகிறது என்று கண்டுபிடிக்க முயன்றேன். அது முடியாமல் போனதும் அந்த எண்ணங்களை உதறித் தள்ள முயன்றபடி கால்களை எட்டி வைத்து நடை போட்டேன். திரும்பவும் வளைந்து நெளிந்து போன உலோகங்களால் நிறைந்திருந்த, புகைந்து கொண்டிருக்கும் அந்தப் பெருங்குழிக்கு அருகே நான் நின்று கொண்டிருப்பதை உணர்ந்தேன். அந்தக் குழி பூமியின் முகத்தில் ஏற்பட்ட ஒரு தழும்பு போலத் தோன்றியது.

அழிவுக்குத் தப்பிய ஒரு கட்டடத்தின் மேல் சாய்ந்து கொண்டு குழியையே எத்தனை நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தேனோ எனக்கே தெரியாது. நொறுங்கி விழுந்து கொண்டிருக்கும் கோபுரத்திலிருந்து மக்கள் ஓடி வருவதையும், தீயணைப்பு வீரர்கள் அவர்களுக்கு உதவப் பாய்ந்து செல்வதையும் மனக்கண்ணால் காண முயன்றேன். மேல் மாடிகளின் சன்னல்களிலிருந்து குதித்தவர்கள் மனதில் எந்த வகையான எண்ணங்கள் ஓடியிருக்கும் என்று ஊகிக்கவும் முயற்சி செய்தேன். ஆனால் எனக்கு எதுவுமே தோன்றவில்லை.

அதற்குப் பதிலாக, அமெரிக்க அரசோடு ஒப்பந்தம் செய்து கொண்டுள்ள ஓர் ஆலோசனை நிறுவனத்தின் ஊழியர் ஒருவரிடமிருந்து ஒஸாமா பின்லேடன் கோடிக்கணக்கான டாலர் மதிப்புள்ள ஆயுதங்களைப் பெற்றுக்கொள்ளும் காட்சிதான் என் மனத்திரையில் ஓடியது. பின்பு ஒரு வெறுமையான கம்ப்யூட்டர் திரைக்கெதிரில் நான் உட்கார்ந்திருப்பது போன்ற ஒரு உணர்வு தோன்றியது.

கிரவுண்ட் ஜீரோவுக்கு அப்பால் நெருப்புக்குத் தப்பிய தெருக்களில் சுற்றிக் கொண்டிருந்த போது ஒரு எண்ணம் தோன்றியது. இந்தத் தெருக்களில் நடந்து போய்க் கொண்டிருக்கும் மக்கள் இரட்டைக் கோபுரங்களின் அழிவைப் பற்றி என்ன நினைத்திருப்பார்கள்?

ஆப்கானிஸ்தானில் அழிந்துபோன மாதுளம் பண்ணைகளைப் பற்றியும், ஒவ்வொரு நாளும் பட்டினியால் உயிரை விட்டுக் கொண்டிருக்கும் 24,000 பேர்களைப் பற்றியும் இவர்கள் ஏதாவது நினைத்துப் பார்ப்பார்களா? தங்கள் வேலைகளையும், கார்களையும், எல்லாவற்றுக்கும் மேலானதாகத் தாங்கள் கருதும் வட்டி விகிதங்களையும் கடந்து இது போன்ற விஷயங்களைக் குறித்துச் சிந்திக்க இவர்களுக்குச் சாத்தியப்படுமா என்று நான் திகைப்புடன் எண்ணமிட்டேன். ஆப்கானிஸ்தான் பற்றி இவர்களுக்கு என்ன தெரியும்? அதாவது அமெரிக்க இராணுவக் கூடாரங்களாலும், டாங்கிகளாலும் நிறைந்திருக்கும், தொலைக்காட்சிகளில் வழக்கமாகக் காட்டப்படும் ஆப்கானிஸ்தான் அல்ல. அந்தக் கிழவரின் ஆப்கானிஸ்தான் பற்றி என்ன தெரியும்? ஒவ்வொரு நாளும் பட்டினியால் மரணத்தைத் தழுவி வரும் மக்களின் மனங்களில் என்ன விதமான சிந்தனைகள் ஓடும்?

திரும்பவும் ஒரு வெறுமையான கம்ப்யூட்டர் திரை என் மனக் கண்ணில் தோன்றியது.

கிரவுண்ட் ஜீரோவை நோக்கி என் மனதைத் திருப்பினேன். இந்த வினாடியில் ஒரு விஷயம் உறுதியாகத் தெரிகிறது. என் நாடு பழிவாங்குவதைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறது. ஆப்கானிஸ்தான் போன்ற நாடுகளின் மேல் தன் முழுக் கவனத்தையும் செலுத்திக் கொண்டிருக்கிறது. அதே நேரம் நமது நிறுவனங்களையும், இராணுவத்தையும், நமது கொள்கைகளையும், உலகப் பேரரசை நோக்கிய நமது பாய்ச்சலையும் அடியோடு வெறுக்கும் உலகின் மற்ற பகுதிகளிலுள்ள மக்களைப் பற்றி நான் நினைத்துக் கொண்டிருந்தேன்.

பனாமாவிலும், ஈக்வடாரிலும், இந்தோனேஷியாவிலும் ஈரானிலும், குவாதமாலாவிலும், ஆப்பிரிக்காவின் பெரும் பகுதியிலும் வாழும் மக்கள் என்ன நினைப்பார்கள் என்று ஊகிக்க முயன்றேன்.

திரும்ப நடக்கத் தொடங்கியபோது ஒரு கறுப்பான, குள்ளமான ஆள் ஸ்பானிஷில் கத்தியபடி ஒரு செய்தித்தாளை விற்றுக் கொண்டிருந்தான். நான் நின்றேன்.

“வெனிசுவேலா, புரட்சியின் விளிம்பில் உள்ளது!’’ போக்குவரத்தின் இரைச்சலை மீறி அவன் கூச்சலிட்டான்.

செய்தித்தாளை வாங்கி அந்தக் குறிப்பிட்ட கட்டுரையைப் பார்த்தேன். அது வெனிசுவேலாவில் ஜனநாயகப்பூர்வமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட, அமெரிக்காவுக்கு எதிரான கொள்கைகள் கொண்ட புதிய ஜனாதிபதி ஹியூகோ சாவேஸையும், லத்தீன் அமெரிக்கா முழுவதும் அமெரிக்காவின் கொள்கைகள் உருவாக்கியுள்ள எதிர்ப்பு அலைகளையும் மையப்படுத்தி எழுதப்பட்டிருந்தது. வெனிசுவேலாவுக்கு என்ன ஆயிற்று?

[1] ஹுவாரானி பழங்குடிகள் பற்றி மேலும் அறிந்து கொள்ள பார்க்க: Joe Kane, Savages (New York: Alfred A. Knopf, 1995).

# 33

# சதாமால் காப்பாற்றப்பட்ட வெனிசுவேலா

பஞ்சைப் பராரியாகவிருக்கும் ஒரு நாட்டில் எண்ணெய் வளம் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டால் என்னென்ன களேபரங்கள் நடக்கும் என்பதற்கு ஓர் அற்புதமான உதாரணம் வெனிசுவேலா! [1] பல ஆண்டுகளாக நான் இந்த நாட்டைக் கவனித்து வந்திருக்கிறேன். இந்த நாட்டில் பணக்காரர்களுக்கும், ஏழைகளுக்கும் இடையே கற்பனை செய்ய முடியாத அளவிற்கு இடைவெளி இருந்து வந்தது. நிறுவன - அதிகார வர்க்கத்தால் வெட்கமில்லாமல், ஈவிரக்கமில்லாமல் சுரண்டப்பட்ட ஒரு நாடு எப்படியிருக்கும் என்பதற்கும் நல்ல உதாரணமாக இருந்தது வெனிசுவேலா. என்னைப் போன்ற பழைய வகையைச் சேர்ந்த பொருளாதார அடியாட்களும், நிறுவனங்களின் நிர்வாகிகளாகச் செயல்படும் புதிய வகைப் பொருளாதார அடியாட்களும் ஒன்றிணையும் புள்ளியாகவுமிருந்தது வெனிசுவேலா.

1998-இல் இந்த நாட்டில் நடந்த தேர்தல்களின் விளைவுகள் தான் நான் அன்று கிரவுண்ட் ஜீரோவில் வாங்கிய செய்தித்தாளில் விவரிக்கப்பட்டிருந்தன. அந்தத் தேர்தலில் வெனிசுவேலாவின் ஏழைகளும், ஆதரவற்றவர்களும் மிகப் பெரிய வாக்கு வித்தியாசத்தில் தங்கள் அதிபராக ஹியூகோ சாவேஸைத் தேர்ந்தெடுத்தனர். அவர் உடனடியாக, மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த பல நடவடிக்கைகளை மேற்கொள்ளத் தொடங்கினார். நீதிமன்றங்களையும், ஏனைய அரசு அமைப்புகளையும் தனது கட்டுப்பாட்டில் கொண்டு வந்ததோடு, நாடாளுமன்றத்தையும் கலைத்ததன் மூலம் தன் ஆதிக்கத்தை உறுதிப்படுத்திக் கொண்டார். “வெட்கமற்ற, அப்பட்டமான ஏகாதிபத்தியம்’’ என்று சாவேஸ் அமெரிக்காவைச் சாடினார். உலக மயமாக்கலைக் கடுமையாகத் தாக்கிப் பேசினார். அதோடு ஜெய்மே ரோல்டோஸ் ஈக்வடாரில் கொண்டு வந்ததைப் போன்ற ஒரு ஹைட்ரோகார்பன் சட்டத்தை வெனிசுவேலாவில் அறிமுகப்படுத்தினார். அந்தச் சட்டத்தின் பெயர்கூட ரோல்டோஸ் செயல்படுத்த விரும்பிய சட்டத்தின் பெயரைப் போலவேயிருந்தது. சாவேஸ் கொண்டு வந்த இப் புதிய சட்டத்தின்படி எண்ணெய் நிறுவனங்களிடமிருந்து வசூலிக்கப்பட்டு வந்த ராயல்டி தொகை இரண்டு மடங்காக்கப்பட்டது. பின்பு அவர் காலங்காலமாகச் சுதந்திரமாகச் செயல்பட்டு வந்த அரசு சார்ந்த எண்ணெய் நிறுவனமான பெட்ரோலாஸ் டி வெனிசுவேலாவின் தலைமைப் பொறுப்புக்குத் தனக்குச் சாதகமான ஆட்களைக் கொண்டு வந்ததன் மூலம் அதன் மீதும் தனது ஆதிக்கத்தை நிலை நாட்டினார்.

உலகம் முழுவதுமுள்ள நாடுகளின் பொருளாதாரத்திற்கு வெனிசுவேலாவின் எண்ணெய் அத்தியாவசியமானதாகும். 2002 - இல் அந்நாடு நான்காவது பெரிய எண்ணெய் ஏற்றுமதியாளராகவும் அமெரிக்காவிற்கு எண்ணெய் வழங்கும் நாடுகளில் மூன்றாவது இடத்திலும் இருந்து வந்தது. 40,000 தொழிலாளர்களைக் கொண்ட பெட்ரோலாஸ் டி வெனிசுவேலா ஒவ்வொரு ஆண்டும் ஏற்றுமதி செய்யும் எண்ணெயின் மதிப்பு ஐம்பது பில்லியன் டாலராகும். இது அந்நாட்டின் மொத்த ஏற்றுமதியில் 80% ஆகும். வெனிசுவேலாவின் பொருளாதாரத்திற்கே ஜீவநாடி இந்த பெட்ரோலாஸ் டி வெனிசுவேலா தான்.[2] எனவே இந்தத் துறையைத் தனது பிடிக்குள் கொண்டு வந்ததன் மூலம் உலக அரங்கில் சாவேஸ் ஒரு முக்கியமான தலைவராக மாறினார்.

பெரும்பான்மையான வெனிசூவேலாவினர் சாவேஸின் நடவடிக்கைகளால் தங்களது நீண்டநாள் கனவுகள் நிறைவடைவதாகவே கருதினர். 1922, டிசம்பர் 14-இல் இந்நாட்டிலுள்ள மராகைபோ என்ற இடத்திற்கு அருகில் பூமியிலிருந்து மிகப் பெரிய அளவிற்கு எண்ணெய் பீறிட்டு வந்தது. அடுத்த மூன்று நாட்களுக்கு ஒவ்வொரு நாளும் ஒரு லட்சம் பீப்பாய் கச்சா எண்ணெய் மண்ணிலிருந்து பீய்ச்சியடிக்கப்பட்டது. இந்த நிகழ்வு வெனிசுவேலாவை என்றென்றைக்குமாக மாற்றிவிட்டது. 1930-களில் இந்நாடு உலகின் மிகப் பெரிய எண்ணெய் ஏற்றுமதியாளராக மாறியது. இந்நாட்டினர் தங்களது பிரச்சனைகள் அனைத்திற்கும் தீர்வு எண்ணெயிலேயே உள்ளதென்று எண்ணினர்.

அடுத்து வந்த நாற்பதாண்டுகளில் எண்ணெயிலிருந்து கிடைத்த வருவாய் உலகின் வறுமை மிகுந்த நாடுகளில் ஒன்றாக இருந்த வெனிசுவேலாவை லத்தீன் அமெரிக்காவிலேயே பணக்கார நாடாக மாற்றியமைத்தது. சுகாதாரம், கல்வி, வேலைவாய்ப்பு, வாழ்நாள், குழந்தைகளின் ஆரோக்கியம், உடல்நலம் உள்ளிட்ட அனைத்த துறைகளிலும் நாடு பெரும் வளர்ச்சி கண்டது. வாணிபம் செழித்து வளர்ந்தது.

1973-இல் ஓபெக் விதித்த எண்ணெய்த் தடையின் போது பெட்ரோலியத்தின் விலை விண்ணைத் தொட்டது. வெனிசுவேலாவின் தேசிய பட்ஜெட் நான்கு மடங்காகியது. பொருளாதார அடியாட்கள் செயலில் இறங்கினர். உள் கட்டுமானத்தை மேம்படுத்தவும், தொழில் வளர்ச்சிக்காகவும், தென் அமெரிக்காவிலேயே உயரமான கட்டடங்கள் கட்டவும் இந்நாட்டுக்குச் சர்வதேச வங்கிகள் வெள்ளம் போல் கடன்களை அள்ளித் தந்தன. பின்பு 1980-களில் நிறுவன நிர்வாகிகளான புதிய வகைப் பொருளாதார அடியாட்கள் வந்தார்கள். தங்கள் பற்களைக் கூர் பார்க்க மிகச் சிறந்த சந்தர்ப்பம் அவர்களுக்கு உடனே வாய்த்தது. இந்நாட்டில் கணிசமான அளவுக்கு வளர்ச்சி பெற்றிருந்த

மத்தியதர வர்க்கம் உற்பத்திப் பொருட்களை விற்க ஒரு சிறந்த சந்தையை அளித்தது. அதே நேரத்தில் கடும் வறுமையில் உழலும் மக்களும் பெரும் எண்ணிக்கையில் இருந்ததால், ரத்தத்தை உறிஞ்சும் ஆலைகளில் வேலை செய்ய ஆட்களுக்கும் பஞ்சமிருக்கவில்லை.

பின்பு எண்ணெய் விலைகள் சரிந்தன. வெனிசுவேலாவால் கடன்களைத் திருப்பித் தர முடியவில்லை. 1989-இல் சர்வதேச நிதி நிறுவனம் கடுமையான விதிமுறைகளைத் திணிப்பதன் மூலம் நாட்டை நிறுவன - அதிகார வர்க்கத்திற்கு அடிமையாக்க முயன்றது. கலகங்கள் வெடித்தன. இருநூற்றுக்கும் மேற்பட்டவர்கள் கொல்லப்பட்டனர். எண்ணெய் எல்லையற்ற செல்வத்தை அள்ளித் தரக் கூடியது என்ற மாயை சிதைக்கப்பட்டது. 1978-லிருந்து 2003 வரையிலான காலகட்டத்தில் தனிநபர் வருமானம் நாற்பது சதவீதம் வீழ்ச்சி கண்டது.

வறுமை அதிகரிக்க, அதிகரிக்க மக்களின் கோபமும் உக்கிரமடைந்தது. வர்க்கங்கள் பிளவுண்டன. நடுத்தர வர்க்கம் ஏழைகளுக்கு எதிராக நின்றது. ஆனால் எண்ணெய் உற்பத்தி செய்யும் நாடுகளில் அடிக்கடி நடப்பதைப் போல மக்களின் வாழ்க்கைத் தரத்தில் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. பொருளாதார வீழ்ச்சி நடுத்தர வர்க்கத்தையும் பலி கொண்டது. அவர்களில் பலர் ஏழைகளின் வரிசைகளில் போய்ச் சேர்ந்தனர்.

இந்த மக்களின் கடுங்கோபம்தான் சாவேஸை முன்னிலைக்குக் கொண்டு வந்தது. இந்தச் சீற்றம்தான் வாஷிங்டனுக்கு எதிரான வெறுப்புணர்வாகவும் மாறியது. சாவேஸ் பதவியில் அமர்ந்ததுமே புஷ் நிர்வாகத்திற்குச் சவால் விடக்கூடிய நடவடிக்கைகளை மேற்கொள்ளத் தொடங்கினார். செப்டம்பர் 11 தாக்குதலுக்குக் கொஞ்சம் முன்பு வாஷிங்டன் சாவேஸ் மீது நடவடிக்கை எடுப்பதற்கான வழிவகைகளை ஆராய்ந்து வந்தது. பொருளாதார அடியாட்கள் தோல்வியடைந்து விட்டனர். குள்ள நரிகளை அனுப்ப வேண்டிய நேரம் வந்துவிட்டது போல் தோன்றியது.

ஆனால் செப்டம்பர் 11 தாக்குதல் மற்றெல்லா விஷயங்களையும் பின்னுக்குத் தள்ளிவிட்டது. புஷ்ஷும், அவரது ஆலோசகர்களும் ஆப்கானிஸ்தானைத் தாக்குவதிலும், ஈராக் மீது தொடுக்கவிருந்த தாக்குதலுக்கு உலக நாடுகளின் ஆதரவைப் பெறுவதிலும் கவனம் செலுத்தத் தொடங்கினர். எல்லாவற்றுக்கும் மேலாக அமெரிக்கப் பொருளாதாரம் வீழ்ச்சியடைந்து வந்தது. எது எப்படியிருந்தாலும் வெனிசுவேலா பிரச்சனை தற்காலிகமாகத் தள்ளி வைக்கப்பட்டுள்ளது. ஆனால் ஏதாவதொரு கட்டத்தில் புஷ்ஷும், சாவேஸும் மோதிக் கொண்டேயாக வேண்டும் என்பதில் யாருக்கும் எந்தச் சந்தேகமும் இருக்கவில்லை. ஈராக்கிலிருந்தும் மத்தியக் கிழக்கின் மற்ற

நாடுகளிலிருந்தும் எண்ணெய் இறக்குமதி செய்வதில் ஒரு நிச்சயமற்ற நிலை நிலவும் இந்தக் காலகட்டத்தில் வாஷிங்டனால், வெனிசுவேலாவை நீண்ட நாளைக்குப் புறக்கணிக்க முடியாது.

கிரவுண்ட் ஜீரோவைச் சுற்றியலைந்ததும், ஆப்கானியக் கிழவரைச் சந்தித்ததும், சாவேஸைப் பற்றிப் படித்ததும் என் செயல்களின் பின்விளைவுகள் குறித்து இன்னும் கடுமையான பரிசீலனைகள் செய்யத் தூண்டின. இந்தப் பரிசீலனையை நான் முப்பது ஆண்டுகளாகத் தள்ளிப் போட்டு வந்தேன். பொருளாதார அடியாளாக நான் புரிந்த செயல்கள் என் மகளின் தலைமுறையைப் பாதித்துக் கொண்டிருப்பதை என்னால் மறுக்கவே முடியாது. என் செயல்களுக்குப் பரிகாரம் தேடுவதை இன்னமும் தள்ளிப் போட முடியாது என்பது எனக்கு நன்றாகவே புரிந்தது. என் வாழ்க்கையை வெளிப்படையாகச் சொல்லிவிட வேண்டும். நிறுவன - அதிகார வர்க்கத்தைப் பற்றிய உண்மைகளையும், ஏன் உலகம் நம்மை வெறுக்கிறது என்பதையும் மக்களுக்குப் புரியும் விதத்தில், அவர்களை உறக்கத்திலிருந்து எழுப்பும் விதத்தில் சொல்லியே ஆக வேண்டும்.

திரும்பவும் எழுதும் பணியைத் தொடங்கினேன். ஆனால் இப்போது என் கதை மிகவும் பழையதாகிவிட்டது போலத் தோன்றியது. ஏதோவொரு விதத்தில் அதைத் தற்காலத்திற்கு ஏற்றதாகச் செய்ய வேண்டியிருந்தது. ஆப்கானிஸ்தானுக்கும், ஈராக்குக்கும், வெனிசுவேலாவுக்கும் பயணம் செய்து இந்த மூன்று நாடுகளையும் பற்றி ஒரு நேரடி வருணனையைத் தரலாமா என்று யோசித்தேன். தற்போதைய உலக விவகாரங்களின் முரண் நகைச்சுவை (irony) இந்த நாடுகளின் பிரச்சனைகளில் உள்ளடங்கியுள்ளதாக எனக்குத் தோன்றியது. இந்த நாடுகளில் நிலவிய மிகவும் வித்தியாசமான, கவனத்தை ஈர்க்கக் கூடிய தலைவர்கள் தலைமைப் பொறுப்பிற்கு வந்திருந்தனர். (கொடூரமான தாலிபான், மனநோயாளியான சதாம், பொருளாதார ரீதியில் அபத்தமான சாவேஸ்) ஆனால் இந்த மூன்று நாடுகளின் விஷயத்திலுமே நிறுவன - அதிகார வர்க்கம் ஒரே முறையைத்தான் கையாண்டது. கொந்தளிப்புக்குக் காரணமான பிரச்சனைகளை அது கண்டு கொள்ளவேயில்லை. அது செய்ய விரும்பியது ஒன்றேயொன்றுதான். தனது வழியில் குறுக்கே நிற்கும் தலைவர்களை ஒழித்துக் கட்டுவதில்தான் அது முனைந்து நின்றது. ஆனால் வெனிசுவேலாதான் பல விதங்களில் மிகவும் மர்மமானதாகவே இருக்கிறது. ஆப்கானிஸ்தானில் ஏற்கனவே ராணுவத் தலையீடு நிகழ்ந்துவிட்ட நிலையில், ஈராக்கில் அது தவிர்க்க முடியாததாகி வரும் நிலையில் சாவேஸின் செயல்களுக்கு அமெரிக்க நிர்வாகம் காட்டிய எதிர்வினைகள் மிகவும் மர்மமானவையாகவே தோன்றுகின்றன. என்னைப் பொறுத்தவரை சாவேஸ் நல்ல தலைவரா?. இல்லையா என்பதல்ல விஷயம். நிறுவன - அதிகார வர்க்கத்தின்

பாய்ச்சலுக்குக் குறுக்கே நின்றிருக்கும் ஒரு தலைவரைப் பொறுத்தவரை வாஷிங்டன் எப்படி நடந்து கொண்டது என்பதுதான் எனது அக்கறைக்குரிய விஷயம்.[3]

இந்த மூன்று நாடுகளையும் நேரில் சென்று காண்பதற்கான பயணத்தை ஒழுங்கமைப்பதற்கு முன்பே திரும்பவும் சூழ்நிலைகளில் பெரிய மாற்றம் ஏற்பட்டுவிட்டது. இடையில் எனது லாப நோக்கமற்ற தன்னார்வப் பணிக்காக நான் பலமுறை லத்தீன் அமெரிக்காவுக்குச் செல்ல வேண்டியிருந்தது. அப்படியொரு பயணத்தின்போது சாவேஸின் ஆட்சியில் வியாபாரத்தில் பெருத்த நஷ்டத்தைச் சந்தித்த ஒரு வெனிசூவேலா குடும்பம் ஒன்றும் என்னுடன் சேர்ந்து கொண்டது, நாங்கள் நெருங்கிய நண்பர்களானோம். அமேசான் பகுதிகளில் இணைந்து பயணம் செய்தோம். அப்போது அவர்கள் தரப்பு நியாயத்தை அறிந்து கொள்ள முடிந்தது. அதே நேரத்தில் சாவேஸை மீட்பர் என்று கருதிய லத்தீன் அமெரிக்கர்களையும் நான் சந்தித்தேன். வெ னி சூ வே லா வி ல் நடந்து வந்த நிகழ்ச்சிகள் பொருளாதார அடியாட்களாகிய நாங்கள் உருவாக்கிய உலகத்தின் லட்சணத்தைத்தான் படம் பிடித்துக் காட்டின.

2002, டிசம்பர் மாதத்தில் ஈராக்கிலும், வெனிசுவேலாவிலும் நிலைமை நெருக்கடியான கட்டத்தை அடைந்தது. இந்த இரண்டு நாடுகளும் ஒன்றையொன்று பெருமளவிற்கு ஒத்திருந்தன. ஈராக்கில் பொருளாதார அடியாட்களும், குள்ளநரிகளும் மேற்கொண்ட அத்தனை நுணுக்கமான, நெளிவு சுளிவான முயற்சிகளும் சதாம் உசேனைப் பணிய வைப்பதில் தோல்வியே கண்டன. இறுதித் தீர்வுக்கு அமெரிக்கா முழு வீச்சில் தயாராகி வந்தது. நேரடியாகத் தாக்குவதும் ஈராக்கை ஆக்கிரமிப்பதும்தான் அந்த இறுதித்தீர்வு. வெனிசுவேலாவில் புஷ் நிர்வாகம் கெர்மிட் ரூஸ்வெல்ட் ஈரானில் மேற்கொண்ட தந்திரத்தைச் செயல்படுத்த முடிவெடுத்தது. ‘நியூயார்க் டைம்ஸ்’ இவ்வாறு எழுதியது: [4]

பல்லாயிரக்கணக்கான வெனிசுவேலாவினர் நாடு தழுவிய வேலைநிறுத்தத்திற்கு ஆதரவு தெரிவிக்கத் தெருக்களில் இறங்கினர். ஜனாதிபதி ஹியூகோ சாவேஸைப் பதவியிறக்கம் செய்வதற்காகத் தொடங்கப்பட்ட வேலைநிறுத்தம் இருபத்தெட்டு நாட்களாகத் தொடர்ந்து நடந்து வருகிறது.

எண்ணெய் உற்பத்தியில் ஈடுபட்டுள்ள முப்பதாயிரம் தொழிலாளர்கள் இணைந்து நடத்தும் இந்த வேலைநிறுத்தமானது உலகின் ஐந்தாவது பெரிய எண்ணெய் உற்பத்தியாளரான இந்நாட்டுக்குப் பேரிழப்பை ஏற்படுத்தக்கூடும்…

கடந்த சில நாட்களில வேலைநிறுத்தம் ஒருவகையான தேக்கத்தை அடைந்துள்ளது. அதிருப்தியாளர்களும் அரசும் சம பலத்துடனிருப்பது

போல் தோன்றுகிறது. திரு. சாவேஸ் வேலைநிறுத்தத்தில் ஈடுபடாத தொழிலாளர்களைக் கொண்டு இந்த அரசு நிறுவனத்தை இயல்பு நிலைக்குக் கொண்டுவர முயன்று வருகிறார். தொழிலதிபர்கள் மற்றும் தொழிலாளர் தலைவர்களால் வழி நடத்தப்படும் அவரது எதிரிகள் தங்கள் வேலை நிறுத்தம் முதலில் நிறுவனத்தையும் பின்பு சாவேஸ் அரசையும் கவிழ்த்துவிடும் என்று நம்பிக்கை கொண்டுள்ளார்கள்.

இதே முறையில்தான் முன்பு சி.ஐ.ஏ. ஈரானின் மொஸாடெக் அரசைக் கவிழ்த்து அவரிடத்தில் ஷாவை அமர்த்தியது. ஈரானை விடப் பொருத்தமான வேறு உதாரணம் இந்நிகழ்ச்சிகளுக்கு இருக்க முடியாது. ஐம்பது ஆண்டுகளில் வரலாறு ஒரு சுற்றுச் சுற்றி தொடங்கிய இடத்திற்கே திரும்புவது போலத் தோன்றியது. இந்த ஐம்பது ஆண்டுகளில் எண்ணெய்தான் தொடர்ந்து இயக்கும் சக்தியாக இருந்து வருகிறது.

சாவேஸின் ஆதரவாளர்கள் தொடர்ந்து அவரது எதிரிகளோடு மோதி வந்தனர். பலர் சுட்டுக் கொல்லப்பட்டதாகவும், ஏராளமானவர்கள் காயமடைந்ததாகவும் செய்திகள் கூறின. மறுநாள் குள்ளநரிகளோடு பல ஆண்டுகளாகத் தொடர்பு கொண்டிருந்த ஒரு பழைய நண்பருடன் தொடர்பு கொண்டேன்.[5] என்னைப் போலவே அவரும் நேரடியாக எந்த அரசுக்கும் வேலை செய்ததில்லை. ஆனால் அவர் பல நாடுகளில் பல நடவடிக்கைகளைப் பொறுப்பேற்று நடத்தியவர். ஒரு தொழிலதிபர் காரகாஸில் வேலை நிறுத்தங்கள் நடத்தவும், வெனிசுவேலா இராணுவ அதிகாரிகளுக்கு (அவர்களில் பலர் அமெரிக்கா நடத்தும் ராணுவப் பள்ளிகளில் பயிற்சி பெற்றவர்கள்) லஞ்சம் கொடுக்கவும் தங்கள் ஜனாதிபதிக்கு எதிராக அவர்களைத் திருப்பிவிடவும் தனது உதவியை நாடியதாக அவர் என்னிடம் சொன்னார். “நான் மறுத்துவிட்டேன். ஆனால் எனக்குப் பதிலாக இந்த வேலையை ஒப்புக்கொண்ட நபருக்குத் தான் என்ன செய்கிறோம் என்பது நன்றாகத் தெரியும்’’ என்றார் அவர்.

எண்ணெய் நிறுவன நிர்வாகிகளும், வால் ஸ்ட்ரீட்டும், வெனிசுவேலா நிகழ்ச்சிகளால் எண்ணெய் விலை அதிகரிக்கும், அமெரிக்கர்களின் வாங்கும் திறன் அதனால் வீழ்ச்சியடையும் என்று அஞ்சினார்கள். மத்தியக்கிழக்கில் புஷ் அரசு நெருக்கடியில் சிக்கியிருந்தாலும் கூட அது., சாவேஸைத் தூக்கியெறியத் தன்னாலான அனைத்தையும் செய்து வருகிறது என்பதை நான் அறிந்திருந்தேன். பின்பு புஷ் அரசும், சாவேஸ் எதிர்ப்பாளர்களும் வெற்றியடைந்துவிட்டார்கள் என்ற செய்தி வந்தது. சாவேஸ் பதவியிலிருந்து தூக்கியெறியப்பட்டு விட்டார். ‘நியூயார்க் டைம்ஸ்’ இந்த நிகழ்ச்சிகளை வரலாற்றுப் பின்னணியோடு தொகுத்ததோடு தெர்மிட் ரூஸ்வெல்ட்டின் பாத்திரத்தை ஏற்றுக்கொண்டிருந்த நபரை அடையாளம் காட்டவும் செய்தது.

பனிப்போரின் போதும் அதற்குப் பிந்தைய காலகட்டத்திலும் அமெரிக்கா தனது அரசியல், பொருளாதார நலன்களுக்காக மத்திய, தென் அமெரிக்கா முழுவதும் சர்வாதிகார அரசுகளை ஆதரித்து வந்தது.

1954-இல் குவாதமாலாவில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசைக் கவிழ்ப்பதற்காக சி.ஐ.ஏ. ஆட்சிக்கவிழ்ப்பு முயற்சிகளை அரங்கேற்றியது. அடுத்து வந்த நாற்பதாண்டு காலத்தில் அமெரிக்கா, அந்த நாட்டில் சிறிய, இடதுசாரிப் புரட்சியாளர் குழுக்களுக்கு எதிராக வலதுசாரி அரசுகளை ஆதரித்து வந்தது. இந்த மோதல்களில் சுமார் இரண்டு லட்சம் பேர் கொல்லப்பட்டனர்.

சிலியில் சி.ஐ.ஏ. ஆதரவு பெற்ற ஜெனரல் அகஸ்டோ பினோசெட் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசைக் கவிழ்த்துவிட்டு 1973-லிருந்து 90 வரை ஆட்சி நடத்தினார். பெருவில் பத்தாண்டுகளாக முன்னாள் குடியரசுத் தலைவர் ஆல்பர்ட்டோ பியூஜிமோரி மற்றும் அவரது உளவுத் துறைத் தலைவர் விளாடிமீரோ எல் மான்டெஸினோஸ் ஆகியோருக்கு சி.ஐ.ஏ. ஆதரவளித்து வந்தது. சி.ஐ.ஏ.வின் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள தற்போதைய பலவீனமான ஆனால் ஜனநாயகப் பூர்வமான அரசு இன்னும் போராடிக் கொண்டுள்ளது.

1989-இல் போதை மருந்து சர்வாதிகாரியான பனாமாவின் மனுவேல் நொரீகாவைக் கவிழ்க்க அமெரிக்காவே நேரடியாகப் பனாமா மீது படையெடுக்க வேண்டி வந்தது. இத்தனைக்கும் நொரீகா 20 ஆண்டுகளாக அமெரிக்க உளவுத் துறையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தவர். 1980-களில் நிகாரகுவாவின் இடதுசாரி அரசுக்கு எதிரான போராட்டத்தை நடத்த நிதி திரட்டுவதற்காக ரீகன் அரசு ஈரானுக்கு ஆயுத விற்பனை செய்தது. தன்னாலான அனைத்து வழிகளிலும் நிகாரகுவா அரசைக் கவிழ்க்க முயன்றது. இச்செயல்களுக்காக ரீகன் அரசில் செயல்பட்டு வந்த மூத்த அதிகாரிகளின் மேல் குற்றம் சுமத்தப்பட்டது. அப்போது விசாரிக்கப்பட்டவர்களில் ஒட்டோ ஜெ. ரீச்சும் ஒருவர். அவர் லத்தீன் அமெரிக்கப் போராட்டங்களில் மிகுந்த அனுபவம் வாய்ந்தவர். வெறும் விசாரணைக்கு மேல் அவருக்கு எதிராக எந்தக் குற்றச்சாட்டும் ஒருபோதும் சுமத்தப்படவில்லை. பின்பு அவர் வெனிசுவேலாவிற்கான அமெரிக்கத் தூதராக நியமிக்கப்பட்டார். இப்போது அமெரிக்கர்களுக்கு இடையேயான விவகாரங்களுக்கான உதவி அரசு செயலராகப் பணி புரிந்து வருகிறார். சாவேஸின் வீழ்ச்சி அவரது மகுடத்தில் இன்னொரு வைரக் கல்லாகும்.[6]

சாவேஸ் கவிழ்க்கப்பட்டதைக் கொண்டாட்டங்களுடன் வரவேற்ற ரீச் மற்றும் புஷ் அரசின் மற்ற நிர்வாகிகளின் மகிழ்ச்சி அதிக நேரம் நீடித்திருக்கவில்லை. விரைவிலேயே நிலைமை தலைகீழாக மாறியது. சாவேஸின் கை ஓங்கியது. ஆட்சிக்கவிழ்ப்பு நடந்த எழுபத்தியிரண்டு மணி நேரத்துக்குள் அவர் திரும்பவும் பதவியிலமர்ந்தார். ஈரானின்

மொஸாடெக்கைப் போலல்லாமல் ராணுவத்திலுள்ள உயர் அதிகாரிகளைத் தனக்கு எதிராகத் திருப்ப மேற்கொள்ளப்பட்ட அனைத்து முயற்சிகளையும் கடந்து ராணுவத்தைத் தன் பக்கம் வைத்திருப்பதில் சாவேஸ் வெற்றி கண்டார். கூடவே பலம் வாய்ந்த அரசு எண்ணெய் நிறுவனமும் அவர் பக்கமிருந்தது. வெனிசுவேலா அரசின் எண்ணெய் நிறுவனமான பெட்ரோலாஸ் டி வெனிசுவேலா வேலைநிறுத்தம் செய்து வந்த ஆயிரக்கணக்கான தொழிலாளர்களுக்குச் சவால்விட்டுத் திரும்பவும் எழுந்து நின்றது.

பிரச்சனைகள் அடங்கியதும் சாவேஸ், எண்ணெய் நிறுவன ஊழியர்கள் மீதான தன் அரசின் பிடியை இறுக்கினார். துரோகமிழைத்த, விசுவாசமற்ற ராணுவ அதிகாரிகளைக் களையெடுத்தார். அவரது எதிரிகள் நாட்டை விட்டு ஓடும்படி நேர்ந்தது. குள்ளநரிகளோடு இணைந்து நாடு தழுவிய வேலைநிறுத்தத்தைத் தலைமையேற்று நடத்திய, வாஷிங்டனோடு தொடர்புடைய இரண்டு முக்கியமான எதிர்க்கட்சித் தலைவர்களுக்கு இருபதாண்டு சிறைத்தண்டனை கோரினார்.[7]

எனவே இறுதியில் நடந்த நிகழ்ச்சிகள் எல்லாமே புஷ் நிர்வாகத்திற்குப் பெரு விபத்தாகவே முடிந்தன. ‘லாஸ் ஏஞ்சல்ஸ் டைம்ஸ்’ எழுதியது:

புஷ் அரசில் பணிபுரிந்து வரும் அதிகாரிகள் தாங்கள் பல மாதங்களாகவே வெனிசுவேலாவின் ராணுவ மற்றும் அரசியல் கட்சிகளின் தலைவர்களுடன் குடியரசுத் தலைவர் ஹியூகோ சாவேஸை நீக்குவது பற்றி விவாதித்து வந்ததாக செவ்வாய்க் கிழமை ஒப்புக் கொண்டார்கள். இந்தத் தோல்வியடைந்த ஆட்சிக் கவிழ்ப்பை அரசு கையாண்ட விதம் மேன்மேலும் அதிகமாக ஆய்விற்கும் விமர்சனத்திற்கும் உட்படுத்தப்பட்டு வருகிறது.[8]

தோல்வியடைந்தது பொருளாதார அடியாட்கள் மட்டுமல்ல, குள்ளநரிகளும்தான் என்பது வெட்டவெளிச்சமானது. வெனிசுவேலா, ஈரான் அல்ல என்பது தெளிவானது. இந்நாட்டில் நிகழ்ந்த சம்பவங்கள் பின்னால் வர இருப்பதை உணர்த்தக்கூடிய ஒரு முன்னறிவிப்பா அல்லது வெறும் விதிவிலக்குதானா? வாஷிங்டன் அடுத்து என்ன செய்யும்?

குறைந்தபட்சம் ஒரு குறுகிய காலத்திற்கு வெனிசுவேலாவில் கடும் நெருக்கடி தவிர்க்கப்பட்டது. சாவேஸ் காப்பாற்றப்பட்டார், சதாம் உசேனால்! ஆப்கானிஸ்தான், ஈராக், வெனிசுவேலா இந்த மூன்று நாடுகளையும் ஒரே நேரத்தில் சமாளிக்க புஷ் அரசால் முடியாது. இந்த நிமிடத்தில் அதற்கான ராணுவ வலிமையோ, அரசியல் செல்வாக்கோ அதற்குக் கிடையாது. குடியரசுத் தலைவர் சாவேஸ் மிக விரைவில் கடும் எதிர்ப்பைச் சந்திக்க வேண்டி வரும் என்பதை நான் அறிவேன்.

வெனிசுவேலா நிகழ்ச்சிகள் இந்த ஐம்பது ஆண்டுகளில் ஒன்றும் பெரிதாக மாறி விடவில்லை என்பதையே காட்டுகின்றன அவற்றின் விளைவைத் தவிர.

[1] Venezuela on the Brink,Editorial, New York Times, December 18, 2002.

[2] The Revolution Will Not Be Televised, directed by Kim Bartley and Donnacha O' Briain (in association with the Irish Film Board, 2003). See www.chavezthefilm.com.

[3] ''Venezuelan President Forced to Resign,'' Associated Press, April 12, 2002.

[4] Simon Romero, ''Tenuous Truce in Venezuela for the State and its Oil Company,'' New York Times, April 24, 2002.

[5] Bob Edwards, ''What Went Wrong with the Oil Dream in Venezuela,'' National Public Radio, Morning Edition, July 8, 2003.

[6] Ti, Weiner, "A Coup by Any Other Name,'' New York Times, April 14, 2002.

[7] "Venezuela Leader Urges 20 Years for Strike Chiefs,'' Associated Press, February 22, 2003.

[8] Paul Richter, "U.S. Had Talks on Chavez Ouster,'' Los Angeles Times, April 17, 2002.

# 34

# திரும்பவும் ஈக்வடார்

வெனிசுவேலா ஓர் அற்புதமான உதாரணம். ஆனால் இன்னும் அதிக முக்கியத்துவம் வாய்ந்த உண்மையான போர் இன்னொரு நாட்டில் நடக்கவுள்ளது என்று எனக்குத் தோன்றியது. காரணம் நான் குறிப்பிடும் இந்தப் போரில் இன்னும் அதிக மனித உயிர்களும் பணமும் சம்பந்தப்பட்டிருக்கும் என்பதல்ல; மாறாக உலகப் பேரரசின் பொருளாதார நலன்களைக் கடந்தும் வேறு விஷயங்களை அப்போர் உள்ளடக்கியுள்ளது என்பதால்தான். வங்கியாளர்கள், நிறுவனங்கள், அரசியல்வாதிகள், அவர்களது படைகள் அனைத்தையும் கடந்து இந்த யு-த்தம் நவீன நாகரிகத்தின் ஆன்மாவைத் தொடக்கூடியதாக இருக்கும். நான் அமைதிப் படையில் இருந்தபோது பணிபுரிந்த ஈக்வடார்தான் இந்தப் போரின் மையமாக இருக்கும்.

1968-லிருந்து இந்தச் சிறிய நாடு நிறுவன - அதிகார வர்க்கத்தால் இரக்கமின்றிச் சூறையாடப்பட்டு வந்துள்ளது. நானும் எனது சக பொருளாதார அடியாட்களும் உண்மையிலேயே இந்த நாட்டைத் திவாலான நிலைக்குக் கொண்டு வந்துவிட்டோம். ஒரு சில பணக்காரக் குடும்பங்களுக்கு மட்டுமே உதவக்கூடிய திட்டங்களை நமது பொறியியல், கட்டுமான நிறுவனங்கள் கட்டியமைத்தன. அதற்காக இந்த நாட்டுக்கு நாம் ஆயிரக்கணக்கான கோடி டாலர் கடனாகக் கொடுத்துள்ளோம். இக்கடன்களின் விளைவாகக் கடந்த முப்பது ஆண்டுகளில் அதிகாரப்பூர்வமான புள்ளிவிவரங்களின்படி வறுமை 50% லிருந்து 70% மாக உயர்ந்துள்ளது. கடன் 24 கோடி டாலரிலிருந்து 1600 கோடி டாலராக உயர்ந்துள்ளது. வறுமையில் வாடும் மக்களின் நன்மைக்காகச் செலவிடப்படும் தொகை 20% மாகக் குறைந்துள்ளது. ஈக்வடார் தனது பட்ஜெட்டில் ஐம்பது சதவீதத்தைக் கடன்களைத் திருப்பிச் செலுத்த மட்டுமே செலவிட வேண்டிய நிலையிலுள்ளது. கற்பனைக்கெட்டாத வறுமையில் வதைபடும் லட்சோபலட்சம் மக்களுக்கு எந்தவிதத்திலும் உதவாத இந்தக் கடன்கள் தேசிய வருமானத்தின் பாதியை அடைத்துக் கொண்டுள்ளன![1]

இந்தப் பேரழிவுகளுக்கு எந்த ஒரு சதி வேலையும் காரணமல்ல என்பதை ஈக்வடாரில் நிலவும் சூழல் தெளிவாகக் காட்டுகிறது. மாறி மாறி ஆட்சி செலுத்திய குடியரசு மற்றும் ஜனநாயகக் கட்சிகள் இரண்டின் காலத்திலும் இந்தச் சூறையாடல் தங்குதடையில்லாமல் தொடர்ந்து தான் வந்துள்ளது. இந்த நிகழ்ச்சிப் போக்கில் பல பன்னாட்டு நிறுவனங்களும், பல நாடுகளைச் சார்ந்த அன்னிய நிதியுதவி நிறுவனங்களும் பங்கு கொண்டுள்ளன. அமெரிக்கா இதில்

முதன்மைப் பாத்திரம் வகித்தாலும், அதன் கூட்டாளியின் பாத்திரத்தை மறுக்க முடியாது.

இந்த முப்பதாண்டுக் காலத்தில் ஆயிரக்கணக்கான ஆண்களும், பெண்களும் இணைந்து செயலாற்றித்தான் இந்த நாட்டை இப்போதுள்ள மோசமான நிலைக்குக் கொண்டு வந்துள்ளனர். அவர்களில் என்னைப் போன்ற சிலர் தாங்கள் என்ன செய்கிறோம் என்பதை அறிந்திருந்தனர். ஆனால் பெரும்பாலானவர்கள் பொறியியல் மற்றும் சட்ட வல்லுநர்கள் கூறுவதை அப்படியே நம்பியவர்கள்தான். அல்லது என்னைப் போன்ற மேலதிகாரிகளைப் பின்பற்றியவர்கள். அந்த மேலதிகாரிகள் பேராசை பிடித்தவர்கள். பரிசுகளையும், தண்டனைகளையும் மாறி மாறி வழங்குவதன் மூலம் ஊழியர்களைத் தங்கள் விருப்பப்படி ஆட்டி வைப்பவர்கள். இவர்களால் வழிநடத்தப்பட்டவர்கள் வெறுமனே சொல்லிக் கொடுக்கப்பட்டதைச் செயல்படுத்தினர். அவர்கள் தாங்கள் ஒரு வறுமை மிகுந்த நாட்டுக்கு உதவுகிறோம் என்ற எண்ணமும் கூடக் கொண்டிருந்தனர்.

ஏமாற்றப்பட்டாலும், தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்டாலும் நிச்சயமாக இவர்கள் ஒரு மர்மமான சதியாலோசனையில் கலந்து கொண்டவர்களல்லர். ஒரு சதியாலோசனையை விடப் பன்மடங்கு நுணுக்கமான, செயல்திறன் மிக்க ஏகாதிபத்தியத்தை முன்னிறுத்தக்கூடிய அமைப்பால் உற்பத்தி செய்யப்பட்டவர்கள் இவர்கள். மிரட்டலுக்குப் பயப்படக்கூடிய, லஞ்சம் வாங்கத் தயாராக உள்ள ஆண்களையும் பெண்களையும் யாரும் தேடிப் போக வேண்டிய அவசியமேயில்லை. அத்தகைய நபர்களை ஏற்கனவே பன்னாட்டு நிறுவனங்களும், வங்கிகளும், அரசு அமைப்புகளும் பணிக்கமர்த்தி விட்டன. சம்பளங்களும், ஊக்கத் தொகைகளும், ஓய்வூதியங்களும், இன்சூரன்ஸ் பாலிசிகளும் லஞ்சமாக வழங்கப்படுகின்றன. சமூக அந்தஸ்து, குழந்தைகளுடைய கல்வியின் எதிர்காலம் குறித்த கேள்விகள் - இவைதான் மிரட்டலுக்கான புதிய அடிப்படைகள்.

இந்த முறை அற்புதமான வெற்றி கண்டது. இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் ஈக்வடார் முழுமையாகப் பொறியில் சிக்கிவிட்டது. மகளின் திருமணத்திற்கும், சிறிய வியாபாரத்திற்கும் மாஃபியா தலைவனிடம் கடன் வாங்கிய மனிதனைப் போல ஈக்வடார் அமெரிக்காவின் கரங்களில் சிக்கியுள்ளது. உண்மையான ஒரு மாஃபியா கும்பலைப் போலவே நாமும் (அமெரிக்கா) காலம் கனியும் வரை பொறுமையாகக் காத்திருக்கிறோம். ஈக்வடாரின் மழைக்காடுகளின் அடியில் கடல் போன்ற எண்ணெய் வளம் இருக்கிறது. அதை முழுமையாகக் கைப்பற்ற எத்தனை காலம் தேவையோ அத்தனை காலம் பொறுத்திருக்கத் தயாராக இருக்கிறோம்.

2003 - ஆம் ஆண்டு குயிட்டோவிலிருந்த எனது சபுரு அவுட்பேக்

வாகனத்தில் காடுகளுக்கு நடுவேயுள்ள ஷெல் நகருக்குக் கிளம்பும் போதே நாம் எந்த நாளுக்குக் காத்திருந்தோமோ அந்த நாள் வந்து விட்டதை உணர்ந்து கொண்டேன். சாவேஸ், புஷ்ஷை எதிர்த்துப் போராடி வெற்றியும் கண்டுவிட்டார். அவர் வெனிசுவேலாவில் தன்னைத் திரும்பவும் நிலைப்படுத்திக் கொண்டுவிட்டார். சதாம் தனது நிலையில் ஊன்றி நின்று தாக்குதலை எதிர்கொள்ளத் தயாராகி வந்தார். கடந்த முப்பதாண்டுக் காலத்தில் எப்போதும் இல்லாத அளவிற்கு எண்ணெய் இறக்குமதி வீழ்ச்சியடைந்தது. நிறுவன - அதிகார வர்க்கத்தின் லாபமும் இறங்குமுகமாகத் தொடங்கியது. அமைப்பில் விழுந்துவிட்ட ஓட்டையை அடைத்தேயாக வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது. ஷைலாக்கைப் போல ஈக்வடாரிடம் நமது பங்குச் சதையைக் கேட்க இதுதான் சரியான நேரம்.

பஸ்டஸா ஆற்றின் மீது அரக்கத்தனமாக எழுந்து நின்ற அணையை ஒட்டி நான் பயணம் செய்தபோது, ஈக்வடாரில் நடைபெறும் போர் பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்கும், சுரண்டுபவர்களுக்கும், சுரண்டப்படுபவர்களுக்கும் இடையே காலங்காலமாக நடந்துவரும் வழக்கமான வர்க்கப் போராட்டம் அல்ல என்பது துலக்கமாகத் தெரிந்தது. இந்தப் போரில்தான் நாம் நாகரிகமடைந்தவர்களா அல்லது அரக்கத்தனமானவர்களா என்பது தீர்மானிக்கப்படும். இந்தச் சின்னஞ்சிறிய நாட்டின் அமேசான் வடிநிலப் பகுதிகளில் உள்ள மழைக்காடுகளை நமது எண்ணெய் நிறுவனங்களுக்குத் திறந்து விடவேண்டும் என்று வற்புறுத்தத் தொடங்கியுள்ளோம். நமது கோரிக்கைகள் ஏற்கப்பட்டால் கற்பனைக்கு எட்டாத அளவுக்குப் பேரழிவு ஏற்படும்.

இந்த நாட்டுக்கு அளிக்கப்பட்ட கடன்களைத் திரும்பப் பெறுவதில் நாம் தீவிரம் காட்டினாலும் பேரழிவு ஏற்படுவதைத் தவிர்க்க முடியாது. இந்த மழைக்காடுகள் நமது தொழிற்கூடங்கள் உருவாக்கும் கிரீன் ஹவு-ஸ் வாயுக்களை உறிஞ்சிக் கொண்டு ஆக்சிஜனை வெளியிடுகின்றன. அமேசான் மழைக்காடுகள் தான் உலகின் மிகப்பெரிய நீர் ஆதாரமாக உள்ளன. இந்தக் காடுகள் அழிக்கப்பட்டால் ஏராளமான பழங்குடியினங்களும், ஆயிரம் ஆயிரம் வகைப்பட்ட மிருகங்களும், மீன்களும், பூச்சிகளும், தாவரங்களும் அழிந்து விடக் கூடும். எனவே இந்த இடங்களைப் பாதுகாக்க வேண்டும் என்பது வழக்கமான சுற்றுச்சூழல்வாதிகள் எழுப்பும் வாதங்கள்தான். ஆனால் அவையனைத்தையும் கடந்து சென்று இந்தப் போர் நமது ஆன்மாவின் அடியாழத்தைத் தொடக்கூடியதாக உள்ளது.

நாம் அடிமைத்தனத்திற்கு எதிராகக் குரல் கொடுக்கிறோம். ஆனால் நமது அமெரிக்கா உருவாக்கி வரும் உலகப் பேரரசு ரோமப் பேரரசைவிட, நமக்கு முன்பிருந்த அனைத்துக் காலனிய சக்திகளைவிட அதிக மக்களை அடிமைகளாக்கி வருகிறது. எந்தத் தொலைநோக்கும்

இல்லாத பேரழிவு ஏற்படுத்தும் இத்தகைய கொள்கைகளை ஈக்வடார் போன்றதொரு நாட்டில் செயல்படுத்திவிட்டு நாம் எப்படி மனசாட்சியுடன் வாழ முடியும்?

ஆண்டிஸ் மலைப்பாதையில் விரைந்து கொண்டிருந்த எனது சபுரு வாகனத்தின் ஜன்னலுக்கு வெளியே மொட்டையடிக்கப்பட்ட மலைச்சரிவுகள் தொடர்ந்து வந்து கொண்டிருந்தன. முப்பது ஆண்டுகளுக்கு முன்பு இதே சரிவுகள் கண்கவரும் பசுமை நிறைந்த காடுகளால் நிறைந்திருந்தது ஞாபகத்திற்கு வந்தது. ஒருவேளை ஈக்வடார் மட்டுமே முக்கியமானது என்ற எனது எண்ணம் தவறானதோ என்று தோன்றியது. உலகப் பேரரசால் கொள்ளை அடிக்கப்பட்ட ஒவ்வொரு நாடும் முக்கியமானதுதான். இந்த நாடுகள் அனைத்துடனும் நான் தனிப்பட்ட முறையில் உறவு கொண்டிருந்தேன். இந்த நாடுகளோடு நான் கொண்டிருந்த உறவு முற்றிலும் அக வயமானது.

ஈக்வடாரின் மலைக்காடுகள் விலை மதிப்பற்றவைதான். ஆனால் அவை எந்த விதத்திலும் ஈரானின் பாலைவனங்களை விட உயர்ந்தவை அல்ல. ஜாவாவின் மலைகளும், பிலிப்பைன்ஸின் கடல்களும், ஆசியாவின் ஸ்தெப்பி புல்வெளிகளும், ஆப்பிரிக்காவின் சவானா புல்வெளிகளும், வட அமெரிக்காவின் காடுகளும், ஆர்க்டிக்கின் பனிப்பாறைகளும் இந்த மழைக்காடுகளைப் போலவே முக்கியத்துவம் வாய்ந்தவைதான். அழிவைச் சந்தித்து வரும் ஒவ்வொரு பிரதேசமும் ஒரு போர்முனைதான்.

இந்த இயற்கைப் பேரழிவுகளைப் பற்றிப் பேசும்போது சில புள்ளிவிவரங்கள் நினைவுக்கு வருகின்றன. பணக்கார நாடுகளில் வாழும் மக்களில் ஐந்தில் ஒரு பங்கினரின் வருமானத்துக்கும் ஏழை நாடுகளில் வாழும் மக்களில் ஐந்தில் ஒரு பங்கினரின் வருமானத்துக்கும் இடையேயான விகிதாசாரம் 1960-ல் 30 :1 ஆக இருந்தது. 1995-ல் அது 74 :1 ஆக வளர்ந்து விட்டது. ஆனால் உலக வங்கியும், மற்ற பன்னாட்டு வங்கிகளும் அன்னிய நிதியுதவி அமைப்புகளும், தாங்கள் செய்து வரும் ‘உதவியின்’ காரணமாக மக்களின் வாழ்க்கைத் தரத்தில் முன்னேற்றம் ஏற்பட்டு வருவதாகக் கூறி வருகின்றன.

இப்போது கொழுந்துவிட்டு எரியும் இந்த நெருப்பைத் தூண்டிவிட்டவர்களில் நானும் ஒருவன். இந்தப் போரைத் தடுத்து நிறுத்துவது இப்போது என்னுடைய கடமையாக உள்ளது.

ஆப்கானிஸ்தானிலும், ஈராக்கிலும், வெனிசுவேலாவிலும் நடைபெற்று வரும் நிகழ்ச்சிகள் இன்னொரு போரில் நாம் இறங்குவதைத் தடுக்கப் போதுமானவை. ஆனால் ஈக்வடாரின் நிலைமை முற்றிலும் வேறு வகையானது. இங்கே அமெரிக்காவின்

நேரடியான ராணுவத் தலையீட்டுக்கு அவசியமேயில்லை. ஈட்டிகளையும், வாட்களையும், பழங்காலத் துப்பாக்கிகளையும் மட்டுமே ஆயுதங்களாகக் கொண்ட சில ஆயிரம் பழங்குடி மக்கள்தான் உலகப் பேரரசுக்கு எதிராக நிற்கிறார்கள். அவர்கள் ஈக்வடார் நாட்டின் அதிநவீன ராணுவத்தையும் அதன் சிறப்புப் பயிற்சி பெற்ற அமெரிக்க ஆலோசகர்களையும், குள்ளநரிகளையும், எண்ணெய் நிறுவனங்களின் கூலிப்படைகளையும் எதிர்த்து நிற்கின்றனர். ஆனால் இப்படி ஒரு போர் நடைபெற்று வருகின்றது என்பதே அமெரிக்காவில் உள்ள பெரும்பாலான மக்களுக்குத் தெரியவே தெரியாது.

2002, டிசம்பர் மாதத்தில் ஈக்வடாரில் உள்ள ஓர் எண்ணெய் நிறுவனம், தங்கள் தொழிலாளர்கள் சிலரை ஒரு பழங்குடியினத்தைச் சேர்ந்தவர்கள் பணயக் கைதிகளாகப் பிடித்து வைத்திருக்கிறார்கள் என்று குற்றம் சாட்டியது. அத்தோடு இந்தப் பழங்குடியினத்திற்கு அல்கொய்தாவோடு தொடர்பு இருப்பதற்கு வாய்ப்புகள் உண்டு எண்றும் கூறப்பட்டது. ஆனால் இந்த எண்ணெய் நிறுவனம் முறையான எந்த அரசு அனுமதியும் இல்லாமல் அந்தப் பகுதியில் துளையிட்டு எண்ணெய் எடுத்து வந்தது என்பது அதன் நிலைமையை சிக்கலானதாக்கிவிட்டது. இருந்தபோதிலும் இந்த நிறுவனம் தாங்கள் செய்து வந்தது ஆரம்ப கட்ட ஆய்வுகள்தான் என்றும், அதற்குத் தங்களுக்கு எல்லா உரிமைகளும் உள்ளன என்றும் கூறிக்கொண்டது. இக்கூற்று பழங்குடி மக்களால் வன்மையாக மறுக்கப்பட்டது.

இந்த எண்ணெய் நிறுவனத்தின் ஊழியர்கள் எந்த அனுமதியுமின்றி அத்துமீறி நுழைந்தனர் என்பதைப் பழங்குடி மக்களின் பிரதிநிதிகள் சுட்டிக் காட்டினர். போராளிகள் எந்த ஆயு-தமும் ஏந்தியிருக்கவில்லை. எந்தவிதமான அச்சுறுத்தலும் விடுக்கப்படவில்லை. உண்மையில் நடந்தது என்னவென்றால் எண்ணெய் நிறுவனத்தின் ஊழியர்களைப் பழங்குடி மக்கள் தங்கள் கிராமத்துக்கு அழைத்துச் சென்று விருந்தளித்தனர். விருந்தில் சிக்கா என்ற உள்ளூர் பீரும் வழங்கப்பட்டது. விருந்தாளிகள் விருந்தில் திளைத்திருந்தபோது போராளிகளின் தூண்டுதலினால் விருந்தாளிகளின் வழிகாட்டிகள் ‘காணாமல்’ போய் விட்டனர். இருந்தபோதிலும் எண்ணெய் நிறுவன ஊழியர்கள் அடைத்து வைக்கப்படவேயில்லை. அவர்கள் எங்கு வேண்டுமானாலும் போய்க் கொள்ளலாம். அதற்கு அவர்களுக்கு சுதந்திரம் உள்ளது என்று அவர்களிடம் கூறப்பட்டது.

1990-இ,ல் எனது நிறுவனத்தை விற்ற பின்பு, நான் இங்கே வந்து காடுகளைக் காப்பாற்றுவதற்கான போரில் அவர்களுடன் இணைந்து கொள்ள விரும்புவதாக ஷுவார் பழங்குடி மக்களிடம் கூறியபோது, அவர்கள் சொன்ன பதில் இப்போது என் நினைவுக்கு வந்தது. “உலகம் எப்படி இருக்க வேண்டும் என்று நீ விரும்புகிறாயோ அப்படித்தான் இருக்கும்’’ வடக்கே உள்ள நாம் பிரம்மாண்டமான ஆலைகளையும்,

விண்ணை முட்டும் கட்டடங்களையும், கார்களையும் கனவு கண்டோம். இந்தக் கனவு நம் அனைவரையுமே படுகுழியில் தள்ளக்கூடியது என்பதை இப்போதுதான் உணர்ந்து வருகிறோம்.

"அந்தக் கனவை மாற்றுங்கள்,'' ஷுவார்கள் என்னிடம் கூறினார்கள். ஆனால் பத்தாண்டுகளாகப் பல்வேறு தனிநபர்கள் மற்றும் லாப நோக்கமற்ற அமைப்புகளின் பணிக்குப் பின்பும்கூட இந்தக் கனவு மாறவேயில்லை. அது இன்னும் மோசமான நிலையைத்தான் எட்டியுள்ளது.

இறுதியாக நான் காடுகளுக்கு நடுவேயுள்ள ஷெல் நகரத்திற்கு வந்து சேர்ந்த பின் ஒரு கூட்டத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டேன். கிச்சுவா, ஷுவார், அச்சுவார், ஷிவியார், ஸ்ப்பாரோ போன்ற பல பழங்குடியினங்களின் பிரதிநிதிகள் இக்கூட்டத்தில் கலந்து கொண்டிருந்தனர். இவர்களில் பலர் காடுகளினூடே நடந்து வந்திருந்தனர். வேறு சிலர் லாப நோக்கமற்ற அமைப்புகள் ஏற்பாடு செய்திருந்த விமானங்களில் வந்திருந்தனர். சிலர் இறகுகள் செருகப்பட்ட தலைக்கவசங்களும், பாரம்பரிய கில்ட் (Gilt) உடைகளும் அணிந்து முகத்திற்கு வர்ணம் பூசியிருந்தனர். மற்றவர்கள் டி ஷர்ட்டுகளும், ஷூக்களும் அணிந்திருந்தனர்.

எண்ணெய் நிறுவன ஊழியர்களைப் பணயக் கைதிகளாகப் பிடித்து வைத்திருப்பதாகக் குற்றம் சாட்டப்பட்டப் பழங்குடியினத்தின் பிரதிநிதிகள்தான் முதலில் பேச்சைத் தொடங்கினர். எண்ணெய் நிறுவனத்தின் தொழிலாளர்கள் திருப்பி அனுப்பப்பட்ட உடனேயே நூற்றுக்கும் மேற்பட்ட ராணுவ வீரர்கள் அந்தச் சின்னஞ்சிறிய கிராமத்துக்குள் நுழைந்தனர். அது கோன்டா பழுக்கும் பருவம். கோன்டா மரம் பழங்குடி மக்களுக்கு மிகவும் புனிதமானது. வருடத்திற்கு ஒருமுறை மட்டுமே இந்தப் பழம் பழுக்கக்கூடியது. இந்தக் காலம்தான் பறவைகள் ஒன்றிணையும் காலமாகும். இந்தப் பறவையினங்களில் மிக, மிக அரிதான அழிந்துவரும் பறவையினங்களும் அடங்கும். இந்தப் பருவத்தில் கூட்டமாகப் பறந்து வரும் பறவைகளை எளிதாகச் சுட்டு வீழ்த்திவிட முடியும் என்பதால் பழங்குடி மக்கள் கோன்டா பருவத்தில் பறவை வேட்டையைக் கண்டிப்பாகத் தடை செய்திருந்தனர்.

ராணுவ வீரர்கள் எப்படித் தடைகளை மீறினார்கள் என்பது பற்றிய துயரம் தோய்ந்த கதைகளை ஒரு பெண் கூறியபோது அவர்களுடைய வலியையும், வேதனையையும் கூட்டம் முழுவதும் உணர்ந்து கொண்டது. ராணுவ வீரர்கள், பறவைகளை உணவிற்காகவும், விளையாட்டிற்காகவும் சுட்டு வீழ்த்தினார்கள். தோட்டங்களையும் வாழைத் தோப்புகளையும் சூறையாடினர். வயல்களைச் சின்னாபின்னமாக்கினர். ஆறுகளில் வெடி மருந்துகளைப் பயன்படுத்தி மீன் பிடித்தனர். வளர்ப்பு விலங்குகளைத் தின்று தீர்த்தனர். உள்ளூர்

வேட்டைக்காரர்களிடம் இருந்த அத்தனைச் சுடு கருவிகளையும் பிடுங்கிக் கொண்டனர். முறையற்ற கழிப்பிடங்களைத் தோண்டினர். ஆறுகளில் எண்ணெயையும், குப்பையையும் கொட்டி மாசுபடுத்தினர். பெண்கள் பாலியல் ரீதியான தாக்குதலுக்கு உள்ளாக்கப்பட்டனர். கழிவுப் பொருட்களை அவர்கள் அகற்றாததால் பூச்சிகளும், பல்வேறு ஜந்துக்களும் அங்கே படையெடுத்தன.

“எங்கள் முன் இரண்டு வழிகள் இருந்தன. ஒன்று எதிர்த்துப் போரிடுவது அல்லது எல்லாவற்றையும் சகித்துக்கொண்டு பொறுமையாகக் காத்திருப்பது. போருக்கான நேரம் இன்னும் வரவில்லை என்று நாங்கள் தீர்மானித்தோம்’’. ராணுவத்தினரின் அத்துமீறல்களை சமாளிக்கும் முயற்சியாக எப்படி தங்கள் மக்களை உண்ணாநோன்பிருக்கத் தூண்டினோம் என்று அவர் வர்ணித்தார். அதை அவர் உண்ணாநோன்பு என்று சொன்னாலும் அது சுய - விருப்பத்தின் அடிப்படையிலான பட்டினி (voluntary starvation) என்ற விளக்கமே அதில் தொக்கி நின்றது. வயதானவர்களும், குழந்தைகளும் உணவுப் பற்றாக்குறையால் பலவீனத்துக்கும், நோய்க்கும் இலக்காயினர்.

அவர்கள் பின்பு தங்களுக்கு விடுக்கப்படும் மிரட்டல்களையும் ஆசைகாட்ட அளிக்கப்படும் லஞ்சத்தையும் பற்றிப் பேசினர். ஒரு பெண் சொன்னார், “என் மகன் ஆங்கிலமும், ஸ்பானிஷும், பல பழங்குடி மொழிகளும் பேசுகிறான். அவன் ஒரு சுற்றுச்சூழல் நிறுவனத்திற்கு மொழிபெயர்ப்பாளராகவும், வழிகாட்டியாகவும் வேலை செய்து வந்தான். அவர்கள் அவனுக்கு நியாயமான சம்பளம் கொடுத்தார்கள். அதைவிடப் பத்து மடங்கு அதிகச் சம்பளம் கொடுப்பதாக எண்ணெய் நிறுவனம் கூறியது. அவனால் எப்படி மறுக்க முடியும்? இப்போது அவன் தனது பழைய நிறுவனத்தையும், எங்களுக்கு உதவ வந்த மற்றெல்லோரையும் திட்டிக் கடிதங்கள் எழுதுகிறான். தனது கடிதங்களில் எண்ணெய் நிறுவனங்களை நண்பர்கள் என்று குறிப்பிடுகிறான்.’’ அவர் தன் உடலைக் குலுக்கிக் கொண்டார். “அவன் இனிமேலும் எங்களில் ஒருவன் அல்ல…’’

ஒரு பாரம்பரிய மந்திரவாதியின் இறகுத் தலைப்பாகையை அணிந்திருந்த ஒரு வயோதிகர் எழுந்து நின்றார். “எண்ணெய் நிறுவனங்களுக்கு எதிராக எங்களுக்காகப் பேசுவதற்காக நாங்கள் தேர்ந்தெடுத்திருந்த மூன்று பேர் விமான விபத்தில் இறந்து போனார்கள் என்பது உங்களுக்குத் தெரியுமா? அந்த விபத்திற்குக் காரணம் எண்ணெய் நிறுவனங்கள்தான் என்று எல்லோரும் சொல்கிறார்கள். அனால் நான் அதைப் பற்றிப் பேசப் போவதில்லை,. இந்த மூன்று பேரின் மரணமும் எங்கள் அமைப்பில் மிகப்பெரிய ஓட்டையை ஏற்படுத்திவிட்டது. எண்ணெய் நிறுவனங்கள் ஒரு வினாடி கூடத் தாமதிக்காமல் தங்கள் ஆட்களைக் கொண்டு அந்த ஓட்டையை

அடைத்துவிட்டன.’’

இன்னொருவர் ஓர் ஒப்பந்தத்தைப் படித்துக் காட்டினார். அந்த ஒப்பந்தப்படி ஒரு பரந்து விரிந்த பிரதேசம் மூன்று லட்சம் டாலர்களுக்கு ஒரு மரம் அறுக்கும் நிறுவனத்திற்கு விற்பனை செய்யப்பட்டிருந்தது. மூன்று பழங்குடி அதிகாரிகள் அதில் கையெழுத்திட்டு இருந்தனர்.

“ஆனால் அது அவர்களின் உண்மையான கையெழுத்து அல்ல. எனக்கு எப்படித் தெரியும் என்றால் இந்த மூவரில் ஒருவன் எனது சகோதரன். எங்கள் தலைவர்களின் மீது அவநம்பிக்கை ஏற்படுத்துவதும் ஒரு வகையில் அவர்களைப் படுகொலை செய்வதுதான்.’’

இவையனைத்துமே எண்ணெய் நிறுவனங்களுக்குத் துளையிட இன்னமும் அனுமதி கிடைக்காத பகுதிகளில்தான் நடந்து வருகிறது என்பது மிகவும் விநோதமானதாகத் தோன்றுகிறது. எண்ணெய் நிறுவனங்கள் சுதந்திரமாகச் செயல்பட அனுமதிக்கப்பட்ட பகுதிகளில் என்ன நடந்திருக்கும்? இந்த மக்கள் தங்களுக்கு அருகில் வசித்து வந்த பழங்குடி இனங்கள் அழிக்கப்படுவதை நேரடியாகப் பார்த்தவர்கள். பழங்குடி மக்களின் இத்தகைய கூட்டங்கள் சி.என்.என். - ல் காட்டப்பட்டால் என் நாட்டு மக்கள் என்ன நினைப்பார்கள் என்று என்னை நானே கேட்டுக்கொண்டேன்.

இந்தக் கூட்டங்கள் கவனத்தைக் கவர்ந்த அதே நேரத்தில் கவலை அளிப்பனவாகவும் இருந்தன. கூட்ட இடைவேளைகளில் மக்களோடு பேசிக் கொண்டிருந்த போது அமெரிக்கா ஏன் ஈராக்கை அச்சுறுத்துகிறது என்று என்னிடம் அடிக்கடி கேட்கப்பட்டது. நெருங்கி வரும் போர் ஈக்வடாரின் செய்தித்தாள்களில் முன் பக்கங்களை அடைத்துக் கொண்டது. ஈராக் போரைப் பற்றிய செய்திகள் அடர்ந்த காடுகளுக்கு நடுவில் இருந்த இந்த நகரத்தையும் எட்டியிருந்தன. ஈக்வடார் செய்தித்தாள்களில் வெளியிடப்பட்ட செய்திகள் அமெரிக்காவில் பரப்பப்படும் செய்திகளில் இருந்து முற்றிலும் மாறுபட்டிருந்தன. ஈக்வடார் செய்தித்தாள்களில் அமெரிக்க ஜனாதிபதி புஷ் எண்ணெய் நிறுவனங்களுக்குச் சொந்தக்காரராக இருப்பதும், துணை ஜனாதிபதி டிக் சென்னி ஹாலிப்டன் நிறுவனத்தில் தலைமை அதிகாரியாகப் பணியாற்றியது போன்றவை வெளிப்படையாக விவாதிக்கப்பட்டிருந்தன. ஒருபோதும் பள்ளிக்கே சென்றிராத மக்களுக்கு இந்தச் செய்தித்தாள்கள் படித்துக் காட்டப்பட்டன. ஒவ்வொருவரும் இச்செய்திகளில் ஆர்வம் கொண்டிருப்பது போல் தோன்றியது. இந்த அமேசான் மழைக்காட்டில் வாழும் மக்களை வட அமெரிக்காவினர் காட்டுமிராண்டிகள் என்றும், முட்டாள்கள் என்றும் கருதுகின்றனர். ஆனால் உலகப் பேரரசின் இதயத்தைத் துளைக்கக்

கூடிய கேள்விகள் இங்கேதான் எழுப்பப்படுகின்றன.

ஷெல் நகரத்திலிருந்து திரும்பி வரும்போது வழிநெடுக இந்தப் பழங்குடி மக்களுக்கும், அமெரிக்கர்களுக்கும் இடையேயான வேறுபாடுகளைக் குறித்தே சிந்தித்துக் கொண்டிருந்தேன். இந்தப் பழங்குடி மக்களிடம் கற்றுக் கொள்வதற்கு ஏராளமானவை உள்ளன. பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் படிப்பதிலும், செய்தித்தாள்களில் படிப்பதிலும், தொலைக்காட்சிச் செய்திகளில் கேட்பதிலும், நாம் ஏராளமான காலத்தைச் செலவிட்டு வந்தபோதிலும் அவர்கள் கொண்டுள்ள விழிப்புணர்வு நம்மிடம் குறைவாகவே உள்ளது. "பெரும் கழுகு மற்றும் கழுகின் தீர்க்கதரிசனம்'' பற்றி நான் யோசிக்கத் தொடங்கினேன். தீர்க்க தரிசனம் குறித்த கதைகளை இலத்தீன் அமெரிக்கா முழுவதும் பலமுறை கேட்டிருக்கிறேன். இதையொத்த வேறு பல தீர்க்க தரிசனங்கள் உலகம் முழுவதிலும் வழங்கி வருவது எனக்குத் தெரிந்ததுதான்.

உலகின் ஒவ்வொரு நாட்டிலும் இருபத்தோராம் நூற்றாண்டின் தொடக்கம் ஏராளமான மாற்றங்களைக் கொண்டு வரும் என்று கூறும் தீர்க்க தரிசனங்கள் வழங்கி வருவது எல்லோருக்கும் தெரிந்ததுதான். இமயமலையில் உள்ள மடாலயங்களிலும், இந்தோனேஷிய புனிதத் தலங்களிலும்,. அமெரிக்க இந்தியர்களுக்காக ஒதுக்கி வைக்கப்பட்ட இடங்களிலும், அமேசான் காடுகளிலும், ஆண்டிஸ் மலைச்சிகரங்களிலும், மத்திய அமெரிக்காவின் பழம் மாயா நகரங்களிலும் இந்த வகையான தீர்க்க தரிசனங்கள் உலவி வருவதை நான் கேட்டிருக்கிறேன். வரலாற்றில் இது ஒரு தனிச்சிறப்பு பெற்ற நேரம். இந்தக் காலகட்டத்தில் பிறந்த ஒவ்வொருவரும் செய்து முடிக்க வேண்டிய இலட்சியங்கள் உள்ளன என்றும் கூறப்படுவதைக் கேட்டிருக்கிறேன்.

உலகின் பல்வேறு பகுதிகளில் வழங்கிவரும் தீர்க்க தரிசனங்களுக்கிடையே மிகப்பெரிய ஒற்றுமைகள் காணப்படுகின்றன. இந்த தீர்க்க தரிசனங்களில் புதுயுகம், மூன்றாவது மில்லேனியம், அக்வேரியஸ், ஐந்தாவது சூரியனின் ஆரம்பகாலம், பழைய காலண்டர்களின் முடிவு, புதியவற்றின் தொடக்கம் ஆகியவற்றைப் பற்றி பல்வேறு விதங்களில் கூறப்பட்டுள்ளது. சொற்றொடர்கள் வேறுபட்டாலும் அவற்றின் அடிப்படையான பொருள் என்னவோ ஒன்றுதான். 'பெருங்கழுகு மற்றும் கழுகின் தீர்க்க தரிசனம்' இதைப் போன்றதுதான். பழங்காலத்தில் மனித இனம் இரண்டு வெவ்வேறு பாதைகளில் சென்றது. ஒன்று இதயம், உணர்ச்சிகள், மனசாட்சி மற்றும் ஆன்மிகத்தைப் பின்பற்றும் பெருங்கழுகின் பாதை. மற்றது அறிவை மட்டுமே சார்ந்து வாழும் கழுகின் பாதை. 1490- களில் இந்த இரண்டு பாதைகளும் ஒன்று கலக்கும் என்றும், பெருங்கழுகும், கழுகும் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டால் முன்னெப்போதும் கண்டிராத

வகையில் மிகச் சிறந்த சந்ததியை அவற்றால் உருவாக்க முடியும் என்றும் அந்தத் தீர்க்கதரிசனம் கூறுகிறது.

இந்தத் தீர்க்கதரிசனத்தைப் பல்வேறு மட்டங்களில் நாம் ஆய்வு செய்யலாம். இது பழங்குடி அறிவையும், விஞ்ஞானத் தொழில் நுட்பத்தையும் ஒன்றிணைப்பதை வலியுறுத்துகிறது. யின்னையும் (Yin) யாங்கையும் (Yang)* சமநிலைப்படுத்த வேண்டும் என்றும்: வடக்கத்திய மற்றும் தெற்கத்திய பண்பாடுகளுக்கிடையே பாலம் அமைக்கப்பட வேண்டும் என்றும் கூறுகிறது என்றுகூட இதற்குப் பொருள் கூறலாம். இருப்பினும் இது விழிப்புணர்வு குறித்து ஓர் ஆற்றல் வாய்ந்த செய்தியை நம் முன் வைக்கிறது. நம்மையும் உலகத்தையும் பார்க்க பன்மைத்துவம் கொண்ட பல்வேறு விதமான வழிமுறைகள் இன்று நம் கைவசம் இருக்கின்றன. இந்த வழிமுறைகளை உந்து தளமாகக் கொண்டு நமது விழிப்புணர்வின் மட்டத்தை உயர்த்திக்கொள்ள வேண்டும் என்றும் இந்தத் தீர்க்க தரிசனம் நமக்குச் சொல்கிறது. மனித உயிர்கள் என்ற வகையில் மிக விழிப்புணர்வு பெற்ற உயிரினமாக நாம் உண்மையில் உருப்பெற வேண்டும்.

புதுயுகத்தில் மனிதனின் மாண்பு பற்றிய ஏராளமான கேள்விகளுக்கு இந்தப் பெருங்கழுகுத் தத்துவம் பதிலளிக்கிறது. நாம் நமது கண்களைத் திறக்க வேண்டும். நமது நடவடிக்கைகளின் விளைவுகளைப் பார்க்க வேண்டும். ஈராக்கிலும் ஈக்வடாரிலும் கழுகு புரிந்துள்ள சர்வ நாசத்தை உணர்ந்து கொள்ள வேண்டும். உறக்கத்திலிருந்து நம்மை நாமே தட்டியெழுப்பிக் கொள்ள வேண்டும். உலக நாடுகளிலேயே மிகவும் வலிமை வாய்ந்த நாடான அமெரிக்காவின் பழங்குடி மக்களாகிய நாம் நாடகங்களையும், கால்பந்து விளையாட்டுக்களையும் வரவு - செலவுகளையும் பற்றிக் கவலைப்படுவதை நிறுத்திவிட்டு நாம் யார் என்பதைப் பற்றியும், நமது குழந்தைகள் எத்தகைய வாழ்க்கை வாழ வேண்டும் என்று விரும்புகிறோம் என்பதைப் பற்றியும் சிந்திக்கத் தொடங்க வேண்டும். கேள்விகள் கேட்காமலிருப்பதன் விளைவு நிச்சயம் அபாயகரமானதாகத்தானிருக்கும்!

[1] Chris Jochnick, “”Perilous Prosperity,’’ New Internationalist, June 2001, http://www.newint.org/issue335/perilous.htm.

# 35

# சாயம் வெளுக்கும்போது...

2003-இல் அமெரிக்கா இரண்டாவது முறையாக ஈராக்கைத் தாக்கியது. பொருளாதார அடியாட்களால் ஈராக்கில் வெற்றியடைய முடியவில்லை. அடுத்து செயலில் இறங்கிய குள்ளநரிகளும் தோல்வியையே தழுவினர். எனவே ஆயிரக்கணக்கான அமெரிக்க இளைஞர்களும், யுவதிகளும் கொல்வதற்கும், கொல்லப்படுவதற்கும் ஈராக்கியப் பாலைவனங்களுக்கு அனுப்பப்பட்டனர். இந்த ஆக்கிரமிப்பு ஒரு முக்கியமான கேள்வியை எழுப்பியது. சவூதி அரச குடும்பத்தைப் பொறுத்தவரை இத்தாக்குதலின் விளைவுகள் என்னவாக இருக்கும்? சவூதி அரேபியாவைவிட ஈராக்கில் அதிக எண்ணெய் வளம் உள்ளதாகப் பல மதிப்பீடுகள் கூறுகின்றன. எனவே ஈராக் நமது கட்டுப்பாட்டில் இருக்கும் பட்சத்தில் சவூதிகளோடு செய்து கொண்டுள்ள ஒப்பந்தத்தை ஏன் மதித்து நடக்க வேண்டும்?

சதாமின் வீழ்ச்சியும், நொரீகாவின் வீழ்ச்சியைப் போலவே சமநிலையை மாற்றக்கூடியதுதான். பனாமாவில் நம் கைப்பொம்மைகளைப் பதவியில் அமர்த்திய பிறகு பனாமாக் கால்வாயை நமது முழுக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்துவிட்டோம். கார்ட்டரும், டோரிஜோஸும் செய்து கொண்ட ஒப்பந்தம் குப்பைத்தொட்டிக்கு அனுப்பப்பட்டுவிட்டது. அதேபோல் ஈராக்கை நமது பிடிக்குள் கொண்டு வந்துவிட்ட பிறகு ஓபெக்கை உடைப்பதுதான் அடுத்த இலக்காக இருக்குமா? சவூதி அரச குடும்பத்தின் முக்கியத்துவம் குறைவதற்கு வாய்ப்புகள் உள்ளனவா? நமது வலிமை அனைத்தையும் ஆப்கானிஸ்தானில் அல் கொய்தாவை ஒழிப்பதில் செலவழிப்பதற்குப் பதில் ஏன் புஷ் ஈராக்கைத் தாக்கினார் என்பது போன்ற கேள்விகளைச் சில பண்டிதர்கள் எழுப்புகிறார்கள். ஆனால் எண்ணெய்க் குடும்பத்திலிருந்து வந்த புஷ்ஷின் அரசு உலக எண்ணெய் வளமனைத்தையும் தன் பிடியில் கொண்டு வருவதற்கும், கொள்ளை லாபம் அடிப்பதற்கும்தானே முதலிடம் கொடுக்கும்? தீவிரவாதிகளுடனான போர் அவர்களுக்கு இரண்டாம்பட்சம் தானே?

எது எப்படியிருந்தாலும் இதனால் இன்னொரு பின்விளைவும் ஏற்படுவதற்கான வாய்ப்புகள் இருந்தன. ஓபெக் தன்னை நிலை நிறுத்திக்கொள்ள விரும்பலாம். அமெரிக்கா ஈராக்கை ஆக்கிரமித்திருக்கும் பட்சத்தில் எண்ணெய் விலையை அதிகரிப்பதாலோ, குறைப்பதாலோ மற்ற எண்ணெய் வள நாடுகள் இழக்கப் போவது பெரிதாக ஒன்றுமில்லை. இந்தச் சூழல் இன்னொரு முக்கியமான காரணியுடன் இணையும் போது இவ்வளவு சிரமப்பட்டு

நிறுவன - அதிகார வர்க்கம் கட்டியெழுப்பியுள்ள இந்த அமைப்புமுறை முற்றிலும் தகர்ந்து சிதறிப் போய்விடும். முதல் உலகு தழுவிய பேரரசின் அழிவு அதிலிருந்துதான் ஆரம்பமாகும்.

டாலரே உலகின் ஏற்றுக் கொள்ளப்பட்ட அன்னியச் செலாவணியாக இருந்து வருவதும், அதை அச்சடிக்கும் உரிமை அமெரிக்காவிடம் இருப்பதுமே இந்நாடு உலகப் பேரரசாக நீடித்திருப்பதற்கு அடிப்படையான காரணமாகும். இதன் காரணமாகத்தான் ஈக்வடார் போன்ற நாடுகளுக்கு அவர்களால் திருப்பிச் செலுத்த முடியாத அளவிற்குப் பணம் கொடுக்கிறோம். அவர்கள் அக்கடன்களைத் திருப்பிச் செலுத்த வேண்டுமென்பது நமது எதிர்பார்ப்பும் அல்ல. அவர்கள் கடன்பட்டவர்களாக நீடித்திருப்பதே நமது ஆதிக்கத்தை நிலைநாட்டுகிறது. அளவிற்கு அதிகமான மோசடியான கடன்களை எந்தவொரு கடன்காரனாலும் திருப்பிச் செலுத்த முடியாது. இம்மாதிரியான ஒரு சூழலில் நம்முடைய நிதிவளத்தை நாமே அழித்து விடக்கூடிய ஒரு வாய்ப்பு நேரிடும். ஆனால் நாம் சாதாரணச் சூழலில் இல்லை. செலாவணியை நாம் அச்சிடுகிறோம். தங்கத்தை அடிப்படையாகக் கொள்ளாமல் - எந்தப் பின்புலமும் இல்லாமல் - தன் விருப்பம் போல் அமெரிக்கா நாணயங்களை அச்சிட்டுக் கொள்கிறது. உலகம் நமது பொருளாதாரத்தின் மீதும், நமது திறமைகளின் மீதும் கொண்டுள்ள நம்பிக்கையே டாலர் ஏற்றுக் கொள்ளப்பட்ட நாணயமாக இருப்பதற்குக் காரணமாயுள்ளது.

உலகம் முழுவதும் ஏற்றுக் கொள்ளப்படும் ஒரு நாணயத்தைக் கொண்டிருப்பதே நமது மிகப்பெரிய பலமாகும். திரும்ப வரவே வராத இன்னும் ஏராளமான கடன்களை நம்மால் தொடர்ந்து கொடுத்துக் கொண்டிருக்க முடியும். நாமும் பெரும், பெரும் கடன்களைப் பெற்றுக்கொள்ளவும் முடியும். 2003-ஆம் ஆண்டு அமெரிக்காவின் தேசியக் கடன் ஆறு ட்ரில்லியன் டாலரைக் கடந்தது. அதே ஆண்டில் அது ஏழு ட்ரில்லியன் டாலரை எட்டும் என்று எதிர்பார்க்கப்பட்டது. அதாவது ஒவ்வொரு அமெரிக்கனும் 24,000 டாலர் கடன்பட்டுள்ளான்.[1] இந்தக் கடனில் பெரும்பகுதி சீனா மற்றும் ஜப்பானுக்குத் தர வேண்டியதாகும். அமெரிக்கக் கருவூலத் துறையின் பங்குகளை இந்த நாடுகளுக்கு விற்பனை செய்ததன் மூலம் இக்கடன் தொகை திரட்டப்பட்டது. மின்சாதனங்கள், கம்ப்யூட்டர்கள், வாகனங்கள், வீட்டு உபயோகப் பொருட்கள், உடைகள் போன்ற பொருட்களை விற்பனை செய்ததன் மூலம் இந்நாடுகள் இந் நிதியைத் திரட்டியுள்ளன.

உலகம் ஒப்புக்கொள்ளும் பொது நாணயமாக டாலர் இருந்து வரும்வரை இக்கடன்களால் நிறுவன - அதிகார வர்க்கத்திற்குப் பெரிய பாதிப்பு எதுவும் ஏற்படப் போவதில்லை. ஆனால் டாலருக்கு மாற்றாக இன்னொரு நாணயம் அரங்கில் தோன்றும் பட்சத்தில், நமக்குக் கடன் கொடுத்தவர்களில் சிலர் (உ.ம். ஜப்பான் அல்லது சீனா) தங்கள்

கடன்களைத் திருப்பிக் கேட்க முடிவு செய்தால் சூழ்நிலை பயங்கரமானதாக மாறிவிடும். அமெரிக்கா திடீரென்று மிகப்பெரிய நெருக்கடியில் சிக்கிக் கொள்ளும்.

டாலருக்கு மாற்றாக இன்னொரு நாணயம் உருவாவது என்பது இப்போது அப்படியொன்றும் கற்பனையான ஒன்று அல்ல. 2002 ஜனவரி 1-இல் யூரோ[2] சர்வதேச நிதியரங்குகளில் நுழைந்தது. நாளுக்கு நாள் அதன் பலமும், மதிப்பும் கூடி வருகிறது. இந்த யூரோ ஒபெக்குக்கு ஒரு வாய்ப்பை அளிக்கிறது. ஈராக் தாக்குதலுக்குப் பதிலடி கொடுக்க அல்லது வேறு ஏதாவது காரணங்களுக்காக அமெரிக்காவை எதிர்த்து நிற்க ஒபெக் நாடுகள் முடிவு செய்தால் அவற்றுக்கு யூரோ முக்கியமான ஆயுதமாக இருக்கும். டாலருக்கு பதில் யூரோவைப் பயன்படுத்த ஒபெக் முடிவு செய்தால், உலகப் பேரரசின் அஸ்திவாரமே ஆட்டம் கண்டுவிடும். அதோடு நமக்குக் கடன் கொடுத்தவர்களில் ஓரிருவர் தனது கடன்களை நாம் யூரோவில் திருப்பித் தரவேண்டும் என்று கேட்கத் தொடங்கினால் படுமோசமான பின்விளைவுகளை நாம் சந்திக்க நேரிடும்.

2003- ஆம் ஆண்டு, ஏப்ரல் 18-ம் தேதி ‘புனித வெள்ளி’ தினம். அன்று காலை என் வீட்டிலிருந்து சற்றுத் தொலைவிலிருந்த அலுவலகத்திற்குச் சென்றேன். உண்மையில் அது அலுவலகமாக மாற்றப்பட்டிருந்த ஒரு பழைய கார் நிறுத்துமிடம். கம்ப்யூட்டர் மேசையில் உட்கார்ந்து ‘நியூயார்க் டைம்ஸ்’ இணையதளத்தில் நுழைந்தபோது இந்த எண்ணங்களே என் மனதில் நிறைந்திருந்தன. கம்ப்யூட்டர் இயங்கத் தொடங்கியவுடன் அதன் திரையில் ஒரு தலைப்புச் செய்தி பளிச்சிட்டது. அந்த வினாடியே சர்வதேச நிதியும், யூரோவும், தேசியக் கடனும் என் மனதிலிருந்து மாயமாக மறைந்துவிட்டன. பொருளாதார அடியாளாக வேலை செய்த பழைய நாட்கள் மனத்திரையில் தோன்றின. அந்தத் தலைப்பு “ஈராக்கைப் புனரமைப்பதற்கான ஒரு மாபெரும் ஒப்பந்தத்தை அமெரிக்கா பெக்டெல் நிறுவனத்திற்கு வழங்கியுள்ளது.’’[3]

“ஈராக்கைப் புனரமைக்கும் விரிவான திட்டத்தில் முதல் பெரும் ஒப்பந்தத்தை புஷ் நிர்வாகம், சான்பிரான்ஸிஸ்கோவின் பெக்டெலுக்கு வழங்கியுள்ளது’’ என்று இந்தக் கட்டுரை கூறியது. அதே கட்டுரையில் “அமெரிக்காவில் பெரும் செல்வாக்கு செலுத்திவரும் பன்னாட்டு நிதி நிறுவனம் மற்றும் உலக வங்கியோடு ஈராக்கியர்களும் இணைந்து தங்கள் நாட்டை மாற்றியமைப்பதற்குப் பணியாற்றுவார்கள்’’ என்று எழுதப்பட்டிருந்தது.

பெரும் செல்வாக்கு! இது மிகவும் குறைத்து மதிப்பிடுவதாகும். “பெக்டெல் நிறுவனத்திற்கு வாஷிங்டனிலும் ஈராக்கிலும் தொடர்புகள் உள்ளன’’ என்ற தலைப்பில் டைம்ஸில் முன்பு ஒரு கட்டுரை வெளிவந்திருந்தது. நான் இந்த இரண்டு கட்டுரைகளையும் இணைத்துப்

பார்த்தேன். முந்தைய கட்டுரையில் கூறப்பட்ட தகவல்களே திரும்பவும் வெளியிடப்பட்டிருந்த பல பத்திகளை விட்டுவிட்டுக் கீழ்க்கண்ட இடத்திற்கு வந்து சேர்ந்தேன்:

பெக்டெல் நிறுவனம் தேசியப் பாதுகாப்பு அமைப்புடன் நீண்ட நெடிய உறவு கொண்டுள்ளது. இந்நிறுவனத்தின் தலைமை நிர்வாகியான ஜார்ஜ் பி.ஷூல்ஸ், ரீகன் அரசில் உள்துறைச் செயலாளராக இருந்தார். இன்னொரு உள்துறைச் செயலாளரான கேஸ்பர் டபிள்யூ. வெய்ன் பர்கரும் இந்நிறுவனத்தில் ஷூல்ஸுடன் இணைந்து பணியாற்றியவராவார். ஷூல்ஸ் இப்போதும் பெக்டெலுக்கு மூத்த ஆலோசகராகப் பணியாற்றி வருகிறார். இந்த ஆண்டு பெக்டெலின் தலைமை நிர்வாகியான ரிலே பி.பெக்டெலை ஜனாதிபதியின் ஏற்றுமதிக் கவுன்சிலில் பணியாற்றும்படி புஷ் கேட்டுக்கொண்டார்[4]

இந்தக் கட்டுரைகளில் கூறப்பட்டிருப்பதுதான் நமது நவீன வரலாறு. உலகப் பேரரசின் சுருக்கமான கதை. கிளேடின் முப்பந்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு என்னை எந்த வேலைக்குத் தயார் செய்தாளோ, அதன் விளைவுகள் தான் தற்போது காலைப் பத்திரிகைகளில் இடம் பெற்றுள்ளன. உலகத்தில் உள்ள ஒவ்வொரு மனிதனையும் தன் பிடியின் கீழ் கொண்டு வரும் நிறுன- அதிகார வர்க்கம் தனது பாதையில் எவ்வளவு தூரம் முன்னேறியுள்ளது என்பதை இக்கட்டுரைகள் காட்டுகின்றன.

இந்தக் கட்டுரைகள் நமது ராணுவம் ஈராக்கில் ஏற்படுத்திய பேரழிவுகளிலிருந்து அந்த நாட்டைப் புனரமைப்பதற்காகச் செய்யப்பட்டு வரும் ஒப்பந்தங்களைப் பற்றியதாகும். இந்தச் செய்திகள் ஏதோ ஒரு விதத்தில் சவூதி அரேபியக் கருப்புப் பண விவகாரத்தை (சாமா) நினைவுபடுத்தின. அந்தப் பாலைவன முடியரசில் அமெரிக்கப் பொறியியல் கட்டுமான நிறுவனங்களும், பெட்ரோலியத் துறையும் இணைந்து செயல்பட்டிருந்தன. அதே வீச்சில் சாமா புவியியல் சார்ந்த அரசியலை மாற்றியமைக்கக்கூடிய ஒரு புதிய கூட்டணியை ஏற்படுத்தியது. சவூதி அரச குடும்பத்தின் மேலாதிக்கம் நிலைநாட்டப்பட்டதோடு அவர்கள் நமக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும் என்பதையும் அது உறுதிப்படுத்தியது.

இந்தக் கட்டுரைகளைப் படித்தபோது சவூதிகளைப் போலவே சதாம் உசேனும் வளைந்து கொடுத்திருந்தால் அவர்தான் இப்போது ஈராக்கை ஆண்டு கொண்டிருப்பார் என்பது எத்தனை பேருக்குத் தெரிந்திருக்கும் என்று நான் வியப்படைந்தேன். அவரது ஏவுகணைகளும், இரசாயன ஆலைகளும் பத்திரமாக இருந்திருக்கும். சொல்லப் போனால் நாமே அவருக்காக மேலும் சிலவற்றைக் கட்டித் தந்திருப்போம். நம்மவர்கள்தான் இந்த ஆலைகளுக்கும் ஆயுதங்களுக்கும் பொறுப்பானவர்களாக இருந்திருப்பார்கள். சவூதி அரேபியாவைப்

போலவே ஈராக்கும் இனிமை நிறைந்ததாக இருந்திருக்கும். இன்று வரை முதன்மையான செய்தி ஊடகங்கள் இந்த உண்மையை வெளியிடுவதைத் தவிர்த்தே வருகின்றன. ஆனால் இன்று அது வெளிவந்துவிட்டது. இந்தக் கட்டுரைகளில் கூறப்பட்டுள்ள செய்திகள் அரைகுறையாகவும், தெளிவற்றும் உள்ளன. இருப்பினும் உண்மை ஏதோ ஒரு விதத்தில் வெளிச்சத்திற்கு வரத் தொடங்கிவிட்டது என்பதையே இக்கட்டுரைகள் காட்டுகின்றன. ஒருவேளை 'நியூயார்க் டைம்ஸ்' ஒரு மாறுபட்ட நிலையை எடுக்கிறதோ என்ற சந்தேகம் தோன்றியது. எனவே சி.என்.என்.இணையதளத்துக்குச் சென்றேன். அதிலும் இதே தலைப்பு-தான். "ஈராக் ஒப்பந்தத்தை பெக்டெல் கைப்பற்றியது."

சி.என்.என் கீழ்க்கண்ட விஷயத்தைப் புதிதாகக் குறிப்பிட்டிருந்தது:

இதே ஒப்பந்தத்தைப் பெறுவதற்காக வேறு பல நிறுவனங்களும் போட்டியிட்டன என்று கூறப்பட்டது. இவற்றில் ஹாலிபர்டன் நிறுவனத்தின் ஹெலாக் பிரவுன் அன்டு ரூட் கிளையும் ஒன்று. இதில்தான் உதவி ஜனாதிபதி டிக் ஜென்னி ஒரு காலத்தில் தலைமை நிர்வாக அதிகாரியாகப் பணியாற்றினார்... ஹாலிபர்டன் அந்த ஒப்பந்தத்தைப் பெற்றுவிட்டது. அதன் மதிப்பு ஏழாயிரம் கோடி டாலராக இருக்கும் என்றும், இரண்டு ஆண்டுகளுக்கு அதன் பணி நீடிக்கும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது. ஈராக்கின் பெட்ரோலியம் தொடர்பான அமைப்புகளின் உள்கட்டுமானத்தை உடனடியாகச் சீரமைப்பதுதான் இந்த ஒப்பந்தத்தின் அடிப்படைப் பணியாகும்.[5]

உலகப் பேரரசை நோக்கிய பயணம் தொடர்பான தகவல்கள் உண்மையில் வெளியே கசியத் தொடங்கின. ஆனால் கடன், ஏமாற்று, அடிமைப்படுத்துதல், சுரண்டுதல், உலகம் முழுவதும் உள்ள மக்களின் வாழ்வைத் தனது அசுரப் பிடிக்குள் கொண்டு வரும் முயற்சி போன்ற உலகப் பேரரசின் தந்திரங்கள் பற்றிய விவரங்கள் எதுவுமே இக்கட்டுரைகளில் வெளியிடப்படவில்லை. ஈராக் தாக்குதல் ஓர் அவமானகரமான வரலாற்றின் தொடர்ச்சிதான் என்பதைத் தொட்டுக்கூடக் காட்டவில்லை. உலகப் பேரரசின் புதிய பயங்கரமான பரிணாமமும், நுணுக்கமும் இக்கட்டுரைகளில் வெளிப்படுத்தப்படவேயில்லை. ஆனால் இத்தனை குறைகளையும் கடந்து உண்மை தயக்கத்துடன் மெதுவாகக் கசிந்து கொண்டிருந்தது.

தயக்கத்துடன் கசிந்து வரும் இந்த உண்மை என்னைச் செயல்படத் தூண்டியது. நான் செய்ய வேண்டிய ஒரு காரியத்தைப் பல ஆண்டுகளாகத் தள்ளிப் போட்டு வருவதை அது நினைவுபடுத்தியது. நான் மிக நீண்ட காலமாகத் தள்ளிப் போட்டுவிட்டேன். முதல் பயணமாக இந்தோனேஷியாவிற்குப் புறப்படுவதற்கு முன்பே இந்தக் குற்ற உணர்ச்சி என் மனதில் குடியேறிவிட்டது. அது இன்று வரை என்னைப் பிசாசு போல் ஆட்டி வைத்துக்கொண்டிருக்கிறது.

இந்தச் சந்தேகங்களும், வலியும் குற்ற உணர்ச்சியும் இல்லாமல் இருந்திருந்தால் என்னால் வெளியேறி இருக்கவே முடியாது. மற்றவர்களைப் போலவே நானும் புதைந்துதான் போயிருப்பேன்.

இந்தக் கட்டுரைகளின் தலைப்புகள் பெரும் நிறுவனங்களுக்கும், பன்னாட்டு வங்கிகளுக்கும், அரசாங்கங்களுக்கும் இடையேயான கூட்டு பற்றி கோடிட்டுக் காட்டுவது போல் தோன்றுகிறது. ஆனால் இத்தலைப்புகள் மெய்ன் வெளியிட்ட என் தகுதிக்குறிப்பு- போல உண்மையின் மேல் பகுதியைக் கூடத் தொடவில்லை. ஒரு நாட்டை நம்முடையதைப் போல் மாற்றியமைப்பதற்குப் பெரும் கட்டுமான நிறுவனங்கள் ஆயிரக்கணக்கான கோடி டாலர்கள் பெற்று வருகின்றன என்பதற்கும் உண்மைக்கும் மிகக் குறைவான தொடர்பே உள்ளது. ஈராக்கிய மக்களுக்கு நம்மைப் போல் வாழும் ஆசை கொஞ்சம்கூட இல்லை என்பது வேறு விஷயம்.

இந்த அமைப்பின் தவறுகளைச் சரி செய்ய வேண்டும் என்று நாம் விரும்பினால், அதற்குக் காரணமான நபர்களைத் தூக்கியெறிந்து விட்டால் போதும் என்பது போன்ற தொனியை இந்தக் கட்டுரைகள் கொண்டுள்ளன. இது போன்ற கட்டுரைகளின் காரணமாகத்தான் சதிவேலை பற்றிய கோட்பாடுகள் தோன்றுகின்றன. இதன் காரணமாக வரலாறு பற்றிய நமது கண்ணோட்டம் மூன்றாம் தரமானதாக மாறிவிடுகிறது. தொலைக்காட்சி பார்ப்பதோடு அனைத்தும் மறந்து போய் விடுகிறது. எல்லாவற்றையும் ‘அவர்கள்’ பார்த்துக் கொள்வார்கள். நாடு என்ற கப்பலின் பயணத்தில் சிறிய குளறுபடிகள் நேர்ந்தாலும் காலப்போக்கில் அது சரியான பாதைக்குத் திருப்பப்பட்டு விடும்; இந்தச் செயலைச் செய்து முடிப்பதற்கு நாம் அடுத்த தேர்தல் வரை காத்திருக்க வேண்டி வரலாம் ; ஆனால் இறுதியில் எல்லாம் நல்லபடியாக முடிந்துவிடும் என்ற பொய்த் திருப்தியோடு நின்று விடுகிறோம்.

ஆனால் உலகப் பேரரசின் உண்மை முகம் நாம் நினைப்பதைவிட பலமடங்கு கொடூரமானது. இறுதியில் அது தன்னைத்தானே அழித்துக்கொள்ளவும் கூடியது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகப் போராடி இறுதியில் மனிதன் கட்டியமைத்துள்ள ஓர் உன்னதமான பொருளாதார அமைப்பு இது என்று நம்பவே நாம் விரும்புகிறோம். உண்மையைவிடப் பொய்தான் நமக்கு மகிழ்ச்சியளிக்கிறது. எல்லாப் பொருளாதார வளர்ச்சியும் மனிதகுலத்திற்கு நன்மைதான் செய்யக்கூடியது; பொருளாதார வளர்ச்சி அதிகரிக்க, அதிகரிக்க மக்கள் நலனும் அதிகரிக்கும்; இறுதியில் ஆரம்பகட்டப் பிரச்சனைகள் களையப்பட்டு வளர்ச்சியின் விளைவுகள் எல்லாமே ஏற்றுக்கொள்ளக் கூடியனவாகவும், நியாயமானவையாகவும் ஆகிவிடும் என்று நாம் ஒருவரை ஒருவர் நம்ப வைத்துக் கொள்கிறோம். பொருளாதார வளர்ச்சி என்ற தீயைக் கிளறி விடுவதில் திறமை பெற்றவர்கள் உரிய

முறையில் பரிசளிக்கப்பட வேண்டும். அதே நேரத்தில் உலகின் விளிம்புப் பகுதிகளில் பிறந்தவர்கள் சுரண்டலுக்கு உட்படுத்தப்பட வேண்டும்.

எல்லாவிதமான கொள்கைகளையும் நியாயப்படுத்த இந்தக் கோட்பாடு பயன்படுத்தப்படுகிறது. ஈராக்கிலும், கொலம்பியாவிலும், பனாமாவிலும், ஈரானிலும் அப்பாவி மக்கள் கொன்று குவிக்கப்படுவதும், பெண்கள் கற்பழிக்கப்படுவதும் நியாயப்படுத்தப்படுகிறது. பொருளாதார அடியாட்களும், குள்ளநரிகளும், ராணுவங்களும், தாங்கள் சித்திரவதை செய்துவரும் மக்களின் நன்மைக்காகத்தான், அவர்களது பொருளாதார வளர்ச்சிக்கு உதவுவதற்காகத்தான், இக்கொடுமைகளை எல்லாம் செய்கிறார்கள் என்று கூறப்படுகிறது. பொருளாதார முன்னறிவிப்புகள், பொருளாதாரக் கணிதவியல் புள்ளி விவரங்கள் போன்ற ஒருதலைச் சார்பான ‘அறிவியல் ஆய்வு’ கருவிகளும் இக்கொடுமைகளுக்குத் துணை போகின்றன. நீங்கள் ஒரு நகரத்தைக் குண்டு வீசி அழித்துவிட்டு, பின்பு அதைத் திரும்பவும் கட்டினால் புள்ளிவிவரங்கள் பொருளாதார வளர்ச்சி உச்சக்கட்டத்தை எட்டி விட்டதாகத்தான் காட்டும்.

நமது வாழ்க்கையே ஒரு பொய்மையாக உள்ளது. நாம் உருவாக்கியுள்ள வெளிப்பூச்சு உள்ளிருக்கும் புற்றுநோய்க் கட்டிகளைக் காணவிடாமல் மறைத்து வருகிறது. புள்ளிவிவரங்கள் என்னும் எக்ஸ் கதிர்களால் இந்த வெளிப்பூச்சை விலக்கி உள்ளிருக்கும் உண்மைகளைத் தேடினால் நாம் பேரதிர்ச்சி அடைவோம். உலக வரலாற்றிலேயே மிகவும் பலம் வாய்ந்த செல்வச் செழிப்பு மிக்க இந்தப் பேரரசில்தான் கற்பனைக்கு எட்டாத அளவிற்குத் தற்கொலைகளும், கொலைகளும் நிகழ்ந்து வருகின்றன என்ற பயங்கரமான உண்மை தெரிய வரும். போதைப் பழக்கமும், மண விலக்குகளும், குழந்தைகள் பாலியல் ரீதியாகச் சீரழிக்கப்படுவதும் நமது சமூகத்தில் எவ்வளவு தூரம் பரவியுள்ளன என்பதை நாம் அறிந்து கொள்வோம். இந்தக் காயங்கள் இடைவிடாமல் பெருகி வருகின்றன. நாம் ஒவ்வொருவரும் அதன் வலியை உணருகிறோம். ஆனால் நமது வாயை நாமே பொத்திக்கொண்டு சத்தம் வராமல் தடுத்து விடுவதால் நமது வேதனையை யாரும் உணருவதில்லை.

இந்தக் கொடுமைகள் அனைத்திற்கும் சதிவேலையே காரணம் என்று யார் மீதாவது பழி போட முடியும் என்றால் அது நன்றாகத்தான் இருக்கும். ஆனால் அது முடியாது. நிறுவன - அதிகார வர்க்கத்தின் நலன்களைக் காப்பாற்றுவதற்காகத்தான் இந்தப் பேரரசு உள்ளது. நிறுவன - அதிகார வர்க்கம் என்பது நாம்தான். நாம்தான் இதை நடைமுறையில் சாத்தியமாக்கியவர்கள். நம்மில் பெரும்பாலானவர்கள் இந்த நிறுவனங்களிலும், வங்கிகளிலும் பணிபுரிவதால் அல்லது ஏதோ

ஒரு விதத்தில் அதைச் சார்ந்து இருப்பதால் நிறுவன - அதிகார வர்க்கத்தை எதிர்த்து நிற்பது நமக்குக் கடினமானதாக இருக்கிறது. நமக்கு உணவளிப்பவரின் கையைக் கடிக்க நம்மால் முடிவதில்லை.

கம்ப்யூட்டர் திரையில் தெரிந்த தலைப்புச் செய்திகள் மேலும் பல கேள்விகளை என்னுள் எழுப்பின. உங்களுக்கு வீடும், காரும், உணவும், உடைகளும், மற்ற வசதிகளும் அளித்துவரும் ஓர் அமைப்பு முறையை நீங்கள் எப்படி எதிர்த்து நிற்பீர்கள்? ஆனால் அந்த அமைப்பு முறை தினமும் 25,000 பேர்களைப் பட்டினி போட்டுக் கொன்று வருகிறது. லட்சோப லட்சம் மக்கள் உங்களை வெறுக்கிறார்கள். குறைந்தபட்சம் உங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களால் நடைமுறைப்படுத்தப்படும் கொள்கைகளை வெறுக்கிறார்கள் என்பதெல்லாம் உங்களுக்குத் தெரிய வந்தாலும் உங்களால் எப்படி இந்த அமைப்பு முறையை வெறுக்க முடியும்? இந்த அமைப்பின் அடிப்படைத் தத்துவங்கள் தன்னைத்தானே அழித்துக் கொள்ளக் கூடியனவாக உள்ளன என்ற சந்தேகம் உங்களுக்கு இருந்தாலும்கூட, நீங்கள் எப்படி இந்த அமைப்பை எதிர்கொள்ளும் தைரியத்தை வரவழைத்துக் கொள்வீர்கள்? இன்னொரு கப் காபி அருந்தும் நோக்கத்துடன் நான் எழுந்து வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினேன்.

கதவருகே ‘பாம்பீச் போஸ்ட்’ பத்திரிகை கிடந்தது. அதிலும் பெக்டெல் பற்றிய கட்டுரை வெளி வந்திருந்தது. ஆனால் இப்போது தான் நான் அதன் தேதியை கவனித்தேன். ஏப்ரல் 18. குறைந்தபட்சம் நியூ இங்கிலாந்தில் அது மறக்க முடியாத தினம். புரட்சிப் போரின் பால் ஆழ்ந்த அனுதாபம் கொண்ட எனது பெற்றோர்களாலும் லாங்ஃபெல்லோவின் கவிதையாலும் அந்தத் தேதி என் நினைவுகளில் ஆழமாகப் பதிந்து விட்டிருந்தது.

கவனியுங்கள் என் குழந்தைகளே!

எழுபத்தைந்து ஏப்ரல் பதினெட்டில்

நள்ளிரவில் பால் ரிவெரி குதிரையில்

பாய்ந்தோடும் ஒலியைக் கேளுங்கள்.

அந்தப் புகழ்பெற்ற நாளையும் கிழமையையும்

நினைவில் கொண்டிருக்கும்

ஒருவர்கூட இன்று உயிரோடில்லை.

இந்த ஆண்டு புனித வெள்ளி, பால் ரிவெரி குதிரைப் பயணம் மேற்கொண்ட ஆண்டு தினத்தன்று வந்திருந்தது. இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு நியூ இங்கிலாந்து நகரங்களின் இருண்ட தெருக்களில் தங்கள் தொப்பிகளை வீசி ஆட்டியபடி பிரிட்டிஷார் வருகிறார்கள் என்று கூச்சலிட்டபடி குதிரையில் பாய்ந்து சென்ற

வெள்ளி வேலை செய்யும் ஆசாரியின் உருவம் என் கண் முன்னால் தோன்றியது. பிரிட்டிஷார் படையெடுத்து வரும் செய்தியை மக்களுக்கு அறிவிப்பதற்காக ரிவெரி தன் உயிரைப் பணயம் வைத்தார். விசுவாசம் மிக்க அமெரிக்கர்கள் விரைந்து செயல்பட்டனர். பேரரசைத் தடுத்து நிறுத்தினர்.

அவர்களுக்கு அந்த லட்சிய வேகத்தை அளித்தது எது? சுதந்திர வேட்கை கொண்ட அமெரிக்கத் தலைவர்களில் பலர் பணக்காரர்கள். தங்களுக்குரியது அனைத்தையும் பணயம் வைக்க அவர்களைத் தூண்டியது எது? உணவளிக்கும் கரத்தைக் கடிக்கத் தூண்டியது எது? ஒவ்வொருவருக்கும் தனிப்பட்ட முறையில் பல காரணங்கள் இருந்தன. ஆனால் அவையனைத்தையும் ஒன்றிணைக்கும் ஒரு சக்தி கண்டிப்பாக இருந்திருக்க வேண்டும். அதுதான் பல தனித்தனி நெருப்புகளை ஒரு எரிமலையாக மாற்றியிருக்க வேண்டும்.

அந்த சக்தி எது என்று என்னால் கண்டு கொள்ள முடிந்தது; சொற்கள்; பிரிட்டிஷ் பேரரசு சுயநலம் மிக்கது. தன்னைத்தானே அழித்துக் கொள்ளக்கூடியது என்ற உண்மை உரிய முறையில் மக்களுக்குச் சொல்லப்பட்டதால்தான் இந்த நெருப்பு கிளர்ந்தெழுந்தது. டாம்பெய்ன், தாமஸ் ஜெபர்சன் போன்றவர்களின் நா வன்மையே மூடிக் கிடந்த இதயங்களையும், மூளையையும் திறந்துவிட்டது. குடியேற்றவாதிகள் கேள்வி கேட்கத் தொடங்கினார்கள். அந்தப் போக்கில் எல்லா பொய்மைகளுக்கும் முடிவு கட்டும் உண்மைகளைக் கண்டு கொண்டார்கள். பிரிட்டிஷ் பேரரசு எப்படித் தங்களை மோசடி செய்தது, அடிமைப்படுத்தியது என்பதை அவர்கள் புரிந்துகொண்டார்கள்.

இங்கிலாந்துக்கு இயற்கை வளங்களை அனுப்பி வைப்பதைத் தான் ஓர் உன்னதமான அமைப்புமுறை என்றும், நல்வாழ்வுக்கு ஊற்றுக்கண் என்றும் பிரிட்டிஷ் பேரரசு கூறி வருகிறது என்பதை அவர்கள் கண்டு கொண்டார்கள். பேரரசு மனிதத்தன்மை வாய்ந்தது, திறமை வாய்ந்தது, மக்களுக்கு உதவக்கூடியது என்பதெல்லாம் அப்பட்டமான பொய்கள் என்பதை அவர்கள் கண்டு கொண்டார்கள். உண்மையில் இந்த அமைப்பு முறை பலரைச் சுரண்டி சிலர் வாழவே வழி வகுக்கிறது. பிரிட்டிஷ் பேரரசு பரப்பிய இந்தப் பொய்களும், சுரண்டலும் உண்மையை மக்கள் உணர்ந்து கொள்ளும் வரை ஏற்றுக் கொள்ளப்பட்டும், சகித்துக் கொள்ளப்பட்டும் வந்தன.

சொற்கள்! காபி கோப்பையை நிறைத்துக் கொண்டு திரும்பவும் கம்ப்யூட்டர் முன் உட்காரும் வரை சொற்களின் சக்தியைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தேன். சி.என்.என்.னின் இணையதளத்தை மூடி விட்டு முந்தைய இரவு நான் வேலை செய்து கொண்டிருந்த கோப்பினைத் திறந்தேன். அதன் கடைசிப் பத்தியைத் திரும்பவும் படித்துப் பார்த்தேன்:

‘இந்தக் கதை சொல்லப்பட்டே ஆக வேண்டும். நம் முன்னுள்ள நெருக்கடி பயங்கரமானதென்றாலும் அதை வெல்வதற்கான வாய்ப்புகளும் இருக்கத்தான் செய்கின்றன. இந்தப் பொருளாதார அடியாளின் கதையானது இவ்வளவு பெரிய நெருக்கடிகளை நாம் ஏன் இப்போது சந்தித்து வருகிறோம் என்பதைப் பற்றியதாகும். இந்தக் கதை சொல்லப்பட்டே ஆகவேண்டும். ஏனென்றால் கடந்தகாலத் தவறுகளைப் புரிந்து கொள்வதால் மட்டுமே, வருங்காலத்தில் அவை ஏற்படாமல் பார்த்துக் கொள்ள முடியும். வரலாற்றில் முதன்முதலாக நமது நெருக்கடிகள் அனைத்தையும் தீர்க்கக்கூடிய வலிமையையும், செல்வத்தையும் இன்று ஒரு நாடு பெற்றுள்ளது. அதுதான் நான் பிறந்த நாடு, பொருளாதார அடியாளாகச் சேவை புரிந்த நடுா. அமெரிக்காதான் அந்த நாடு!

இந்த முறை நான் பின்வாங்கப் போவதில்லை. என் வாழ்வில் நிகழ்ந்த பல தற்செயல் நிகழ்வுகளின் காரணமாகவும், விரும்பியே ஆற்றிய செயல்களின் காரணமாகவும் நான் இப்போதுள்ள இடத்திற்கு வந்து சேர்ந்துள்ளேன். இனி நான் தொடர்ந்து முன்னேறிச் செல்வேன்.

தன்னந்தனியே நியூ இங்கிலாந்து நகர்ப்புறத்தில் எச்சரிக்கைக் கூச்சல் எழுப்பியபடி குதிரையில் பாய்ந்து சென்ற அந்த மனிதனைத் திரும்பவும் நினைத்துக் கொண்டேன். தனக்கு முன்பே டாம்பெய்னின் சொற்கள் மக்களிடையே சென்று சேர்ந்துவிட்டன என்பது அந்த வெள்ளி ஆசாரிக்குத் தெரியும். மக்கள் தங்கள் வீடுகளில் அவற்றைப் படித்தார்கள், விடுதிகளில் விவாதித்தார்கள் என்பதையும் அவர் அறிந்திருந்தார். பிரிட்டிஷ் பேரரசின் கொடுங்கோன்மையைப் பெய்ன் அம்பலப்படுத்தியிருந்தார். வாழ்க்கை, விடுதலை, இன்பம் போன்ற கோட்பாடுகளுக்கு நமது நாடு தன்னை அர்ப்பணித்துக் கொண்டுள்ளது என்பதை ஜபர்சன் அறிவித்திருந்தார். குடியேற்றப் பகுதிகள் முழுவதிலுமிருந்த ஆண்களும் பெண்களும் இந்தச் சொற்களால் உணர்வூட்டப்பட்டார்கள். அவர்கள் விழித்தெழுவார்கள், இன்னும் சிறந்ததோர் உலகிற்காகப் போரிடுவார்கள் என்பதை ரெவரி புரிந்துகொண்டிருந்தார்.

சொற்கள்…

காலங்கடத்துவதை நிறுத்திவிட்டுப் பல ஆண்டுகளாக அரைகுறையாக நிறுத்தியிருந்ததை இறுதியாக முடிக்கவும், முழு மனதோடு ஒப்பதல் வாக்குமூலம் அளிக்கவும், இந்த நூலைச் சொற்களைக் கொண்டு நிரப்பவும் முடிவு செய்தேன்.

[1] National debt statistics from the Bureau of Public Debt reported at www.publicdebt.treas.gov/opd/opdpenny.htm; national income statistics from the World Bank at

www.worldbank.org/data/databytopic/GNIPC.pdf.

[2] ஐரோப்பிய நாடுகளுக்கிடையிலான நாணயம்

[3] Elizabeth Becker and Richard A. Oppel, “”A Nation at War: Reconstruction. U.S. Gives Bechtel a Major Contract in Rebulding Iraq,’’ New York Times, April 18, 2003, http://www.nytimes.com/2003/04/18/ international/ worldspecial/18REBU.html.

[4] Richard A. Oppel with Diana B. Henriques, “”A Nation at War: The Contractor. Company Has Ties in Washington, and to Iraq,’’ New York Times, April 18, 2003, http://www.nytimes.com/2003/04/18/international/ worldspecial/18CONT.html.

[5] http://money.cnn.com/2003/04/17/news/ companies/war-bechtel/index.htm.

# முடிவுரை

இந்த நூலின் இறுதிக் கட்டத்திற்கு வந்து சேர்ந்து விட்டோம். ஒரு புதிய தொடக்கத்துக்கும்தான். உலகப் பேரரசை உருவாக்குவதற்காகப் பாய்ந்தோடிக் கொண்டிருக்கும் நிறுவன - அதிகார வர்க்கத்தை நம்மால் தடுத்து நிறுத்த முடியுமா என்ற திகைப்பு உங்களுக்கு ஏற்படலாம். இந்தப் பைத்தியக்காரத்தனத்தை, தற்கொலைப் பிடிவாதத்தைத் தடுத்து நிறுத்துவதற்கு நாம் என்ன செய்ய வேண்டியிருக்கும் என்று நீங்கள் வியப்புடன் எண்ணமிட்டுக் கொண்டிருக்கலாம். நீங்கள் இந்நூலை ஒதுக்கிவிட்டு உலகை எதிர்கொள்ளத் தயாராக உள்ளீர்கள்.

உங்களுக்கு ஆலோசனைகள் தேவைப்படுகின்றன. என்னால் சில கருத்துகளை உங்களுக்கு வழங்க முடியும்.

கடந்த அத்தியாயத்தில் நீங்கள் படித்த பெக்டெல், ஹாலிபர்ட்டன் பற்றிய செய்தி இப்போது பழைய கதையாகிவிட்டது என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இதை நீங்கள் படிக்கும்போது அது அவசியமற்றதாகக் கூடத் தோன்றலாம். ஆனால் அந்தச் செய்திகளின் முக்கியத்துவம் அது வெளிவந்த காலத்தையும் கடந்து செல்கின்றன. பத்திரிகைச் செய்திகள் தொடர்பான உங்கள் கண்ணோட்டத்தை இந்த நூல் மாற்றக்கூடும் என்று நான் எதிர்பார்க்கிறேன். ஒவ்வொரு கட்டுரையிலும் சொல்லப்பட்ட செய்திகளைக் கொண்டு சொல்லப்படாத செய்திகளை அறிந்து கொள்ளவும், ஒவ்வொரு வானொலி, தொலைக்காட்சி செய்தியையும் ஆழமாகப் பரிசீலிக்கவும், கேள்விக்குட்படுத்தவும் இந்த நூல் உங்களுக்கு உதவும் என்று நான் நம்புகிறேன்.

கண்ணால் காண்பதெல்லாம் உண்மையல்ல. என்.பி.சி. செய்தி நிறுவனம் ஜெனரல் எலெக்ட்ரிக் நிறுவனத்திற்குச் சொந்தமானது. ஏ.பி.சி, டிஸ்னி நிறுவனத்திற்குச் சொந்தமானது. சி.பி.எஸ், வயாகாமுக்குச் சொந்தமானது. சி. என். என். பிரம்மாண்டமான ஏ.ஓ.எல். டைம் வார்னர் கூட்டமைப்பின் பகுதியாகும். நமது செய்திப் பத்திரிகைகள், வார, மாத இதழ்கள், பதிப்பகங்கள் பெரும்பாலும் மாபெரும் பன்னாட்டு நிறுவனங்களுக்குச் சொந்தமானவைதான். நமது ஊடகங்கள் அனைத்துமே தனது எஜமானர்களின் நலனுக்காகச் செய்திகளைத் திரித்துப் புரட்டக் கூடியவைதான். நமது செய்தி ஊடகங்களே நிறுவன-அதிகார வர்க்கத்தின் ஒரு பகுதியாகத்தான் செயல்பட்டு வருகின்றன. நமது அனைத்துச் செய்தித் தொடர்புகளையும் தமது கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கும் அதிகாரிகள் தங்களது கடமை என்ன என்பதைத் தெளிவாக அறிந்தவர்கள். இந்த அமைப்பை நிலை நிறுத்துவதற்கும், பலப்படுத்துவதற்கும் தங்களை அர்ப்பணித்துக் கொண்டவர்கள்.

அதற்காகவே பயிற்றுவிக்கப்பட்டவர்கள். தங்கள் வேலையில் அவர்கள் மிகவும் திறமை வாய்ந்தவர்கள். தங்களது எதிரிகளைப் பொறுத்தவரை அவர்கள் ஈவு இரக்கமற்றவர்கள். எனவே வெளிப்பூச்சுக்கு உள்ளே மறைந்து கிடக்கும் உண்மைகளைக் கண்டெடுக்கும் பொறுப்பு உங்கள் தோள்களில் விழுகிறது. நீங்கள் கண்டெடுத்த உண்மைகளை உங்கள் குடும்பத்தினரிடமும், நண்பர்களிடமும் வெளிப்படுத்துங்கள், பேசுங்கள், பரப்புங்கள்.

உங்களுக்குப் பயன்படக்கூடிய ஒரு பட்டியலை என்னால் தர முடியும். உதாரணமாக பெட்ரோலைப் பயன்படுத்துவதைக் குறைத்துக் கொள்ளுங்கள். 1990-இல் ஈராக்கைத் தாக்குவதற்கு முன்பு நமது எண்ணெய் இறக்குமதி என்பது லட்சம் பீப்பாய்களாக இருந்தது. 2005-இல் ஈராக் ஆக்கிரமிக்கப்பட்ட பின்பு அது ஒரு கோடியே இருபது இலட்சம் பீப்பாய்களாக உயர்ந்துள்ளது. அடுத்தமுறை ஷாப்பிங் செல்ல வேண்டும் என்ற விருப்பம் எழும்போது அதற்குப் பதிலாக ஒரு புத்தகத்தைப் படியுங்கள், அல்லது தியானம் செய்யுங்கள். உங்கள் வீட்டின் பரப்பளவை, ஆடைகளை, அலமாரியை, அலுவலகத்தை முடிந்தவரை சுருக்கிக் கொள்ளுங்கள். பாவப்பட்ட மக்களை அடிமைகள் போல பிழிந்தெடுக்கும் அல்லது சுற்றுச்சூழலை நாசப்படுத்தும் நிறுவனங்களுக்கு எதிர்ப்புத் தெரிவியுங்கள். தடையற்ற வணிக ஒப்பந்தங்களுக்கும் எதிர்ப்புத் தெரிவியுங்கள்.

தற்போதுள்ள அமைப்பிலேயே பெரும் அளவுக்கு நாம் நம்பிக்கை கொள்வதற்கு வாய்ப்புகள் உள்ளன. அடிப்படையிலேயே அவை தவறானவை அல்ல. அவை கட்டாயம் நிறுவன-அதிகார வர்க்கத்தை ஆதரித்துத்தான் ஆக வேண்டும் என்ற அவசியமும் இல்லை என்று என்னால் உங்களுக்கும் சொல்ல முடியும். தற்போதைய பிரச்சனைகளுக்கான காரணம் நிறுவனங்களின் தவறான போக்கு அல்ல. மாறாகப் பொருளாதார வளர்ச்சி குறித்த தவறான கோட்பாடுகளே ஆகும். நிறுவனங்களில் குறைபாடுகள் இல்லை. அவை செயல்படும் விதத்தையும் அவற்றின் அதிகாரிகள் புரியும் செயல்களையும் பற்றிய நமது புரிதல்களில்தான் தவறு உள்ளது.

இந்தப் பன்னாட்டு நிறுவனங்களின் பலம் அனைத்தும் உலக மக்களின் நன்மைக்குப் பயன்படுத்தப்பட்டால் உலகம் எவ்வளவு அற்புதமானதாக மாறிவிடும்! நைக், டொனால்டு, கொகோகோலா போன்ற நிறுவனங்கள் ஏழைகளுக்கு உணவளிப்பதையும், (இயற்கையைச் சீரழிக்காத வகையில்) உடையளிப்பதையும் தங்களது குறிக்கோளாக ஏற்றுக் கொண்டால் எப்படியிருக்கும்? கற்பனை செய்து பாருங்கள். நிலவில் மனிதனைக் கால் பதிக்கச் செய்வதை விட, சோவியத் யூனியனைத் துண்டாடுவதை விட, மாபெரும் நிறுவனங்களைக் கட்டியெழுப்புவதை விட, வறுமையை ஒழிப்பது நடைமுறையில் எளிதானது. கல்வி பற்றிய நமது அணுகுமுறையில்

புரட்சி கரமான மாற்றங்கள் ஏற்பட வேண்டும். நமது குழந்தைகளைச் சிந்திக்கத் தூண்ட வேண்டும். கேள்விகள் கேட்பதற்கும், செயல்படுவதற்கும் அவர்களுக்குச் சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும். நீங்களே ஒரு முன்னுதாரணமாக இருக்கலாம். நீங்கள் ஆசிரியராக இருந்து கற்றுக் கொடுங்கள். அதே நேரத்தில் மாணவராகவும் இருந்து கற்றுக் கொள்ளுங்கள். உங்களைச் சுற்றியுள்ள அனைவருக்கும் உங்கள் சொந்த உதாரணத்தால் உணர்வூட்டுங்கள்.

உங்கள் வாழ்வோடு இரண்டறக் கலந்துள்ள நிறுவனங்களில் பாதிப்பு ஏற்படுத்தக்கூடிய சில குறிப்பான நடவடிக்கைகளை மேற்கொள்ளும்படி உங்களிடம் நான் கோருகிறேன். வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் வெளிப்படையாகப் பேசுங்கள், கடிதங்கள் எழுதுங்கள், மின்னஞ்சல்கள் அனுப்புங்கள். தொலைபேசியையும் பயன்படுத்துங்கள். அறிவுத் தெளிவு பெற்ற நபர்களைப் பள்ளி வாரியங்களுக்கும், லவுன்டி ஆணையங்களுக்கும் தேர்ந்தெடுக்கும் வகையில் வாக்களியுங்கள். முற்போக்கான உள்ளூர்ச் சட்டங்களை ஆதரித்து வாக்களியுங்கள். செய்வதை மனப்பூர்வமான ஈடுபாட்டுடன் செய்யுங்கள்.

பத்தாண்டுகளுக்கு முன்பு உலகம் நீங்கள் நினைக்கிறபடிதான் இருக்கும் என்ற ஷுவார்கள் என்னிடம் சொன்னதை உங்களுக்கு நினைவுபடுத்துகிறேன். நாம் இந்த மாசு விளைவிக்கும் தொழிற்சாலைகள், மக்கள் நெரிசல் மிகுந்த நகரங்கள், நெரிசல் மிகுந்த தேசிய நெடுஞ்சாலைகள் என்ற பயங்கரக் கனவை விட்டுவிட்டு இயற்கையை மதிக்கும், சமூகப் பொறுப்புணர்வு கொண்ட, சமத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு புதிய இனிய கனவு-க்கு மாறிச் செல்லலாம். நம்மை மாற்றிக் கொள்வது நமது சக்திக்கு உட்பட்டதுதான்.

இன்னும் சிறந்த உலகத்தை உருவாக்குவதற்கு நமக்குள்ள வியக்கத்தக்க வாய்ப்புகளை இப்போதே பட்டியலிடுகிறேன். எல்லோருக்கும் போதுமான உணவும் நீரும் தேவை. தினமும் லட்சக்கணக்கான மக்களைப் பலி கொள்ளும் தொற்றுநோய்களைக் குணமாக்குவதற்கான மருந்துகள், உயிர் காக்கும் சேவைகளை உலகின் எந்த மூலைக்கும் கொண்டு செல்லத் தேவையான போக்குவரத்து வசதிகள், கல்வியறிவை அதிகப்படுத்தும் வாய்ப்புகள், உலகில் உள்ள ஒவ்வொருவரும் மற்றவர்களுடன் தொடர்பு கொள்வதைச் சாத்தியமாக்கக்கூடிய இணைய சேவைகளை வழங்குதல், போர்களை அவசியமற்றதாகச் செய்யக்கூடிய கருவிகள், சுற்றுச்சூழலுக்கு மாசு ஏற்படுத்தாத நுண்ணிய தொழில்நுட்பங்கள் என இவையனைத்தும் உருவாக்கப்பட வேண்டும்.

நீங்கள் பிரச்சனையையும், அதற்கான தீர்வுகளையும், மற்றவர்களுக்குப் புரிய வைக்க சில ஆலோசனைகள் கூறுகிறேன்.

* ‘ஒரு பொருளாதார அடியாளின் ஒப்புதல் வாக்குமூலம்’ என்ற இந்நூல் குறித்த வாசகர் கூட்டங்களை உள்ளூர்ப் புத்தகக் கடைகளிலோ நூலகங்களிலோ நடத்துங்கள். (இதற்கான குறிப்புகள் www.Johnperkins.org என்ற இணையதளத்தில் கிடைக்கும்)

* உங்களுக்குப் பிடித்தமான துறை தொடர்பாக ஓர் உரையை அருகில் உள்ள சிறுவர் பள்ளியில் நிகழ்த்தத் தயார் செய்யுங்கள் (சமையல், விளையாட்டு, எறும்புகள் எதைப் பற்றி வேண்டுமானாலும் அந்த உரை இருக்கலாம்) இந்த உரையை மாணவர்களுக்குச் சமூகம் குறித்த விழிப்புணர்வை அளிக்கப் பயன்படுத்துங்கள்.

“ இந்த நூலும் இதைப் போன்ற மற்ற நூல்களும் உங்களுக்குள் ஏற்படுத்திய பாதிப்புகள் குறித்து உங்களுக்கு வேண்டியவர்கள் அனைவருக்கும் மின்னஞ்சல்கள் அனுப்புங்கள்.

நான் கூறிய இந்த யோசனைகள் பலவற்றை நீங்கள் ஏற்கெனவே சிந்தித்திருப்பீர்கள் என்பதை நான் அறிவேன். இவற்றில் உங்களுக்கு மிகவும் ஏற்றதாகத் தோன்றும் ஒன்றிரண்டைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். இது நீங்களும் நானும் ஆற்ற வேண்டிய மாபெரும் கடமையின் ஒரு பகுதி என்பதை உணர்ந்து கொள்ளுங்கள். நம்மையும் மற்றவர்களையும் விழிப்புணர்வு அடையச் செய்வதற்காக எந்த நிபந்தனையும் இன்றி நம்மை நாமே அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும். நம் இதயங்களையும், அறிவையும் திறந்து வைக்க வேண்டும்.

எப்படி இருந்தாலும் இந்தப் புத்தகம் ஒரு மருந்துச்சீட்டு அல்ல. இது ஒரு எளிய ஒப்புதல் வாக்குமுலம். தன்னை ஒரு பகடைக்காயாக, பொருளாதார அடியாளாக மாற்ற அனுமதித்த ஒருவனின் ஒப்புதல் வாக்குமூலம். லஞ்ச ஊழலில் மூழ்கிப்போன ஓர் அமைப்பு ஏராளமான பணத்தையும், தவறுகளை நியாயப்படுத்த வசதியான சாக்குப்போக்குகளையும் வாரி வழங்குகிறது என்பதால் அதைச் சரணடைந்த ஒருவனின் ஒப்புதல் வாக்குமூலம். எல்லாவற்றையும் தெரிந்து வைத்திருந்தாலும் தன் பேராசையை எப்போதுமே நியாயப்படுத்தி வந்த ஒருவனின், பாவப்பட்ட மக்களைச் சுரண்டவும், இவ்வுலகைக் கொள்ளையடிக்கவும் முடிவெடுத்த ஒருவனின், உலகின் பணக்கார நாடுகளில் ஒன்றில் பிறந்த காரணத்தினாலேயே, அதை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்ட ஒருவனின் ஒப்புதல் வாக்குமூலம்தான் இந்த நூல். தனது சமூகம் செல்வம் மிகுந்ததாக இருந்தாலும் தன் பெற்றோர்கள் பணம் படைத்தவர்களாக இல்லை என்பதில் கழிவிரக்கம் கொண்டிருந்த ஒருவனின், பொருளாதார வளர்ச்சி பற்றிய அத்தனை நூல்களையும் படித்த பின்பு உலகப் பேரரசு மக்களைக் கொன்று குவிக்கிறது, சுற்றுச்சூழலை சர்வநாசம் செய்கிறது என்பதை அறிந்திருந்தும், அதை வளர்த்தெடுப்பதற்காகத் தன்னால் ஆன அனைத்தையும் செய்த ஒருவனின், இதே வேலையை

செய்வதற்கு மற்றவர்களுக்குப் பயிற்சி அளித்த ஒருவனின், உலகப் பேரரசின் நடவடிக்கைகளைச் சட்டபூர்வமானதாக ஆக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தவர்களைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றிய ஒருவனின் ஒப்புதல் வாக்குமூலம் இந்நூல்.

இந்நூலைக் கட்டாயம் நீங்கள் உங்கள் சொந்த அனுபவங்களுடன் இணைத்துப் பார்ப்பீர்கள். அது உங்களுக்கும் எனக்குமிடையே பொதுவான பல விஷயங்கள் உள்ளன என்பதைக் காட்டும். நாம் வெவ்வேறு பாதைகளில் பயணம் செய்திருக்கலாம். ஆனால் நமது வாகனங்கள் ஒரே மாதிரியானவை. நமது எரிபொருளும் ஒன்றேதான். நாம் உணவருந்துவதற்காக வாகனத்தை நிறுத்திய உணவகங்களும் ஒரே நிறுவனத்துக்குச் சொந்தமானவைதான்.

என்னைப் பொறுத்தவரை விழித்தெழுவதற்கு அவசியமானது, த வ று க ளை ஒப்புக்கொள்வதாகும். எல்லா ஒப்புதல் வாக்குமூலங்களையும் போலவே இதுவும் விடுதலைக்கான முதல் படியாகும்.

இப்போது உங்கள் முறை. நீங்கள் உங்கள் சொந்த ஒப்புதல் வாக்குமூலத்தை அளிக்க வேண்டி உள்ளது. நீங்கள் யார் என்பதைப் பற்றியும், இந்தக் காலகட்டத்தில் நீங்கள் ஏன் இப்போதுள்ள இடத்தில் இருக்கிறீர்கள் என்பது பற்றியும், நீங்கள் கர்வமடையக்கூடிய அல்லது வெட்கமடையக்கூடிய செயல்களை ஏன் செய்தீர்கள் என்பது பற்றியும், அடுத்து எங்கே போக விரும்புகிறீர்கள் என்பது பற்றியும் முழுமையாகவும், தெளிவாகவும் அறிந்து கொண்டால் ஒரு விடுதலை உணர்வை அடைவீர்கள். அது இன்பமயமானதாக இருக்கும். இந்தப் புத்தகத்தை எழுதும் அனுபவமானது சில நேரங்களில் வலியையும் சில நேரங்களில் அவமான உணர்ச்சிகளையும் அளித்தது. இந்த அனுபவம் முன்னெப்போதும் நான் அனுபவித்திராத ஒரு பீதியை என்னுள் ஏற்படுத்துகிறது. ஆனால் இதே அனுபவம் முன்னெப்போதும் நான் உணர்ந்திராத ஒரு விடுதலை உணர்வையும், பேரின்பத்தையும் அள்ளித் தந்துள்ளது.

உங்களை நீங்களே இந்தக் கேள்விகளைக் கேட்டுக் கொள்ளுங்கள். நான் எதை ஒப்புக்கொள்ள வேண்டும்? நான் எப்படி மற்றவர்களை ஏமாற்றினேன்? இந்த மோசமான அமைப்பு என்னை அடிமை கொள்ள நான் எப்படி அனுமதித்தேன்? நமது நாட்டை நிறுவியவர்களின் கனவுகளை நனவாக்க நான் என்ன செய்யப் போகிறேன்? வாழ்க்கை, சுதந்திரம், இன்பத்திற்கான தேடல் என்ற நமது நாட்டின் அடிப்படை லட்சியங்களை நமது குழந்தைகளும் உலகில் உள்ள மற்ற குழந்தைகளும் அடைவதற்கு வாய்ப்பளிக்க என்ன செய்யப் போகிறேன்? தேவையற்ற பட்டினியைப் போக்கவும் செப்டம்பர் 11-ஐப் போல் இன்னொரு நாள் வராமல் தடுக்கவும் நான் எந்தப் பாதையைத் தேர்ந்தெடுக்கப் போகிறேன்? அரக்கத்தனமான சமநிலையற்ற

வாழ்க்கை வாழும் மனிதர்கள் இரக்கத்துக்குரியவர்களே தவிர, நாயகர்களாகப் பின்பற்றக்கூடியவர்கள் அல்ல என்பதையும், அவர்களது பண்ணை வீடுகளும், உல்லாசப் படகுகளும், மகிழ்ச்சியைக் கொண்டு வரும் என்று அவர்கள் கட்டுப்பாட்டில் உள்ள செய்தி ஊடகங்கள் பரப்பி வரும் பொய்களை நம் குழந்தைகள் புரிந்துகொள்ள நாம் எப்படி உதவப் போகிறோம்? கற்றுக் கொள்ளவும், கற்றுத் தரவும் என்ன தளங்களைப் பயன்படுத்தப் போகிறோம்?

இவை நமது காலத்துக்கு மிகவும் அவசியமான கேள்விகள். நாம் ஒவ்வொருவரும் நமது சொந்த வழியில் தெளிவாகவும், தன்னிச்சையாகவும் இக்கேள்விகளுக்குப் பதிலளிக்க வேண்டியுள்ளது. தாமஸ் பெய்னும், ஜெபர்சனும், ஏனைய தியாகிகளும் நம்மைக் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். இன்று வரை அவர்களுடைய சொற்கள் நமக்கு உணர்வூட்டி வருகின்றன. மாபெரும் வலிமை வாய்ந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போரிடுவதற்காகத் தங்களது பண்ணைகளையும், மீன் பிடி படகுகளையும் விட்டு விட்டுக் கிளம்பியவர்களின், அடிமைகளின் விடுதலைக்காகப் போராடியவர்களின், பாசிச அபாயத்திலிருந்து உலகைக் காப்பாற்றுவதற்காக உயிர்த்தியாகம் செய்தவர்களின் ஆன்மாக்கள் நம்மோடு பேசுகின்றன. அவர்களுக்கு உணவும், உடையும், ஆதரவும் அளித்தவர்களின் ஆன்மாக்களும், போர்க்களங்களில் நாம் பெற்ற வெற்றிகளைக் காத்து நின்ற ஆசிரியர்கள், கவிஞர்கள், ஓவியர்கள், விஞ்ஞானிகள் மற்றும் உடலுழைப்பாளர்களின் ஆன்மாக்களும் நம்மைக் கவனித்துக் கொண்டுதான் இருக்கின்றன.

காலம் நம் கைகளில் உள்ளது. போரில் இறங்குவதற்கும், கேள்விகள் எழுப்புவதற்கும், ஆன்மப் பரிசோதனை செய்வதற்கும், செயல்படுவதற்கும் இதுதான் நேரம்.

உங்கள் வாழ்க்கையில் தற்செயலாக நடைபெற்ற சில நிகழ்ச்சிகளும், அந்த நேரத்தில் நீங்கள் எடுத்த முடிவுகளும்தான் உங்களை இப்போதுள்ள இடத்துக்குக் கொண்டு வந்துள்ளன…



# ஜான் பெர்க்கின்ஸ் வாழ்க்கைக் குறிப்புகள்

1963 : தொடக்கப் பள்ளியில் பட்டம் பெற்று மிடில்பெரி கல்லூரியில் நுழைகிறார்.

1964 : ஓர் ஈரானிய ஜெனரலின் மகனான பர்கத்துடன் நட்புக் கொள்கிறார். மிடில் பெரியிலிருந்து பாதியில் வெறியேறுகிறார்.

1965 : பாஸ்டனில் 'ஹியர்ஸ்ட்' செய்தித்தாள்களுக்கு வேலை செய்கிறார்.

1966 : பாஸ்டன் பல்கலைக்கழகத்தின் வணிக நிர்வாகக் கல்லூரியில் (College of Business adiministration) நுழைகிறார்.

1967 : முன்னாள் மிடில்பெரி வகுப்புத் தோழியை மணந்து கொள்கிறார். அவருடைய மாமா தேசியப் பாதுகாப்பு நிறுவனத்தின் (NSA) உயர் மட்ட நிர்வாகியாவார்.

1968 : என்.எஸ்.ஏ.வால் பொருத்தமான பொருளாதார அடியாள் என்று தேர்வு செய்யப்படுகிறார். ஃபிராங்க் மாமாவின் ஆசியுடன் அமைதிப்படையில் சேர்ந்து ஈக்வடாரின் அமேசான் காடுகளுக்கு அனுப்பப்படுகிறார். அங்கேதான் பழங்குடியின மக்கள் அமெரிக்க எண்ணெய் நிறுவனங்களை எதிர்த்துப் போராடி வந்தனர்.

1969 : மழைக்காடுகளிலும் ஆண்டிஸ் மலைகளிலும் வாழ்கிறார். எண்ணெய் நிறுவனங்களும், அரசு நிறுவனங்களும் செயல்படுத்தி வரும் மோசடியான பேரழிவு ஏற்படுத்தும் நடவடிக்கைகளையும் உள்ளூர்ப் பண்பாடுகள் மற்றும் சுற்றுச்சூழல் மீது அவை ஏற்படுத்தும் மோசமான பாதிப்பையும் நேரடியாகப் பார்க்கிறார்.

1970 : ஈக்வடாரில் ஆலோசனை நிறுவனமான மெய்ன் (MAIN) ன் துணைத்தலைவரைச் சந்திக்கிறார். அவர் என். எஸ்.ஏ தொடர்பு அதிகாரியாகவும் பணியாற்றி வந்தவர்.

1971 : மெய்னில் இணைகிறார். பாஸ்டனில் ரகசியமாகப் பொருளாதார அடியாள் ஆவதற்குப் பயிற்சி பெறுகிறார். பின்பு பதினொரு பேர் கொண்ட குழுவில் உறுப்பினராக இந்தோனேஷியாவில் உள்ள ஜாவாவிற்கு அனுப்பப்படுகிறார். பொருளாதார ஆய்வுகளைத் திரிக்கச் சொல்லிக் கொடுக்கப்பட்ட அழுத்தத்தால் மனப்போராட்டத்தைச் சந்திக்கிறார்.

1972 : 'ஒத்துழைக்க' விருப்பம் தெரிவித்ததன் காரணமாக தலைமைப் பொருளாதார நிபுணராகப் பதவி உயர்த்தப்படுகிறார். புத்திசாலிப் பையன் என்று பெயர் பெறுகிறார். உலக வங்கித் தலைவர் ராபர்ட்

மெக்னமாரா உள்ளிட்ட முக்கிய தலைவர்களைச் சந்திக்கிறார். முக்கியமான வேலைத்திட்டத்தை நிறைவேற்றப் பனாமாவிற்கு அனுப்பப்படுகிறார். பனாமாவின் கவர்ச்சிகரமான தலைவரும், ஜனாதிபதியுமான ஒமர் டோரிஜோஸின் நண்பர் ஆகிறார். அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் வரலாற்றையும் பனாமா கால்வாயை அமெரிக்காவிடமிருந்து திரும்பப் பெறும் டோரிஜோஸின் உறுதியையும் பற்றித் தெரிந்து கொள்கிறார்.

1973 : அவரது தொழில் உச்சக்கட்ட வளர்ச்சியை எட்டுகிறது. மெய்னுக்கு உள்ளேயே ஒரு குட்டி ராஜ்ஜியம் அமைத்துக் கொள்கிறார். பனாமாவில் தொடர்ந்து வேலை செய்கிறார். ஆய்வுகள் மேற்கொள்வதற்காக ஆசியா, லத்தீன் அமெரிக்கா, மத்திய கிழக்கு நாடுகளில் விரிவான பயணங்கள் மேற்கொள்கிறார்.

1974 : சவூதி அரேபியாவில் பொருளாதார அடியாட்கள் அடைந்த பிரம்மாண்டமான வெற்றிக்குக் காரணமாக இருக்கிறார். அரச குடும்பம் எண்ணெயிலிருந்து கிடைக்கும் பல ஆயிரம் கோடி டாலர் வருமானத்தை அமெரிக்க அரசின் பத்திரங்களில் முதலீடு செய்யவும் அதில் கிடைக்கும் வட்டியைக் கொண்டு நீர் விநியோக முறைகள், நெடுஞ்சாலைகள், துறைமுகங்கள், நகரங்கள் அமைக்க அமெரிக்க நிறுவனங்களை அமர்த்த அமெரிக்கக் கருவூலத்துறைக்கு அனுமதி அளிக்கவும் ஒப்புக் கொண்டது. மாற்றாக அரச குடும்பம் தொடர்ந்து ஆட்சிப் பொறுப்பில் இருக்க அமெரிக்கா உறுதி செய்தது. இது பிற்காலத்தில் வரவிருந்த இ.ஹெச்.எம். ஒப்பந்தங்களுக்கு ஒரு மாதிரியாக இருந்தது. ஈராக்கில் தோல்வி அடைந்ததும் இவற்றில் ஒன்றுதான்.

1975 : மெய்னின் 100 ஆண்டுகால வரலாற்றிலேயே மிகவும் வயதில் இளைய பங்குதாரராகப் பதவி உயர்த்தப்படுகிறார். பொருளாதார மற்றும் பிராந்திய திட்டமிடுதலுக்கான மேலாளராகவும் அமர்த்தப்படுகிறார். மிகவும் செல்வாக்குப் பெற்ற கட்டுரைகளைத் தொடர்ச்சியாக வெளியிடுகிறார். ஹார்வேடிலும் மற்ற நிறுவனங்களிலும் விரிவுரைகள் ஆற்றுகிறார்.

1976 : ஆப்பிரிக்கா, ஆசியா, லத்தீன் அமெரிக்கா, வட அமெரிக்கா மற்றும் மத்தியக் கிழக்கில் பெரும் திட்டங்களுக்குத் தலைமை வகிக்கிறார். பொருளாதார அடியாட்கள் மூலம் பேரரசை நிர்மாணிக்கும் திட்டம் குறித்து ஈரான் ஷாவிடமிருந்து புரட்சிகரமான அணுகுமுறையைக் கற்றுக் கொள்கிறார்.

1977 : கொலம்பியாவில் கம்யூனிசத் தீவிரவாதிகள் மற்றும் போதை மருந்துக் கடத்தல்காரர்கள் என்று முத்திரை குத்தப்பட்ட விவசாயிகளின் நிலையையும், அவர்கள் உண்மையில் தங்கள் குடும்பங்களையும், வீடுகளையும் பாதுகாக்க முயலும் விவசாயிகள்தான் என்ற உண்மையையும் தனிப்பட்ட தொடர்புகள் மூலம் அறிந்து கொள்கிறார்.

1978 : பர்கத்தால் அவசரமாக ஈரானிலிருந்து வெளியேற்றப்படுகிறார். ஒன்றாக அவர்கள் பர்கத்தின் அப்பாவிற்குக் சொந்தமான ரோமில் உள்ள வீட்டுக்குப் பறக்கிறார்கள். ஈரானிய ஜெனரலான பர்கத்தின் அப்பா, ஷா வெளியேறுவது தவிர்க்க இயலாதது என்று கூறி அமெரிக்காவின் கொள்கைகள், லஞ்சத்தில் ஊறிய தலைவர்கள், சர்வாதிகார அரசுகள் போன்றவையே மத்தியக் கிழக்கு முழுவதும் பரவி வரும் வெறுப்புணர்வுக்குக் காரணம் என்று குற்றம் சாட்டுகிறார். அமெரிக்கா மென்மையாக மாறாவிட்டால் சூழ்நிலை இன்னும் மோசமடையும் என்றும் எச்சரிக்கிறார்.

1979 : ஷா ஈரானை விட்டுத் தப்பியோடிய பிறகு ஈரானியர்கள் அமெரிக்கத் தூதரகத்தைத் தாக்கி 52 பேரைப் பணயக்கைதிகளாக பிடிக்கின்றனர். பெர்க்கின்ஸின் மனப்போராட்டம் தீவிரமடைகிறது. அமெரிக்கா இந்த உலகில் தான் ஓர் ஏகாதிபத்தியம் என்பதை மறுக்கக் கடுமையாக முயலும் ஒரு நாடு என்பதைப் புரிந்து கொள்கிறார். பல ஆண்டுகள் நீடித்த முரண்பாடுகளுக்கும், அடிக்கடி நிகழ்ந்த பிரிவுகளுக்கும் பின்பு முதல் மனைவியை விவாகரத்து செய்கிறார்.

1980 : கடும் மன அழுத்தத்தாலும், குற்ற உணர்வாலும் பணமும் பதவியும்தான் தன்னை மெய்னில் சிக்க வைத்துள்ளன என்ற புரிதலாலும் வேதனை அடைகிறார். வெளியேறுகிறார்.

1981 : ஈக்வடாரின் ஜனாதிபதி ஜெய்மே ரோல்டோஸும் (எண்ணெய் நிறுவனங்களுக்கு எதிரான தளத்திலிருந்து பிரசாரம் செய்தவர்) பனாமாவின் ஒமர் டோரிஜோஸும் (பனாமாக் கால்வாய் மற்றும் அமெரிக்க இராணுவத் தளங்கள் தொடர்பாகத் தான் எடுத்த நிலைகளின் காரணமாக வாஷிங்டனில் உள்ள பலம் வாய்ந்த குழுக்களின் வெறுப்பைச் சம்பாதித்துக் கொண்டவர்) பயங்கரமான விமான விபத்துகளில் மரணம் அடைகின்றனர். அவை சி.ஐ.ஏ. நிகழ்த்திய படுகொலைகள் என்பதற்கான அத்தனை அடையாளங்களும் காணப்பட்டன. இரண்டாவது திருமணம் செய்து கொள்கிறார். மனைவியின் அப்பா பெக்டெல் நிறுவனத்தின் தலைமை கட்டடக் கலைஞராகவும், 1974 இ. ஹெச். எம் ஒப்பந்தத்தின் விளைவாக சவூதி அரேபியாவில் நகரங்களை வடிவமைத்துக் கட்டுவதற்குப் பொறுப்பாளராகவும் இருந்து வந்தார்.

1982 : சுற்றுச்சூழலுக்குக் கேடு ஏற்படுத்தாத வகையில் மின்சாரத்தை உருவாக்க உறுதிபூண்டு இன்டிபென்டென்ட் பவர் சிஸ்டம் இன்க் (ஐ.பி.எஸ்) என்ற நிறுவனத்தை உருவாக்குகிறார். ஜெஸிகாவுக்குத் தந்தையாகிறார்.

1982 - 1983 : பெரிய பொறுப்பிலுள்ள ஆட்களின், வரிவிலக்குகள் போன்ற ‘தற்செயல் நிகழ்ச்சிகளின்’ உதவியால் ஐ.பி.எஸ். ஸின் தலைமை நிர்வாக அதிகாரியாக வியக்கத் தகுந்த வெற்றியடைகிறார். ஒரு தந்தை என்ற முறையில் உலகில் ஏற்பட்ட நெருக்கடிகள் மற்றும்

தனது முந்தைய பொருளாதார அடியாள் பாத்திரம் ஆகியவற்றின் மேல் கோபம் கொள்கிறார். எல்லாவற்றையும் சொல்லும் ஒரு புத்தகத்தை எழுதத் தொடங்குகிறார். ஆனால் கவர்ச்சிகரமான ஓர் ஆலோசகர் வேலை, அவர் புத்தகம் எழுதக்கூடாது என்ற நிபந்தனையோடு அளிக்கப்படுகின்றது.

1990 - 1991 : பனாமாவில் அமெரிக்க ஊடுருவல் மற்றும் நொரீகா சிறைப்பிடிக்கப்பட்டதை அடுத்து ஐ.பி.எஸ். - ஐ விற்றுவிட்டு 45 வயதில் ஓய்வு பெறுகிறார். பொருளாதார அடியாளாக வாழ்ந்த வாழ்நாள் வாழ்க்கையைக் குறித்துப் புத்தகம் எழுதத் திட்டமிடுகிறார். ஆனால் தன் சக்தியை லாப நோக்கமற்ற ஓர் அமைப்பை உருவாக்குவதில் செலுத்தும்படி செய்யப்படுகிறார்.

1992 - 2000 : ஈராக்கில் பொருளாதார அடியாட்கள் தோல்வி அடைவதையும், முதல் வளைகுடாப் போர் அதன் விளைவாகத் தொடங்குவதையுமம் கவனிக்கிறார். மூன்று முறை பொருளாதார அடியாள் பற்றிய புத்தகத்தை எழுதத் தொடங்குகிறார். ஆனால் லஞ்சம் மற்றும் மிரட்டலின் காரணமாகக் கைவிடுகிறார். பழங்குடிகள் பற்றி புத்தகங்கள் எழுதுவதன் மூலமும் புதுயுக அரங்குகளில் கற்றுத் தருவதன் மூலமும் அமேசானுக்கும் இமய மலைகளுக்குப் பயணம் செய்வதன் மூலமும், மனசாட்சியின் உறுத்தலைத் தணிக்க முயற்சி செய்கிறார்.

2001 - 2002 : ஒரு வட அமெரிக்கர்களின் குழுவை அமேசான் காடுகளின் ஆழத்திற்கு அழைத்துச் செல்கிறார். செப்டம்பர் 11, 2001 சம்பவத்தின் போது அங்கே பழங்குடிகள் மத்தியில் இருக்கிறார். கிரவுண்ட் ஜீரோவில் ஒருநாள் முழுவதும் செலவிட்ட பின் தனது வலியை ஆற்றிக் கொள்ளவும், பொருளாதார அடியாட்களுக்குப் பின் உள்ள உண்மையை அம்பலப்படுத்தவும் வல்ல ஒரு புத்தகத்தை எழுதுவது என்று உறுதி கொள்கிறார்.

2003 - 2004 : எண்ணெய் நிறுவனங்களுக்கு எதிராகப் போர் தொடுக்க உறுதி பூண்டுள்ள பழங்குடி மக்களைச் சந்திக்க ஈக்வடாரின் அமேசான் காடுகளுக்குத் திரும்பி வருகிறார். பொருளாதார அடியாளின் ஒப்புதல் வாக்குமூலத்தை எழுதுகிறார்.



"பொருளாதார அடியாளின் ஒப்புதல் வாக்குமூலம்" நூலாசிரியரின் புதிய நூல்

Part 2

# அமெரிக்கப் பேரரசின்

## ரகசிய வரலாறு

பொருளாதார அடியாட்கள்
ரகசிய உளவாளிகள்
உலகளாவிய ஊழல் குறித்த உண்மைகள்



ஜான் பெர்கின்ஸ்
தமிழில் அசோகன் முத்துசாமி